ஸ்ரீ:

ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு

# ஸ்ரீஸச்சிதாநந்தசிவாபிநவ நரஸிம்ஹபாரதீஸ்வாமிகள் திவ்யசரித்திரம்.

ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குரு ஸம்ஸ்தான ஏஜண்ட்
பிரம்மஸ்ரீ ஸதாசாரப்ரவர்த்தனப்ரவீண
குருஸேவாப்ரவீண நஞ்சனகோடு
ஸ்ரீகண்டசாஸ்திரிகளவர்களால்
இயற்றப்பட்டது.



ஸ்ரீரங்கம்
ஸ்ரீவாணீவிலாஸமுத்ராசாலா
1925



ஸ்ரீ மஹாஸ்வாமிகளும்
இந்த கிரந்த கர்த்தாவும்.

# முகவுரை.

॥ श्रीगुरुभ्यो नमः ॥

श्रीसर्वमङ्गलायुतमूर्तिं शिवदं शिवं हृदि ध्यात्वा ।
गुरुचरणानतिपूतः तदीयचरितं लिखामि संक्षेपात् ॥



கர்ம பூமியான நம் ஆர்யாவர்த்த தேசத்தில் முன் ஒரு காலத்தில் வைதிகவிரோதிகளான அநேக மதஸித்தாந்தங்கள் ஏற்பட்டு அதை யநுசரித்துவரும் ஜனங்களின் நடமாட்டம் ரொம்ப அதிகமாகி வேதோக்தங்களான கர்மங்கள் குறைந்து அதர்மம் மேலிட்டு வளர்ந்துவரும் காலத்தில்

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।
अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥
परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

என்று ஸ்ரீபகவான் பிரதிக்ஞை செய்துள்ளபடி ஸ்ரீபகவான் ஸ்ரீமச்சங்கரபகவத்பாதாசாரிய ரூபமாக அவதரித்து தன் அபாரமான பாண்டித்யத்தாலும்,

ஒப்பில்லாத வாக்குவல்லமையாலும் அஸமானமான புத்தி சக்தியாலும் அமோகமான தபச்சக்தியாலும் அபூர்வமான காருண்யத்தாலும், காண்பதற்கரிதான வைராக்கியத்தாலும் வாமமதத்திலாழ்ந்து கிடக்கிற ஜனங்களை சாஸ்திரானுசாரியான யுக்திகளைக்கொண்டு வாதம் செய்து ஜயித்து ப்ரவிருத்தி நிவிருத்தி என்ற இரண்டு மார்க்கங்களும் எங்கும் வேரூன்றி நிற்கும்படி செய்து தன்னால் நிலை நாட்டப்பட்ட தர்மமார்க்கங்களை பரிபாலித்து வருவதற்காக சிஷ்ய கணங்களில் முக்கியரான நாலு சிஷ்யர்களை நாலு திக்குகளிலும் ஸ்தாபனம் செய்துவிட்டு ஸ்வஸ்தானம் சேர்ந்துகொண்டார் என்ற ஸ்ரீமதாசார்யபகவத்பாத சரித்திரம் மகானுபாவர்களான வித்யாரண்யர் முதலியவர்களாலியற்றிய ஸ்ரீசங்கரவிஜயம் முதலான கிரந்தங்களால் விஸ்தாரமாக நாம் தெரிந்துகொண்டேயிருக்கிறோம்.

மேற்கண்ட உத்தேசத்தினால் ஸ்ரீமத்சங்கரபகவத்பாதாசாரியர் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட 4 மடங்களில் ஒன்றாகிய தக்ஷிணாம்னாயமென்ற ப்ரசித்தியுள்ள மடம் இந்த இந்தியாவில் மகா கீர்த்தியுள்ள யதுகுலத்தில் உதித்தவரும் கர்னாடக தேசாதிபதியும் ஸ்ரீமத்தர்ம மூலமாயும் விளங்குகிற நால்வடி கிருஷ்ணராஜேந்திர ஸார்வபௌமனால் பரிபாலிக்கப்பட்டுவருகிற மைசூர் சம்ஸ்தானத்தைசேர்ந்த கடூர் டிஸ்திரிக்டில் ஸ்ரீரிஷ்ய சிருங்க மகரிஷி ஆசிரமத்திற்கு சமீபத்தில் பரிசுத்தமான துங்கபத்திரா நதி தீரத்தில் விபாண்டக

மஹரிஷி ஆசிரமமான சிருங்கேரி என்னும் ஸ்தலத்திலுள்ளது.

இந்த மடத்தில் ஸ்ரீமத் ஆதி சங்கராச்சாரிய ஸ்வாமிகளால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ சக்ரயந்திரத்தில் ஸ்வர்ணமயமான ஸ்ரீ சாரதாம்பிகை பிரதிஷ்டை செய்யப்பட்டு தக்ஷிணாம்நாய பீடத்தில் உள்ள குருபரம்பரையால் பூஜிக்கப்பட்டுவருகிறது. இந்த பீடத்தில் ஸ்ரீசங்கரபகவத்பாதாசாரியாள் முதற்கொண்டு இதுவரையில் முப்பத்திநான்குபெயருக்கு ஆசிரமஸ்வீகாரமாய் பட்டாபிஷிக்தர்களாயிருந்து வருவதில் இப்போது முப்பத்திநான்காவது குரு பீடத்தில் விளங்கி வருவதாக தெரியவருகிறது.

இந்த விஷயத்தில் சிருங்கேரியிலுள்ள முந்திய சில தஸ்தாவேஜுகளில் கிடைத்த ஒரு ஆதாரத்தைக்கொண்டு மேலே சொல்லப்பட்ட சங்கதி தெளிவாகிறது. இந்த ஆதாரம் எவ்வளவுமட்டில் சரியாயிருக்குமென்ற விஷயத்தில் ஆலோசனை செய்து யதார்த்தம் இன்னதென்று நிச்சயித்துக்கொள்ளவேண்டியது ஒன்று ஆவசியகமாயிருக்கலாம். அது எப்படியாவது இருக்கட்டும். சிருங்கேரிமடத்தில் இதுவரையில் குருக்களாயிருந்து வந்தவர்கள் ஒவ்வொருவரும் வித்யா விஷயத்திலும் சுத்தமான நன்னடத்தையிலும் அனுஷ்டான விஷயத்திலும் ஆஸேது ஹிமாசல பரியந்தத்திலும் நிர்மலமான கீர்த்தி பெற்று விளங்கி

வர்த்தனரென்னும் விஷயத்தில் எவருக்கும் எக்காலத்தினும் கொஞ்சமும் சந்தேகமில்லை.

இப்படிப்பட்ட புண்ணியாத்மாக்களின் சரித்திர படனமும் சிரவணமும் மனனமும் கேவலம் இவ்வுலகத்திலுள்ள அல்பசுகத்தை மாத்திரம் உத்தேசித்து விஷயாஸக்தரான ஜனங்களுக்கு விசேஷமான பிரயோஜனத்தை உண்டுபண்ணக்கூடியது.

இந்த உத்தேசத்தைக்கொண்டாவது பூர்விகர்கள் யாராவது அந்தந்த காலங்களில் சேர்க்கக்கூடிய சங்கதிகளை கூடியமட்டில் சேர்த்து ஓரிடத்தில் வைப்பது போல ஸ்ரீகுருசரித்திரத்தையும் எழுதிவைத்திருந்தால் இப்பேர்ப்பட்ட சமயத்தில் விசேஷமான பிரயோஜனம் உண்டாயிருக்கக்கூடுமென்பதில் சந்தேகமில்லை. ஆனால் சாமான்யமாய் நம் ஹிந்து தேசத்தில் முந்திய பெரியோர்களின் சரித்திரத்தை எழுதிவைத்துக்கொள்வதென்ற வழக்கம் இப்பால் அரிதாய் போய்விட்டதால் சிருங்கேரிமடத்தில் விளங்கிவந்த ஒவ்வொரு குருக்களின் திவ்ய சரித்திரம் கிடைப்பது கஷ்டமாயிருக்கிறது.

வெகு காலமாக ஜனங்கள் பரம்பரையாக சொல்லிக்கொண்டு வருகிற லோகவார்த்தை உண்மையானதல்லவென்று சொல்லுவது கேவலம் ஸாஹஸத்தினாலன்றி வேறில்லை என்பது சொல்லாமலே விளங்கும். ஷை ஜனவதந்தியை அனுசரித்து, ௩௩-வது குருக்க

ளாக சிருங்கேரிமடம் பரம்பரையில், சகு-வருஷகாலம் பட்ட பத்ராயிருந்து வெகு சமீபகாலத்தில் அதாவது 12, 3 வருஷகாலத்திற்குமுன் பிரம்மீபூதர்களான ஸ்ரீஸச்சிதாநந்த சிவாபினவ நரசிம்ம பாரதீஸ்வாமிகள் அவர்கள் என்னும் மகானுபாவர்களை அநேகம் தடவை தரிசனம் செய்து அவர்கள் பரமானுக்கிரஹத்திற்கு பாத்திரர்களாகியவரும், அவர்கள் மகாத்மியத்தையும், பூததயையையும் அந்த மகானுபாவரின் நிஸ்பிருஹதையையும், ஆஸ்கதையையும், அபாரமான புத்திசக்தியையும் பிரதிபாவிசேஷத்தையும், பாண்டித்யத்தையும் நேரில் பார்த்துத் தெரிந்துகொண்டவருமான அநேக ஜனங்களும் மற்றும் விசேஷமான அனுபவசாலிகளிடமிருந்து கேள்வியுற்று தெரிந்துகொண்டவருமான அநேக ஜனங்களும் இச்சமயத்தில் நமக்கு கிடைக்கக் கூடுமாயிருப்பதாலும், ஷை குருக்கள் சிருங்கேரிமடத்தில் பட்டத்திலிருந்த காலத்தில் அவர்களால் நடைபெற்ற அநேகம் விஷயங்களைத் தெரிந்துகொள்வதற்கு அனுகூலமான ஆதாரங்கள் ஸ்ரீமடத்தில் கிடைக்கக் கூடுமாகையாலும், இதை எழுதியவன் பால்யம் முதல் ஜன்மாந்தர புண்யபரிபாகத்தால் அந்த மகானுபாவர்கள் சன்னிதியில் சேர்ந்து ஒரு தினமும் தவறாமல் இருபத்திமூன்று வருஷகாலம் சாயைபோல் எப்போதும் அனுவர்த்தனம் செய்துகொண்டிருந்தவனாதலால் அந்த குருக்களை ஸம்பந்தித்த அநேக சங்கதிகளை அவர்கள் முகத்திலிருந்தே கேட்டுத் தெரிந்துகொண்டிருப்

வாரயும், தானும் அனுபவித்து அநேக விஷயங்கள் தெரிந்துகொண்டவாராயும் இருப்பதினால் இவ்வளவு உபகாரணங்கள் தயாராக ஏற்பட்டிருக்கிற இந்த சந்தர்ப்பத்தில் தெரிந்தமட்டில், புண்ணிய சுலோக ஸ்ரீகுருசரித்திரத்தை விவரமாக எழுதி கிருதகிருத்யதையையும் இதனால் இதர ஜனங்களுக்கு உண்டாகக்கூடிய பெரும் பிரயோஜனத்தில் இந்த லேககன் ஒரு காரணபூதனாயிருப்பதினால் லேககனுக்கு புண்ய சம்பாதனமும் ஏற்படுவதில் கொஞ்சமும் சந்தேகமில்லை. ஆகையால் இந்த கிரந்த மூலமாய், மகாமஹிமாஸ்பதர்களான ஸ்ரீமத் ஸச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்ம பாரதீஸ்வாமிகள் அவர்களின் திவ்ய சரித்திரத்தை சுருக்கமாய் எழுதுவதற்கு ஆரம்பம் செய்ய உத்யுக்தனாகிறேன்.



# விஷயஸூசிகை.

## முதல் அத்தியாயம்.



## இரண்டாவது அத்தியாயம்.

## மூன்றாவது அத்தியாயம்.



## நான்காவது அத்தியாயம்.

## ஐந்தாவது அத்தியாயம்.

## ஆருவது அத்தியாயம்.

## ஏழாவது அத்தியாயம்

## எட்டாம் அத்தியாயம்.

## ஒன்பதாவது அத்தியாயம்



## பத்தாவது அத்தியாயம்.

## பதினொன்றாவது அத்தியாயம்.

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

# படங்களின் அட்டவணை.

---



ஸ்ரீஸச்சிதானந்த சிவாபிநவ
நரஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள்.



# ஆசார்ய சரித்திரம்

## 1-வது அத்தியாயம்.

### ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் ஜனனமும் பாலலீலையும்.

---

மைசூர் ஸமஸ்தானத்தை ஆண்டுவரும் மகாராஜர்களின் இராஜதானியான மைசூர் பட்டணத்தில் பழைய அக்கிரகாரமென்ற பிராமணவீதியில் குணிகல் ராமசாஸ்திரிகள் என்னும் ஒரு பிராமணோத்தமர் இருந்தார். இவரின் முன்னோர்கள் காவேரிநதி தீரத்திலுள்ள எடத்துறை என்ற மகாக்ஷேத்திரத்தில் வசித்து வந்தார்கள். ராமசாஸ்திரிகள் பரம்பரையாய் வேதோக்தமான சகலகர்மங்களையும் அனுஷ்டானம்செய்துகொண்டும் வேதம் வேதாங்கங்கள் முதலியவற்றை அத்தியயனம்செய்து பிரசித்தமான பாண்டித்யத்தை அடைந்து அதிபரிசுத்தமான வைதிக குலத்தில் ஜனித்தவர். இவர் காசியபகோத்திரம், ஆபஸ்தம்பஸூத்திரம், ஆந்திரஜாதியில் முலகநாடு என்ற பிரிவுக்கு சேர்ந்தவர். இவர் பிதா நரசிம்மசாஸ்திரிகளென்று தெரியவருகிறது. மேற்கண்ட நரசிம்மசாஸ்திரிகள்

எடத்துறையைவிட்டு இராஜதானியான மைசூருக்கு வந்து இராஜாவின் ஆச்ரயம்பெற்று இராஜாவினால் ஆதரிக்கப்பட்டு அங்கேயே வசித்து வந்தார். இவருக்கு நரசிம்மசாஸ்திரிகள் என்ற ஜ்யேஷ்ட குமாரனும் இராமசாஸ்திரிகள் என்ற இரண்டாவது குமாரனும் பிறந்தார்கள். 1வது நரசிம்மசாஸ்திரிகள் நன்றாய் வேதாத்தியயனம் செய்தவராயும் சாமான்யமாய் காவ்யாலங்காரங்களில் பரிசயமுள்ளவராயுமிருந்தார். 2-வது குமாரரான ராமசாஸ்திரிகள் என்பவர் பாலியம்முதல் கொண்டே அபூர்வமான தைரியமும் ஸ்திரதையும் உள்ளவராயிருந்ததினால் பாலியத்திலேயே பிராமணனுக்கு ஆவசியமான வேதாத்தியயனமும் காவிய நாடகாலங்காரங்களும் தன் பிதாவாகிய நரசிம்மசாஸ்திரிகளிடத்திலேயே அப்பியாசம் செய்துகொண்டு எல்லா சாஸ்திரங்களுக்கும் உபயோகமான தர்க்க சாஸ்திரத்தையும் அப்பியாசம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் தன் பிதாவாகிய நரசிம்மசாஸ்திரிகள் காலகதியை அடைந்து விட்டதனால் அக்காலத்தில் பிரசித்தரான விட்டலோபாத்யாயர் சிஷ்யராகிய திருப்பதி ஸ்ரீநிவாசாசாரியாரிடத்தில் சம்பூர்ணமாய் தர்க்கசாஸ்திரத்தைக் கற்றுக்கொண்டார். பெரியோர்கள் சம்பிரதாயபிரகாரம் அந்தகாலத்தில் ஸர்வசம்மதரான அத்வைதசாஸ்திரத்தை உணர்ந்த கிருஹஸ்தரிடத்தில் பிர்ம்மசூத்ரபாஷ்யம் சாந்திசெய்துகொண்டு தன்னுடைய புத்திவிசே

ஷத்தால் வேதாந்தசாஸ்திரம் முழுவதும் அப்பியாசம் செய்துகொண்டார். தர்க்கம் வேதாந்தம் இவைகளில் இவருக்குள்ள பாண்டித்யம் நிகரற்றதாயிருந்தது. இவரிடத்தில் தர்க்கசாஸ்திரத்தை அப்பியாசம்செய்து பாண்டித்யத்தை சம்பாதித்துக்கொண்டிருந்த இவர் சிஷ்யர்கள் தக்ஷிணதேசத்தில் (दिग्दन्ति) திக்தந்திகள் என்று கொண்டாடப்பட்டு வந்தார்கள். வேதசாஸ்திரங்கள் பிரசாரமாவதற்கு துர்தசைவந்திருக்கும் இக்காலத்திலும்கூட முந்திய பண்டிதர்களில் யாராவது "நியாயசாஸ்திர" பண்டிதர் தக்ஷிணதேசத்தில் காணப்பட்டால் அவரும் இராமசாஸ்திரிகள் அவர்களின் சிஷ்யபரம்பரையில் சேர்ந்தவராயிருக்கவேண்டுமேயொழிய வேறல்லவென்று தாராளமாய்சொல்லலாம். இவர் நியாய சாஸ்திரத்தில் செய்திருக்கிற சதகோடி முதலிய அநேக கிரந்தங்கள் மூலமாய் உத்தரதேசத்திலுள்ள மகா பண்டிதர்களிடத்திலும் இவருடைய பிரஸித்தி மிகவும் பரவியிருந்தது. இந்த சாஸ்திரிகளுக்கு வேதசாஸ்திரங்களிலுள்ள நம்பிக்கை மிகவும் அபூர்வமாயிருந்தது. கர்மசிரத்தை என்பதற்கு இவர் ஜன்மபூமியாய் விளங்கினர். சிவபக்தியும் சிவபூஜாநிஷ்டையும் இவருக்கு கூடப்பிறந்த குணமாயிருந்தது. இந்தவிதமான மகா பண்டிதர் சத்தசரித்திர விஷயத்தில் சொல்லவேண்டிய தொன்றுமில்லை. இந்தபண்டிதசிரோமணியான இராமசாஸ்திரிகள் தன் பிதாவைப் போலவெ மைசூர் ஸ்ரீ மகாராஜா மும்மடி கிருஷ்ண

ராஜப்ரபுக்களின் ஆசிரயம்பெற்று மகாராஜாவின் ப்ரீதிக்கும் கௌரவத்திற்கும் பாத்திராகி மைசூர் ராஜஸபையில் ஒரு முக்கிய வித்வான் ஆக இருந்து வந்தார். இவர் தர்மபத்னீ லக்ஷ்மீயம்மாள் என்ற ஸதீசிரோமணி. பதிசுச்ருஷையில் எப்போதும் ஆதரவுடன் நடந்துகொண்டு பதியின் விசுவாசத்திற்கு பாத்திரமாயிருந்து வந்தார். இந்ததம்பதிகள் கிருஹஸ்தாசிரம தர்மங்களையும் கர்மானுஷ்டானங்களையும் சாஸ்திரவிதி தவறாமல் கிரமமாய் நடத்திககொண்டு வந்தார்கள்.

இவர்களுக்கு பூர்வஜன்மகர்மவிசேஷத்தால் 3,4, சந்தானங்கள் உண்டாகி விருத்தியாகாமலே போய்விட்டது. இந்த துக்கம் தம்பதிகளின் மனதை மிகவும் வருத்தப்படுத்திக்கொண்டிருந்தது. அச்சமயத்தில் ஆஸ்திகோத்தமரான ராமாசாஸ்திரிகள் பக்தர்களுக்கு வசியப்பட்டு அவர்கள் மனோபீஷ்டத்தை நிறைவேற்றக்கூடிய பரமசிவனுடைய கிருபையினாலன்றி இந்த குறைவு நீங்குவதற்கு வேறு உபாயமில்லை என்று நிச்சயித்துக்கொண்டு பதிவிருதாசிரோமணியான தன் தர்மபத்னீயின் சகாயத்தைப்பெற்று சரியான நியமங்களுடன் ஸ்ரீமேதாதக்ஷிணாமூர்த்தியை உபாசனம் செய்துவந்தார். மகாசுத்தமான மனதுள்ள இவருடைய திருடமான பக்தியினால் வசியரான பரமேசுவரன் குலத்திற்கு அலங்காரமான ஒரு புத்திரனை அருள் செய்தார். இக்குமாரன் சாஸ்திரிகளின் 34வது வயதில்



ஸ்ரீஸ்வாமிகளின் பிதா குணிகல்
ராமசாஸ்திரிகளவர்கள்.

சார்வரி வருஷம் வைசாக சுக்கில திரயோதசியில் ஜனித்தான். அந்த தினம் நரசிம்மஜயந்திதினமாகை யாலும் தங்கள் வம்சத்தில் ஜ்யேஷ்ட குமாரனுக்கு லக்ஷ்மீநரசிம்மன் என்று நாமகரணம் செய்வதுவழக்க மாகையாலும் அந்த குமாரருக்கு லக்ஷ்மீநரசிம்மனெ ன்று நாமகரணம் செய்தார். இந்த குமாரன் ஜனிக்கும் சமயம், சாஸ்திரிகள் பத்னீசமேதராய் கபிலாநதீதீரத் தில் ஸ்ரீகண்டேசுவரரை ஆராதனம்செய்துகொண்டு நஞ் சன்கூடு க்ஷேத்திரத்தில் வஸித்து வந்தாராகையால் அந்தக்ஷேத்திரத்திலேயே ஜனனமாயிற்று.

பிறகு சாஸ்திரிகள் தக்ஷிணதேசத்தில் காஞ்சீபுர த்தில் வாசம் செய்துவரும் சமயத்தில் 2வது குமாரன் ஜனனமாயிற்று. இந்த குமாரனுக்கு தன்வம்சத்திய மூலபுருஷரான யஜ்ஞநாராயண சாஸ்திரிகளின் ஞாப கார்த்தமாக அவர் பெயரால் யஜ்ஞநாராயணன் என்று நாமகரணம் செய்தார். இந்த மூலபுருஷரான யஜ்ஞ நாராயண சாஸ்திரிகளென்பவர் காவேரி நதிதீரத்தி லுள்ள எடத்தொரை யென்ற க்ஷேத்திரத்தில் வா ஸம் செய்துகொண்டு 60வயது வரையிலும் அக்னி ஹோத்திரம் செய்துவந்தபிறகு 'अधीत्य विधिवद्वेदान् पुत्रानुत्पाद्य धर्मतः । इष्ट्वा च शक्तितो यज्ञैः मनो मोक्षे निवेशयेत् ॥' என்ற தர்மசாஸ்திரத்தை அனுசரித்து சம்சாரத்தில் மமதையைவிட்டு மனதை பரீக்ஷித்து பார்ப்பதற்காக காவேரிதீரத்தில் அர்க்க புஷ்கரிணீ சமீபத்தில் ஸந்தி

யாமண்டபத்திலேயே சிலகாலம் வாசம்செய்து மனது உறுதியாயிருப்பதையறிந்து வெகுதூர தேசமாகிய தாம்பிரபர்ணீ தீரத்துக்குப் புறப்பட்டுப் போய்விட்டார். அவ்விடத்தில் திருநெல்வேலியைச்சேர்ந்த சேரன்மா தேவி என்னும் அக்கிரஹாரம் அனேக அக்னிஹோத்திரிகளான பிராமணர்களால் நிரம்பியிருப்பதனால் அந்த பிரசஸ்தமான கிராமத்தில் வாசம் செய்துவந்தார். பிறகு சிலகாலம்சென்ற மேல் தன்மனதின் உறுதியை நன்றாக பரீக்ஷைசெய்து தெரிந்துகொண்டு ஸந்நியாசாசிரம ஸ்வீகாரம் செய்துகொண்டார். இவர் வீட்டைவிட்டு வெளியேபோனது முதல் இவரது சங்கதி என்னவாயிற்றென்று இவர் பத்னீ புத்திராதிகளுக்கு ஒன்றுமே தெரியாது. இவர் ஸித்தியடைந்ததற்குமேல் சேரன்மாதேவியிலிருந்து வந்த ஒரு காகிதத்தினால் "யஜ்ஞநாராயண சாஸ்திரிகள் ஸந்யாஸியாகி ஸித்தியடைந்தார்" என்ற சங்கதி அவர்களுக்குத் தெரிந்து உசிதமாய்செய்யவேண்டிய கிரியைகள் எடத்துறையில் நடந்ததாகத் தெரிகிறது.

பிறகு சில காலத்திற்குமேல் இராமசாஸ்திரிகளுக்கு ஒரு பெண்குழந்தை பிறந்தது. சாஸ்திரிகளின் 50வது வயதில் இவர் தர்மபத்னீயான லெக்ஷ்மியம்மாள் மறுபடியும் கர்ப்பவதியானாள். கர்ப்பதாரணமானமேல் மறுபடியும் பெண்சந்ததியுண்டாகிவிடுமோவென்ற சந்தேகம் சாஸ்திரிகள் மனதில் உண்டாயிற்று.

பிராரப்தகர்மானுசாரியாகவே பலம் உண்டாகக்கூடிய தென்ற நம்பிக்கை சாஸ்திரிகளுக்கு இருந்தாலும் வேத சாஸ்திரங்கள் விஷயத்தில் நம்பிக்கையும் நிரம்ப பிரபலமாயிருந்தது. இந்த நம்பிக்கையினுல் தனது தர்ம பத்னியின் 4-வது-கர்ப்பத்திற்கு "பும்ஸவனம்" என்ற ஸம்ஸ்காரம் செய்தார். இந்த பும்ஸவனம் முதல் கர்ப்பத்திற்கு மாத்திரம் செய்வதென்று சாஸ்திரமும் சம்பிரதாயமும் இருந்தாலும் இந்த ஸம்ஸ்காரம் செய்தால் அந்த கர்ப்பம் புருஷனுகவே ஜனிக்குமென்ற நம்பிக்கை இருந்ததனுல் சாஸ்திரிகள் இந்தப்பிரகாரம் நடத்தினுர். இந்த நம்பிக்கை இவருக்கு இருந்ததென்று தெரிந்துகொள்ளுவதற்கு இன்னெரு சந்தர்ப்பம் ஏற்பட்டது. சாஸ்திரிகள் அவர் தர்மபத்னீ கர்ப்பிணியாயிருக்கும் சமயத்தில் ஒருநாள் பாதசாரியாய் சில சிஷ்யர்களுடன் ஈச்வர தரிசனத்திற்காக நஞ்சன்கூடுக்கு புறப்பட்டுப்போனுர். வழியில் நடந்துகொண்டிருக்கும்போது இனி சமீபத்தில் ஜனிக்கப்போகிற குமாரனுக்கு நாமகரணம் என்ன செய்யவேண்டியதென்று சாஸ்திரிகள் ஆலோசனையிலிருந்தது. தனக்கு சந்தானமில்லாமலிருந்த குறைவு தக்ஷிணுமூர்த்தியின் அனுக்கிரஹத்தால் நிவர்த்தி ஆயிற்று. இதுவரையில் உண்டாயிருக்கிற தன் 2 குமாரர்களுக்கும் வேறு வேறு பெயர் வைக்கப்பட்டிருக்கிறது. சிவபிரஸாதத்தினுல் உண்டான குமாரர்களுக்கு அந்த சிவன் பெயர்

வைக்கவில்லை. இப்போது உண்டாகும் குமாரருக்கு பரமசிவன் நாமங்களில் ஒன்றுவைக்கவேண்டுமென்று நிச்சயம் செய்துகொண்டார். அப்போது தன்னுடன் கூட வந்துகொண்டிருக்கும் வித்யார்த்திகளில் ஒருவரான சோளதேசம் சுப்பிரமணியசாஸ்திரி என்ற வித்யார்த்தியிடத்தில் சாஸ்திரிகளுக்கு அதிகமான பிரீதி இருந்தது. அந்த வித்யார்த்திக்கும் சாஸ்திரிகளிடம் திருடமான பக்தி இருந்ததுடன் சாஸ்திரிகளிடம் தாராளமாய் பேசக்கூடிய தைரியமுமிருந்தது. அந்த சுப்பிரமணியசாஸ்திரிகளைப் பார்த்து "ஏ சுப்பிரமணியா, இப்போது நமக்கு ஜனிக்கும் குமாரனுக்கு என்ன நாமதேயம் வைத்தால் நன்றாயிருக்கும். உங்கள் தேசத்தில் சிவநாமங்களில் எந்த நாமத்தை குழந்தைகளுக்கு விசேஷமாக வைப்பது வழக்கம்" என்று கேட்டார். அந்த சமயத்தில் மகாபண்டிதரான ராமசாஸ்திரிகளின் இந்த வார்த்தையைக்கேட்ட பாலவித்யார்த்தியான சுப்பிரமணிய சாஸ்திரிக்கு அது அசப்பத்தமென்று தோணினதால் மௌனமாயிருந்துவிட்டான். பேசாமலிருந்த தன் வித்யார்த்தியைக்கண்டு சாஸ்திரிகள் 'ஏன்பேசாமலிருக்கிறாய்?' என்று கேட்டார். அதற்கவன் 'சுவாமி, தாங்கள் சகலமும் தெரிந்தவர்கள். தங்களுக்கு சொல்லுவதற்கு எனக்கு சக்தி ஏது? இனிமேல் ஜனிக்கக்கூடிய சிசு ஆண், பெண் என்று தெரிந்து கொண்டபிறகுதானே பெயர் வைக்கவேண்

டிய விஷயம் ஆலோசனை செய்யவேண்டும்' என்று அந்த சிஷ்யன் கொஞ்சம் சிரித்துக்கொண்டு சொன்ன பதிலைக்கேட்டு குருவுக்கு அந்த சிஷ்யன் விஷயத்தில் கொஞ்சம் அசமாதானமேற்பட்டது. அதற்குமேல் குரு சிஷ்யனைப்பார்த்து "நீ சிறு பையன் உனக்கு வேதசாஸ்திரங்களின் விஷயம் தெரியாது. அதனால் என் வார்த்தை உனக்கு அனுசிதமாக தோணுகிறது. நான் இந்த கர்ப்பத்திற்கு பும்ஸவன ஸம்ஸ்காரம் செய்யவில்லையா. அந்த ஸம்ஸ்காரம் செய்தபிறகு பிறக்கிற குழந்தை ஆணு, பெண்ணு என்ற சந்தேகத்துக்கு இடமேது? 'புமாநேவ ஜாயதே' என்ற சாஸ்திரம் அப்பிரமாணமாகுமா? எப்பொழுதும் ஆகிறதில்லை. புருஷபிரஜையாகவே ஈசுவரன் நமக்கு கொடுக்கிறார். சந்தேகமில்லை. என் வார்த்தையை நம்பி நான் கேட்ட கேள்விககு பதில் சொல்லு என்றார். அப்பொழுது அந்த வித்யார்த்திக்கு குருவினிடத்தில் விசேஷமான பக்தி இருந்ததனால் பயமுண்டாகி மிகவும் தாழ்மையுடன் "ஸ்வாமி! என்னுடைய பாலிய சுபாவத்தினாலுண்டான தப்பிதத்தை மன்னிக்கவேண்டும். தங்கள் சங்கல்பம் போலவே தாங்கள் ஆராதனம் செய்துவருகிற தைவமே அவதாரம் செய்யக்கூடும். அதனால் ஜனிக்கிற குமாரனுக்கு 'சிவஸ்வாமி' என்று நாமதேயம் செய்தால் மிகவும் சரியாயிருக்கும் என்று சொன்னான்.

சாஸ்திரிகள் ஆலோசித்த நாமத்தின் கடைசியில்

ஸ்வாமி என்ற சப்தத்தை சேர்த்து சொன்ன அந்த சிஷ்யன் வார்த்தையைக் கேட்டு பரம சந்தோஷத்துடன் கர்ப்பத்திலிருக்கப்பட்ட சிசு ஜனனமான மேல் 'சிவஸ்வாமி' என்பதாகவே பெயரிடவேண்டுமென்று அப்பொழுதே நிச்சயம் செய்துகொண்டார். இந்த விஷயத்தை ஆலோசிக்கும்போது சாஸ்திரிகளுக்கு வேத சாஸ்திர விஷயத்தில் எவ்வளவு நம்பிக்கை இருந்ததென்று தெளிவாய் தெரிந்துகொள்ளலாம். இராமசாஸ்திரிகளுக்கு புத்திரஜனனம் ஆகிறதற்கு முந்தியே ஜனிக்கப்போகிற குமாரனுக்குப் பெயர் என்ன வைக்கிறதென்கிற ஆலோசனை நஞ்சன்கூடுக்கு ஸ்ரீகண்டேசுவர ஸ்வாமி தரிசனத்திற்குப் போகும் சமயத்தில் மனதில் உண்டாக வேண்டுமானால் ஜனிக்கப் போகிற மகாபுருஷன் பவிதவ்யதையை அனுசரித்து ஈசுவர பிரார்த்தனையினாலேயே அந்தப் பிரகாரம் சாஸ்திரிகளுக்கு விருத்தியுண்டாகி அப்பொழுதே தீர்மானமாயிற்றென்றும் சொல்லலாம். சாஸ்திரிகள் அவர்கள் தர்மபத்னியான லக்ஷ்மி அம்மாளுடைய கர்ப்பம் ஒன்பது மாதபரியந்தம் விருத்தியாகி பூர்த்தியான பிறகு பிங்களவருஷம் பால்குனமாதம் கிருஷ்ணபக்ஷம் ஏகாதசி குருவாரம் சிரவணநக்ஷத்ரத்தில் மகரராசியில் இராத்திரி 9-மணிக்கு புருஷரத்னம் உத்பத்தியாயிற்று. கர்ப்பத்திலிருந்து சிசு வெளியில் பூமிக்கு வந்ததும் ராஜதானியில் சுபாவமாகவே இராத்திரியில் போடப்

பட்ட குண்டு சப்தம் எல்லாராலும் கேட்கப்பட்டது. இது ஒரு சுபஸூசகமென்று அங்கிருந்தவர்கள் எல்லாரும் தெரிந்துகொண்டார்கள். ஆஸ்திகசிரோமணிகளான சாஸ்திரிகள் நம்பிக்கைக்கு சரியாக பகவான் தனக்கு புருஷப்பிரஜையை அனுக்கிரஹித்திருக்கிறார் என்று அறிந்ததும் அவருக்குண்டான சந்தோஷம் அபாரமாயிருந்தது. இந்த சாஸ்திரிகளுக்கு சாஸ்திரங்களில் எப்படி விசேஷமான பாண்டித்யம் இருந்ததோ அதே மாதிரி நிலையில்லாத ஜலத்தில் நீந்துகிறதிலும் அபாரமான சக்தி இருந்தது. உடனே மைசூர் பெரிய ஏரி என்னும் ஜலாசயத்திற்குப் போய் தன் பிதிருக்களின் உத்தாரணத்துக்காக உயர்ந்த பிரதேசத்திலிருந்து ஜலத்தில் குதித்து அந்த வேகத்தினால் கிளம்பின ஜலத்திவலைகள் வெகுதூரம் மேலே போகும்படி செய்தார். இந்தக் காரியம் அவசியம் செய்யவேண்டியதென்று தர்மசாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. சாஸ்திரிகள் அவர்கள் மற்ற ஜனங்களைவிட மேம்பட்டவராயிருந்ததினால் தன்னுடைய ஆசரணையினால் தர்மங்களை மற்றவர்களுக்கும் போதனை செய்வதற்காக கூடியவரையில் ஒவ்வொரு தர்மத்தையும் கிரமப்படியே நடத்திக்கொண்டுவந்தார் என்று தெரியவருகிறது.

இந்த ப்ரகாரம் ஜனித்த குமாரனுக்கு ஜாதகர்ம நாமகரண ஸம்ஸ்காரங்களை வெகு விமரிசையாக நடத்

இனர். 11-வது தினத்தில் தான் முந்தி நிச்சயம் செய்துகொண்டிருந்தபடியே குமாரனுக்கு சிவஸ்வாமி என்று நாமகரணம் செய்தார்.

பிறகு ஒரு வருஷமும் பதினோரு மாதமும் ஆன பிறகு வயது முதிர்ந்த லக்ஷ்மீநரஸிம்மசாஸ்திரிகள் யஜ்ஞநாராயணசாஸ்திரிகள் இவர்களாலும் அதிபாலனை சிவஸ்வாமி என்ற சிசுவினாலும் விருத்தி அடைந்துவருகிற தன் குடும்பத்தில் திருப்தியடைந்து தன் ஜன்மாந்திரபுண்ணியத்தை யோசித்துக்கொண்டு சந்தோஷத்துடன் கர்மானுஷ்டானத்தினாலும் சிவபூஜையினாலும் பாடபிரவசனத்தினாலும் ஆநந்தமாய் காலத்தைப் போக்கிவந்தார்.

ஸத்குலபிரஸூதரான குணிகல் இராமசாஸ்திரிகளிடம் ஜனித்த சிவஸ்வாமி என்கிற அந்த பாலகன் பெயருக்கு அனுகுணமாகவே பிரதிக்ஷணமும் விருத்தியாய்க்கொண்டு ஒருவருஷம் பூர்த்தியாவதற்குள்ளாகவே பேசுவதற்கும் காலால் நடக்கிறதற்கும் ஆரம்பம செய்துவிட்டான். தன் பிதா ராமசாஸ்திரிகள் காலையிலும் மாலையிலும் ஔபாசனம் செய்யும் சமயத்திலும் அவர் சிவபூஜை செய்துவிட்டு ஸ்தோத்திரம் செய்துகொண்டு நர்த்தனம் செய்யும் சமயத்திலும் சிஷ்யர்களுக்கு பாடம் சொல்லிக்கொண்டிருக்கும் சமயத்திலும் இந்த சிவஸ்வாமி என்ற பாலகர் அவர் சமீபத்திலேயே அநேகமாய் இருந்துவந்ததனால் இந்த சகவாசத்தினாலும்

பலமான பூர்வீக ஸத்வாஸனையினாலும் அக்னிகுண்டத்திலுள்ள விபூதியை தன் இரண்டு கைகளிலும் வாரி எடுத்துக்கொண்டு தன் மிருதுவான அங்கங்களிலெங்கும் பூசிக்கொள்வது, அந்த விபூதியை தின்பது, சாஸ்திரிகள் பூஜை செய்துவிட்டு ஸ்தோத்ரங்களை சொல்லிக்கொண்டு கரதாளத்துடன் நர்த்தனம் செய்யும்போது தானும் கரதாளம் போட்டுக்கொண்டு தன் வாயில்வந்த சிவநாமத்தை சொல்லிக்கொண்டு நர்த்தனம் செய்வது, இந்த ப்ரகாரம் தன் பாலலீலைகளை மாதாபிதாக்களுக்கு காண்பித்து அவர்களுக்கு ஆச்சரியத்தையும் சந்தோஷத்தையும் ஒவ்வொரு சமயத்திலும் அதிகமாக்கிக்கொண்டிருந்தார்.

இந்த சிவஸ்வாமி எப்போதும் தனக்கு சமான வயதுள்ள சிறுவர்களுடன் கூட சேர்ந்து வீதியில் சிறுவர்கள் செய்யக்கூடிய விளையாட்டுகளுக்கும் ஆட்டங்களுக்கும் போவதற்கு ஒருநாளும் தைரியமாய் வெளியில் வந்ததில்லை. தன் வீட்டிற்கு அப்போதைக்கப்போது வரக்கூடிய அக்கம்பக்கத்து வீட்டுப்பையன்கள் தன்னுடன் சேர்ந்திருக்கும் சந்தர்ப்பத்தில் மழலைச்சொற்களாக தனக்குவந்த சுலோகங்களை வந்த குழந்தைகளுக்கு சொல்லிக்கொடுத்து அவர்கள் வாயினாலும் சொல்லும்படி செய்து அவர்களுடன் கரதாளத்துடன் நர்த்தனம் செய்வதென்ற ஒரு ஆட்டம் தான் இந்தக் குழந்தைக்கு தெரிந்திருந்தது. இக்காலத்திலுள்ள பெரியோர்களானாலும் சிறியவர்களானாலும் இந்த கிரந்

தங்களைவாசித்து வரும் காலத்தில் இது அதிசயோக்தி என்று சொல்லாமலிருக்கமாட்டார்கள். ஜன்மாந்தரத்திலிருந்து வந்த ஸத்வாஸனையும் பாலியத்திலேற்பட்ட ஸத்சகவாசமுள்ள குழந்தைகளுடைய சுபாவத்தைப் பார்த்திருக்கும் ஜனங்கள் இந்த காலத்திலும் யாராவது ஜீவித்திருக்கலாம். அத்தகைய ஜனங்களிடம் பிரஸ்தாபித்துப் பேசுவதாலும் தன் புத்திசக்தியைக்கொண்டு ஆலோசனை செய்வதாலும் ஸத்குலப்ரஸூதனும் பிறந்ததுமுதல் வேறு ஒன்றுமறியாதவனும் ஸத்ஸம் பிரதாயம் ஸத்சகவாசம்பெற்ற இக்குழந்தையின் விஷயத்தில் மேலே எழுதிய விஷயம் அதிசயோக்தி என்று சொல்லுவதற்கு இடம் கொஞ்சமுமேற்படாது.

சிவஸ்வாமிக்கு இரண்டு வருஷம் பூர்த்தியாவதற்குள்ளாகவே அதாவது சென்ற சித்தார்த்தி வருஷ மாகசுக்லசதுர்த்தி தினத்தில் ராமசாஸ்திரிகள் ஸ்வர்க்கலோகப்ராப்தியடைந்தார்கள். இந்த சிவஸ்வாமி அதிபாலியத்திலேயே பிதுருவியோகத்தினால் வருத்தமடைந்து மாதாவான லக்ஷ்மீ அம்மாளால் பரிபாலிக்கப்பட்டுவந்தார்.

இப்படி ராமசாஸ்திரிகள் காலமான பிறபாடு அவர் தர்மபத்னியான லக்ஷ்மி அம்மாள் பிராரப்தகர்மத்தினால் ஏற்பட்ட வைதவ்யத்தை அனுபவித்துக்கொண்டு தன்பதியையே எப்பொழுதும் தியானம்செய்து கொண்டு சுக்லவஸ்திரதாரணம்செய்துகொண்டு வீடு



ஸ்ரீஸ்வாமிகளின் பூர்வாசிரம தமயனார்
குணிகல் லக்ஷ்மீ நிருஸிம்ஹ சாஸ்திரிகள்.

தி ருத்ராக்ஷங்களை தரித்து எப்பொழுதும் சிவநாம ஜபம் செய்துகொண்டு ஸாக்ஷாத் சிவனைப்போலவே இடைவிடாமல் தன்னுடன் கூடவிருக்கும் சிவஸ்வாமியைப்பார்த்து சந்தோஷப்பட்டுக்கொண்டு முன்சொன்ன சிவஸ்வாமியின் விளையாட்டுக்கு வேண்டிய சாமான்களை வேண்டியபடி அந்த குழந்தைக்குகொடுத்து அந்தக் குழந்தை செய்யும் ஆட்டங்களைப்பார்த்துப் பார்த்து மனமகிழ்ந்து காலத்தைக் கழித்துக்கொண்டு வந்தார்.

இராமசாஸ்திரிகளின் மூத்தகுமாரரான லக்ஷ்மீநரசிம்மசாஸ்திரிகள் அப்போது 19 வயதுள்ளவராகியும் தர்க்க சாஸ்திரத்தில் சம்பூர்ணமான பாண்டித்யமுள்ளவராயிருந்தார். இவரே தன்பிதாவின் காலத்தில் குடும்பபாரம் முழுமையும் வகித்து தன் சகோதரர்களையும் தாயாரையும் காப்பாற்றிக்கொண்டு சாஸ்திரிகளவர்களுடைய கௌரவத்துக்கும் லோகோத்தரமான யசஸுக்கும் கொஞ்சமும் குறைவு வராமல் நடந்துகொண்டுவந்தார்.

இவர் தன் பிதாவான இராமசாஸ்திரிகளிடத்திலேயே காவிய நாடகாலங்காரங்களும் (பூர்த்தியான) தர்க்கசாஸ்திரமும் அப்பியாஸம்செய்துவந்தார். சாஸ்திரிகள் அவர்களின் தபஸுக்கு பலமாக வெகுகாலத்திற்கு பிறகு ஜனித்து பிழைத்தவரானதையாலும் பாலியத்தில் இவர் அடிக்கடி ரோகபாதையை அனுபவித்து வந்ததனாலும் வித்யாப்பியாச விஷயத்தில் இராமசாஸ்திரிகள் இவரை நிர்ப்பந்தம் செய்துகொண்டிருக்

கவில்லை என்று தெரியவருகிறது. அப்படியிருந்தும் ஈசுவர பிரஸாதத்தினால் ஜனித்தவராகையாலும் ஜன்மாந்தரீயமான ஸம்ஸ்காரபலத்தினாலும் லக்ஷ்மீநரஸிம்மசாஸ்திரிகளுடைய (ப்ரதிபா) புத்திவிசேஷம் புகழக்கூடியதாயிருந்தது. பெரியசாஸ்திரிகளவர்களிடம் படித்துக்கொண்டிருக்கும் தன் சகபாடிகளுக்கும் மற்றவர்களுக்கும் கூட லக்ஷ்மீநரஸிம்ம சாஸ்திரிகள் ஸ்வதந்திரமாகவே சிந்தனைசெய்து வைத்துக்கொண்டிருந்தார். தான் அப்பியாசம் செய்வது குறைவாயிருந்தாலும் இதர வித்யார்த்திகளுக்கு சிந்தனை சொல்லுவதாலும் சுபாவமான பிரதிபையினாலும் இவருக்கு தர்க்கசாஸ்திரத்தில் உத்தமமான பாண்டித்யம் ஏற்பட்டது. லக்ஷ்மீநரஸிம்மசாஸ்திரிகள் 16 வயதாயிருக்கும்பொழுது இராமசாஸ்திரிகள் தக்ஷிணதேசசஞ்சாரத்திற்காக புறப்பட்டுப்போயிருந்தார். அந்த காலத்தில் தேசாந்தரத்திலிருந்து மைசூரில் ராஜசபையில் சாஸ்திரார்த்த விஷயமாய் வாதம்செய்து வெகுமானம் பெறுவதற்காக வித்வான்கள் வந்திருந்தார்கள். அந்த சந்தர்ப்பத்தில் வந்த வித்வான்களுடன் வாதம்செய்யக்கூடியவர் தங்கள் ஆஸ்தானபண்டிதர்களில் யார் இருக்கிறார் என்று ஆலோசனை மகாராஜாவுக்கு உண்டான சங்கதி லக்ஷ்மீநரஸிம்ம சாஸ்திரிகளுக்கு தெரியவந்தது. இந்த சங்கதியை தெரிந்துகொண்டு அன்றையதினம் லக்ஷ்மீநரஸிம்ம சாஸ்திரிகள் இராஜசபைக்குப்போனார். இவர் கேவலம் பாலியவயதிலிருப்பது

னால் மகாராஜாவுக்காவது வந்திருந்த பண்டிதர்களுக் காவது இவர் விஷயத்தில் கவனமுண்டாகவில்லை. சாஸ்திரார்த்த விசாரத்திற்கு ஆரம்பமானவுடனே இந்த சாஸ்திரிகள் தானாகவே முன் விழுந்து விஷய விசாரத்திற்கு ஆரம்பம் செய்தார். கடைசியில் லக்ஷ்மீநரசிம்மம் சாஸ்திரிகளுடைய ப்ரதிபையினாலும் ஞானத்தினாலும் வந்த வித்வான்கள் கோடி முன் நிற்காமல்போன சங்கதியை தெரிந்துகொண்ட தேசாந்தர பண்டிதரும் மகாராஜரும் ஆச்சரியத்தினால் ஸ்தம்பித்து விட்டார்கள். இந்த சந்தர்ப்பத்தில் மகாராஜருக்கு ஆனந்தமும் ஆச்சரியமும் அடங்கமுடியாமலிருந்தது.

இராமசாஸ்திரிகளுடைய பிரபாவத்தைக்குறித்து விசேஷமாக சிலாகித்து அந்த சபையில் பாலிய வயதுள்ள லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளுக்கு 2 தோடாக்களும் முக்தா ஹாரம் முதலிய சம்மானங்களும் முந்தி கொடுப்பிவித்து பிறகு தேசாந்தர பண்டிதருக்கு வெகுமதியும் கொடுப்பித்தார். இந்த லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளிடத்தில் அன்றயதினம் ஸ்ரீ மகாராஜாவுக்கு உண்டான சந்தோஷத்தினால் अतिस्नेहः पापशङ्की என்ற நியாயத்தை அனுசரித்து இந்த பாலபண்டிதருக்கு திருஷ்டிதோஷத்தினால் உபத்திரவம் ஆகுமென்று பயந்து அந்த தோஷபரிஹாரத்திற்காக நடத்தவேண்டிய காரியங்களை கிருஹத்தில் நடத்த

வேணுமென்று சாஸ்திரிகள் மாதாவுக்கு சொல்லிய னுப்பி லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளை மரியாதைகளு டன் வீட்டிற்கு அனுப்பிக்கொடுத்தார் என்று தெரிய வருகிறது.

தன் பிதாவான ராமசாஸ்திரிகள் ஸ்வர்க்ஸ்தரா னபிறகு அவரிடத்தில் தான்வாசித்த கிரந்தங்களை எல் லாம் நன்றாய் பரிசீலனம்செய்து சிந்தனைசெய்து பாண் டித்யத்தை விருத்திசெய்துகொண்டு தான் ஸ்வதந் தரமாய் தேசசஞ்சாரத்திற்கு புரப்பட்டு கோளதேச த்தில் சஞ்சாரம் செய்ததாயும் அப்பொழுதே அனந் தசயனசம்ஸ்தானத்தில் அனேகவித்வான்கள் இருந்த தாயும் அந்த சம்ஸ்தானத்தில் லக்ஷ்மீநரசிம்ம சாஸ்தி ரிகள் வாக்கியார்த்தம் நடந்து அவ்விடத்திய பண்டி தர்கள் ஆச்சரியத்தினால் ஸ்தம்பிதர்களானார்களெ ன்றும் அத்தேசத்தில் இப்போதும் ப்ரஸித்தி இருக் கிறது. இந்த லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகள் தன் பிதா வைப்போலவே அனேக வித்யார்த்திகளுக்கு தர்க்க சாஸ்திரபாடம் சொல்லிக்கொண்டிருந்தார். மைசூர் மும்மடி கிருஷ்ணராஜபிரபுவின் அந்தியகாலத்தி லும் சாமராஜ பிரபுவின் இராஜியபார காலத்தில் ஆரம் பத்திலிருந்து சில வருஷங்களுக்கும் மைசூர் சம்ஸ்தா ன வித்வத்கோஷ்டியில் அக்ரகண்யராயிருந்துவந்தார்.

தன் பிதாவான இராமசாஸ்திரிகளால் இயற்றப் பட்ட ஸர்வதேசத்திலும் பிரசித்திபெற்ற சதகோடி

என்கிற கிரந்தத்தை அவர்காலத்திற்கு பிறகு சிலபண்டிதர் கண்டனம் செய்திருக்கிறூர்கள் என்றுகேட்டு அந்த கண்டன கிரந்தத்தை தருவித்துக்கொண்டு शतकोटिमण्डनम् என்ற பெயருடன் இதரர்செய்த கண்டனத்தை அனேகவிதமாய் கண்டித்து கிரந்தரசனையும் செய்திருக்கிறூர். இதைப்போலவே அத்வைதவேதாந்த சாஸ்திரத்தில் அதிப்ரௌடமான ब्रह्मानन्दीयम् என்ற கிரந்தத்திற்குசில விசிஷ்டாத்வைதமதத்தைச்சேர்ந்தவர்களால் எழுதப்பட்ட கண்டனகிரந்தத்தை கண்டித்து न्यायेन्दुशखरम् என்ற பெயரால் மண்டன கிரந்தமும் சில தூரம் எழுதியிருக்கிறூர். இந்த கிரந்தம் இப்போது சோளதேசத்தில் பிரசித்தராயிருந்த மகாமகோபாத்தியாய தியாகராஜமகி (ராஜுசாஸ்திரிகள்) அவர்களால் பூர்த்தி செய்யப்பட்டிருப்பதாக தெரியவருகிறது. ஸாமாந்ய நிருக்தி என்ற வாதகிரந்தத்திற்கு வியாக்கியான ரூபமான "பங்காளிபத்திர" என்ற ஒருகிரந்தம் பங்காளதேசத்திலிருந்து புதியதாய் மைசூரிலிருந்த பண்டிதர்கள் திருஷ்டிக்குவந்தது. இந்த கிரந்தம் அச்சிட்டாயிருக்கவில்லை. எழுதியவர்கள் பிசகினுல் அநேகபிழைகள் நிறைந்திருந்தது. முன்காலத்தில் அபூர்வமான கிரந்தங்களை பிரசாரத்துக்குவராமல் பண்டிதர்கள் அடக்கமாய்வைத்துக்கொண்டிருப்பது வழக்கமாயிருந்ததாகவே தெரிகிறது. இந்தகாரணத்தினுல் தேசாந்திரத்திலிருந்து வந்த

இந்த கிரந்தத்தை சரியாய் அன்வயம்செய்துகொண்டு அர்த்தம் செய்துகொள்வது இவ்விடத்திய பண்டிதர்களுக்கு சாத்தியமில்லாமலிருந்தது. அந்த சந்தர்ப்பத்தில் பிரதிபாசாலியான இந்த லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகள் ரகஸியமாயிருந்த அந்த கிரந்தத்தை தருவித்துக்கொண்டு ஆதியோடந்தமாக பரிசீலனம்செய்து அதில் நிறைந்திருந்த பிசகுகளையெல்லாம் சரிபடுத்தி தன் சிஷ்யர்களுக்கு உடனே ஸ்வதந்தரமாக பாடம் சொல்வதினால் பிரசாரமாகும்படி செய்தார் என்று இந்த சாஸ்திரிகளுடைய சிஷ்யராயிருந்த இப்பால் கொஞ்சகாலம்முந்தி மைசூர் பாடசாலையில் அத்வைத வேதாந்த பண்டிதராயிருந்த கோபிசெட்டிபாளையம் இராமசாமி சாஸ்திரிகள் என்பவரால் தெரிந்துகொண்டதான விஷயம்.

இந்த கிரந்தத்துக்கு விஷயர்களான சிருங்கேரி ஸ்ரீமடம் ஸ்ரீ ஸச்சிதாநந்தசிவாபிநவந்ருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள் அவர்கள் இந்த லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகள் அவர்களிடத்திலேயே தர்க்க வேதாந்த சாஸ்திரங்கள் 2ம் அப்பியாசம் செய்து பாண்டித்யத்தை சம்பாதித்தார்.

இந்த சாஸ்திரிகளுக்கு இவரைப்போலவேபுத்திசாலியான ஒருபுத்திரனிருந்து அல்பாயுஸ்ஸாய் தவரி போய்விட்டான். இவருக்கு 2 பெண்கள்மாத்திரமிருந்து அவர்கள் சந்ததிகள் விருத்தியாய்க்கொண்டி

டிக்கிறது. இன்னும் இவர் அனுமதியை அனுசரித்து இவர் தர்ம்ம பத்னியால் ஸ்வீகாரம்செய்துகொள்ளப் பட்ட புத்திரரான ராமாசாஸ்திரிகள் என்பவர் பாலிய த்திலிருந்தே இந்த கிரந்தத்திற்கு விஷயரான ஸ்ரீஸ்வா மிகள் அவர்கள் சன்னிதானத்தில் தர்க்க வேதாந்த சாஸ்திரங்களை அப்பியாசம்செய்து தங்கள் பூர்வீகர் களைப்போலவே மைசூர் ஸம்ஸ்தானத்தில் மகாராஜர்க ளின்ப்ரீதிக்கும் கவுரவத்திற்கும் பாத்திரராகி மைசூர் ஆஸ்தானபண்டிதராயிருந்துகொண்டு கூடியவரை யில் தங்கள் குலக்கிரமாசாரங்களை நடத்திக்கொண்டு இந்த பண்டிதர் வம்சத்திற்கு அலங்காரமாக இருந்து வருகிறார்.

சிவஸ்வாமிக்கு 5வது வயதிலேயே மாதுருவி யோகம் ஏற்பட்டது. மாதாபிதுருக்கள் இருவராலும் பிரிக்கப்பட்ட இந்த பாலகர் மாதாபிதாக்கள் ஸ்தானத்திலிருந்த ஜ்யேஷ்ட பிராதாவினால் விசேஷ மாக அபிமானிக்கப்பட்டு அவருடைய ஆதீனத்தில் இருந்து அவரால் விருத்தி செய்யப்பட்டவராயிருந்து வந்தார்.





## 2-வது அத்தியாயம்

### சன்னியாசாசிரமபிராப்தி

இப்பால் 40 வருஷத்திற்கு முன் சிரிங்கேரி மடத்தில் குருக்களாயிருந்த நரசிம்ம பாரதீ ஸ்வாமிகள் அவர்களை நம்ம பாரதகண்டத்தில் அநேகஜனங்களுக்கு தெரிந்திருக்கலாம். இவர் ஸ்ரீங்கேரி ஸ்தலத்திலேயே ஜனித்தவர். இவர் 20வது வயதிற்கு முந்தியே கால் நடையாய் காசி முதலான திவ்ய தேசயாத்திரை இரண்டு தடவை செய்திருக்கிறதாக தெரியவருகிறது. இந்த மகா புருஷனுக்கு 20வது வயதில் அபிநவ சச்சிதானந்தபாரதீஸ்வாமிகளவர்களிடமிருந்து சாலிவாகன சக 1740வது வருஷத்தில் ஆசிரம பிராப்தியாயிற்று. இந்த ஆசாரியாள் 62 வருஷ காலம் சிருங்கேரி வியாக்யான சிம்மாசனாதிபதிகளாயிருந்து 82வது வயதில் பிரம்மீபூதரானார்கள். இவர் சரித்திரம் அத்யாச்சரியகரமானது. இந்த நரசிம்மபாரதி ஸ்வாமிகளுக்கு ஆசிரமமான 6வது தினத்தில் அவருடைய குரு விதேககைவல்யத்தை அடைந்தார். ஆசிரமஸம்பிரதாயத்தையும் சம்ஸ்தானசம்பிரதாயத்தையும் தெரிந்துகொள்ளு

வதற்கு அந்த நரசிம்மபாரதீஸ்வாமிகளுக்கு அவகாசமிருக்கவில்லை. இந்த சந்தர்ப்பத்தில் சுலபமாக சம்ஸ்தானபாரத்தை வஹித்து யோக்கியர்களான சன்னியாசிகள் மூலமாய் ஆசிரம சம்பிரதாயங்களை எல்லாம் நன்ருக தெரிந்துகொண்டு தன் குருக்கள் காலத்தில் அவர் சமீபத்திலிருந்துகொண்டு ஆஸ்தான நடவடிக்கைகளை தெரிந்துகொண்டிருந்தவர்களிடமிருந்து எந்த எந்த சமயத்தில் எந்த எந்த ரீதியாய் தெரிந்துகொள்ளலாமோ அந்தந்த பிரகாரம் சம்ஸதான சம்பிரதாயங்களைத் தெரிந்துகொண்டதுமல்லாமல் வெளிதேசங்களிலிருந்து சில பண்டிதர்களை வரவழைத்து அவர்களுடைய ஜீவனத்திற்குவேண்டிய அனுகூலங்களையும் ஏர்ப்படுத்தி அவர்களை தன் சமீபத்தில் இருக்கும்படி நிறுத்திக்கொண்டு அவர்கள் சகாயத்தினல் சாஸ்திர ஞானத்தையும் சம்பாதித்துக்கொண்டார்.

இந்த நரசிம்மபாரதி ஸ்வாமிகள் விசேஷமாய் தபஸுசெய்து தபஸ் ஸித்தியையும் அடைந்திருந்தார். இவர் காலத்தில் சுமார் 40 வருஷத்துக்குமேல்பட்ட காலம் தேசசஞ்சாரத்திலேயே இருந்ததாகத் தெரியவருகிறது. இவருக்கு ஸ்வதந்பாஷையான தெலுங்கு, தேசபாஷையான கன்னடம், தேவ பாஷையான ஸம்ஸ்கிருதம், தமிழ், மகாராஷ்டிரம், இந்துஸ்தானி, குஜராதி இவ்வளவு பாஷைகளில் நன்ருக பரிசயமிருந்தது. அந்தந்த தேசங்களிலேயே வெகு காலம்

சஞ்சாரம் செய்திருந்தவராகையால் அந்தந்தபாஷை யில் இருக்கக்கூடிய அதிசூக்ஷ்மமான பேதங்களெல்லா ம் ஸ்ரீ நரசிம்மபாரதி ஸ்வாமிகளுக்கு தெரிந்திருந்தது. அந்தந்த தேசத்து ஜனங்களுடன் கூட பேசும் சமயத் தில் வார்த்தை சொல்லுகிற தோரணையிலாவது ஸ்வ ரம் சேர்க்கையிலாவது பேதமிருப்பதில்லை என்று அநேகர் சொல்லத்தெரியவந்திருக்கிறது. இவர் ஆ ஸேது ஹிமாசலத்திற்கும் இடையிலுள்ள தேசங்களில் அநேகம் தடவை சஞ்சாரம் செய்து வர்ணாசிரமதர் மங்களை சிஷ்ய ஜனங்களுக்கு நன்றாய் போதித்து ஸன் மார்க்க பிரசாரணம்செய்துவந்தார். இந்தஸ்வாமிகள் அவர்கள் காலத்தில் சேகரிக்கப்பட்டிருக்கிறதான சாஸனங்கள் முதலான முந்தின காயிதபத்திரங்களால் இந்துஸ்தானத்தில் பிரசித்திபெற்ற பூனா பேஷ்வா ஸிந்தியா ஹோல்கார் கைக்வார் மைசூர் திருவாங்கூர் முதலான மகாராஜர்களும் அநேகராஜாக்கள் ஜமீன் தார் ஜாகிர்தார் இவர்களும் இவர் விஷயத்தில் விசேஷ பக்திசிரத்தையுடன் அனேகவிதமாக இந்த குருக்களை ஆராதித்து வந்தார்களென்றும் ஸ்ரீகள் அவர்களுடைய ஆக்ஞைப்படி நடந்துகொள்வதில் வெகு ஆஸக்தியுள்ளவர்களாகி வர்ணாசிரம ஆசார பரி பாலனவிஷயத்தில் விசேஷமாக அநுகூலமாயிருந்து வந்தார்களென்றும் தெரியவருகிறது.

இவரிடத்தில் சாபானுக்கிரஹ சக்தி நிரம்ப விசேஷமாயிருந்தது. இவர் 42 வருஷகாலம் காய்

கிழங்குகளை ஆகாரமாக செய்துகொண்டிருந்தார். இந்த கந்த மூலாசனவிருதத்தை 40வது வயதில் எடுத்துக்கொண்டார். இக்காலத்தில் ஆகாரத்தைப்போலவே நித்ரையையும் ஜயித்து பிரதி தினமும் 20மணி நேரம் மந்திர ஜபம் செய்வதாலும் தேவதாராதனை செய்வதாலும் தன் காலத்தைக்கழித்துக்கொண்டிருந்தார். இந்த கஷ்டமான ஆசரணை நம்தேசத்திலுள்ள இந்துக்களுக்கு ஒருவேளை ஆச்சரியத்தை உண்டுபண்ணுமலிருந்தாலும் மேல்நாட்டாருக்கு இது உண்டாயிருக்கலாமென்று நம்புவதற்குக்கூட இடமிருக்கமாட்டாது.

1858ம் வருஷத்தில் இந்த நரஸிம்மபாரதி ஸ்வாமிகள் அவர்கள் சஞ்சாரம் செய்துகொண்டு கிரமமாய் பெங்களூருக்கு விஜயம்செய்திருந்தார். அந்த காலத்தில் இந்த மைசூர் சமஸ்தானத்தின் ஆளுகை பிரிடிஷ் இராஜாங்கத்தார் மூலமாய் நடந்துகொண்டுவந்திருந்தது. மிஸ்டர்பவுரிங்க் துரையவர்கள் அப்போது இந்த ராஜாங்கத்தின் சீப்கமிஷனர் ஆக நியமிக்கப்பட்டிருந்தார். இந்த கம்மிஷனர் துரை ஸ்ரீங்கேரி ஸ்வாமிகளவர்கள் விஷயமாக ஜனங்கள் சொல்லிக்கொள்ளும் ஆச்சரியங்களைகேட்டு கமிஷனருக்கு ஆச்சரியமும் அவநம்பிக்கையும் உண்டாயிற்று, உண்மையான சங்கதியைக்கண்டு பிடிக்கவேண்டுமென்ற ஆவல் அதிகமாய் ஏற்பட்டது. இப்படி இருக்கையில் ஒரு நாள்

இராத்திரி சுமார் 12 மணிக்குமேல் 1மணி சமயத்தில் தானொருவனே கூடாசாரனாக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பெங்களூரில் வாஸமாய் தங்கியிருந்த மகாராஜா சத்திரத்தின் முன்பாகத்தில் நின்றுகொண்டு வாசலுக்கெதிரில் ஹஜாரத்தில் தொங்கவிடப்பட்டிருக்கிற திரையை மேலுக்கு எடுக்கும்படி வாசலில் நின்றுகொண்டிருந்த காவல் காரனுக்கு சொல்லும் போது காவல்காரன் வந்திருந்தவர் யாராக இருக்கலாமென்று தெரிந்துகொள்ளாதவனா யிருந்தாலும் யாரோ பெரியமனிதர் வந்திருக்கிறாரென்று தெரிந்து உள்பக்கத்தில் காத்திருக்கும் பிராமணபரிஜனருக்கு தெரிவித்தான். அவர் வாசலில் வந்ததும் துரையவர்கள் அவரைப்பார்த்து ஸ்வாமிகள் அவர்கள் என்ன செய்கிறார்கள் என்று கேட்டார். அப்போது அங்கேவந்த பரிஜனன் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் பூஜை செய்துகொண்டிருக்கிறார்கள் என்று பதில்சொன்னான். அப்படியானால் அவர்களிடம் தெரிவிக்க வேண்டியதில்லை. குறுக்கே விடப்பட்டிருக்கும் திரையை மேலுக்கு தூக்கிப்பிடித்தால் தூரத்திலிருந்து ஸ்வாமிகளவர்களை தெரிசனம் செய்துகொண்டு போவதாக கமிஷனர் துரையவர்கள் சொன்னார்கள். அந்தப்படியேபரிஜனங்கள் உள்ளேபோய் திரையை மேலுக்கு தூக்கிப்பிடித்துக்கொண்டார்கள். பூஜைக்கு வலதுபக்கத்தில் ஆசனத்தில் உட்கார்ந்துகொண்டு தலையைக் குனிந்துகொண்டு அர்ச்சனை

செய்துகொண்டிருப்பதைக் கண்ணால் கண்டவுடனே துரையவர்களுக்கு அத்தியாச்சரிய முண்டாயிற்று. உடனே டொப்பியை எடுத்துவிட்டு வணக்கத்துடன் சலாம் செய்துவிட்டு புறப்பட்டுப்போனார். அதுமுதல் மி. பவுரிங் துரைக்கு ஸ்வாமிகள் அவர்கள் விஷயத்தில் ரொம்ப கௌரவம் ஏற்பட்டது. இது விஷயம் ஷை துரையவர்கள் சொந்தமாய் எழுதியிருக்கிற 1, 2, லேகனங்களால் தெரியவருகிறது.

இவர்கள் சஞ்சாரகாலத்தில் ஒரு கிராமத்திற்கு இவர்கள் வருவதாக கிராமத்திய மகா ஜனங்களுக்கு ஸ்ரீமுகம் அனுப்பப்பட்டது. அந்த கிராமத்தில் ஒரு பெரிய கிருஹஸ்தன் வெகுபணம் செலவழித்து ரொம்ப பெரிதாய் ஒருவீடு கட்டியிருந்தான். அந்த வீட்டில் வீட்டு யஜமானன் பிரவேசம் செய்யும் காலத்திலேயே ஒரு பிரம்மராக்ஷஸு பிரவேசம் செய்துகொண்டதாக அநேககாரணங்களால் யஜமானனுக்கு நிச்சயமுண்டாகி அந்த பிரம்மராக்ஷஸி னுடைய உபத்திரவத்தைப் பொறுக்க முடியாமல் புதுவீட்டைவிட்டு வேறே ஒரு கிராமத்தில் வாசம் செய்துகொண்டிருந்தான். ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தங்கள் கிராமத்திற்கு வருகிற சங்கதி தெரிந்துகொண்டு அந்த கிருஹஸ்தன் அநேகர் முகமாய் அவர்களின் மஹிமையை தெரிந்துகொண்டிருந்ததால் அவர்கள் மூலமாய் தன் தொந்திரவை நிவிருத்தி

செய்துகொள்வதற்குத் தக்க சமயம் வாய்த்த தென்று தெரிந்துகொண்டு அந்த கிராமத்திய மஹா ஜனங்களின் சகாயத்தினல் வீட்டிற்கு ஏற்பட்டிருக்கும் அபவாதத்தை மறைத்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் ஜாகைக்காக தன் வீட்டை சித்தப்படுத்தினன். ஸ்வாமிகள் சவாரி கிராமத்திற்குவந்து கிராமப் பிரதக்ஷிணம் முதலானது நடந்து அவாள் ஜாகைக்காக சித்தப்படுத்தியிருந்த அந்த புதிய வீட்டில் வாசம் செய்யப்பட்டிருந்தது. ஸ்ரீஸ்வாமிகளுக்காவது அவர்கள் பரிஜனங்களுக்காவது அந்த வீட்டிலுள்ள உபத்திரவத்தைப்பற்றி யாரும் தெரிவித்திருக்கவில்லை. அன்றையதினம் இராத்திரி நடுராத்திரியில் ஸ்ரீஸ்வாமிகள் ஏகாந்தத்தில் தான் பூஜைசெய்துகொண்டிருக்கும்போது அவர்கள் எதிரில் ஒரு ஸ்தம்பத்தில் சாய்ந்துகொண்டு நின்றுகொண்டிருந்த ஒரு மனித ரூபம் அவர்கள் கண்ணுக்கு புலப்பட்டது. பார்த்தவுடன் ஸ்ரீமடத்தில் கூட இருக்கப்பட்ட ஒரு வித்வானுடைய வஸ்திரங்களை அணிந்துகொண்டு ஒரு சால்வையை தோளின் மேலே போட்டுக்கொண்டு நின்றுகொண்டிருந்த அந்த ரூபம் அந்த சாஸ்திரிகளென்று நினைத்து அவரை உட்காரும்படி கண்களால் ஜாடை செய்தார்கள். ஒன்று இரண்டு தடவை ஸ்வாமிகள் உட்காரும்படி ஜாடைசெய்தும் ஆகிருதி உட்காராமலே இருந்ததைப் பார்த்து தத்க்ஷணமே ஸ்வாமிகளுக்கு

சந்தேகமுண்டாயிற்று. அப்படி சந்தேகம் உண்டா னபிறகு எதிரில் நின்றுகொண்டிருந்த அந்த புருஷ ரூபத்தை காலிலிருந்து தலைவரையிலும் ஒருதரம் பார்க்கும்போது ஸ்வாமிகளவர்கள் மனதில் விஷயம் தெளிவாய் தெரியவந்தது. தக்ஷணமே தன் வலது கையில் ஜலம் எடுத்து நரசிம்ம மந்திரத்தினால் அபி மந்திரணம் செய்து அந்த ஜலத்தை நின்றுகொண் டிருந்த ரூபத்தின்மேல் பிரோக்ஷணம் செய்யவும் அந்த மந்திர பிரபாவத்தால் உண்டான ஜ்வாலையை (எறிச்சல்) பொறுக்கமுடியாமல் 'எறிச்சல்' 'எறிச்சல்' என்று கெட்டியாக சப்தம் செய்துகொண்டு ஓடிப்போய் அந்த வீட்டின் பின்பக்கமுள்ள கிணற் றில் பாய்ந்து விழுந்தது. இந்த சப்தத்தை கேட்ட வுடனே படுத்திருந்த ஜனங்கள் எல்லாம் திகிலடைந்து வந்து பார்த்தும் அங்கு யாரும் காணப்படவில்லை. துணிகள் மட்டும் ஜலத்தின்மேலே மிதந்து இருப்பதை எடுத்துப்பார்த்தால் அந்தத் துணிகள் மடத்திலிருந்த வித்வான்களில் ஒருவருடையதாயிருந்தது. இந்த ஆச்சரியத்தை மடத்து ஜனங்கள் கண்டு கூப்பாடு சப் தம் உண்டானவுடனே வீட்டு யஜமானனும் ஊரி லுள்ள ஜனங்களும் வந்து பார்த்து பிரம்மரக்ஷஸி னால் உணடாயிருந்த உபத்திரவத்தை தெரிவித்துக் கொண்டார்கள். ஸ்ாவமிகள் அவர்கள் மிகுந்த தயை யுடன் ஆதரித்து "இன்று உங்கள் தொந்திரவு நீங்கி விட்டது பயப்படவேண்டாம்" என்றும், இன்று

முதல் நிர்ப்பயமாய் இந்த கிருஹத்தில் வாசம் செய்ய லாமென்றும் அனுக்கிரஹிக்க எல்லாரும் ஆச்சரிய மடைந்தார்கள். இந்த விஷயம் ஸ்ரீஸ்வாமிகள் அவர் கள் தன்சிஷ்யரும் இந்த கிரந்தத்திற்கு விஷயருமான ஸ்ரீஸச்சிதாநந்த சிவாபிநவநிருஸிம்மபாரதீஸ்வாமிக ளவர்களுக்கு நேரில் சொல்லியிருக்கிறார்கள். அவ ரிடமிருந்து இந்த கிரந்தகர்த்தா கேட்டுத் தெரிந்து கொண்டிருந்தான். இந்தப்பிரகாரம் ஸ்ரீநரசிம்மபாரதீ ஸ்வாமிகளவர்களின் நிக்ரஹாநுக்கிரஹ சாமர்த்தியம் ஜகத்தில் பிரசித்தமாயிருந்தது.

இந்த நரசிம்ம பாரதீ ஸ்வாமிகளவர்களிடத்தில் தான் ஸங்கல்பித்த ஒவ்வொருகார்யமும் நடந்தே தீர வேணுமென்ற ஸ்வபாவம் ஸஹஜமாயிருந்தது. இத னால் தனக்கு எவ்வளவுதொந்திரவு உண்டானாலும் சரி சம்ஸதானத்திற்கு எவ்வளவு நஷ்டம் ஏற்பட்டாலும் சரி அந்தபாகத்தை எந்த சந்தர்ப்பத்திலும் கவனத் திற்கு கொண்டுவருகிறதில்லை. இந்த குணத்தை பெரும்பாலும் உத்தம குணமென்று அநேக ஜனங் கள் நினைக்கமாட்டார்கள். பெரியோர்களுக்கு இது உத்தமகுணமென்றே சொல்லலாம். இந்த குணம் அவர் மனோநிச்சயத்தைக் காண்பிவிக்கவேண்டியது. அப்பேர்பட்ட மன உறுதியில்லாதவர்களைத்தான் ஸாமானிய ஜனங்கள் என்று லோகத்தில் வியவ ஹரிக்க வேண்டியது. எந்த சந்தர்ப்பத்திலும் எப்

போதும் எவ்வளவு கஷ்டமானுலும் தாம்பிடித்த காரியத்தை விடாமல் முடிக்கக்கூடிய உறுதியுள்ள மனமுடையவர்களையே மஹநீயர் (பெரியோர்) என்று சொல்லவேணும். அந்தஸ்வபாவம் இந்த உத்தமபுருஷரிடம் இல்லாமலிருந்தால் இவர் 40 வருஷத்திற்கு மேலான காலம் கந்தமூலாசன விருதம் கொண்டிருப்பதற்கு சாத்தியமாயிருந்திருக்குமா? இவர் ஜீவிய காலத்தில் பாதிக்குமேல் தேச சஞ்சாரம் செய்வதற்கும் அதனுலுண்டான சிரமத்தை சகிப்பதற்கும் அவகாசமிருந்திருக்குமா? இந்த குருக்களுக்கு ஆசிரமமான 5-6 தினங்களிலேயே தன் குருஸ்வாமிகள் சித்தியடைந்த மகாகஷ்டகாலத்திலும் தைரியத்தை விடாமல் ஸம்ஸ்தானபாரங்களை வஹித்து துஷ்ட பரிவாரங்களை நிக்கிரஹம்செய்து சம்ஸ்தானத்தை நல்ல ஸ்திதிக்குக்கொண்டுவருவது எப்படி சாத்தியமாயிருக்கும். ஆகையினுலேதான் இந்த குணத்தைப்புகழ்ந்து மைசூர் மகாராஜா மும்மடி ஸ்ரீகிருஷ்ணராஜ பிரபுக்கள் தன்னுல் செய்யப்பட்டிருக்கும் இந்த நரசிம்ம பாரதீஸ்வாமிகளின் "அஷ்டோத்தரசத நாமாவளியில், "प्रतिज्ञातार्थसाधक" என்று சரியான அர்த்தமுள்ள ஒருவிசேஷணத்தை ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு அலங்காரமாக சொல்லியிருக்கிருர்.

மேலே சொன்னபடி இந்த நரசிம்மபாரதீஸ்வாமிகளவர்களுக்கு மனுேதைரியம் அதிகமாயிருந்ததினு

லேயே பிரபஞ்ச விஷயத்தில் உதாஸீன பாவமும் திருந்த வைராக்கியமும் இவரிடத்தில் ஸ்திரமாய் நிலைத்திருந்தனவென்று தாராளமாய் சொல்லலாம்.

ஒரு சமயத்தில் இந்த ஸ்வாமிகளுக்கு மனதில் நம்ம மைசூர் கிருஷ்ணராஜ பிரபுக்களுக்கு தம் விஷயத்தில் கொஞ்சம் ஆதரவு குறைவாயிருப்பதாக தோன்றிவந்தது. அந்த சமயத்தில மைசூர் தேசத்தைவிட்டு வடதேசத்தில் சஞ்சாரம் செய்யப் புறப்பட்ட ஸ்வாமிகள் அவர்கள் அநேகவருஷகாலம் எந்த தேசத்தில் சஞ்சாரம்செய்கிறரென்ற சங்கதியே மகாராஜருக்கு தெரியப்படுத்தவில்லை. இப்படி சில வருஷங்கள் கழிந்தபிறகு ஸ்வாமிகளவர்கள் அதிருப்தியுடன் தன்தேசத்தைவிட்டு தூரதேச சஞ்சாரத்திற்கு புறப்பட்டுப்போனதாக பிரபுக்களுக்கு சங்கதி தெரியவந்தது. அதற்கு சரியாய் ஸ்வாமிகள் அவர்களிடமிருந்தும் தனக்கு யாதொரு சமாசாரமும் வாராமலிருந்ததால் மனதுக்குள் வியாகூலம் அதிகரித்தது. இந்த சந்தர்ப்பத்தில் தன் பக்கத்திலுள்ள ஜனங்களை அனுப்பி ஸ்வாமிகளவர்கள் இருக்கப்பட்ட இடத்தையும் அவாள் க்ஷேமலாபங்களையும் தெரிந்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் திரும்பி தன் தேசத்துக்கு வந்து தமக்கு தரிசனம்கொடுத்து கிருதார்த்தனாக செய்ய வேண்டுமென்று விஞ்ஞாபன பத்திரிகைகள் மூலமாய் தெரிவித்துக்கொண்டார். தவிறவும், அவர் பிரயாண

சிலவுக்காக முப்பதினாயிரம் ரூபாய்க்கு மைசூரிலிருந்த சாவுகார் தாமோதரதாஸ் மூலமாய் உண்டிசெய்து அனுப்பினார். ஸ்ரீ கிருஷ்ணராஜ பிரபுக்களிடமிருந்து தொடர்ச்சியாய் 9 விக்ஞாபண பத்திரிகைகள் ஸ்ரீஸ்வாமிகளுக்கு அனுப்பப்பட்டது. அதுவரையில் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் ஒரு பதில் ஸ்ரீமுகமாகிலும் அனுப்பிக்கொண்டிருக்கவில்லை. மேன்மேலும் மகாராஜரவர்களாலனுப்பப்பட்ட விக்ஞாபன பத்திரிகைகளால் அந்த பிரபுவுக்கு தம்விஷயத்தில் இருக்கப்பட்ட பக்தியையும் கௌரவத்தையும் அறிந்து அவைகளுக்கு வசப்பட்டவர்களாகி வெகுதூரத்தில் சஞ்சாரம்செய்து கொண்டிருந்த ஸ்வாமிகளவர்கள் திடீரென்று பிரயாணப்பட்டு மைசூர்வந்து தம் பக்தரான கிருஷ்ணராஜ பிரபுவுக்கு தரிசனம்கொடுத்து அவரிடமிருந்து விசேஷமான பூஜை மரியாதைகளை அடைந்து அந்த பிரபுக்களுக்கும் இந்த தேசத்திய ஜனங்களுக்கும் விசேஷ சந்தோஷ முண்டாகும்படி செய்தார். மேல்கண்ட இந்த சங்கதி சம்ஸ்தானத்திலிருக்கப்பட்ட ஸ்ரீமன் மகாராஜ கிருஷ்ணராஜ உடையார் பகதூர் அவர்களுடைய விக்ஞாபனபத்திரிகைகளால் தெளிவாய் தெரியவருகிறது.

இந்த நரசிம்மபாரதி ஸ்வாமிகள் அவர்களின் ஆக்ஞா சக்தி ஜனங்களிடத்தில் தடையின்றி நடந்து கொண்டிருந்தது. இவர்கள் 1872வது ஆங்கிரஸ வரு

னத்தில் தக்ஷிணதேசத்தில் பிரசித்தமான (ஹாலாஸிய) மதுரைக்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்திருந்தார்கள். ஸ்ரீங்கேரி ஸ்ரீகுருக்களுக்கு மட்டும் பூர்வகாலமிருந்து ஏற்பட்டுள்ள வழக்கத்தை அநுசரித்து மீனாக்ஷிசுந்தரேசுவர தேவாலயத்தில் ஒருபக்கத்தில் கலியாணமண்டபம் என்ற ஸ்தலத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஜாகை செய்துகொண்டார்கள். இவர்கள் ஸ்வாமிதரிசனத்திற்குப்போனகாலத்தில் முந்திய வழக்கப்படி கர்ப்பகிருஹத்தில் விஜயம்செய்து தம்கைகளாலேயே மீனாக்ஷி அம்மனுக்கு அர்ச்சனைசெய்ய ஆரம்பம்செய்தார்கள். அக்காலத்தில் அவ்விடத்திய பூஜகர்கள் கும்பலாய் கூடிக்கொண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சொந்தமாய் ஸ்வாமிக்கு அர்ச்சனை செய்யக்கூடாதென்று ஆக்ஷேபித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு அர்ச்சகப் பிராமணர்களால் செய்யப்பட்ட தாராக்ஷேபணையால் மனதில் கொஞ்சம் அசமாதானம் ஏற்பட்டது. உடனே 2 தேங்காய் வரவழைத்து அதில் அம்மன் சக்தியை ஆகர்ஷணைசெய்துகொண்டு வெளியில்வந்து அங்கு காத்துக்கொண்டிருந்த அநேகாயிரம் சிஷ்யர்களைப் பார்த்து மீனாக்ஷியம்மன் தம் பக்கத்திலேயே இருப்பதாக அனுக்கிரஹம் செய்திருப்பதாயும் தான் மறு உத்திரவு செய்யும்வரையிலும் தம் சிஷ்யர்களில் ஒருவரும் இந்த ஆலயத்தில் அர்ச்சகர்மூலமாய் பழம் தேங்காய் கொடுத்து பிரசாதம் பெற்றுக்கொள்ளக்கூ

டாது என்று உத்திரவுசெய்து தம் ஜாகைக்கு விஜயம்செய்தார்கள். ஸ்ரீமடத்திய பூஜைகளில் தாம் மீனாக்ஷியம்மன்கோவிலிலிருந்து அம்மனை கலாகர்ஷணம் செய்துகொண்டுவந்த தேங்காய்களைவைத்து வெகு விமரிசையாகவும் நியமத்துடனும் பூஜைநைவேத்தியம்செய்து எல்லா ஜனங்களுக்கும் மடத்திலேயே பிரசாதம்கொடுத்து அனுக்கிரஹித்தார்கள். அது முதல் மதுரையிலுள்ள எல்லா ஜனங்களும் ஆலயத்திற்குவெளியில் பலிபீடத்திற்கு சமீபத்தில் நின்றுகொண்டு தாங்களே தேங்காய் உடைத்து அங்கிருந்தே நைவேத்யம்செய்து கர்ப்பூரத்தைக்கொளுத்தி தூரத்திலிருந்து நமஸ்காரம்செய்துவிட்டுவர ஆரம்பித்தார்கள். இந்தபிரகாரம் ஸ்ரீ குருக்களின் ஆக்ஞை தடையின்றி நடந்துவரும்படி அனுஷ்டானத்திற்கு கொண்டுவரும்விஷயத்தில் அக்காலத்தில் மதுரையில் பிரசித்திபெற்றவரும் இப்பால் மதராஸ் ஹை கோர்ட்டு ஜட்ஜியாயும் இருந்து விசேஷமாய் பெயர் பெற்றவரும் தற்காலம் லோகஹிதத்தில் பிரயத்னம் செய்துகொண்டிருக்கும் டாக்டர் சுப்பிரமணியய்யர் அவர்கள் (மணி அய்யர்) முதன்மையாயிருந்தார்.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மகாதபஸ்வீ, மகாபரிசுத்தமான நடத்தையுள்ளவர்கள். இப்படிப்பட்ட மகாபுருஷருக்கு அபராதம்செய்த மதுரை தேவஸ்தானத்திய அர்ச்சகர்களில் அநேகம்பெயர்களுக்கு

'कृत्वा सतां हि संतापं शापं देहीति नो वदेत्' என்று சாஸ்திரப்படி ஸ்ரீஸ்வாமிகளுடைய மனஸ்தாபமே சாபமாய் பரிணமித்து அதிலிருந்து பலவிதமான கஷ்டங்கள் உண்டாயின. வருமானமில்லாமல் போனதினால் ஜீவனத்திற்கு தொந்தரவுஏற்பட்டது. இதற்குமேல் தங்கள் குற்றம் தங்களுக்கே தெரியவந்தது. பிறகு மதுரையில் முக்கியமாயிருந்த டாக்டர் சுப்பிரமணியய்யர், இவர் சிறிய தகப்பனார் சங்கரய்யர் முதலானவர்களை ஆசிரயம்செய்துகொண்டு அவர்களுடன் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சஞ்சாரம் செய்துகொண்டிருந்த இடத்திற்குபோய் அவர்களிடத்தில்பணிந்து அவர்கள் சன்னிதானத்தில் தெரிவித்துக்கொண்டு அவர்கள் அநுக்கிரஹத்தைப் பெற்றும் அவர்களை திரும்பவும் மதுரைக்கு அழைத்துக்கொண்டும் வந்தார்கள். பக்த ஜனங்களுக்கு அதீனர்களான ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் மதுரைக்கு விஜயம்செய்து மீனாக்ஷிசுந்தரேசுவரர்களுக்கு விசேஷமான பூஜாதிகள் செய்துமிருந்த சந்தோஷத்துடன் தாம் முந்திசெய்த உத்திரவை தக்ஷணமே அநுஷ்டானத்திற்கு கொண்டுவந்து அவிவேகிகளுக்கு புத்திகற்பித்த சிஷ்யஜனங்களுக்கு பூர்ணமான அநுக்கிரஹம்செய்து இது முதல் கிரமமாய் எல்லா ஜனங்களும் அர்ச்சகர்கள் மூலமாகவே பலம் அர்ப்பணம்செய்து அர்ச்சனை முதலானதுசெய்துகொண்டு அவர்களிடமிருந்து பிரசாதம் பெற்றுக்கொள்ளலாமென்று ஆக்ஞாபனம் செ

ய்தார்கள். இந்தஸ்வாமிகள் எந்ததினத்தில் மீனாக்ஷி சுந்தரேசுவரர்களின் சக்தியை தேங்காயில் ஆகர்ஷணம் செய்துகொண்டுவந்து தம் பூஜையில்வைத்து பூஜை நடத்த ஆரம்பம் செய்தார்களோ அன்று முதல் இன்னாள்வரையில் இடைவிடாமல் அந்ததேவர்களை உத்தேசித்து மகாநிவேதனம் பிரதிதினமும் சந்திரமௌளீசுவரர் பூஜைகாலத்தில் ஸ்ரீங்கேரிமடத்தில் நடந்து வருகிறது.

இந்த நரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்கள் 1838வது விளம்பி வருஷத்தில் முதல் தடவை ராமேசுவரயாத்திரைக்காக விஜயம் செய்திருந்தார்கள். அந்த காலத்தில் ராமேசுவர க்ஷேத்திரத்தில் உள்ள "ஆரிய பிராமணர்" என்ற ஒருவகை ஜனங்களுக்கும் அன்னிய பிராமணஜனங்களுக்கும் போஜனப் பிரதிபோஜனங்களாவது வேறுவிதமான (संव्यवहार) சம்பந்தமாவது இருக்கவில்லை. அந்த ஜனங்கள் அந்த க்ஷேத்திரத்துக்கு வந்த பிராமணரல்லாத ஜனங்களுக்கு கொஞ்சம் புரோகிதராயிருந்து வந்தார்கள். இந்த க்ஷேத்திரத்தில் தேவாலயத்தில் ஸ்வாமிக்கு வடபக்கத்தில் கோடி தீர்த்தம் என்ற ஒரு தீர்த்தமுண்டு. அந்த க்ஷேத்திரத்திற்கு யாத்திரைக்காக போகிறவர்களெல்லாம் எல்லா தீர்த்தங்களிலும் ஸ்நாநம் செய்த பிறகு கோடி தீர்த்தத்தில் ஸ்னானம்செய்து அந்த தீர்த்தத்தை தங்கள் ஊருக்கு கொண்டுவந்து கோடி

தீர்த்த சமாராதனை என்று தங்கள் ஊருக்கு வந்தபிறகு செய்கிறதென்று வழக்கமாயிருந்தது. இந்த வழக்கத்தை இப்போதும் எல்லாரும் நடத்திக்கொண்டிருக்கிறார்கள். இந்த கோடி தீர்த்தத்திற்குமாத்திரம் அங்குள்ள ஆரிய பிராமணர்கள் ஒரு கதவுபோட்டு அதற்கு ஒரு பூட்டும் போட்டுக்கொண்டு அந்த தீர்த்தத்தை தங்கள் ஆதீனமாக செய்துகொண்டு வந்த யாத்திரைக்காரர்களிடம் ஒருகுடம் தீர்த்தத்திற்கு 3 பைசா வீதம் தட்சணை வாங்கிக்கொண்டு அந்த ஜாதி ஜனங்களே ஜலத்தை மேலுக்கெடுத்து யாத்திரைக்காரர்களுக்கு ஸ்நானம் செய்வித்துக்கொண்டிருந்தார்கள். அப்போதும் இந்த வழக்கமே நடந்துவருகிறது. இந்த தருணத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் தீர்த்த ஸ்நானத்திற்காக விஜயம் செய்தார்கள். அப்பொழுதும் அந்த ஆரிய பிராமணர்கள் கோடிதீர்த்தத்தை தாங்களே எடுத்து ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு தாங்களே ஸ்நானம் செய்விக்கவேண்டுமென்று தெரிவித்துக்கொண்டார்கள். அப்போது ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் தம் விஷயத்தில் மாத்திரம் இந்த நிர்ப்பந்தம் இருக்கக்கூடாதென்று எவ்வளவுதூரம் ஜனங்களுக்கு சொல்லியும் அவர்கள் அதை அங்கீகரிக்காமல் பிடிவாதம் செய்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீ ஸ்ரீ அவர்களுக்கு அந்த ஜனங்களின் முறட்டுத்தனத்தினால் கொஞ்சம் அசமாதானம் ஏற்பட்டது. அந்தக்ஷணமே பின்திரும்பி ஸர்

வதீர்த்தமென்று ஸ்வாமிக்கு தக்ஷணபாகத்தில் இருக்கும் மற்றொரு தீர்த்தத்தின் சமீபத்தில் வந்து கோடி தீர்த்தத்தையும் அடக்கிக்கொண்டிருக்கிற இந்த தீர்த்தத்தில் ஸ்நாநம் செய்தால் எல்லா தீர்த்தத்திலும் ஸ்நாநம் செய்தபலம் ஒரே காலத்தில் வருவதாயிருப்பதால் இது முதல் எல்லாரும் ஸர்வதீர்த்தஸ்நாநமே செய்யவேண்டியதென்று ஆக்ஞாபனம் செய்துவிட்டு தானும் ஸர்வதீர்த்தத்தில் ஸ்நாநம் செய்துகொண்டு மடத்துக்கு வந்தார்கள். இந்த ப்ரகாரம் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களால் செய்யப்பட்ட உத்திரவு சுமார் 35 வருஷத்திற்குமேல் 40 வருஷ காலம்வரை எல்லா ஜாதி ஜனங்களும் அனுசரித்து அனுஷ்டானத்திலிருந்து கோடிதீர்த்தமே திரஸ்கரிக்கப்பட்டது. இதனால் ஆரிய ஜாதி ஜனங்கள் வெகுவாய் நிந்தனைக்குள்ளாகி அநேக விதமான கஷ்டங்களுக்குள்ளானார்கள். இவர்களைப் புரோகிதர்களாக செய்துகொண்டிருந்த சில ஜாதி ஜனங்களும்கூட ஸ்ரீஜகத்குருக்களின் சாபத்தை யேற்றவர்களென்று நினைத்து அவர்களிடம் புரோகித காரியம் செய்துகொள்ளுவதிலிருந்தும், பின்வாங்கிக்கொண்டார்கள். கோடி தீர்த்தத்திலிருந்து வந்துகொண்டிருந்த வருமானமும் நின்றுபோய் கோடி தீர்த்தமும், புழு பூச்சிகள் அடைந்து கெட்டுப்போய் உபயோகமற்ற நிலைமையில் வந்தது. இப்படி வெகுகாலம்வரை

நடந்துவந்தபிறகு இரண்டாவது தடவை ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தக்ஷிணதேச யாத்திரையில் மதுரையில் இருக்கும்போதே இராமேசுவரம் ஆரியபிராமண சங்கத்தியவர் மதுரைக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்களிடம் வணங்கி தாங்கள் செய்த அபராதத்தினால் தங்களுக்குண்டான கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டதை தெரிவித்துகொண்டு தங்கள் அபராதத்திற்கு இதுவரையில் தாங்கள் அனுபவித்த துஷ்டபலம் போதும், இனிமேலாவது தங்களை அனுக்கிரஹித்து காப்பாற்ற வேண்டுமென்று வெகுவிதமாய் வேண்டிக்கொண்டார்கள். அப்போது ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு தயவுபிறந்து அவர்களுக்கு அபயங்கொடுத்து தாங்கள் யாத்திராகிரமமாக 1873வது ஸ்ரீமுக வருஷத்தில் இராமேசுவரத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்கும் பூர்விய வழக்கப்படியே ராமநாதஸ்வாமி தேவாலயத்தின் மூன்றுவது பிராகாரத்திலுள்ள மண்டபத்தில் வாசம் செய்துகொண்டிருந்தார்கள். தனுஷ்கோடி ஸ்நாநம்செய்து முடித்து ராமநாத ஸ்வாமிக்கு கிரமமாய் பூஜையும் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களால் நடத்தப்பட்டபிறகு மற்ற தீர்த்தங்களில் ஸ்நானம்செய்து ஸர்வதீர்த்த ஸ்நாநம் செய்துகொண்டு ஸர்வதீர்த்தத்திலிருந்து தம் கமண்டுலுவில் தீர்த்தம் எடுத்துக்கொண்டு கோடி தீர்த்தத்திற்கு வந்து கமண்டுலு தீர்த்தத்தை கோடிதீர்த்தத்தில்

சேர்த்து இது ஸர்வ தீர்த்தமாகவே ஆய்விட்டது, என்று தன் வாக்கினால் உச்சரித்து தாம் கோடி தீர்த்தத்திலிருந்து தம்பரிஜனங்களைக்கொண்டு தீர்த்தத்தை எடுப்பித்து ஸ்நாநம்செய்து சிஷ்ய ஜனங்களையும் ஸ்நாநம் செய்யும்படி ஆக்ஞை செய்தார்கள். அது முதல் அந்த கோடி தீர்த்தத்திற்கு முன்னிலும் அதிகமான மஹிமை உண்டாயிற்று.

இந்தஸ்வாமிகள் அவர்கள் உத்தரதேச யாத்திரைக்காக விஜயம் செய்திருந்த காலத்தில் நாகபுரத்தில் (நாக்பூர்) ஒரு ராஜா இருந்தார். அது ஒரு சம்ஸ்தானமாக இருந்தது. அந்தசம்ஸ்தானத்தில் ஸ்ரீசிருங்கேரி ஸ்ரீஜகத்குருக்கள் தங்கள் இராஜதானிக்கு வந்தால் அவர்களை இராஜாக்கள் எதிர்கொண்டு ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் பல்லக்கில் தன் தோளைக்கொடுத்து அழைத்துக்கொண்டு போகிறதென்ற வழக்கம் இருந்ததாகத் தெரியவருகிறது. இந்த முந்திய வழக்கம் ஸ்ரீ நரசிம்மபாரதிஸ்வாமிகள் அவர்கள் விஜயம்செய்த காலத்தில் எந்த காரணத்தினாலோ அப்போதிருந்த இராஜாவால் நடத்தப்படவில்லை. இதனால் அவ்விடத்திய இராஜாவுக்கும் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களுக்கும் ஒருவர்க்கொருவர் மனஸ்தாபமேற்பட்டது. இதே அசமாதானத்தினால் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் அந்த ஸ்தலத்தைவிட்டு உடனே காமடீ (லஷ்கர்) என்ற சேனாநிவேசஸ்தானம் வந்து அங்கு நின்றார்கள்

இரண்டு வருஷகாலம் அங்கேயே வாசம் செய்து கொண்டிருந்தார்கள். இந்த காலத்தில் மடத்தில் நடக்கவேண்டிய சிலவுவகையறாக்களுக்கு ரொம்ப அனுனுகூலமாயிருந்தது. அப்படி யிருந்தாலும் அந்த விஷயத்தில் கொஞ்சமும் கவனிக்காமல் தம் முடைய காலத்தில் சம்ஸ்தானத்திற்கு ஏற்பட்ட குறைவை நிவர்த்திசெய்துகொண்டுதான் அந்த இட மிருந்து வேறுபக்கம் புறப்படவேண்டுமென்று உறுதி யுடன் நிச்சயம்செய்துகொண்டு இருந்தார்கள். சம் ஸ்தானத்திய செலவுவகையறாக்களுக்காக மடத்தி லிருந்த அநேக பதார்த்தங்களை அடமானம் செய்து வைத்து ஏராளமான கடன்செய்து ஸம்ஸ்தானத்திய தர்மங்களை நடத்திக்கொண்டு தான் நினைத்திருக்கும் காரியம் கைகூடுவதற்கு ஸ்ரீவித்யா உபாசனை செய் தார்கள். இந்த பிரகாரம் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் உபாசனைக்கு ஆரம்பமானபிறகு நாகப்பூர் ராஜாவுக்கு அநேகவிதமான கஷ்டங்கள் உண்டாகத் தொடங்கி யது. சரீரத்தில் பலவித தொந்திரவுகளும் வியாதியும் ஏற்பட்டது. இவைகளெல்லாம் ஸ்ரீஸ்வாமிகளவர்களை அவமதித்ததால் உண்டானதென்று ஒவ்வொரு க்ஷணமும் தோன்றும்படி வந்தது. அதற்குமேல் வெகுவாக பச்சாத்தாபத்துடன் ராஜா ஸ்ரீஸ்வாமிக ளவர்கள் இருக்கப்பட்ட இடத்திற்கு கால்நடையாய் வந்து அவர்களை தரிசனம் செய்து சரணமடைந்



ஸ்ரீஸச்சிதாநந்தசிவாபிநவ
நரஸிம்ஹபாரதீஸ்வாமிகள்.

தான். பிற்பாடு அந்த இராஜாவின் பிரார்த்தனை யை அனுசரித்து திரும்பவும் நாகப்பூர்வந்து தம் காலத்தில் நின்று போயிருந்த மரியாதை விஷயமான குறைவை நிவர்த்திசெய்துகொண்டு அந்த ராஜனுக்கு அனுக்கிரஹம் செய்துவிட்டுப் புறப்பட்டார்கள். இந்தசங்கதி ஸ்ரீஸ்வாமிகள் அவர்களே தம் சிஷியர் களுக்கு சொன்னது அவர்களிடமிருந்து தெரிந்து கொள்ளப்பட்டது. 2 வருஷகாலம் காமடிலக்ஷ்கரில் வாசமாய் நின்று ஏராளமாக சம்ஸ்தானத்திற்கு கடன் செய்யப்பட்டதென்றவிஷயம் கணக்கினால் தெரிந்துகொள்ளக்கூடியதாயிருக்கிறது.

இந்த நரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்கள் காலத் தில் இவர்களுக்கு நம்பிக்கையுள்ளவராயும் காரிய விஷயத்தில் சாமார்த்தியசாலியாயும் ஸ்வாமி பக் தியுள்ளவராயும் உள்ள பரிஜனங்கள் குறைவாயி ருந்ததாக தெரியவருகிறது. இந்த சங்கதி ஸ்ரீஸ்வாமி கள் திருப்பதியில் ஸ்வாமி தரிசனத்திற்காகப் போயி ருந்தகாலத்தில் வேங்கடேசஸ்தோத்ரமென்று ஸ்வா மிகளால் செய்யப்பட்டிருக்கிற ஒரு ஸ்தோத்திரமத்தி யில் 'दारिद्र्यं मम दुष्टभृत्यजनितम्' என்பதாய் சொல்லியிருப் பதிலிருந்து வெளிப்படுகிறது. பின்னும் இந்த ஸ்வாமிகள் அவர்கள் பூர்ணனுக்கிரஹத்திற்கு பாத் திரராயும் ஸ்ரீ மடத்திய அபிவிருத்தியிலும் ஸ்ரீஸ்வாமி களவர்களின் கீர்த்தி விஷயத்திலும் எந்த சமயத்தி

னும் திருஷ்டியுள்ளவராய் அதற்கு தகுந்தபடி அபிப்பிராயத்தை ஸ்வாமிகளவர்களுக்கு கொடுத்துக்கொண்டும் வேண்டிய சகாயங்கள் செய்துகொண்டுமிருந்த ஸ்ரீமான் மைசூர் மும்மடி ஸ்ரீகிருஷ்ணராஜ பிரபுக்கள் அவர்கள் ஒரு சந்தர்ப்பத்தில் ஸ்ரீகள் அவர்களுக்கு எழுதியனுப்பி யிருக்கும் பத்திரிகையினாலும் மேற்கண்ட விஷயம் தெளிவாய் தெரியவருகிறது.

அநுகூலமான நல்ல பரிஜனங்களில்லாமலிருந்தாலும் ஸ்ரீஸ்வாமிகள் தம் காலத்தில் சம்ஸ்தானத்தின் கீர்த்தியை மிகவும் பரவும்படி செய்தார்கள். சாசுவதமாய் வரக்கூடிய வருமானத்தையும் அநேக கிராமங்களையும் வருஷாசனத்தையும் காணிக்கைகளையும் தவிர மகாராஜாக்களிடமிருந்தும் மற்ற இஷ்டஜனங்களிடமிருந்தும் சம்பாதனம் செய்வதினால் சம்ஸ்தானத்தின் உத்பத்தியை அதிகமாக்கினார்கள். விலை மதிக்கமுடியாத அநேக ரத்னாபரணங்களையும் சேகரித்தார்கள். வித்வான்களுக்கும் ஆசிரித ஜனங்களுக்கும் சிங்கேரியில் ஜீவனத்திற்காக இனும் சர்வமானிய விருத்தியும் கொடுத்துக்காப்பாற்றினார்கள். இவர் ... ர் பெயரும் மாகாத்மியமும் இவர் கீர்த்தியும் எல்லா தேசங்களிலும் இப்பவும் சூரியகிரணங்கள்போல் பரவியிருக்கின்றன.

இதுபோல் இந்த நரசிம்மபாரதீ சுவாமிகள் அவர்களின் மனோதார்ட்டியத்தினாலும் அவர்கள் தபஸின் பிரபாவத்தாலும் அவர்கள் காலத்தில் அநேக சங்கதி

கள் நடந்து இருக்கின்றன. இங்கு கிரந்தம் விஸ்தாரமாய் விடுமென்ற பயத்தினுல் அவைகளை விவரிக்காமல் நிறுத்தப்பட்டது.

ஸ்ரீ சுவாமிகள் அவர்கள் தமக்கு ஆசிரமஸ்வீகாரமான 6வது தினத்திலேயே தம்குருக்கள்விதேகமுக்தியடைந்தார்களாகையால் தனக்கு உண்டான அனுகூலங்களை நன்றாகத் தெரிந்துகொண்டவராகையால் தம்சரீரம் திருடமாயிருக்கும் காலத்திலேயே யோக்கியரான சிஷ்யரை பரிக்ரஹம் செய்து அவருக்கு ஆசிரம சம்பிரதாயங்களையும் சம்ஸ்தான சம்பிரதாயங்களையும் தெரிவித்து அவருக்கு வித்தியாப்பியாசமும் கிரமமாய் நடத்தி சம்ஸ்தானத்தின் ஆதிபத்தியத்திற்கு தகுந்தவராகும்படி செய்யவேண்டுமென்ற குதூஹலம் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் 60வது வயதிலேயே மனதில் உண்டாகி நாள்தோறும் விருத்தியாய்க்கொண்டுவந்திருந்தது. இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீங்கேரிஸ்தலவாஸிகளில் அநேகரையும் மற்றஸ்தலங்களிலுள்ள சிலரையும் உத்தேசித்து அவர்களின் ஜாதகங்களை தருவித்து தானும் சொந்தமாய் பார்த்துக்கொண்டும் ஸ்ரீமகாராஜா அவர்களுக்கு அனுப்பி அவர்கள் மூலமாயும் ஜாதக பாவங்களைப் பார்த்துக்கொண்டும் இருந்தார்கள். இப்படி ஆலோசனை செய்துகொண்டிருக்கும் சமயத்தில் 8வருஷம் கழிந்தது. 9வது வருஷமும் வந்தது. அதுவரையில் தம்மிடத்தில் வந்திருந்த

எந்த ஜாதகமும் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் மனதிற்கு திருப்திகரமாயிருக்கவில்லை. ஸ்வாமிகள் அவர்களுக்கு பிரதிதினமும் மனோவேதனை அதிகரித்துவந்தது. இப்படியிருக்கையில் ஒருதினம் இராத்திரி ஸ்வாமிகள் அவர்கள் ஏகாந்தத்தில் இருந்து பூஜைசெய்து கொண்டிருக்கிற சமயத்தில் இவர்எதிரில் ஒரு ஸுவாஸினீவந்து 'ஸ்தலம் விடு' என்று சொன்னதாக இவாள் மனதிற்கு தோன்றிற்று. உடனே வெகுவாய் திகிலும் ஆச்சரியமுமுண்டாகி பார்க்கும்போது ஒருவரு மிருக்கவில்லை. அதற்குமேல் ஆகாசவாணீ என்று தன்மனதில் தோன்றின மேற்கண்ட சப்தத்திற்கு அர்த்தம்செய்ய ஆரம்பித்தார்கள். "ஸ்தலம்விடு" என்ற வார்த்தைக்கு மூன்றுவிதமாக அர்த்தமாகலாம். 1வது ஸ்தூல சரீரத்தைவிடு என்று சொல்லலாம். ஆனால் இது நியாயமல்ல வாகையால் இந்த அர்த்தத்தினால் உண்டான சப்தமல்லவென்று நிச்சயமாயிற்று. 2வது பிரகிருதத்தில் வாசம்செய்து கொண்டிருக்கிற ஸ்ரீங்கேரியைவிட்டு வெளியில் போகவேண்டியது. இதனால் சஞ்சாரம் செய்வதற்கு அம்மன் அனுமதி கிடைத்ததாக ஆயிற்று—3வது தாம் இருக்கத்தக்க வியாக்கியான பீடத்தை விடு என்று அர்த்தமாகலாம். இதனால் சிஷ்ய பரிக்கிரஹத்திற்காக ஸ்ரீங்கேரியை விட்டுப் புறப்படுவதற்கு அம்மன் உத்திரவு தமக்கு இந்தவிதமாய் உண்டாயிருக்கிறதென்று தீர்மானித்தார்கள்.

அந்த சந்தர்ப்பத்தில் சஞ்சாரத்திற்கு ஆவசியக மான அனுகூலங்களை தயாரித்துக்கொண்டு தக்ஷணமே ஸ்தலத்தைவிட்டுப் புறப்படுவது சுலபமாயிருக்க வில்லை. அப்படியிருந்தாலும் மறுதினமே ஸ்ரீசார தாம்பாள் சன்னிதியில் போய் வெகுசாவகாசமாய் பூஜை செய்து அம்பாளிடத்தில் பிரார்த்தனை செய்து கொண்டு கால்நடையாகவே சிருங்கேரியிலிருந்து புறப்பட்டு ஒருமைல் தூரத்திலுள்ள சச்சிதானந்த புரம் என்ற அக்கிரஹாரம் வந்தார்கள். அங்கே சில நாள் தாமதித்து பிரயாணத்திற்கு வேண்டிய அனு கூலங்களை ஏற்படுத்திக்கொண்டு அவ்விடமிருந்து பிரயாணப்பட்டு மைசூர் ராஜதானிக்கு வந்து சேர்ந் தார்கள்.

ஸ்ரீ நரசிம்ம பாரதீ ஸ்வாமிகள் அவர்களின் 60 வது வயதான—பிங்கள வருஷத்திலேயே சிஷ்ய பரிக்கிரஹம் செய்யவேணுமென்ற உத்தேசம் ஸ்ரீஸ் வாமிகள் அவர்கள் மனதில் உண்டாயிற்றென்று முந் தியே சொல்லப்பட்டது. அதே வருஷத்தில் மைசூர் சம்ஸ்தானத்தில் ஸ்ரீகிருஷ்ணராஜபிரபுக்களின் ஆஸ்தானத்தில் பண்டிதராயிருந்த குணிகல் ராம சாஸ்திரிகளுக்கு 3வது குமாரரான சிவஸ்வாமி என் பவரின் ஜனனமும் ஆயிருந்தது. ஸ்வாமிகளுக்கு இந்த ஸங்கதி தெரிந்திருந்ததோ எப்படியோ அந்த விஷயத்தை நிச்சயிப்பதற்கு அதிக அவகாசமில்லை

யாளுலும் மைசூருக்கு வந்தவுடன் தம்பக்தசிகாமணிகளான ஸ்ரீ கிருஷ்ணராஜ பிரபுக்களைக்கண்டு அவரிடத்தில் தம் அபிப்பிராயத்தை தெரிவித்து அவர்மூலமாய் இராமசாஸ்திரிகளின் மூத்த குமாரரான லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளுக்கு சொல்லியனுப்பி அவர் ஆதீனத்தில் இருந்து அவரால் போதிக்கப்பட்டு வருகிற குணிகல் ராமசாஸ்திரிகளின் 3வது குமாரரான சிவஸ்வாமி என்றவரை தம்மிடத்திலேயே வரவழைத்துக்கொண்டு அவரைப் பார்வையிட்டார்கள். இதனால் சிருங்கேரியிலிருந்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் புறப்படவேண்டுமானால் அல்லது அதற்கு முந்தியே இந்த சிவஸ்வாமி என்பவரே தமக்கு தகுந்த சிஷ்யரென்று இந்த மகானுபாவருக்கு தெரிந்ததென்று தாராளமாகச் சொல்லலாம்.

தம் தரிசனத்திற்காக தன் தமையனுடன் கூடவந்திருக்கும் 9வயதுள்ளவரான அந்த சிவஸ்வாமி என்னும் பாலகனைப்பார்த்து தன் சமீபத்தில் உட்கார்த்திக்கொண்டு அதிக ஆதரவுடன் "உனக்கு என்னவேணுமப்பா குழந்தாய்" என்று கேட்டார்கள். இந்த கேள்விக்கு பதிலாக வேறு எந்த வார்த்தையும் சொல்லாமல் அந்த சிவஸ்வாமி—

अयं दानकालस्त्वहं दानपात्रं भवानेव दाता त्वदन्यं न याचे ।
भवद्भक्तिमेव स्थिरां देहि मह्यं कृपाशील शंभो कृतार्थोऽस्मि तस्मात् ॥



ஸ்ரீ மஹாஸ்வாமிகளும்
திவான் சேஷாத்ரி ஐயரும்.

என்று சொன்னூர்—இந்த பிரகாரம் ஸ்ரீஸ்வாமி கள் அவர்களின் கேள்விக்கு சிவஸ்வாமியிடமிருந்து வந்த உத்தரத்தைக்கேட்டு ஸ்வாமிகள் அவர்களுக்கு அந்தகாலத்தில் உண்டான சந்தோஷம் எப்படிப் பட்டதாயிருக்கலாமென்னும் சங்கதியை சொல்லுவ தற்கு சாத்தியமில்லை.

ஆனுல் 9வருஷம்கூட பூர்த்தியாகாமலும் பிர பஞ்ச வியவகாரத்தில் கொஞ்சமேனும் பிரவேச மில் லாமலும் இருக்கிற சிவஸ்வாமியிடமிருந்து ஸ்வாமி களுடைய கேள்விக்குவந்த பதிலைக்குறித்து யோஜித் தால் இந்த நடவடிக்கைகள் நடந்ததாக சொல்லுவது நிஜமென்று ஒருவரும் நம்பமாட்டார்கள். இதை நம்புவதற்கு அதி பிரபலமான பிரத்தியக்ஷ பிர மாணமே இருந்ததினுல் பலாத்காரமாக நம்பக்கூடா தென்று தள்ளுவதற்கு இடமில்லை. இதனுல் ஜன் மாந்தர வாசனையானது பிராணிகளை அனுசரித்து வருகிறதென்று சாஸ்திரத்தில் பிராமாணிய புத்தி வைத்தே தீரவேணும். இதுபோலவே அதிக ஆச்சரிய கரமான மற்றொருசங்கதி நடந்திருப்பதை பின்னுல் சொல்லப்படும்.

ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் வெகுகாலமாக ஒவ் வொருதினமும் தம்முடைய பூஜாகாலத்தில் ஸ்ரீசந்திர மௌளீசுவரசுவாமியிடத்தில் सान्निध्यो मे भूयात्। सान्निध्यः पण्डितो भवतु ।என்பதாக செய்துகொண்டிருந்த பிரார்த் தனையின் பலம் அன்றைக்குத்தான் கைகூடி வந்த

தென்று மனதில் நிச்சயித்துக்கொண்டு லக்ஷ்மீ நரஸிம்ம சாஸ்திரிகளுக்கு சம்மானம் செய்து சிவஸ்வாமிக்கும் வயதிற்கு அனுகுணமாக பலம் வஸ்திரம் முதலானது கொடுத்து அனுக்கிரகம் செய்து ஸ்தலத்திற்கு அனுப்பிக்கொடுத்தார்கள். சிவஸ்வாமிக்கு மாதா பிதாக்களின் பிரிவு ஏற்பட்ட பிற்பாடு அவர் தமையனான லக்ஷ்மீ நரஸிம்ம சாஸ்திரிகளால் விசேஷமாக அபிமானிக்கப்பட்டு அவருடைய போஷணையிலிருந்தாரென்று முக்கியே சொல்லப்பட்டிருக்கிறது.

லக்ஷ்மீ நரஸிம்ம சாஸ்திரிகளுக்கு இந்த தம்பி பிராணனைப்போலிருந்தார் இவரை எப்போதும் தன் தொடைமேலேயே உட்கார்த்திக்கொண்டு இவருக்கு அதிகமாக சிரமம்கொடுக்காமலே அநேக தேவதா ஸ்தோத்திரங்களை சொல்லிக்கொடுத்து அவைகளின் அர்த்தத்தையும் சுலபமாய் அவருக்கு தெரியப்படுத்தி அவர் புத்தி சக்தியையும் ஸத்வாஸனையையும் பார்த்துப்பார்த்து மகிழ்ந்துகொண்டிருந்தார். இந்த தம்பிக்கு குரோதனவருஷ ஜ்யேஷ்ட சுத்தத்தில் கிரமப்படி உபநயன ஸம்ஸ்காரம் செய்தார். சிராவண மாதத்தில் பிரதம உபாகர்மமானவுடனே பிராமணனுக்கு முக்கியமான வேதாத்தியயனம் செய்விக்க ஆரம்பித்தார்.

ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் மைசூருக்கு வந்து தம் சம்ஸ்தானத்தின் விஷயமாக விசேஷ அபிமானமுள்ள



ஸ்ரீமகாஸ்வாமிகளும் அவர்கள்
குருஸ்வாமிகளும்.

வராயும் தம்விஷயத்தில் அதிகபக்தியுள்ளவராயும் நல்லபுத்திமானுயுமிருந்த ஸ்ரீகிருஷ்ணராஜ பிரபுக்களிடத்தில் தம் அபிப்பிராயத்தை ஸூசனம் செய்து அவர்களுடன் நீண்ட ஆலோசனையும்செய்து, குணிகல் ராமசாஸ்திரிகளின் 2வது குமாரரான சிவஸ்வாமியையே ஸ்ரீங்கேரி பீடத்திற்கு பிற்காலத்திய அதிபதியாக செய்யவேண்டுமென்று நிஷ்கர்ஷை செய்தார்கள்.

இந்த விஷயத்தை ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் ராமசாஸ்திரிகளின் ஜ்யேஷ்டபுத்திரரான லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளுக்கு அவருக்கும் தமக்கும் ஆப்தராயிருக்கும் ஜனங்கள் மூலமாய் சொல்லி அனுப்பிஞர்கள். அப்போது லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளுக்கு புத்திர சந்ததி இருக்கவில்லை. தம்பியான சிவஸ்வாமியையே புத்திரராக பாவித்துக்கொண்டு அதிகமாய் பிரீதி வைத்து மாதாபிதாக்களின் வியோகத்தால் வருத்தமடைந்திருக்கிற அந்த பாலகனுக்கு தன் ஆதரணையினுல் அந்த வருத்தத்தை மறைந்து சம்ரக்ஷணை செய்துகொண்டு வந்தார். அவ்வளவு அபிமானத்திற்கு பாத்திரராயிருந்த லோகவியாபாரமே தெரியாத இந்த பாலகனுக்கு சந்நியாசம்கொடுத்து அவர் சம்பந்தத்தை போக்கடித்துக்கொள்வது, இந்த லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளுக்கு இஷ்டமாயிருந்திருக்குமா? எப்போதும் இஷ்டமாயிருக்கவில்லை. ஸ்வாமிகள் அவர்கள் அபிப்பிராயத்தை தனக்கு தெரிவிப்

பதற்காக வந்த ஜனங்கள் தனக்கு மித்திராயும் ஹித சிந்தையுள்ளவராயும் இருந்தாலும் அந்த சந்தர்ப்பத்தில் அவர்கள் தங்கள் சத்துருக்களென்று எண்ணம் சாஸ்திரிகள் மனதில் உண்டாயிற்று. இதனால் மத்தியஸ்தம் செய்ய வந்தவர்களுக்கு சாஸ்திரிகளிடமிருந்து அவமானம் சம்பாதித்துக்கொள்ளப்பட்டதே தவிர காரியசித்தி ஆகவில்லை.

மத்தியஸ்தத்திற்குவந்த ஜனங்கள் தர்ம சங்கடமான இந்த காரியத்தில் இன்னது செய்வதென்று தோன்றாமல், இந்த காரியம் தங்களால் சாத்தியமாகிறது முடியாத காரியம், என்று ஸ்ரீஸ்வாமிகளுக்கு தெரிவித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்களே லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளை தம்மிடம் வரவழைத்து அவருக்கு சாஸ்திரமரியாதையை அனுசரித்தும் லோக மரியாதைக்கு அனுகுணமாயும் அனேகவிதமாக ஹித போதனைசெய்து தங்களுக்கு குரு தக்ஷிணையாக அவர் அனுஜ்ஞை கொடுக்கும்படி நிர்ப்பந்தம் செய்தார்கள். சாஸ்திரிகளவர்கள் தான் பண்டிதராயிருந்து பிராணிகளின் கர்மானுசாரமாய் எல்லாம் நடக்குமே தவிர வேறே விதமாய் செய்வது ஒருவராலும் சாத்தியமில்லை யென்ற பாகமும் மற்றும் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் கௌரவமும் பிரபாவமும் அவருக்கு இருக்கக்கூடிய ராஜ சகாயம் முதலிய சங்கதிகளையும் நன்றாகத் தெரிந்தவராயிருந்தாலும் தன் தம்பியிடம் இருக்கிற அபிமானம் இந்த சாஸ்திரிகளை எந்த விதத்

திலும் ஸ்வாமிகளவர்களின் உத்தரவைக் குறித்து ஆலோசனைசெய்து பதில் சொல்ல இடம் கொடாமலே ஸ்ரீஸ்வாமிகள் அவர்களுடைய இஷ்டப்படி செய்துகொள்ளுதல் சாத்தியமில்லையென்று பிடிவாதமாய் ஒரேபதில் சொல்லும்படி செய்தது.

இந்த லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளுக்கு தம்மிடத்தில் இருக்கப்பட்ட பக்தியையும் கௌரவத்தையும் அறிந்திருந்த ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தன் அனுஜனிடத்தில் உள்ள ஸ்நேஹாதிசயத்தால் சாஸ்திரிகள் தம் அபிப்பிராயத்திற்கு விரோதமாக சொல்லி வருவதை அறிந்து சந்தோஷமடைந்தாரேயொழிய அசமாதானம் கொள்ளவில்லை. அப்படியிருந்தாலும் ஈசுவர பிரேரணையினாலும், சிவஸ்வாமியின் பூர்வீக ஸத்கர்மபரிபாக காலம் கிட்டியதாலும், ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அடிக்கடி சாஸ்திரிகளுக்கு சமாதான வசனங்கள் சொல்லிக்கொண்டு அந்த பாலகனுக்கு ஜாதக ரீதியாய் 16வது வயதில் பிரபலமான ஒரு கண்டமிருப்பதாயும் சாஸ்திரிகளுக்கு ஸூசனைசெய்தார்கள். இந்த ஸூசனை சாஸ்திரிகளுக்கு கொஞ்சம் சாதகமென்றே அவர் தெரிந்துகொண்டு ஜாதகரீதியாய் சமீபகாலத்திலேயே மாரகதசை வருவதானால் இந்த விஷயமாய் பூர்வமே தெரிந்துகொண்டிருக்கிற ஸ்வாமிகள் அவர்கள் அல்பாயுஸ் உள்ள பாலகனை சம்ஸ்தானாதிபத்தியத்திற்கு நியமனம் செய்ய பிரயத்தினம் செய்வது யுக்தமில்லையாகையால் தீர்க்காயுஸுள்ள

ஜாதகத்தை ஸ்வாமிகள் அவர்கள் பார்த்து சிஷ்யபரிக்கிரஹம் செய்வது ஆவசியகமென்று தெரிவித்துக்கொண்டார். ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சாஸ்திரிகளுடைய வார்த்தையைக் கேட்டு கொஞ்சம் சிரித்துக்கொண்டு "ஜாதகரீதியாக உங்கள் தம்பியான சிவஸ்வாமி அல்பாயுஸ்யோகமுள்ளவரென்பது நிஜமே; அதில் சந்தேகமில்லை. அதினாலேயே அவருக்கு சன்யாசாசிரம பிராப்தியாவதினால் அந்த ஆசிரம பிரபாவத்தினாலும் ஸ்ரீசாரதாம்பிகை பிரபாவத்தினாலும் அவருக்கு வரக்கூடிய கண்டம் பரிகாரமாகி ஸ்ரீசங்கர பகவத்பாதாளைப்போல தீர்க்ககாலம் ஜீவித்திருப்பாரென்ற நம்பிக்கை நமக்கு சம்பூர்ணமாயிருப்பதினாலேயே நாம் இவ்வளவு தூரம் உங்களை பலாத்காரம் செய்வதாயிருக்கிறது." என்று சொன்னார்கள். இதற்குமேல் சாஸ்திரிகளுக்கு மனதில் கொஞ்சம் பயம் ஏற்பட்டது. அப்படியிருந்தும் ஸ்வாமிகள் அவர்களின் உத்தரவை அங்கீகரிக்காமலே அனுமதிபெற்றுக்கொண்டு கிரகத்திற்கு புறப்பட்டுப்போனார்.

பிறகு ஸ்வாமிகள் அவர்களுக்கும் லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளுக்கும் நடந்த சம்பாஷணை எல்லாம் ஸ்ரீமத் கிருஷ்ணராஜபிரபுவுக்குத் தெரியவந்தது. அவர்கள் லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளை வரவழைத்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் உங்கள் தம்பியானசிவஸ்வாமிசாஸ்திரிகளை குருதக்ஷிணையாக கொடுக்கவேண்டுமென்று என்னைக் கேட்டார். தங்கள் பிதாவான ராமசாஸ்

திரிகள் அவர்கள் தம் அந்தியகாலத்தில் தம்முடைய 3 புத்திரர்களையும் என்னிடத்தில் ஒப்புவித்துவிட்டுப் போயிருக்கிறார்கள். அதில் ஒருவனான அதாவது யக்ஞநாராயண சாஸ்திரி தைவாதீனமாய்விட்டான். பாக்கியுள்ளவரில் எனக்காக உம்மை நிறுத்திக் கொண்டு நம்ம குருக்களுக்காக சிவஸ்வாமி சாஸ்திரியை குருதக்ஷிணையாக கொடுப்பதற்கு சங்கல்பித்து இருக்கிறேன். இந்த விஷயத்தில் முழு அதிகாரம் எனக்குண்டு. இதற்கு விரோதமாக சொல்லக் கூடாது என்று சொல்லி வார்த்தை சொல்லுவதற்கே இடம் கொடுக்காமல் கிருஹத்திற்கு அனுப்பிவிட்டு அக்ஷயவருஷம் ஆஷாட சுத்தஷஷ்டி தினம் குணிகல் ராமசாஸ்திரிகள் அவர்களின் 3வது குமாரரான சிவஸ்வாமி சாஸ்திரிகள் அவர்களுக்கு ஸ்ரீங்கேரி மடத்திற்கு ஆசிரமஸ்வீகாரத்திற்கு லக்கினம் நிச்சயம் செய்து அதற்கு வேண்டிய உபகரணங்களை சித்தப் படுத்தும்படி தம் அரண்மனை அதிகாரிகளுக்கு ஆக்ஞைசெய்தார். அக்ஷயவருஷம் ஆஷாட சுத்த பஞ்சமிதினம் மத்தியானம் 4மணி சமயத்தில் அரண்மனையிலிருந்து ஜனங்களை அனுப்பி பல்லக்குமேல் சிவஸ்வாமி சாஸ்திரிகளை தம் அந்தப்புரத்திற்கு வரவழைத்துக்கொண்டார். அரண்மனைக்கு வந்த அந்த பாலகனை அதிக பிரேமையுடன் தம் மடியில் உட்கார்த்திக்கொண்டு அவருடன் பேசிக்கொண்டு பிரிந்து போயிருந்த அவருடைய தலைமயிரை சேர்த்துக்

கட்டுவதற்கு எவ்வளவு தூரம் பிரபுக்கள் பிரயத்தினம் செய்தும் அதிகமாக மயிரில்லாததால் கட்டுவதற்கு வராமலே இருக்கக்கண்டு, என்னப்பா குழந்தை, உன் தலைமயிர் எவ்வளவு கட்டினாலும் நிற்கிறதே இல்லையே ! என்று கொஞ்சம் கிரித்துக்கொண்டு சொன்னார். மற்றும் இன்றையதினம் உன்னை சுலபமாக அழைத்து என் சமீபத்தில் உட்கார்த்திக்கொண்டேன். நாளையதினம் உங்களை நான் நமஸ்காரம் செய்து தூரத்தில் நிற்கவேண்டியதாயிருக்கிறதல்லவா ? என்பதாக சிலவார்த்தைகள் அந்த பாலகனுடன் பேசிக்கொண்டு அவர் தைரியத்தை பரீக்ஷை செய்தார். பிற்பாடு அந்தப்புரத்திய ஜனங்களுக்கெல்லாம், இந்த சாஸ்திரிகள் நாளைதினம் நமக்கு குருவாக ஆகிறார், இவருக்கு எல்லாரும் நமஸ்காரம் செய்யவேண்டுமென்று சொல்லி எல்லாரையும் நமஸ்காரம் செய்யும்படி செய்து அவருக்கு பலவிதமான பழங்கள் தருவித்துக்கொடுத்து அன்றையதினமே ராஜ மரியாதையுடன் கிருஹத்திற்கு அனுப்பிக் கொடுத்தார்.

அனுஜஞை சிவஸ்வாமியின் பிரபலமான கர்மாவை அனுசரித்து அந்தகாலத்தில் ஏற்பட்ட ராஜ நிர்ப்பந்தத்தையும் மகாபுருஷர்களான குருக்களின் நிர்ப்பந்தத்தையும் அறிந்து இந்த விஷயத்தில் தாம் செய்யும் பிரதிபந்தம உபயோகப்படாதென்று லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகள் மனதில் நிச்சயம் செய்துகொ

ண்டார். அப்படியிருந்தும் சகோதரனிடமிருந்த அபிமானம் வெகுவாக பாதித்துக்கொண்டிருந்தது. இதனால் அவர்வீட்டிலிருந்து அப்புறம் புறப்படாமலே சிந்தையிலாழ்ந்திருந்தார். அக்ஷயவருஷம் ஆஷாட சுத்த ஷஷ்டிதினம் காலையில் 6மணிக்கே சிவஸ்வாமியை ஸ்ரீமடத்திற்கு அழைத்துக்கொண்டு வரும்படி அரண்மனையிலிருந்து, மேனா (பல்லக்கு) சத்திரம் சாமரம் முதலான மரியாதைகளுடன் அரண்மனை இலாகா ஜனங்களும் மடத்திலுள்ள ஜனங்களும் சேர்ந்து லக்ஷ்மீ நரசிம்மசாஸ்திரிகள் கிருஹத்திற்கு வந்தார்கள். பாலகரான சிவஸ்வாமி சாஸ்திரிக்கு முதல்நாள் அரண்மனையிலிருந்து வீடுவந்ததுமுதல் ஒருமாதிரி தலைவலி ஆரம்பித்து அன்று இராத்திரியெல்லாம் அதிக உபத்திரவம் உண்டாயிருந்தது. மறுநாள் காலையிலும் அந்த உபத்திரவம் நன்றாக நீங்கவில்லை. ராமசாஸ்திரிகளவர்கள் காலமிருந்து சாஸ்திரிகள் வீட்டிலேயே இருந்துகொண்டு சாஸ்திரிகளுக்கு விசேஷ அபிமான பாத்திரமாயிருந்து அவருக்கு பிற்காலத்திலும் லக்ஷ்மீ நரசிம்ம சாஸ்திரிகளிடமும் முன்போலவே ப்ரீதியை சம்பாதித்துக்கொண்டு அந்த கிருஹத்தில் வீட்டு ஜனங்களைப்போலவே இருந்து வந்த சோளதேசம் சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்பவர் தைரியமாய் சிவஸ்வாமிக்கு ஸ்நானம் செய்வித்து சந்தியாவந்தனம் அக்கினிகாரியம் முதலானவையும் செய்வித்து, வியசனத்துடன் படுத்துக்

கொண்டிருந்த லக்ஷ்மீ நரஸிம்ம சாஸ்திரிகளுக்கு காலோசிதமான சமாதான வார்த்தைகளால் சமாதானம் சொல்லி சிவஸ்வாமியைக்கொண்டு தமையனுருக்கு நமஸ்காரம் செய்வித்து, அவரை எடுத்துக் கொண்டுவந்து மேனுவில் உட்காரவைத்து, அவருடன் தானும் இருந்து மடத்திற்கு அழைத்துவந்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் முன்னிலையில் வந்து தர்சனம் செய்வித்தார். ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தம் அபிப்பிராயத்தை அனுசரித்து சன்னியாசம் பெற்றுக்கொள்வதற்காக வந்திருக்கும் பாலகனைப் பார்த்து பரம சந்தோஷத்துடன் அந்த பாலகனை அனுக்கிரஹித்து மேலேநடத்தவேண்டிய காரியங்களை நிறைவேற்றவேண்டியதற்காக முந்தியே நிஷ்கர்ஷையாயிருந்த லக்ஷ்மீரமண தேவாலயத்திற்கு அனுப்பினுர்கள். அந்தசமயத்தில் அரண்மனை வித்வான்கள் ஸ்தலத்திலுள்ள பிராம்மண மகாஜனங்கள் முதலானவர்கள் கூடியிருந்தார்கள். சிவஸ்வாமி சாஸ்திரிக்கு ஸ்நானம் செய்வித்து சன்னியாசாங்கமாக அஷ்ட சிராத்தம், புருஷஸூக்தஹோமம், விரஜாஹோமம் முதலிய கர்மங்கள் எல்லாம் கிரமமாக நடத்தப்பட்டன. ப்ரைஷோச்சாரணத்திற்காக சிவஸ்வாமியை பாதசாரியாக மைசூர் காளஞ்சி ஏரி என்ற தடாகத்திற்கு அழைத்துக்கொண்டு போனுர்கள். ஸ்ரீநரஸிம்மபாரதி ஸ்வாமிகள் அவர்கள் தடாகத்திற்கு விஜயம்செய்து சிவஸ்வாமி ஜலத்தில் இறங்கி கிரமமாக, ப்ரைஷ

மந்திரத்தை உச்சாரணம்செய்தபிறகு தம் சமீபத்தில் அழைத்துக்கொண்டு அவருக்கு ஆசிரமத்துக்கு யோக்யமான கௌபீனம் கடிஸூத்திரம் வஸ்திரம் முதலானவைகொடுத்து தம்பக்கத்திலேயே சிஷ்யரை அழைத்துக்கொண்டு மருபடியும் லக்ஷ்மீரமண தேவஸ்தானம்வந்து சேர்ந்தார்கள். அங்கேயே ஸ்ரீநரசிம்ம பாரதி ஸ்வாமிகள் அவர்களால் நூதனமான பால சன்னியாசிகளுக்கு மகாவாக்யோபதேசம் செய்யப்பட்டது. யோகபட்டம் முதலிய எல்லாசம்ஸ்காரங்களும் செய்யப்பட்டன. அந்தகாலத்தில் ஸ்ரீமத் கிருஷ்ணராஜ மகாபிரபுக்களாலும் ஆஸ்தான வித்வான்களாலும் மற்றுமுள்ள மைசூர் முதலத்திய மகாஜன பிராம்மணர் முதலானவர்களாலும் சபை நிறைந்திருந்தது. சிஷ்ய ஸ்வாமிகளுக்கு யோகபட்டம் கொடுக்குங்காலத்தில் ஆலோசனை வந்ததில் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தம்பரம குருக்கள் மிகவும் பிரசித்திபெற்றவர்களாயும் தபஸ்விகளாயும் இருந்ததினால் அவர்கள் பெயரைக்கொண்டே இந்த சிஷ்யனுக்கு யோகபட்டம் கொடுக்கவேண்டுமென்று அபிப்பிராயப்பட்டார்கள். சபைக்கு விஜயம்செய்திருந்த ஸ்ரீமத் கிருஷ்ணராஜபிரபுக்கள், தன் குருக்களான நரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்களின் பெயர் சேர்ந்திருக்கவேண்டுமென்று தெரிவித்தார்கள். சபையில் இருந்த பண்டிதர்களும் மற்றவர்களும் சேர்ந்து சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு சரியான அர்த்தத்

துடன் ஜனனம் முதல் ஈசுவரபிரேரணையால் வந்திருக்கப்பட்ட சிவ சப்தமும் சேர்ந்திருக்கவேண்டியது அவசியமென்று அபிப்பிராயப்பட்டார்கள். பிறகு சர்வசம்மதமாக ஸ்ரீ குருஸ்வாமிகளான ஸ்ரீநரசிம்மபாரதீஸ்வாமிகளவர்களால் தம் சிஷ்யனுக்கு "சச்சிதானந்த சிவாபிநவ நரசிம்மபாரதீ" என்பதாக யோகபட்டம் கொடுக்கப்பட்டது.

இந்த பிரகாரம் விதிப்படி எல்லாசம்ஸ்காரங்களும் முடியவேண்டுமானல் சாயங்காலம்வரையில் ஆயிற்று. சின்னஸ்வாமிகள் அவர்கள் வெகு பாலியமாயிருந்தபோதிலும் முதல்நாளே கொஞ்சம் தலைவலியினல் சிரமப்பட்டு இருந்தவரானதாலும், அன்று சூரியோதயம் முதல் சூரிய அஸ்தமனம்வரையிலும் ஆகாரமில்லாமல் சிரமப்பட்டு இருந்ததினலும் களைத்துப்போனர். இவருக்கு ஸ்நாநம்செய்வித்து பெரியஸ்வாமிகள் அவர்கள் தம் சமீபத்தில் உட்கார்த்திக்கொண்டு சாயங்காலத்திய ஆஹ்னிகங்களைசெய்வித்து அன்று லகுவாயிருக்கப்பட்ட பொரியை ஆகாரம் செய்வித்து தாங்கள் ஆஹ்னிகம் செய்வதற்கு உட்கார்ந்துகொண்டிருந்த இடத்திலேயே ஒரு கிருஷ்ணாஜினத்தின்மேலே சின்னஸ்வாமிகள் அவர்களை படுத்துக்கொள்ளும்படி ஆக்ஞைசெய்துவிட்டு தம ஆஹ்னிகபூஜை முதலியவைகளை செய்துகொண்டிருந்தார்கள்.

தன்மனதிற்கு மீறினதாயும் அப்பியாசமில்லாத



மைசூர் மஹாராஜா மும்மடி
கிருஷ்ணராஜர்.

தாயுமிருந்த சிரமத்தினுல் களைத்துப்போயிருந்த சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு படுத்தவுடனே நன்ருக நித்திரை வந்துவிட்டது. கொஞ்சகாலத்திற்கு பிறகு சின்னஸ்வாமிகள் அவர்கள் ஸ்வப்னத்தில் सर्वोऽहम् सर्वोऽहम् सर्वोऽहम् என்று 3 தரம் நன்ருக கேட்கும்படி சொன்னுர். சமீபத்திலேயே அனுஷ்டானம் செய்துகொண்டிருந்த பெரிய ஸ்வாமிகளுக்கு இந்த சப்தம் கேட்டது. அந்த சந்தர்ப்பத்தில் இவர்களுக்கு உண்டான ஆச்சரியமும் சந்தோஷமும் எப்படிப்பட்டதாயிருக்குமோ ? இந்த பால சன்னியாசிகளின் பூர்வீகவாசனுபலம் எப்படிப்பட்டதோ ? ஈசுவர சங்கல்பம் எப்படிப்பட்டதோ ? இந்த விஷயத்தைக்குறித்து ஆலோசிப்பதற்குக்கூட இக்காலத்திய ஜனங்களுக்கு சாத்தியமில்லை என்று சொல்லுவதில் தயங்கவேண்டிய ஆவசியகம் ஒன்றும் தோன்றவில்லை. வாமதேவர் முதலிய மகரிஷிகளைப்போல ஜனனமுதல் உண்டான ஆத்மஸ்வரூப ஞானமுள்ளவர் என்று சொல்லவேண்டியிருப்பதில், ஆசிரமஸ்வீகாரத்திற்கு முந்தியே ஸ்ரீ நரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்கள் இவரை பார்ப்பதற்காக அழைத்துவந்த காலத்தில், "உனக்கு என்னவேண்டும்," என்று கேட்டகேள்விக்கு இந்த பாலயதீசுவரர் சொன்னதாக முன்சொல்லியிருக்கிற பதிலில் என்ன ஆச்சரியம். பாலியமாகட்டும், யௌவனமாகட்டும், வார்தீகமாகட்டும், இந்தமாதிரி விஷயங்களில் வயதினுல் பிரயோஜன

மென்ன ? முக்கியமானது மனிதனுக்கு வாசனையி னாலல்லவோ எல்லாம் நடக்கக்கூடியது. இந்த சின்ன ஸ்வாமிகளுடைய நடத்தையை தெரிந்துகொண்டால், இவருடைய வயது, அனுபவம், ஞானம் இவைகளைக் குறித்து யோசித்தால் பூர்வகர்மசம்ஸ்காரம் வாசனை இவைகளை யார்தான் அங்கீகரிக்காமல் இருக்கமுடியும். அதனால் ஆஸ்திகனை ஒவ்வொருவனும், ஜன்மாந்தர த்தையும், கர்மத்தையும் அதிருஷ்டத்தையும், ஒப்புக் கொள்ளாவிடில் மனதிலுண்டாகக்கூடிய சந்தேகங்களை தீர்த்துக்கொள்ளுவதற்கும் வரக்கூடிய ஆக்ஷேபணை களை சமாதானப்படுத்திக்கொள்வதற்கும் எப்போதும் சாத்தியமாகமாட்டாது.

சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு சன்னியாசஸ்வீ காரமானதும் அதைத்தொடர்ந்தே சம்ஸ்தானவழக்க த்தை அனுசரித்து, லௌகிகமாய் பட்டாபிஷேகம் என்ற மகோத்சவம் நடத்தப்பட்டது. இந்த மகோத் ஸவம் நடந்த காலத்தில் ஸ்ரீ கிருஷ்ணராஜ பிரபுக்கள் அவர்கள் அக்காலத்தில் சீப் கமிஷனராயிருந்த மிஸ் டர் பௌரிங்க சாகேப் அவர்களுடன் மடத்திற்கு விஜயம்செய்து சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு, வியா க்கியான சிம்மாசனத்தில் பட்டாபிஷேகம் நடத்தி ராஜகீயமான, மானம்—மரியாதைகளை விசேஷமாக, மகாராஜா அவர்கள் நடத்தியிருப்பதாக மடத்திலுள்ள காகித பத்திரங்களால் தெரியவருகிறது. பட்டாபி ஷேகம் நடந்தபிறகு, ஸ்ரீகிருஷ்ணராஜ பிரபுக்கள் அவ

ர்கள், தனியாய் சின்னஸ்வாமிகள் அவர்களின் தரிசனத்திற்காக வந்தகாலத்தில் "தங்களுக்கு என்ன அபேக்ஷை" என்று கேட்டார்கள். அதற்கு ஸ்ரீஸ்வாமிகள் சிறியதான 2 யானை குட்டிகள் வேண்டும், என்பதாக பதில் சொன்னார்கள். இதைக்கேட்ட மகாராஜாவுக்கு அதிக ஆச்சரியமுண்டாய், யானைக்குட்டிகளால் என்ன பிரயோஜனம் என்று மறுபடியும் கேட்டார். அதற்கு அந்த பாலயதீந்திரர் சிருங்கேரியில் சாரதாம்பாள் தேவாலயத்தின் வாசலில் இருபக்கங்களிலும் நிறுத்தி சாமரம் போடுவதற்காக வேண்டியிருக்கிறது, என்று சொன்னதைக்கேட்டு இராஜருக்கு உண்டான சந்தோஷம் அடங்காமலிருந்தது. உடனே கஜசாலைக்கு சொல்லி அனுப்பி விசாரித்ததில் சிறியதான ஒரு பெண் யானை குட்டி சித்தமாயிருப்பதாக தெரியவந்தது. அதை வரவழைத்து சின்னஸ்வாமிகளுக்கு அனுப்பிக்கொடுத்தார். இந்த யானைக்குட்டி ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் கூடவே இருந்து மடத்தில் வளர்ந்து இப்பால் சென்ற 1909வது வருஷத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சஞ்சாரகாலத்தில் பாபவிநாசம் என்ற ஸ்தலத்தில் வெறி நாயால் கடிக்கப்பட்டு காலமடைந்துவிட்டது. அந்தகாலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் அந்த யானை மடத்தில்வந்து சேர்ந்த விஷயத்தில் மேலேசொன்ன பூர்வகதையை எல்லாருக்கும் சொல்லி வெகுவாக விசனப்பட்டார்கள். இந்த விஷயத்தை இங்கு பிரஸ்தாபம் செய்வதில் அதி

பாவியாமுதல் இந்த புருஷ சிரேஷ்டருடைய சுபாவம் எவ்வளவு கம்பீரமாயிருக்கிறதென்று தெரிவிப்பதற்காக மாத்திரம்தான் பிரஸ்தாபிக்கப்பட்டது.

8ஷ் காலமுதல் பிரயத்தனப்பட்டிருந்த, "நல்ல சிஷ்யனை சம்பாதிப்பது" என்ற காரியம், ஸ்ரீ சாரதாம்பாள் அனுக்கிரஹத்தினுல், பிரபலமான ராஜசகாய மேற்பட்டு, சுலபமாய் நிறைவேறின விஷயத்தில் ஸ்ரீ நரசிம்ம பாரதீஸ்வாமிகள் அவர்கள் அதிக சந்தோஷமடைந்து, அந்த வருஷத்திய சாதுர்மாஸிய சங்கல்பம், வியாசபூஜை முதலான ஆசிரம தர்மங்களை காவேரிநதி தீரத்தில் நிறைவேற்றவேண்டுமென்று யோசித்து பிரபுக்களின் சகாயத்துடன் ஸ்ரீரங்க பட்டணத்திற்கு சமீபத்தில் பச்சிமவாகினீ என்ற ஸ்தலத்தில் தங்கள் சிஷ்யருடன் சாதுர்மாஸ்ய தீக்ஷையை ஆரம்பித்தார்கள்.





## 3-வது அத்தியாயம்.

### வித்யாப்யாஸமும் தீர்த்தயாத்திரையும்

ஸ்ரீ நரசிம்ம பாரதி சுவாமிகள் அவர்கள் தாம் திருடசரீரராய் இருக்கும் காலத்திலேயே தமக்குப்பிறகு பீடாதிபத்யத்திற்கு சரியான சிஷ்யார் பரிக்ரஹம் செய்து அவருக்கு ஆசிரம சம்பிரதாயங்களையும் சம்ஸ்தான வழக்கங்களையும் நன்றாக தெரிவித்து தம்சிஷ்யர் மூலமாயும் சம்ஸ்தானத்திற்கு கியாதி அதிகரிக்கும்படி செய்யவேண்டுமென்ற அபிப்பிராயத்தினால் சிஷ்யபரிக்கிரஹத்திற்காக யத்தனம் செய்தார்களென்று முன்னே சொல்லப்பட்டது. தம்முடைய சங்கல்பபிரகாரமே ஸத்குலத்திலுதித்தவரும் மிகுந்தமேதைபுத்தி யுள்ளவராயும் ஜன்மாந்தர ஸத்வாசனையுள்ளவராயும் கிடைத்திருக்கிறசிஷ்யருக்கு வித்தியாபியாசமும் செய்வித்து பண்டிதராகச்செய்ய வேண்டியது ஆவசியகமாயிருப்பதுபோலவே பாலியவயஸிலேயே தம் சிஷ்யருக்கு தம்முடனே தேசசஞ்சாரமும் செய்வித்து சிஷ்ய ஜனங்கள் விஷயமாய் தமக்குள்ள காரியங்களை சின்ன ஸ்வாமிகளவர்களுக்கு தெரிவிக்க

வேண்டியதும் அவசியமென்று ஆலோசித்து சாதுர் மாஸ்யஸங்கல்பானுஷ்டானம் பூர்த்தியானவுடன் தாம் யாத்திரைக்கு ஆரம்பம் செய்தார்கள்.

சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு பால்யபாடமான அமரம், சப்தம், காவியம் முதலான பாடங்கள் சொல்வதற்காக வயது முதிர்ந்தவராயும் குணிகல் ராமசாஸ்திரிகள் அவர்களிடத்தில் வித்யாப்பியாசம் செய்து பண்டிதராயுமிருந்த கணகால் சாமாசாஸ்திரிகள் என்பவரை ஏற்பாடுசெய்து அவர் மூலமாய் ஸ்ரீ சுவாமிகள் அவர்களுக்கு வித்யாப்பியாசத்திற்கு அனுகூலம் செய்தார்கள். பெரிய சுவாமிகளுக்கு சின்ன சுவாமிகள் விஷயத்தில் அபிமானம் நிரம்ப விசேஷமாயிருந்தது. இவர்களுடன் கூட வாசிப்பதற்காகவே இதர தேசத்திய வித்யார்த்திகளை வரவழைத்து சேர்த்தார்கள். இந்த சின்ன சுவாமிகள் அவர்களின் ஆகாரவியவஹாரங்களை அந்தந்த காலங்களில் விசாரணைசெய்துகொள்ளுவதற்காக எந்தவிதமாயும் சம்பந்தமில்லாத தக்ஷிணதேசத்திய ஜனங்கள் நியமிக்கப்பட்டார்கள். எவ்வித சந்தர்ப்பத்திலும் சின்னசுவாமிகளுக்கு மடத்திலிருந்த ஸ்தலவாஸிகளின் சம்பந்தம் உண்டாவதற்கு இடமே கொடுக்கப்படவில்லை. இராத்திரிகாலத்தில் தம் சிஷ்யரை தம் சமீபத்தில் தம் பார்வையிலிருக்கும்படி படுக்கும்படி ஏற்பாடு செய்திருந்தார்கள். பிரதிதினமும் தமக்கு அவகாசமிருக்கும் சமயத்தில் சிஷ்யரைசமீபத்தில் உட்

கார்த்திக்கொண்டு அவர்களின் வயதிற்குத்தக்கபடி 1, 2 மணி சமயமாகிலும் பெரியசுவாமிகள் அவர்கள் தானுகவே தர்மசூக்ஷ்மம் ஆஸ்திகதை பக்தி சன்னியாசாசிரமத்தின் மேன்மை இவைகளைக் குறித்து போதனை செய்துகொண்டிருந்தார்கள். கொஞ்சகாலம் தம் சிஷ்யர் தம் திருஷ்டியில் விழாமல் இருந்த சந்தர்ப்பம் நேரிடுமானால் அந்த தாமதத்தை பொறுப்பது பெரிய சுவாமிகளுக்கு முடியாத காரிய மாயிருந்து வந்தது. இந்தப்படி தம் சிஷ்யரைக் காப் பாற்றிவருவதிலும் அவரைமேன்மை ஸ்திதிக்குக் கொண்டு வருவதிலும் அவருக்கு வித்யைகள் கற்பிக் கும் விஷயத்திலும் ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்கள் அதிபாலியத்தில் தான் அபேக்ஷித்தப்படி தசரதமகாராஜரால் அனுப்பப்பட்ட ராம லக்ஷ்மணர் கள்விஷயத்தில் விசுவாமித்திர மகரிஷிகள் எடுத்து கொண்டிருந்த பாரத்திலும் அதிகமாக எடுத்து கொண்டிருந்தார்களென்று சொல்லுவது அதிசயோ க்தி ஆகமாட்டாது.

சன்யாசாசிரமத்திற்காக கிருஹத்தை விட்டு மடத்திற்கு வந்த சின்னஸ்வாமிகள் அவர்கள் அன்று முதல் அநேகநாள்வரையிலும் தம் தமையனையா வது பூர்வாசிரமத்தில் சம்பந்தமுள்ள ஜனங்களில் யாரையாவது பார்ப்பதற்குக்கூட அவகாசமில்லை. அப்படியிருந்தாலும் ஒரு தினமாவது யாரையாவது நினைத்தது மில்லை என்று தெரியவந்திருக்கிறது.

இந்த ஸ்வபாவம் இந்த மகானுபாவரின் அந்த்யகாலம் வரையில் இவர்களிடம் வேரூன்றி இருந்த சங்கதி இந்த லேககனுக்கு நன்ருக தெரிந்திருப்பதனுல் பாலியகாலமிருந்தே இந்த ஸ்வபாவம் சகஜமாகவே இவரிடம் இருந்ததென்கிற விஷயத்தில் சந்தேகமில்லை.

தன்னிடம் அதிகமான ப்ரீதிவைத்து அனுக்ரஹித்துக்கொண்டிருக்கிற குருக்களே தந்தை தாய் அண்ணன் தம்பி தைவம் குரு எல்லா ஸ்வரூபம் என்று உறுதியாக நம்பி அவர்கள் சித்தத்தை அனுசரித்துக்கொண்டு குருக்களுக்கு சந்தோஷத்தை ஒவ்வொரு நிமிஷத்திலும் அதிகரிக்கும்படி செய்து கொண்டிருந்தார்கள்.

குருக்களின் ஆக்ஞைப்படி காலையில் 6 மணிக்கு ஸ்நாநம்செய்து தம்ஆன்ஹிகங்களை முடித்துக்கொண்டு தமக்காக குருக்களால் அனுக்கிரஹிக்கப்பட்ட "நவசந்திமௌளீசுவரர்" என்ற சிவலிங்கத்தை பூஜித்து பிறகு தம் ஆச்ரம வழக்கப்படி குருக்களுக்கு நமஸ்காரம்செய்து அவர்கள் ஆக்ஞையின்மேல் பத்து பதினொன்று மணி சமயத்தில் பிக்ஷைசெய்துகொண்டிருந்தார்கள்.

பிக்ஷைசெய்துவிட்டு தம் சகபாடிகளுடன் வயதிற்குத்தகுந்ததான சில விளையாட்டு வார்த்தைகளை சொல்லி வேடிக்கைகளை செய்துகொண்டிருப்பதில் கொஞ்சகாலம் சென்று கொண்டிருக்கும்—பாடம் சொல்வதற்கு சாஸ்திரிகள் வந்ததும் பாடம் வாசித்

துக்கொண்டிருப்பார்கள். ஆனால் சிந்தனைசெய்யும் விஷயத்தில் அதிகமாக சிரமம் எடுத்துக்கொள்ளுகிற தில்லை. இதைப்பார்த்து பாடம் சொல்லுகிற சாஸ்திரிகள் நயத்திலும் பயத்திலும் "அந்தந்ததினத்திய பாடங்களை வாயில் உருப்போட்டு கெட்டியாகசெய்து தான் பாடம்சொல்லுவதற்கு வரும்போது தன்னிடம் ஒப்புவிக்கவேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்யத்தொட ங்கினார். அப்போதும் இந்த ஸ்வாமிகள் அவர்கள் புஸ் தகத்தை எடுத்து அசையாமல் உட்கார்ந்து சிந்தனை செய்வதில்லை. சகபாடிகள் நிர்ப்பந்தம்செய்து சாஸ் திரிகள் வந்தால் கோபித்துக்கொள்வார் என்றுசொன் னால், பாதகமில்லை, நீங்கள் வாசியுங்கள் நான்கேட்டுக் கொண்டிருக்கிறேன் என்று சகபாடிகளுக்கு சமாதா னம் சொல்லி கொஞ்சநேரம் மற்ற வித்யார்த்திகள்வா சித்துக்கொண்டிருப்பதை கவனித்து கேட்டுக்கொண் டிப்பதைத் தவிர தானாக சிந்தனம் செய்கிறதில்லை. பாடம் சொல்லுகிற சாஸ்திரிகள் வந்து முதல் நாள் நடந்த பாடத்தைக்கேட்டவுடன் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் கொஞ்சமும் சந்தேகமில்லாமல் ஒழுங்காய் ஒப்புவித்து விடுவார்கள். இந்த சங்கதியை அநேகம் தடவை பரீக்ஷைசெய்து தெரிந்துகொண்டு சாஸ்திரி கள் ஸ்வாமிகளவர்களை நிர்ப்பந்திப்பதை விட்டுவிட் டார். காவ்யபாடம் ஒன்று இரண்டு ஸர்க்கம் முடி வதற்குள்ளாகவே இவர் வாசிக்காமலிருக்கும் அநேக

கிரந்தங்களிலுள்ள சுலோகங்களைப்பார்த்துப் பார்த்து வாயில் கெட்டிசெய்து கொண்டார்கள்.

பாடம் சொல்லிவரும் சாஸ்திரிகளை வாசிக்கும் சமயத்தில் இடையில் தமக்கு உண்டாகும் சந்தேகத்தை நிவிருத்தி செய்துகொள்வதற்கு கேள்வி கேட்க ஆரம்பம் செய்தார்கள். காவியம் ரகுவம்சத்தில் 2 சர்க்கம், குமாரசம்பவத்தில் 2 சர்க்கம், மாகத்தில் 1 சர்க்கம், இப்படி 5 சர்க்கங்களும் சம்புராமாயணத்தில் 4 காண்டங்களும் மாத்திரம் கணகாலூர் சாமா சாஸ்திரிகளிடம் வாசித்தார்கள். அதற்குள்ளாகவே பரசுலோகார்த்தம் தாராளமாக ஆகக்கூடிய ஞானம் உண்டாய்விட்டது. நைஷதம் என்னும் மகாகாவியத்தை ஸ்ரீகள் அவர்களுக்கு சொல்லுவதற்காக அந்த சமாசாஸ்திரிகள் ஆரம்பம் செய்தார். கொஞ்சதூரம் பாடமாய்க் கொண்டிருக்கையில் ஸ்ரீகள் அவர்கள் கேட்கக்கூடிய ஆக்ஷேபணைகளுக்கு அந்த சாஸ்திரிகள் சொல்லும் சமாதானம் அத்துணை சமஞ்சஸமாகக்கூடியதாக இருக்கவில்லை. ஆகிலும் சாஸ்திரிகளிடம் அகௌரவமேற்படவில்லை. இந்த விஷயத்தைதெரிந்து கொண்டு கணகாலூர் சாமசாஸ்திரிகள் மகா பண்டிதரான குணிகல் லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளிடம் இந்த விஷயமெல்லாம் தெரிவித்து இதற்குமேல் சின்னஸ்வாமிகளுக்கு லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளவர்களே பாடம் சொல்லுவது அனுகூலமென்று சூசனைசெய்ததுமல்லால் பெரிய ஸ்வாமிகள் அவர்களிடத்தில் பாலயதீசு

வாரின் புத்தி சக்தியையயும் பிரதிபா விசேஷத்தை யும் குறித்து விசேஷமாக பிரஸ்தாபம் செய்து அவருக்கு லக்ஷ்மீ நரசிம்மசாஸ்திரிகளவர்களே பாடம் சொல்லும்படி நியமனம்ஆகவேண்டுமென்று தெரிவித்துக்கொண்டார்.

பாலியபாடத்திற்கு ஏற்படுத்தப்பட்ட சாமா சாஸ்திரிகள் பண்டிதராயிருந்தும் சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு பாடம் சொல்லும் விஷயத்தில் தானுகவே பின்வாங்கினதை தெரிந்து பெரிய ஸ்ரீஸ்வாமிகள் அவர்களுக்கும் லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளுக்கும் உண்டான சந்தோஷத்திற்கு அளவில்லை.

அது முதற்கொண்டு லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளவர்களே சின்ன ஸ்ரீகள் அவர்களுக்கு பாடம்சொல்ல ஆரம்பித்து நைஷதத்தில் 2, 3 சர்க்கங்கள் சொன்னர். காவியத்தில் ஸ்ரீகள் அவர்களுக்கு நல்ல வியுத்பத்தி உண்டாயிற்று. இப்போது சின்ன ஸ்ரீகள் அவர்களுக்கு 11 வயது நிறைந்தது. பன்னிரண்டாவது வயதில் தம் குலக் கிரமமாய் வந்திருக்கும் மற்ற எல்லாசாஸ்திரங்களுக்கும் உபயோகியான தர்க்கசாஸ்திரத்தை சின்னஸ்வாமிகளுக்கு சொல்லுவதற்காக லக்ஷ்மீநரசிம்மசாஸ்திரிகள் ஆரம்பித்தார். இவருடன் சேர்ந்து அப்பியாசம் செய்வதற்காக இவரைப்போலவே புத்தி சாமர்த்தியமும் ப்ரதிபையுமிருந்த 3, 4 பெயர் திராவிடதேசத்திய சிறுவர்களை சேர்த்து தர்க்க பாடம் சொல்லிவந்தார்.

தர்க்கசங்கிரஹம் தீபிகை முக்தாவலி இந்த 3 கிரந்தங்களும் ஸ்வாமிகளவர்கள் வாசித்த உடனே இவர்கள் தானே தர்க்க சங்கிரஹமிருந்து வித்தியார்த்திகளுக்கு பாடம் சொல்லிவரும்படி ஏர்ப்பாடு செய்தார்கள். தாம் மேல் கிரந்தங்களை வாசித்து சிந்தனம் செய்வதும் கீழ்கிரந்தங்களை பாடம் சொல்லி வருவதுமாயிருந்து வந்ததினால் ஸ்ரீகள் அவர்களுக்கு அதிக சீக்கிரத்தில் தர்க்கசாஸ்த்திரத்தில் பிரவேசம் உண்டாய்விட்டது.

சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு ஆசிரமமானது முதல் அன்யதேசத்திய சஞ்சாரகிரமத்திலேயே அப்பியாசமும் நடக்கவேண்டியிருந்ததினால் நிர்விக்னமாய் பாடம் நடந்துவர அவகாசமில்லையாகையால் ஒரே சாஸ்திரத்தை அப்பியாசம் செய்வதினால் வெகுகாலம் கழியும்படி சம்பவித்தது.

தம் சிஷ்யருடன் தேசசஞ்சாரத்திற்காக புறப்பட்ட ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்கள் மைசூரிலிருந்து புறப்பட்டு நஞ்சனகூடுக்கு ஸ்ரீ கண்டேசுவர சுவாமி தரிசனத்திற்காக விஜயம் செய்தார்கள். அங்கு சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு கொஞ்சம் சரீரத்தில் உபாதி ஏற்பட்டது. பெரிய ஸ்வாமிகள் அவர்கள் தேவஸ்தானத்திற்குப்போய் (भवरोगवैद्यः) சம்சாரமென்ற ரோகத்திற்கு வைத்தியரான ஸ்ரீ கண்டேசுவரருக்கு தம் கையால் விசேஷமாக பூஜைசெய்து தம் பிராண பூதரான சிஷியரின் ஆரோக்கியத்திற்காக

பிரார்த்தனை செய்துகொண்டு அப்பொழுதே சின்ன ஸ்வாமிகளைப்போல ஒரு சுவர்ண பிரதிமை செய்வித்து ஸ்ரீ கண்டேசுவரர் பீடத்தில் அந்த பிரதிமை எப்போதும் இருக்கும்படி ஸ்திரமாக வைக்கும்படி செய்தார்கள். அன்றையதினமே சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு ஆரோக்கியமுண்டாகி தம் குருக்களுடன் தேவதரிசனத்திற்கு புறப்பட்டுப்போய் தேவதரிசனம் செய்து தானும் ஆனந்தப்பட்டு தம் குருக்களுக்கும் ஆனந்தத்தை உண்டாகும்படி செய்தார்கள். மேலே சொன்ன சுவர்ண பிரதிமை இப்பவும் ஸ்ரீகண்டேசுவரர் உத்ஸவமூர்த்தியின் வெள்ளிபீடத்தில் முன் பக்கத்தில் நிலைத்து இருக்கிறது. நஞ்சனகூடிலிருந்து சாமராஜ நகரம் மார்க்கமாய் கணவாய் இறங்கி மதராஸைச்சேர்ந்த கோயம்புத்தூர், சேலம், திருச்சிறாப்பள்ளி, மதுரை, செங்கல்ப்பட்டு, வடஆர்காடு, கடப்பை, கர்னூல், மதராஸ், முதலிய ஸ்தலங்களில் சஞ்சாரம் செய்து அங்கிருக்கும் புண்ய க்ஷேத்திரயாத்திரைகளெல்லாம் செய்துகொண்டு சின்னஸ்வாமிகள் அவர்கள் கோறிக்கைப்படி சிருங்கேரியில் ஸ்ரீசாரதாம்பாள் தெரிசனம் அவர்களுக்கு செய்விப்பதற்காக ஈசுவரவருஷம் ஆஷாட பகுள த்விதீயை சுக்கிரவாரத்தில் சிருங்கேரிக்குத்திரும்பி விஜயம்செய்தார்கள்.

ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்கள் குரோதன வருஷத்தில் சிருங்கேரியைவிட்டுப் புறப்பட்டார்கள். தம் சிஷியருடன் ஈசுவரவருஷத்தில் திரும்பி

ஸ்தலத்திற்கு வந்துசேர்ந்ததினால் 12 வருஷகாலம் சஞ்சாரத்திலிருந்ததாக ஆயிற்று. அப்போது பெரிய ஸ்வாமிகள் அவர்களுக்கு 80 வருஷம் வயது ஆயிற்று. சின்னஸ்வாமிகள் அவர்கள் 20 வயதுள்ளவர்களாக இருந்தார்கள்.

அக்காலத்தில் மைசூர் கிருஷ்ணராஜபிரபுக்களின் குமாரர், சாமராஜபிரபுக்கள், தகுந்த வயதுவந்தவராக இருக்கவில்லை. அப்படியிருந்தாலும் கிருஷ்ணராஜபிரபுக்களின் பட்டமஹிஷியாயிருந்த சீதாவிலாச தேவாஜ அம்மணியவர்கள் சிருங்கேரி நரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்களின் மாகாத்மியத்தை நன்றாகத் தெரிதுகொண்டிருந்தவராகையால் அந்த மகானுபாவர்களின் வயோதர்மத்தை ஆலோசித்து, அவர்கள் தர்சனம் ஒரு தடவை தன் புத்திரரான சாமராஜஉடையாருக்கு செய்வித்து அவரைக்கொண்டு ஸ்ரீ சிவபஞ்சாக்ஷரி மந்திர உபதேசம் செய்வித்து அனுக்கிரஹம் செய்விக்கவேண்டுமென்ற எண்ணம் மகாராணி அவர்கள் மனதில் உண்டாயிற்று. அந்தப்படி விக்ஞாபன பத்திரிகை மூலமாய் தம் அபிப்பிராயத்தை ஸ்ரீநரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்களுக்கு அறிவித்துக்கொண்டார்கள். ஸ்ரீகள் அவர்களுக்கும் தம் சிஷியர்களான சச்சிதாநந்தநவசிவாபிநவ நரசிம்மபாரதீஸ்வாமிகளின் தரிசினத்தை கர்னாடக தேசத்திற்கு ராஜாவாக வரப்போகிற ஸ்ரீ சாமராஜஉடையார் அவர்களுக்கு செய்வித்து, ஒருவருக்கொருவர் பிரீதியும் அனுக்கிரகமும்

உண்டாகும்படி செய்யவேண்டியதான ஒருகாரியம் பாக்கியிருந்தது. மைசூர் மகாராணியவர்களிடமிருந்து வந்த விக்ஞாபன பத்திரிகையை அங்கீகரித்து தம் சிஷ்யருடன் மைசூர் ராஜதானிக்கு பகுதானியவருஷம் விஜயம் செய்தார்கள்.

மகாராணியவர்களான சீதாவிலாச அம்மாள் அவர்களால் விசேஷமாக உபசரிக்கப்பட்டு, அவர்கள் கோரிக்கைப்படி சாமராஜ பிரபுக்களுக்கு, சிவபஞ்சாக்ஷர உபதேசம்செய்து, அந்தகாலத்தில் ஸ்ரீகிருஷ்ண ராஜப்பிரபுக்கள் அவர்கள் புத்திர ஸ்வீகாரத்திற்காக செய்த பிரயத்னத்தையும் தாம் சிஷிய பரிக்கிரஹத்திற்காக செய்த பிரயத்தினத்தையும் சுருக்கமாய் சாமராஜவுடையார் அவர்களுக்கு தெரிவித்து தம் விஷயத்தில் கிருஷ்ணராஜ பிரபுக்களுக்கு எந்தவிதமான பாவனை இருந்ததோ அந்த பிரபுவிஷயத்தில் தமக்கு எப்படி அனுக்கிரஹமிருந்து வந்ததோ, அதேமாதிரியில் இனிமேலும் ராஜர்களுக்கும் பாலயதீந்திரருக்கும் பரஸ்பரம் ப்ரீதிகௌரவம் இவைகள் இருக்கவேண்டுமென்று அனுக்கிரஹம்செய்து சின்னஸ்வாமிகள் அவர்களால் பிரபுக்களுக்கு ராஜயோக்யமான முக்தாஹாரமும் பலமந்திராக்ஷதைகளும் கொடுப்பித்து சந்தோஷமுள்ள மனதுடன் சிருங்கேரிக்குத் திரும்பி பிரயாணம் செய்தார்கள்.

சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு 20 வயதுஆவதற்குள்ளாகவே அவர் குருக்களான நரசிம்ம பாரதீ

ஸ்வாமிகள் அவர்களிடமிருந்து சிருங்கேரி ஸம்ஸ்தானத்தில் பாம்பரையாய் உபாசனம்செய்து வந்திருந்த ஸ்ரீவித்யா நாரசிம்மம் தக்ஷிணாமூர்த்தி இவை முதலான மந்திரங்களெல்லாம் உபதேசம் செய்யப்பட்டு உபாசனுக்கிரமங்களெல்லாம் தெரிவிக்கப்பட்டது. யோகமார்க்கத்தில் முக்கியமான சிலபாகங்களையும் ஞானமார்க்கத்தில் நிர்குண தியானம் செய்யவேண்டிய சம்பிரதாயத்தையும் தம் சிஷியருக்கு உபதேசம் செய்து யோகசித்தியும் ஞானப்பிராப்தியும் ஸ்ரீ சாரதாம்பாள் அனுக்கிரஹத்தினால் பூர்த்தியாகுமென்று அனுக்கிரஹம் செய்ததாகவும் தெரியவருகிறது. இந்த சங்கதி இப்பால் ஸ்ரீ சச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்களால் செய்யப்பட்டிருக்கும் குருஸ்தோத்திரத்தைப்பார்ப்பதினால் ஸ்பஷ்டமாய்தெரியும்.

ஸ்ரீசச்சிதநந்தசிவாபிநவ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்களுடைய பூர்வவாசனுக்கிரமம் முந்தி சொன்னபடி அவருடைய சில ஆச்சரியமான காரியங்களால் தெரிந்ததே. இவருக்கு குருக்களிடமிருந்து யோகமார்க்கம் உபதேசம் செய்யப்பட்ட பிறகு யோகத்தில் அதிகமான ஆதரவுஉண்டாகி அது சம்பந்தமான கிரந்தங்களைப் பார்ப்பதும் அந்த மார்க்கத்தில் சிரமப்பட்டிருக்கிற ஜனங்கள் தம் சஞ்சாரத்தில் கிடைத்தால் அவ்வித ஜனங்களுடன் விசாரம் செய்வதுமாக இந்த பிரகாரம் முயற்சிசெய்துகொண்டிருந்தார்கள்.

இந்த விஷயம் பெரியஸ்வாமிகள் அவர்கள் கவனத்திற்கும் வந்து இருந்தது. தம் சிஷ்யருடைய பிரயத்தினத்தைகுறித்து சந்தோஷித்து அவருக்கு உத்சாஹத்தைக்கொடுத்துக்கொண்டேவந்தார்கள். அப்படியிருந்தாலும் மந்திரபுனச்சரணமாவது யோகாப்பியாசமாவது செய்வதற்கு.இது சமயமல்லவென்றும் இப்போது சரஸ்வதீ உபாஸநாரூபமான சாஸ்திரபரிசயம் செய்யவேண்டுமென்றும் சாஸ்திராப்பியாசம் பூர்த்தியான பிறகு யோகாப்பியாசத்திலும் மந்திரோபாஸனையிலும் பிரயத்தினம் செய்வது சுலபமென்றும் அடிக்கடி தம் சிஷ்யருக்கு சொல்லிக்கொண்டே இருந்தார்கள்.

யார் எவ்வளவு சொன்னாலும், தான்யோசித்தாலும் பூர்வவாசனையே பிரபலமானது. அப்படிப்பட்டவாசனைக்குத் தகுதியாய் மனுஷியன் நடந்துகொண்டிருப்பதைவிட்டு வேறுவிதமாகப்போக எப்படி சாத்தியமாகும். சின்னஸ்வாமிகள் அவர்களுக்கு ஸத்வாசனைபலத்தினுல் இவருக்கு வித்யாப்பியாசத்திலும் மற்ற லோகவியவஹாரத்திலும் உதாசீனபுத்தி ஏற்பட்டது. ஏகாங்கியாய் அரண்யங்களில் சஞ்சாரம் செய்துயோகாப்பியாசம் செய்து சித்தத்தைநிரோதம் செய்யவேண்டுமென்றும் பூர்ண அப்பியாசத்தினுல் மோக்ஷத்தை சம்பாதிக்கவேண்டுமென்றும் மனோவிருத்தி உண்டாகி அது பலமாய்க்கொண்டுவந்தது. இதனுல் நாளுக்கு நாள் சந்தோஷம் குன்றி

வந்தது. உத்ஸாஹம் ஓடிப்போயிற்று. ஆகாரவியவ காரங்களிலும் கூட பிரயத்தினம் குறைந்தது. எந்த சந்தர்ப்பத்திலும் சிந்தையுள்ளவராகியே இருந்துவருவதாகக்காணப்பட்டார்.

இந்த சந்தர்ப்பத்தில் சகபாடிகள் அநேகர் ஸ்ரீகள் அவர்களை நிர்ப்பந்தித்து சிந்தைக்கு காரணம் தெரிந்து கொள்ள யத்தனித்தார்கள். அவர்களால் தெரிந்துக்கொள்ள சாத்தியமாகவில்லை. பிறகு லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளவர்களுக்கு மற்ற சிஷியர்கள் மூலமாக ஸ்ரீ க ள் அவர்களின் ஸ்திதி தெரிந்தது. அவர் வெகு உபாயத்தாலும் சமத்காரத்தாலும் ஸ்ரீகள் அவர்கள் மனதிலுள்ளதை தெரிந்துகொள்ளப் பிரயத்தினப்பட்டார். அந்த சமயத்தில் வசிஷ்டமகாரிஷிகளால் அத்யந்த பாலியத்தில் உபதேசம் செய்யப்பட்டு அதினால் உண்டாயிருந்தபரிபாகத்தினால் ஸ்ரீ ராமச்சந்திரன் வசிஷ்டமகாரிஷி தன் சிந்தைக்கு காரணம் கேட்கும் சமயத்தில் சொல்லிய பதிலை ஞாபகத்தில்வைத்துக்கொண்டு இருந்த ஸ்ரீ சின்னஸ்வாமிகள் அவர்கள் தம் சிந்தைக்குக்காரண மென்னவென்று கேட்ட தம் பூர்வாசிரம சம்பந்தத்தில் சகோதரரும் தமக்கு வித்யா குருக்களாயும் ஆகிய லக்ஷ்மீநரசிம்மசாஸ்திரிகளுக்கு வேறே எந்தவிதமான சங்கதியும் சொல்லாமலே

प्राक्तनं वासनाजालं नियोजयति मां यथा ।
मुने तथैव तिष्ठामि कृपणः किं करोम्यहम् ॥

என்ற சுலோகத்தைச்சொல்லுவதிலிருந்து பதில் அளித்தார்.

பாலயதீந்திருடைய மனதின் பரிபாகத்தைத் தெரிந்து லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளுக்கு ஆச்சரியமும் கொஞ்சம் பயமும் உண்டாயிற்று. அதன்மேல் சாஸ்திரிகள் ஸ்ரீகள் அவர்களின் மனோபாவத்தை மாற்றுவதற்காக அநேக வைதிக லௌகிக இதிஹாஸ புராணங்களையும் அனுபவங்களையும் சொல்லி ஸ்ரீகள் அவர்கள் இருக்கும் ஸ்திதியால் தமக்கு லோகத்தில் அபவாதம் உண்டாகக்கூடுமாகையால் அதற்கு இடமில்லாமல் இந்த பாலியத்தில் உண்டாயிருக்கும் மனோவிருத்தியை அடக்கிக்கொள்ள வேண்டுமென்று தெரிவித்துக்கொண்டார்.

லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளிடத்திலும் அவர் வார்த்தையிலும் சின்ன ஸ்ரீகள் அவர்களுக்கு எவ்வளவு மரியாதை இருந்தாலும் அந்த சமயத்தில் அது பிரயோஜனத்திற்கு வரவில்லை. இந்த சங்கதியை சாஸ்திரிகள் பெரிய ஸ்ரீகள் அவர்களுக்கு தெரிவித்து அவர்களாலேயே சின்னஸ்வாமிகளுக்கு ஹிதபோதனைசெய்யும்படியாய் செய்யவேண்டுமே தவிர வேறு விதம் சாத்தியமில்லை என்று நிச்சயம்செய்துகொண்டு பெரியஸ்வாமிகள் அவர்களிடத்தில் எல்லாவிஷயத்தையும் விஸ்தாரமாய் தெரிவித்தார்.

தம் சிஷியரின் தற்கால ஸ்திதி ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிள் அவர்களுக்கு சந்தோஷத்தைக் கொடுக்கக்

கூடியதாலும் அவரை ஸம்ஸ்தானத்திற்கு கொண்டு வந்த தம்முடைய உத்தேசம் நிறைவேறுவதற்கு இடமில்லாமல் போய்விடுமென்ற பயம் மனதில் உண்டானதினால் பெரிய ஸ்வாமிகள் அவர்களுக்கு லக்ஷ்மீநரசிம்மசாஸ்திரிகள் அவர்கள் மூலமாக தெரியவந்த சமாசாரத்தைக்கேட்டு சந்தோஷமேற்படவில்லை. எவ்விதத்திலும் சில வருஷகாலம்வரையிலாவது சின்ன ஸ்ரீகள் அவர்கள் தற்காலம் உண்டாயிருக்கிற மனோவிருத்தியை நிரோதம்செய்துகொண்டிருப்பது ஆவசியகமென் ஸ்ரீகள் அவர்கள் நிஷ்கர்ஷை செய்துகொண்டார்கள். அந்தரங்கமாய் தம் சிஷியரை வரவழைத்துக்கொண்டு அவர் அபிப்பிராயத்தை அறியவேண்டியதற்காக பிரயத்தினப்பட்டார்கள். பெரிய ஸ்வாமிகள் அவர்களுக்கு சிரவணேந்திரியம் குறைவாயிருந்ததனால், வார்த்தை சொல்லி எல்லா சங்கதிகளும் அவருக்கு தெரிவிப்பது கஷ்டமென்று சின்ன ஸ்வாமிகள் அவர்களுக்கு தோன்றி தம் அபிப்பிராயத்தை எழுதி எழுதி தம் குருக்களுக்குக் காண்பிப்பதும், அவர்கள் சொன்ன சங்கதியை தெரிந்துகொண்டு அதற்குத்தகுந்த சமாதானம் எழுதி காண்பிப்பதுமாக இந்த பிரகாரம் தம் அபிப்பிராயத்தை வெளிப்படுத்தி வனத்திற்குப்போக வேண்டுமென்ற தம் எண்ணத்தை குருக்களுக்குத் தெரிவித்துக் கொண்டார்கள். சின்ன ஸ்வாமிகள் அவர்கள் தம் இஷ்டானுசாரமாக நடந்துகொள்ளுவதற்கு சொல்லி

வந்த யுக்திகளையும் காரணங்களையும், கண்டித்து விடக் கூடிய யுக்திகளையாவது காரணங்களையாவது சொல்லி அவரை சமாதானப்படுத்தக்கூடியது சம்பாவிதமாயிருக்கவில்லை. அப்படியானாலும் சின்னஸ்வாமிகள் அவர்களின் தத்கால நிலைமையை மாற்றவேண்டியது ஆவசியகமாயிருந்ததனால், அவருக்கு அநேக விதமாக பயத்தை உண்டு பண்ணி "தம்முடைய அனுமதி இல்லாமல் செய்யப்பட்ட பிரயத்தினம் சபலமாக மாட்டாது" என்று நிக்கிரஹ ரூபமாயும், "ஸ்ரீசாரதாம்பாள் அனுக்கிரஹத்தினால் ஸதாசிவ பிர்ம்மேந்திரரைப்போலவே, நீ ஆவதில் சந்தேகமில்லை, ஆனால் நம்ம எதிரில் ஆவதில்லை" என்று அனுக்கிரஹ ரூபமாயும் சின்ன ஸ்ரீஸ்வாமிகள் அவர்களுக்கு சொல்லி அவரின் மனோ பாவத்தை கிரமமாக மாற்றிக்கொண்டு வந்ததுமல்லாமல், ஸ்ரீங்கேரி ஏகாந்த வாசத்திற்கும், ஞானாப்யாசத்திற்கும், தபஸ்ஸிற்கும் மிகவும் அனுகூலமான ஸ்தலமாயிருக்கிறது. விஸ்தீரணமாயும் மனோகரமாயும் உள்ள அரண்யம் சமீபத்திலேயே இருக்கிறது. அங்கேபோய் சேர்ந்ததும் உம் இஷ்டம்போல் நடத்திக்கொள்ளலாமென்றும், சின்ன ஸ்ரீஸ்வாமிகளுக்கு சமாதான வசனங்கள் சொல்லி அவர் மனதில் உண்டான சிந்தையை போக்கடித்தார்கள். இந்த விஷயம், கொஞ்சமட்டும் ஸ்ரீ ஸச்சிதாநந்த சிவாபிநவ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்களால் சொல்லப்பட்ட குருஸ்துதியினால் வெளியாகிறது.

சின்ன ஸ்வாமிகள் அவர்களுக்கு "प्रस्थानत्रयभाष्य शान्ति" கிரமமாக செய்வித்து, ஸ்ரீங்கேரிக்கு வந்த மேல் ஸூத்திர பாஷியத்தை அர்த்தத்துடன் ஆதி முதல் கடைசி வரையிலும் பெரியசுவாமிகள் அவர்கள் ஒருதடவை பாடம் சொல்லி சாந்தியும் செய்வித்தார்கள்.





## 4-வது அத்தியாயம்.

ஸ்ரீ நரசிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்களுக்கு 82 வயதாகும் தருணம் வந்தது. முதிர்ந்த வயதானதினால் சரீரம் ரொம்பதளர்ந்துபோய்விட்டது. இவர் காலத்தில் ஒருதினமாவது விடாமல் நடத்திக்கொண்டுவந்த சந்திரமௌளீசுவரர் பூஜையை தம் சிஷ்யரே வஹித்துக் கொள்ள வேண்டி வந்தது. அப்படி யிருந்தும் கோகர்ண க்ஷேத்திர யாத்திரை செய்து கொண்டுவர வேண்டுமென்று ஒரு சங்கல்ப்பம் இவர்களுக்கு இருந்து கொண்டேயிருந்தது. ஆனால் ஸ்ரீகள் அவர்கள் வயோதர்மத்தையும் அவர் சரீரஸ்திதியையும் யோசித்தால் அவர் சங்கல்பத்தை நிறைவேற்றுவதற்கு எவருக்கும் தைரியமில்லாமலிருந்ததினால் கோகர்ண க்ஷேத்திரயாத்திரைக்கு தகுந்த பிரயத்தினம் செய்யப்படவில்லை.

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ।

என்று ஸ்ரீ பகவான் சொன்னபடி ஸ்ரீகள் அவர்கள் எப்போதும், கோகர்ணக்ஷேத்திரத்தையும், மகாபலேசுவரையும் குறித்து சிந்தித்துக் கொண்டிருந்ததினால், அந்த பகவானே இவர் சங்கல்பத்தை நிறைவேற்றினதாக தெரியும்படி ஒரு ஆச்சரியமான சங்கதி நடந்தது. இந்த சத்தியசங்கல்பரானமகாபுருஷன் தேகவியோகமாவதற்கு முதல் நாள் படுத்திருக்கையில் தாமாகவே சமீபத்திலுள்ளவருக்கெல்லாம் கேட்கும்படி வார்த்தை சொல்லத்தொடங்கினார்கள். இந்த வார்த்தை ஸ்வப்னபாஷணம் போலுள்ள தென்றும் சொல்லலாம். அல்லது, ஸ்வபாவமான புத்தி சக்திக்கு அசக்தி உண்டாயிருந்து அந்த சமயத்தில் நடந்த சம்பாஷணை என்றாவது பக்கத்திலுள்ளவர்கள் தெரிந்து கொள்ளும்படி இருந்தது. சம்பாஷணையின் விபரம், "கோகர்ணத்திலிருந்து தம்மை அழைத்துக் கொண்டுபோவதற்கு பிராமணர்கள் வந்திருக்கிறார்கள். புறப்படுவதற்கு மேனா சித்தமாகட்டும்" என்று சொல்லி, 2. 3. நிமிஷமானபிறகு "மேனா சித்தமாயிற்றா? அதில் நம்மை உட்காரவையுங்கள்" என்பதாய் சொன்னதாக கேட்டது. இதுஆன, சுமார் 1. மணி நேரத்திற்குமேல் "இதென்ன ஆச்சரியம்! இவ்வளவு வேகமாய் நம்மை கோகர்ணத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் திரும்பி அழைத்துவந்துவிட்டார்கள்? நம்மபல்லக்கு போகிஜனங்களுக்கு வெகுசாமர்த்தியம். அவர்களுக்கு இனாம் கொடுங்கள்." என்பதாக சொன்னவார்த்தை

கேட்டது. இதுதவிர வேறெந்தவார்த்தையும் ஸ்ரீ கள் அவர்கள் சொல்லவில்லை. ஸ்ரீகள் அவர்களுக்கு எப்போதும் கோகர்ணத்தின் ஞாபகமே இருந்ததி ஞல் ஸ்வப்னமாயிருக்கலாமென்று சிலர் அபிப்பி ராயப்பட்டார்கள். சிலர் அக்ஞானத்திஞல் சொன்ன வார்த்தைகளாக இருக்கலாமென்று தெரிந்துகொண் டார்கள்—மருநாளாகிய—பிரமாதிஸ, ஜ்யேஷ்டசுத்த துவிதீயை சுக்கிர வாரம் காலை 9 மணிக்கு ஸ்ரீநர சிம்மபாரதீ ஸ்வாமிகள் அவர்கள் பாஞ்சபௌதிக தே கத்தைவிட்டு விதேஹகைவல்யத்தை அடைந்தார் கள். அந்த காலத்தில் இவர் சிஷ்யரான ஸ்ரீ ஸச்சி தாநந்தசிவாபிநவ நரசிம்ம பாரதீஸ்வாமிகள் அவர் களுக்கு இருபத்திரண்டு வயஸாயிற்று. இவரை கேவலம் பால்ய வயஸில் தம் சன்னிதானத்தில் வரவழைத்துக் கொண்டு சுமார் பதிமூன்று வருஷ காலம் ஒரு தினமாவது இடைவிடாமல் தம்முடன் கூட வைத்துக்கொண்டு எல்லாவிதத்திலும் தம்மை ஆதரித்து விருத்திக்கு கொண்டுவந்த குருக்கள் முக்த ரானவுடன் ஸ்ரீஸ்வாமிகளுக்கு உண்டான துக்கம் அபாரமாய் இருந்தது. இந்த துக்கத்தை எந்த விதத் திலும் தான் சமாதானம் செய்து கொள்ளுவதற்கா வது இதர ஜனங்கள் சமாதானப்படுத்துவதற்காவது ஆகும்படியிருக்கவில்லை. பிறகு சம்ஸ்தானத்திய முந் திய வழக்கத்தை அனுசரித்து நரசிம்ம பாரதீஸ்வாமி களின் சரீரத்திற்கு நடத்த வேண்டிய ஸம்ஸ்காரங்க

ளெல்லாம் முறைப்படி நடத்தப்பட்டது. இது எல்லாம் பூர்த்தி ஆவதற்கு ராத்திரி 11-12 மணி சமயமாயிற்று. அந்த தினம் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் ஆகாரம் செய்யவே இல்லை. நித்திரையும் வர இல்லை. தம் குருக்களையே நினைத்து நினைத்து அவர் குணங்களை சொல்லிக்கொண்டு அந்த மகானுபாவர் தம் விஷயத்தில் செய்திருந்த பிரீதியையும் அனுக்கிரஹத்தையும் குறித்து நினைத்துக்கொண்டு பிரலாபம் செய்து கொண்டிருக்கும்காலத்தில் ஆகாரமுமில்லாமல் நித்திரையுமில்லாமல் களைத்துப்போயிருந்த ஸ்வாமிகளவர்களுக்கு கொஞ்சம் மயக்கம் வந்தது போல இருந்தது. அந்த காலத்தில் தம் குருக்களைப்பார்த்து நமஸ்காரம் செய்தது போலவும் "இது என்ன இது? பெண்டுகளைப்போல அன்னம், ஜலம், இவைகளை விட்டு அழுவது எதற்காக? நாம் எங்கே போய்விட்டோம்? இங்கேயே இருக்கிறோமே!" என்று கர்ஜித்துக்கொண்டு சொன்னதாகவும் கேட்கப்பட்டது. இந்த சங்கதி நடந்தவுடன் திகிலடைந்து பார்க்கும்போது ஒன்றும் காணவில்லை. அப்போது பெரிய ஸ்வாமிகள் இருக்கும் காலத்தில் அவர்கள் சொல்லிக்கொண்டிருந்த வார்த்தைகள் ஸ்ரீகள் அவர்கள் ஞாபகத்தில் வந்தது. அது எப்படியெனில் "நம்ம வியோகம் உமக்கு ஸஹிக்கமுடியாதது. இப்போது நாம் இந்த தேகத்தில் மாத்திரம் (பரிச்சின்ன) அடங்கியிருக்கிறோம். இந்த தேகத்தை விட்ட

பிறகு எல்லாவிடங்களிலும் (வ்யாபக) பாவினவாயிருப்போம். இவ்வளவு மாத்திரம் வித்தியாசமே தவிற வேறில்லை. ஆனால் கண்ணுக்குக்காணப்படுகிறதில்லை.'' என்பதாகசொல்லிக்கொண்டிருந்ததற்கு சரியாய் குருக்கள் வியோகம் ஆனபிறகு, வந்து சொன்ன வார்த்தையைக்கேட்டு மிகுந்த ஆச்சரியத்தை அடைந்து தைரியத்தை அவலம்பித்துக்கொண்டு துக்கத்தைத் தாமகவே சமாதானம் செய்துகொண்டு வந்தார்கள்.

பெரிய குருக்கள் முக்தரான சங்கதி எல்லா தேசங்களுக்கும் ஸ்ரீமுகம் அனுப்புவதின் மூலமாய் சிஷ்யஜனங்களுக்கு தெரிவிக்கப்பட்டது. அது போலவே கோகர்ணத்தில் அந்தப்பிராந்தியத்து மடாதிகாரியாயும் அங்கிருக்கும் மடத்தில் தேவபூஜை செய்கிறவனாயுமிருந்த கோபால சாஸ்திரி என்பவருக்கும் ஒரு ஸ்ரீமுகம் அனுப்பட்டது. தனக்கு கிடைத்த ஸ்ரீமுகமூலமாய் ஸ்ரீநரசிம்ம பாரதீஸ்வாமிகளவர்கள் சித்தி அடைந்த சமாசாரத்தை தெரிந்து கொண்ட அந்த கோபால சாஸ்திரிக்கு வெகு ஆச்சரியமுண்டாயிற்று. அதற்கு காரணமென்னவென்றால் என்றை தினம் ஸ்ரீநரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்கள் முக்தரானரோ அதற்கு முதல் நாள் அவர் நித்திரை செய்யும் போது ஸ்வப்பனத்தில் "நான் கோகர்ணம் மகாபலேசுவரர் தேவஸ்தானத்திலிருந்தது போலவும் அவ்விடத்திற்கு ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் வாகனருடாக வந்தது போலவும், தான் சம்பிரமத்துடன் எழுந்து

அவர்களுக்கு நமஸ்காரம் செய்து நிற்க தன்யோக க்ஷேமங்களை விசாரித்து அதிவேகமாக மகாபலேசுவரர் சமீபத்திற்கு ஸ்வாமிகளவாள்போய் தேவருக்கு பூஜை செய்து கர்பூர நீராஜனம் செய்ததாயும்,” கண்டு வந்தது. அதன் மறுதினமே குருக்கள் நிர்யாண மடைந்தாரென்ற விஷயம் அவருக்கு ஆச்சரியத்தை உண்டு பண்ணிற்று.

அந்த கோபாலசாஸ்திரி மேல்கண்ட சங்கதியை தானே ஸ்ரீங்கேரிக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்களிடத்தில் தெரிவிக்கவே ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்களுக்கும் இதர ஜனங்களுக்கும் மிகவும் ஆச்சரியகரமாயிருந்தது. திருடமான சங்கல்பம் செய்திருந்த பெரிய குருக்களுடைய சங்கல்பத்திற்கு அனுகுணமாக ஈசுவரனே அவரை கோகர்ணத்திற்கு வரவழைத்துக்கொண்டு தரிசனம் கொடுத்திருக்கக்கூடுமென்றும், எப்பொழுதும் அவர் பாவனை கோகர்ணக்ஷேத்திரயாத்திரைவிஷயமாயிருந்தது நிர்யாண காலத்திலும் அந்த பாவனையே இருந்ததினால்

यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।

என்றபடி அந்த மகாத்மாவுக்கு பலித்ததென்றும் அவர்தான் சொல்லிக்கொண்டிருந்தபடி பரிச்சின்னமான சரீரத்தை விட்டு வியாபகதையை அடைந்ததே நிஜமென்றும் நாநாவிதமாக அவர் பிரபாவத்தை ஸ்மரணை செய்துகொண்டு எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள்.

குருஸ்வாமிகள் அவர்கள் சித்தியடைந்த பிறகு ஸ்ரீங்கேரிபுர வாஸிகளின் கோறிக்கைப்படி சின்ன ஸ்ரீகள் அவர்களுக்கு வியாக்யான ஸிம்மாசனத்தில் மறுபடியும் பட்டாபிஷேக மகோத்ஸவம் நடத்தபட்டது.

தங்கள் குருக்கள் சித்தி அடைந்ததினம் முதல் கொண்டு 6 வருஷகாலம்வரை ஒருதினம்கூட விடாமல் வெகு பக்தி சிரத்தையுடன் பிரதிதினமும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் குருக்கள் சமாதியில் பூஜைசெய்தார்கள். இந்த குருபூஜைக்குமேற் சொன்ன காலம்வரையில் எந்த சந்தர்ப்பத்திலும் ஒரு விதமான விக்னமும் (இடையூறு) உண்டாகவில்லை. சம்ஸ்தான சம்பந்தமான எந்த காரியம் செய்யவேண்டியிருந்தாலும் சரி பாரமார்த்திகமான விஷயங்களை நடத்தவேண்டியிருந்தாலும் சரி முன்னதாகவே குருசமாதியில்தான் பூஜைக்காகப்போன காலத்தில் குருக்கள் அவர்கள் சன்னிதானத்தில் தெரிவித்துக்கொண்டு அவர்கள் அனுமதியில்லாமல் தாம் எந்தகாரியமும் செய்கிறதில்லையென்று நிஷ்கர்ஷைசெய்துகொண்டு அதுபோலவே நடத்திக்கொண்டு வந்தார்கள். இவர்பக்திக்குத்தகுந்தபடி குருக்களின் பிரசாதம் அப்படியே இந்த மகானுபாவருக்கு இவர் ஜீவிதகாலமெல்லாம் பூர்த்தியாகிக் கொண்டே வந்தது.

பிரமாதி வருஷம் முதல் பார்த்திப வருஷம்வரை ஸ்ரீகள் அவர்கள் ஸ்ரீங்கேரியில் இருந்துகொண்டு தம் ஆசிரமோசிதங்களான கர்மானுஷ்டானங்களாலும்

ஸகலதேவதா ஸ்வரூபரான தம் குருக்கள் ஸ்ரீ சாரதா சந்திரமௌளீசுவரர் ஆராதனத்தினாலும் சிஷியர்களுக்கு தர்க்க வேதாந்தசாஸ்திரங்களை பாடம் சொல்லியும் ஸ்வத: கிரந்தங்களை பரிசீலனை செய்வதாலும் பாண்டித்யத்தை அதிகரித்துக்கொள்வதாலும் வெகுஆனந்தமாக் காலம் கழித்துக்கொண்டிருந்தார்கள்.

இந்த குருக்களுக்கு பாலியத்திலிருந்தே யோகமார்க்கத்தில் ஆஸக்தி வெகு அதிகமாக இருந்ததென்று முந்தியே சொல்லப்பட்டிருக்கிறது. தம் குருக்கள் சித்தியடைந்த பிறகு ஸ்ரீங்கேரியில் வாசம் செய்துகொண்டிருந்த காலத்தில் சில வருஷம் குருக்களால் உபதேசிக்கப்பட்ட மார்க்கத்தை அனுசரித்து ஹடயோகாப்பியாசம் செய்தார்கள். யோகத்தில் ஹடயோகம் என்றும் ராஜயோகமென்றும் லயயோகமென்னும் மந்திரயோகமென்றும் நாலு வகையுண்டு. 3, 4 வது வகையான லயயோகமும் மந்திர யோகமும் 2 வதான ராஜயோகத்திலேயே அடங்கினதென்று சொல்லலாம். இப்படிச்சொல்வதால் 2 பிரிவுகளே முக்கியமானவைகளாக ஏர்ப்பட்டதாகிறது. யோகாப்பியாசத்தினால் சித்தநிரோதம் உண்டாகி படிப்படியாய் ஞானப்பியாசத்திற்கு யோகம் காரணமென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஹடயோகம் ராஜயோகம் 2 ம் சித்த நிரோதத்திற்கு சமானமான சாதகங்களாயிருந்தாலும் ஹடயோகாப்பியாசத்தினால் சித்தம் எவ்வளவு சீக்கிரம் நிரோதத்தை அடையுமோ அவ்வ

ளவு சீக்கிரத்தில் ராஜயோகாப்பியாசத்தினுல் சித்தநிரோதம் ஆகிறதில்லை. இந்த விஷயத்தை யுக்தியினுலும் தெரிந்துகொள்ளலாம். ஹடயோகத்தில் பிராணநிரோதம் முக்கியமானது. பிராணனுக்கும் சித்தத்திற்கும் ஒன்றுக்கொன்று அதிக சம்பந்தமிருப்பதினுல் பலாத்காரமாக பிராணநிரோதம் செய்தவுடன் அதிகமான சம்பந்தமுள்ள சித்தத்திற்கு நிரோதம் ஏற்படுகிறது. ராஜயோகத்தில் லக்ஷியானு சந்தானமே முக்கியமான அம்சம். லக்ஷியானு சந்தானம் செய்யவேண்டுமானுல் சித்தம் நிச்சலமாயிருக்கவேண்டும். சித்தநிரோதம் செய்வதில் கொஞ்சமாவது அப்பியாசம் செய்யாமல் ராஜயோகாப்யாசம் செய்வது சுலபமல்ல. ஆகையால் ஹடயோகாப்பியாசமே சித்த நிரோதத்திற்கு சுலபமான காரணமென்று யோகசாஸ்திரத்தின் சித்தாந்தமாயிருக்கிறது.

பிராணுயாமம்பூரக கும்பக ரேசக மென்று மூன்றுவிதமாக பிரிக்கப்பட்டிருக்கிறது. பூரகம் என்றுல் ஹிருதயாகாசத்திலுள்ள வாயுவைபூர்த்தியாக வெளிப்படுத்தின பிறகு மருபடி நாஸிகையின் வழியாய் வாயுவை உள்ளே ஏற்றுவதற்கு பூரகம் என்றுபெயர். அப்படி உள்ளே இழுத்துக்கொண்ட வாயுவை சரீரத்தில் எந்த மார்க்கத்திலும் வெளியே போகாமல் நிச்சலமாய் நிருத்திக்கொள்ளுவது கும்பகம். அப்படி நிருத்தப்பட்ட வாயுவை மருபடி பாக்கி யில்லாமல் வெளியில் விடுவதற்கு ரேசகம் என்று பெயர். இந்த

ரீதியாய் பிராணாயாயம் செய்து வருவதால் மிகவும் சஞ்சல சுவபாவத்தினால் ஓடிக்கொண்டிருக்கிற மனதிற்கு வெகு நிர்ப்பந்த முண்டாகி அது சீக்கிரம் சுவாதீனத்திற்கு வருகிறது. பிராணாயாம சித்திக்கு ஆரம்பத்தில் (ஸ்வேதம) வேர்வை மத்தியத்தில் [கம்பநம்) நடுக்கம் கடைசியில் (சாலநம்) அசைவு உண்டாகுமென்று லக்ஷணம் சொல்லியிருக்கிறார்கள். இந்த அப்யாசத்திற்கு ஆகாரநியமம் ஆலாநியமம் ஸ்தலநியமம் இவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன. சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் நியமங்களை அனுசரித்து குரு உபதேசித்தபடி பிராணாயாம அப்பியாசம் பூர்த்தியாய் செய்தவர்கள் வெகு சுலபமாய் சித்தத்தை தன் ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு சர்வோத்தமமான ஞானப்பியாசத்தை வெகு சுலபமாய் செய்து நித்திய சுகத்தை அனுபவிப்பார்கள்.

இந்த குருக்களுக்கு பிராணாயாமசித்தி, வெகுவாய் ஆயிருந்ததென்று சொல்லலாம்—இவர் பிராணாயாமத்திற்கு உட்கார்ந்துகொண்ட காலத்தில் விசேஷமாக (ஸ்வேத) வேர்வைக்கு ஆரம்பமாகி சரீரமெல்லாம் கால் முதல் சிரஸ்வரை நடுக்கத்தினால் அசைந்து கொண்டிருந்ததை இந்த லேககன் கண்ணால் பார்த்துத் தெரிந்துகொண்ட விஷயம். [சலனம்] இடத்தை விடுதல் உண்டாயிருந்ததை மாத்திரம் பார்த்திருக்கவில்லையாகையால் அப்பியாசம் பூர்த்தியாகவில்லை என்று சொல்லலாம்.

ஹடயோகத்திலே, கேசரீ சித்தி, என்பதாக கஷ்டமான ஒரு வகை இருக்கிறது. இந்த சித்தி யடைந்தவருக்கு ஜரா மரணங்கள் இல்லை என்பது யோக சாஸ்த்திரத்திய சித்தாந்தம். இதன் கிரமம் எப்படியெனில் சேதநம், தோஹநம், சாலநம் ஆகிய மூன்று சம்ஸ்காரங்கள் செய்து, நாக்கை நீண்டதாகும்படி செய்து உள்ளே நாஸிகாரந்தரத்தின் மூலமாய் ப்ருமத்யதேசத்தில் நாக்கை நிறுத்தக்கூடியது. அந்தப்படி ப்ருமத்யத்தில் ஜிஹ்வயை 3 மணி நேரம் நிறுத்தும்படி செய்வதில் — ஸகஸ்ரார கமலத்திலிருந்து அமிருத பிந்து பெருகி அமரத்வப்ராப்தி ஆகுவதாய் யோக சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதற்கு லம்பிகா யோகமென்றும் பிரசித்தியுண்டு. இந்த யோகத்தை, இப்பால் 600 வருஷம் முந்தி குருக்களாயும், பிரசித்தரான வித்யாரண்ய ஸ்வாமிகளின் குருக்களாயும் வித்யாசங்கர, வித்யாதீர்த்த, என்று பிரக்கியாதியுள்ள ஸ்வாமிகள் அவர்கள் அப்பியாசம் செய்து சித்தி அடைந்திருந்தார்கள், என்று அவர் சரித்திரத்தால் தெரியவருகிறது.

இப்படிப்பட்ட கஷ்டகரமான யோகத்தை இந்த குருக்கள் அப்பியாசம் செய்யவேண்டுமென்று யோசித்து வரும் சமயத்தில், உத்தர தேசத்திலிருந்து கங்காதாஸ், என்ற ஒரு விரக்தன் (பைராகி) ஸ்ரீங்கேரிக்கு வந்தான். அவன் ஹடயோகாப்பியாசம் செய்து

அந்த மார்க்கத்தை நன்றாய் தெரிந்துகொண்டவனென்று தெரியவந்தது. அவன் பிராம்மணரல்லாதவனானாலும் அவனை தம் சமீபத்தில் அழைத்து அவனுடைய யோக்யதையை பரீக்ஷை செய்து அவனிடமிருந்த விசேஷங்களைக் குறித்து வெகுவாக சந்தோஷித்தார்கள். சில காலம் வரை அவனை ஸ்ரீங்கேரியில் இருக்கும்படி ஏர்ப்பாடு செய்து கேசரீ, விஷயமாக, அந்த கங்காதாஸனென்பவனுடன் கூட விசாரம் செய்து, ஆறுமாதகாலம், உப்பு காரம் இல்லாமல் (க்ஷாரலவணவர்ஜந) ஆகார நியமத்துடன், சேதந தோஹந சாலந முதலிய ஸம்ஸ்காரங்களினால், நாக்கை வளர்த்து உச்சுவாஸமாத்திரத்தினால் நாக்கை நாஸிகாரந்திரத்தின் வழியாய், புருவமத்தியில் பிரவேசிக்கும்படி செய்ய அப்பியாசம் செய்தார்கள். இந்த அப்பியாசத்தையே பிரபலப்படுத்தி அதன் சித்தியை அடைவதற்கு வேண்டிய அவகாசம் ஸ்வாமிகளவர்களுக்கு கிடைக்காததினால், ப்ருமத்தியத்தில் பிரவேசம் செய்த நாக்கு அதிக காலம் அங்கு நின்று ஆகவேண்டிய பலம் ஏற்படவில்லை.

இதுபோலவே வஜ்ரோளீ யோகம் என்பது, ஒன்று கஷ்டமானது. இந்த சித்தியையடைந்தவர்களுக்கு (ரேதஸ்ஸ்கலனம்) வீரியம் வெளியாவது இல்லாமல் ஊர்த்வ ரேதஸ் ஆகுவார் என்று யோகசாஸ்திரசித்தாந்தம். அப்பியாசகாலத்தில் மூத்திர த்வாரத்தின் வழியாய் பாலைமேலுக்கு கொண்டுவந்து திரும்பவும்

வெளியில் விட்டு விடும்படி அப்பியாசம் செய்யவேண்டும். அப்படி அப்பியாசம்செய்து வந்தால் பிற்பாடு தன் ரேதஸ்ஸை வெளியேவிடாமல் நிருத்தக்கூடிய சாமர்த்தியம் உண்டாகிறது. இந்த அப்பியாசத்திற்காக ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் சிலகாலம் வரையில் பிரயத்தினம் செய்துகொண்டிருந்தது, ஸ்வயமாகவே தெரிந்துகொண்ட விஷயமாயிருக்கிறது.

இதுபோல ராஜயோக விஷயமாகவும் அவசியமான விசாரம் செய்து அந்த மார்க்கத்திலும் கொஞ்சகாலம் வரையில் பிரயத்தினம் செலுத்திவந்தார்கள். இந்த குருஸ்வாமிகள், யோக விஷயத்தில் பரிசயமுள்ளவர்கள் எந்த ஜாதியாயிருந்தாலும் யாராயிருந்தாலும், தம் திருஷ்டியில் தென்பட்டால் அவரவர் ஞானத்தை அனுசரித்து ஏகாந்தத்தில் அப்படிப்பட்ட ஜனங்களுடன் சில காலமாகிலும் சம்பாஷணம் செய்யாமலிருப்பதில்லை. இவர்கள் குருஸ்வாமிகளின் சித்தி காலத்திற்கு பின்பு சிரிங்கேரியில் வாசம் செய்துவந்த 6 வருஷ காலத்தில் யோகாப்பியாசம் செய்வதிலேயே கொஞ்சம் அதிகமான சமயத்தை உபயோகித்துக் கொண்டிருந்ததாக தெரியவந்திருக்கிறது.

பார்த்திவ வருஷத்தில் மைசூர் மகாராஜா, சாமராஜேந்திர உடையார் அவர்கள் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் தரிசனத்திற்காக ஸ்ரீங்கேரிக்கு வருவதாக ஸ்வாமிகள் அவர்கள் கேள்விப்பட்டார்கள். மைசூர் ராஜா சந்நிதியாரில், இந்த சாமராஜ பிரபுக்களவர்களே சிருங்

சேரிக்கு வருவதில் முதலானவராயிருந்தார். இவர்களை சிருங்கேரிக்கு வறவேற்றுக்கொள்வதற்கு தம் அதிகாரிகள் மூலமாக, வேண்டிய உபகரணங்களை சித்தப்படுத்திக்கொண்டு வெகு ஆதரவுடன் பிரபுக்களை சிருங்கேரிக்கு வறவேற்றுக்கொண்டார்கள்.

பார்த்திவஹு மார்கழிமீ சுக்ல பக்ஷம் பிரதமை 7—12—1885ல் சாமராஜ பிரபுக்கள் அவர்கள் தம் திவான் ஸர். கே. சேஷாத்திரி அய்யர், ப்ரிடிஷ் ரெஸிடெண்டு மிஸ்டர் கர்லெஸ்டு துரை முதலான பரிவாரத்துடன் விஜயம் செய்து இரண்டு நாள் அங்கே வாசம் செய்து ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் தரிசனம் செய்து கொண்டார்கள்.

கர்ணாடக தேசத்திற்கு அதிபதிகளான, மைசூர் ராஜ சந்ததியைச் சேர்ந்தவர்கள் ஸ்ரீங்கேரிக்கு வந்த காலத்தில் அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்யவேண்டுமென்று, முந்தின தம் குருக்களான நரசிம்ம பாரதீ ஸ்வாமிகள் அவர்களுக்கு இருந்த சங்கல்பம், ஸ்ரீகள் அவர்களுககு தெரிந்திருந்தது. அவர் சங்கல்ப்பப் படியே ஸ்ரீமான் சாமராஜ பிரபுக்கள் ஸ்ரீங்கேரிக்கு வந்த சமயம் நேர்ந்து அந்த சமயத்தில் தம் பரம்பரையிலிருந்த வித்யாரண்ய ஸ்வாமிகள் அவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட கர்ணாடக ரத்ன சிம்மாசன ஆதிபத்தியத்தை அனுபவித்துவருகிற இந்த பிரபுக்களுக்கு ரத்ன கிரீடாதிபத்தியத்தையும் அனுபவிக்கும்படி செய்யவேண்டியது தமக்கு உரிமை, (கர்த்தவ்யம்) என்று

யோசித்து ஸ்ரீ சாரதாம்பாள் சன்னிதானத்தில், ஸம்ஸ்தானத்திய பொக்கிஷத்தில் இருந்த ஒரு ரத்ன கிரீடத்தை தருவித்து அமிருதமயமான தம் கைகளால் பிரபுக்கள் சிரஸ்ஸில் தாரணம் செய்வித்து, முந்திய தம் குருக்கள் அவர்களுடைய சங்கல்பம் இப்போது பூர்த்தியானதாக ஆயிற்றென்றும், பிரபுக்கள் ஆஸ்தானத்திலிருக்கிற சிம்மாசனம் தம் பரம்பரையில் சேர்ந்த மகான் வித்யாரண்யஸ்வாமிகளவர்களால் (ஆநேகுந்தி) விஜயநகர சம்ஸ்தானத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருந்து, இப்பால் மைசூர் ஸம்ஸ்தானத்திய மகாராஜாக்களால் அலங்கரிக்கப்பட்டதாயிருக்கிறதென்றும், அப்படிப்பட்ட புராதனமான சிம்மாசனத்தில் பிரபுக்கள் ஆரோகணம் செய்யும் காலத்தில் ஸ்ரீ ராமமூர்த்திபோல கிரீடத்தை சிரஸ்ஸில் தாரணம் செய்துகொண்டு சிம்மாசனாருடராகவேண்டுவது ஆவசியகமென்றும், இந்த அபிப்பிராயம் தம் குருக்களுக்கு மனதில் வெகுகாலமாக இருந்தது; அவர்கள், சித்தசங்கல்பர்களாகையால் அவர்கள் ஆக்ஞைபிரகாரம் தம்மால் நிறைவேற்றப்பட்டதென்றும், சம்ஸ்தான பாரம்பரியமாய் சிம்மாசனாதிபத்யம் போலவே கிரீடாதிபத்தியத்தையும் அனுபவித்து வரவேண்டுமென்று பிரபுக்களுக்கு முந்திய சரித்திரங்களை விஸ்தாரமாகத்தெரிவித்து அனுக்கிரஹம் செய்தார்கள். இந்த கிரீடம் இப்பொழுதும்

மைசூர் அரண்மனையில் மிக பூஜநீயமென்ற பாவனை யுடன் பூஜிக்கப்பட்டு காப்பாற்றப்பட்டுவருகிறது.

ஸ்ரீ ஸ்வாமிகளவர்களுக்கு சரியான வயது வந்துவிட்டது. பாண்டித்யம் ஆச்சரியப்படும்படியிருந்தது. அநுபவமும், தைரியமும் அவரிடம் மூர்த்திமத்தாய் விளங்கியது. இந்த சமயத்தில் தம் குருக்கள் ஆக்ஞையை அநுசரித்து, சன்மார்க்க பிரசாரம் என்கிற தம்முடைய காரியத்தை நிறைவேற்றுவதற்காக தேச சஞ்சாரம் போகவேண்டுமென்ற விஷயத்தில் ஸ்ரீ சாரதாம்பாள் பிரேரணை உண்டாய்க்கொண்டு வந்தது. இந்த அபிப்பிராயத்தை பலப்படுத்துவதற்காக உத்தர தேச பிராந்தங்களில் வெகு பிரசித்தராயும், அநேக ஜனங்களின் ப்ரீதிக்கும் கௌரவத்திற்கும் பாத்திரராயுமிருந்த, "அண்ணுசாகேப் விஞ்சுருகர்" என்ற ஒரு ஜாகீர்தார் ஸ்ரீங்கேரிக்கு ஸ்வாமிகளின் தரிசனத்திற்காக வந்திருந்தார். இவர்தான் பிரசித்தமான ஸ்ரீங்கேரி வித்யாசங்கர தேவலாயத்திற்கு சுவர்ணமயமான பஞ்சகலசம் செய்வித்தவர். இவர் ஸ்வாமிகளை தரிசனம் செய்து உத்தரதேச யாத்திரைக்கு விஜயம் செய்யவேண்டுமென்றும் அவர்கள் யாத்திராகாலத்தில் தான் சம்ஸ்தானத்துடன் கூடவே இருந்து எல்லா காரியங்களையும் நடத்துவதாயும் அநேகமாயிரம் சிஷ்ய ஜனங்கள் அவர்கள் தர்சனத்திற்காக காத்துக் கொண்டிருக்கிறார்களென்றும் தெரிவித்துக் கொண்டார். இவர் செய்த பிரார்த்தனையும் ஸ்ரீஸ்வா

மிகளுக்கு உண்டாயிருந்த சங்கல்பத்தை பலப்படுத்திற்று.

தம் வழக்கப்படி குருக்கள் அவர்களிடத்திலும், சாரதாம்பாளிடத்திலும் அனுமதி கேட்டார்கள். இரண்டு பக்கங்களிலிருந்தும் ஆக்ஞைரூபமான ஸூசனம் வந்தது. ஆனால் 6 வருஷகாலமிருந்து இடைவிடாமல் நடத்திக்கொண்டுவந்த தம் குருக்கள் பூஜையைவிட்டுப் புறப்படுவதில் மனது சம்மதிக்காமல், வெகுவாய் பின் வாங்கிக்கொண்டிருந்தது. இந்த சங்கதி ஒருவருக்கும் தெரிந்திருக்கவில்லை. இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் வழக்கம்போல் குரு சமாதிக்கு பூஜைக்காக போன சமயத்தில் குரு சமாதியில் பிரதிஷ்டை செய்யப்பட்டிருந்த சிவலிங்கத்தின் ஆவுடையார் பீடத்தின்மேல் ஒரு சிறு பாணலிங்கம் வைக்கப்பட்டிருந்தது. அந்த லிங்கம் எங்கிருந்து வந்தது? யார் கொண்டுவந்து வைத்தார்? என்று விசாரணை செய்ததில் சங்கதி தெளிவாகவில்லை. அதுகண்டு, அவர்கள் மனதில் மிகுந்த திருப்தியுண்டாயிற்று. தாம் சஞ்சாரம் புறப்படுவதில் பின் வாங்கிக் கொண்டிருந்ததை அறிந்து தம் குருக்களே தமக்கு பிரதிநிதியாக அந்த பாணலிங்கத்தைக்கூட எடுத்துக் கொண்டுபோய் பிரதிதினமும் பூஜை செய்யவேண்டுமென்று ஆக்ஞாபித்ததாக நம்பிக்கை பிறந்தது. இந்த பாணலிங்கத்தை தாம் யாத்திரைக்கு சித்தமாய் புறப்

படுகிற வரையிலும் குருக்களின் சமாதியிலேயே வைத்துப் பூஜைசெய்து கொண்டிருந்தார்கள்.

தம் பிரயாணத்திற்காக குருக்களவர்களால் அனுக்கிரஹிக்கப்பட்ட அநேக சூசனைகளால் திருப்தியடைந்து, உத்தரதேச யாத்திரையை சங்கல்பித்து பிரயாணத்திற்குவேண்டிய உபகரணங்களையெல்லாம் சித்தப்படுத்தும்படி தம் அதிகாரிகளுக்கு உத்தரவு செய்தார்கள்.

ஸ்ரீமான் மகாராஜா மும்மடி கிருஷ்ணராஜ பிரபுக்கள் அவர்களால் ஆனந்த வருஷத்தில் ஸ்ரீ நரசிம்மபாரதீஸ்வாமிகள் அவர்களுக்கு ஒப்புவிக்கப்பட்டிருந்த தங்கப்பல்லக்கு மிகவும் சிதிலமாயிருந்தது. அந்தப் பல்லக்கை மைசூருக்கு அனுப்பி அவிடத்திய வேலைக்காரர்களால் புதியதாக செய்விக்கப்பட்டது. இது போல சம்ஸ்தானத்திய அந்தஸ்துக்குத் தக்கபடி எல்லா சாமான்களும் சித்தப்படுத்தப்பட்டன.

பார்த்திவ வருஷம் மாகமாஸம் சுக்கிலபக்ஷம் பஞ்சமி சுக்கிரவாரம் சிருங்கேரியிலிருந்து தம் பரிவாரத்துடன் பரம்பரையாய் வந்திருக்கும் சந்திரமௌளீசுவர ரத்னகர்ப்ப கணபதி முதலான தேவர்களையும் தம் குருக்களால் அனுக்கிரஹிக்கப்பட்ட பாணலிங்கத்தையும் தம்முடன் கூடவே எடுத்துக் கொண்டு சிருங்கேரிக்கு சமீபத்திலுள்ள சச்சிதானந்தபுரமென்ற அக்கிரஹாரத்திற்கு விஜயம்செய்து அங்கு வாசம் செய்தார்கள்.



# 5-வது அத்தியாயம்.

## ஸ்ரீ ஸச்சிதானந்த சிவாபிநவ நரஸிம்ம பாரதீஸ்வாமிகள் அவர்கள் 2-வது யாத்திரை.

மைசூர் தேசத்தைச் சேர்ந்த சிவமொகா ஜில்லாவில் சில காலம் சஞ்சாரம் செய்துகொண்டு தம் குருக்கள் அவர்கள் சங்கல்பம் செய்திருந்த கோகாண க்ஷேத்திர யாத்திரையை முற்றி பூர்த்திசெய்துகொள்ளவேண்டுமென்று ஆலோசித்து, பனவாசி, சிரசி வழியாய் வடகன்னடம் ஜில்லாவில் பிரவேசித்தார்கள். கோகர்ண க்ஷேத்திரத்திற்கு வியய வருஷம் மாசு பகுள பஞ்சமிதினம் காலை 8-மணிக்கு விஜயம் செய்து கிராம பிரதக்ஷிணமாக மகாபலேசுவரஸ்வாமி தர்சனம் செய்துகொண்டு ஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த மடத்தில் ஜாகை செய்துகொண்டார்கள்.

கோகர்ண க்ஷேத்திரமானது மேற்கு சமுத்திரக் கரையிலுள்ளது. இந்த க்ஷேத்திரத்தில் மகாபலேசுவரஸ்வாமி லிங்கம் பச்சிமாபிமுகமாக ஆவிர்ப்பவித்திருக்கிறது. இதனால் இந்த க்ஷேத்திரம் ஸர்வோத்

தமமானதென்று புராண பிரசித்தமாயிருக்கிறது. இந்த க்ஷேத்திரத்தை தர்சனம் செய்வதற்காக இந்தியாவி லுள்ள எல்லா தேசங்களிலிருந்தும் இந்துமதத்தி லுள்ள எல்லா ஜாதி ஜனங்களும், விசேஷமாக வருகி றார்கள். இந்த தேவாலயத்தில் பஞ்சம ஜாதியைச் சேர்ந்த ஜனங்களைத் தவிர மற்ற எல்லா ஜனங்களும் பேதமில்லாமல், ஸ்வாமியின் கர்ப்ப கிருஹத்துக்குள் போய் தம் தம் கையால் ஸ்வாமிக்கு பூஜை செய்யும் வழக்கம் அநாதிகாலமாக வந்திருக்கிறது. இராமாய ணத்தில் சொல்லப்பட்டிருக்கும், லங்கா நகராதிபதி யான ராவணனென்னும் ராக்ஷஸராஜன் கைலாஸத்தில் கடும் தவம் செய்து, பரமேசுவரர் அனுக்கிரகத்தினால் கிடைத்த லிங்கத்தை தன் பட்டணத்தில் பிரதிஷ்டை செய்து பூஜிக்கவேண்டுமென்ற எண்ணத்துடன் கொ ண்டுவந்ததாகவும், கோகர்ண க்ஷேத்திரமிருக்கும் ஸ்த லத்திற்கு வரும்போது கையில் வைத்துக்கொண்டி ருந்த லிங்கத்தை பூமியில் வைக்கவேண்டிய ஆவசியகம் உண்டானதாயும் நிர்ப்பந்தமாக ஏற்பட்ட காரணத் தினால் பூமியில் வைப்பதற்கு இஷ்டமில்லாமல் ஆலோசனை செய்துகொண்டிருக்கும்போது கணபதி அவ்விடத்திற்கு வந்ததாயும் அவரைத் தன் கையில் இருக்கும் சிவலிங்கத்தை கொஞ்சம் பிடித்துக் கொண்டிருக்கும்படி கேட்கும்போது, அவர் அத ற்கு சம்மதித்து தான் 3 தரம் கூப்பிடுவதற்குள்ளாக வரவேண்டுமென்றும், அதற்குள் வராத பக்ஷத்தில்,

சிவலிங்கத்தை பூமியில் வைத்துவிட்டு புறப்பட்டுப் போய்விடுவதாகவும் நிஷ்கர்ஷை செய்துகொண்டிருந்த பிரகாரம், கணபதி அவரை 3 தரம் கூப்பிடுவதற்குள் அவர் வராமலிருந்தது கண்டு தன் கையில் இருந்த லிங்கத்தை பூமியில் வைத்துவிட்டு புறப்பட்டுப் போய்விட்டார். ராவணுசுரன் திரும்பி வந்து பூமியில் வைக்கப்பட்டிருக்கும் லிங்கத்தை மேலே எடுத்துக்கொண்டு போவதற்கு எவ்வளவுபிரயத்தினம் செய்தாலும் முடியாமல் போய்விட்டதாயும் தன் பலம் முழுவதையும் உபயோகித்து அந்த சிவலிங்கத்தை மேலே பிடுங்குவதற்குப் பிரயத்தினப் பட்டும் வேருடன் மேலே வாராமல், கொஞ்சம் பாகம் பூமியில் நின்றுவிட்டதாயும் பிறகு ஈசுவர சங்கல்பத்தை தெரிந்துகொண்டு அந்த ராக்ஷஸ ராஜன், தன் பிரயத்தினமெல்லாம் வீணுய்ப் போகவே அங்கேயே பூஜைசெய்துகொண்டு போனுனென்றும், அவ்விடத்திய ஐதிஹ்யம். அந்த லிங்கத்தின் ஆகாரத்தைப் பார்த்தாலும் இதிஹாஸத்தில் நம்பிக்கை உண்டாகும்படியே யிருக்கிறது. இந்த க்ஷேத்திரத்தில் மகா சிவாரத்திரி தினத்தில் ஸ்வாமிதர்சனம் பூஜை முதலியது ரொம்ப விசேஷமென்று அறிந்து, அந்த தினத்தில், 3, 4 லக்ஷம் ஜனங்கள் அங்கு சேருவது வழக்கமாயிருக்கிறது. ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் சிவராத்திரி மஹோத்ஸவ காலத்திலேயே விஜயம் செய்திருந்ததினுல், அந்த வருஷத்தில் யாத்திரைக்காரர்களின் தொகை

இரட்டிப்பாக இருந்ததென்று அவ்விடத்திய ஜனங்கள் சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

அளவற்ற ஜனங்கள் கூடியிருக்கும் அக்காலத்தில் ஒவ்வொருவரும் உள்ளேபோய் தானாக பூஜை செய்வதாயிருந்தால் எவ்வளவு கஷ்டமாயிருக்கும். அப்படியிருந்தாலும் வந்த ஜனங்களுக்கே சுவபாவமாக ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் விஷயத்தில், பக்தி, கௌரவம், இருந்ததினால் ஜனங்கள் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் ஏகாந்தமாக தேவாலயத்தில் பிரவேசித்து, அவர்கள் சாவகாசமாய் ஸ்வாமிக்கு பூஜை செய்து, லோகத்தின் க்ஷேமத்தை பிரார்த்தனை செய்துகொண்டு வருவதற்கு அவகாசம் கொடுத்ததுமல்லாமல் தேவஸ்தானத்திய முக்கிய அதிகாரிகள் பிரயத்தினத்தாலும் தேவஸ்தானத்தில் கலவரம் இல்லாமல் ஏற்பாடு செய்யப்பட்டது. ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் 3-வது யாமமான நடுநிசியில் தேவாலயத்திற்கு விஜயம் செய்து 4-வது யாமகாலம்வரை சாவகாசமாக, பரமானந்தத்துடன் விசேஷமாக பூஜை செய்து, விலையுயர்ந்த வஜ்ரப் பதக்கத்துடன் சேர்ந்த 5 சரமுள்ள முக்தாஹாரம், உயர்ந்த ருத்ராக்ஷ கண்டி, உத்தமமான வஸ்திரங்கள், இவைகளை அர்ப்பணம் செய்து, பிராசீனமான சுலோகங்களாலும் தாம் செய்த அநேக சுலோகங்களாலும் ஸ்வாமியை ஸ்தோத்திரம் செய்து அந்தக் காலத்தில் காத்துக்கொண்டிருந்த சிஷ்ய வர்க்கங்களுக்கெல்லாம் ஸ்வாமி பிரசாதத்தை

அனுக்கிரஹித்து மடத்திற்கு திரும்பி விஜயம் செய்தார்கள்.

கோகர்ணத்தில் இருக்கும்போது ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சரீரத்தில் ஜாட்யம் உண்டாயிற்று. இது மூத்திர சம்பந்தமான வியாதியாய் வந்ததினால், மிகவும் பலமாயிருந்தது. எல்லோருக்கும் நிரம்ப பயமுண்டாகும்படியிருந்தது. அப்படியிருந்தாலும், இந்த மகா புருஷர் மூலமாய் நடக்க வேண்டிய காரியங்கள் அநேகம் பாக்கியிருந்ததினாலும், இவர் எதற்காக இந்த பூமியில் அவதாரம் செய்தாரோ அந்த உத்தேசம் பூர்த்தியாக நிறைவேறாமலிருந்ததினாலும் பரமேசுவரர் பிரசாதத்தினால் கிடைத்த 16 வருஷம் கழிந்தவுடன், வியாசமகாரிஷி வந்து தரிசனம் கொடுத்து, இன்னம் அநேக காரியங்கள் இந்த பூமியில் நடத்த வேண்டியது பாக்கியாயிருப்பதாயும், அநேகரை ஜயித்து அத்யாத்ம வித்யையை ஸ்திரப்படுத்தவேண்டிய காரியம் பாக்கியாயிருப்பதாயும் இதற்காக இன்னும் 16 வருஷ காலம் இந்த பூமியில் இருக்கவேண்டுமென்று ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரியர் அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்தது போல் ஸ்ரீமகாபலேசுவர ஸ்வாமி அனுக்கிரஹத்தினால் வெகு சுலபமாக ஸ்ரீஸ்வாமிகளுக்கு வந்திருந்த வியாதி தணிந்து போய்விட்டது.

இரண்டு மாதகாலம் அந்த மகா க்ஷேத்திரத்தில் வாசம் செய்து வர்ணாசிரம தர்ம விஷயமாக, சில விவாதத்திலிருந்த விஷயங்களை விசாரம் செய்து தீர்

மானம் செய்து, அங்கிருந்து முன்னே பிரயாணமானார்கள்.

தார்வார் ஜில்லா வழியாய் புறப்பட்டு பம்பாய் கவர்ண்மெண்டைச்சேர்ந்த அநேக ஸ்தலங்களில் சஞ்சாரம் செய்துகொண்டிருக்கையில் முன்காலத்தில் பூனு பேஷ்வா அவர்கள் காலத்தில் பிரசித்தராயிருந்த பரசுராமபாவு என்பவரின் வம்சத்லதச்சேர்ந்த இராமசந்திராராவு அப்பா சாகேப் என்பவர் ஜம்கண்டியில் ராஜாவாக இருந்தார். இவர் வித்யாவந்தராயும் தைரியசாலியாயும் ஸ்வாதீனமுள்ளவராயும் இருந்து தன் ஸம்ஸ்தானம் மிகச் சிறியதாயிருந்தாலும் தம்முடைய புத்தி சாமர்த்தியத்தினாலும் மனதின் உறுதியாலும் அநேகவிதமாய் சம்ஸ்தானத்தின் வருமானங்களை அதிகப்படுத்திக்கொண்டு அதிக விதரணையாய் தம் ஸம்ஸ்தானத்தை ஆண்டுகொண்டிருந்தார். இவர் சித்பாவன பிராம்மணர். பாலியம் முதல் இவர் செய்கை எல்லாம் வெளி நோக்கமுள்ளதாகவே இருந்ததினால் பாரமார்த்திகமான விஷயத்தில் நம்பிக்கையும் ஆஸ்தையும் விசேஷமாகவிருக்கவில்லை. இப்படிப்பட்ட ராஜாவுக்கு ஜன்மாந்தர சம்ஸ்கார விசேஷத்தினால் ஆஸ்திக புத்தி கொஞ்சம் உண்டாயிருந்தது. அதற்கு அடையாளமாக தம் ஸ்தலத்தில், அமிருத சிலையினால் வெகு விசித்திரமாக ஒரு ஆலயம் நிர்மாணம் செய்து அதில் திரிபுர சுந்தரீ அம்மனை பிரதிஷ்டை செய்து நித்ய பூஜாதிகள் நடக்கவும் நவராத்திரி மகோத்சவம்

நடப்பதற்கும் ஏற்பாடு செய்து விசேஷ சிரத்தையுடன் நடத்திக்கொண்டிருந்தார். 1887ம் வருஷத்தில் ஸ்ரீசிருங்கேரி ஜகத்குரு ஸ்ரீசச்சிதானந்த சிவாபிநவநரசிம்ம பாரதீ ஸ்வாமிகள் அவர்கள் தேசசஞ்சாரத்திற்காக தம் தேச பிராந்தியத்தில் வந்திருக்கிறார்களென்றும், அவர்கள் பெரிய மகான்களென்றும் அந்த ராஜனுக்கு தெரியவந்தது. சாதாரணமாக யதிகள் என்றால் இந்த ராஜாவுக்கு விசுவாசம் உண்டாய்க் கொண்டிருக்கவில்லை. இப்படியிருந்தும் அவன் புண்ய பரிபாகத்தால் ஸ்ரீஸ்வாமிகள் விஷயத்தில் ஒருவிதமான பக்தியும் கவுரவமும் உண்டாய் அவர் தர்சனத்தில் ஆதரவும் உத்ஸாஹமும் அதிகரித்து ஸ்ரீசுவாமிகள் ஜம்கண்டிக்கு வெகு தூரத்திலிருக்கும்போதே இந்த ராஜா தம் ஆப்தர்களான ஜனங்களை ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதானத்திற்கு அனுப்பி தன் அபிப்ராயத்தை அவர்கள் மூலமாய் ஸ்வாமிகளுக்கு விஞ்ஞாபனம் செய்து அவர்கள் தம் ராஜ்யத்திற்கு தயவு பண்ணவேண்டுமென்று பிரார்த்தனை செய்துகொண்டார்.

ஜம்கண்டி ராஜா பக்கத்திலிருந்து வந்த ஜனங்கள் மூலமாயும் அந்த பிராந்தியத்திலுள்ள மற்ற ஜனங்கள் மூலமாயும், அப்பா சாகேப் அவர்களின் பூர்வஸ்திதியையும், இப்போதுள்ள ஸ்திதியையும், ஆதியோடந்தமாகத் தெரிந்துகொண்டு அந்த ராஜாவின் பூர்வ ஜன்மசம்ஸ்காரம் சிலாக்கியமானதென்றும், அந்த சம்ஸ்காரத்திற்குத்தகுந்தபடி ஹிதபோதனையால் அந்த ராஜா

வை ஆஸ்திகனுகச் செய்வதற்கு தகுந்த அனுகூலதை நேராமலிருந்ததினுல் ஆஸ்திகபுத்தி குறைவாயிருக்கிறதென்றும், அந்த ராஜாவின் கோரிக்கைப்படி அவர் ராஜதானிக்குள் பிரவேசம் செய்து அவருக்கு தர்சனம் கொடுத்து அவர் ஆஸ்திகபுத்தியை அபிவிருத்தி செய்யவேண்டியது தமக்கு அதிக அவசியமானதென்றும் யோசித்து, ஜம்கண்டிக்கு வருவதாக ஸ்ரீமுகம் எழுதி ராஜாவுக்கு அனுப்பினுர்கள்.

தன் பிரார்த்தனையை அங்கீகாரம் செய்து ஸ்ரீ ஸ்வாமிகளவர்களாலனுக்கிரஹிக்கப்பட்ட ஸ்ரீமுகத்தை அதிக ஆதரவுடன் வரவேற்றுக்கொண்டு ஸ்ரீ ஸ்வாமிகள் விஜயம் செய்வதற்கு ஆவசியகமான உபகரணங்களையெல்லாம் ஸ்ரீஜகத் குருக்களின் கௌரவத்திற்கும், தன் அந்தஸ்துக்கும் தக்கபடி சித்தமாக செய்துகொண்டு வெகு விபவத்துடன் தம் பரிவார சகிதமாய் ராஜா ஜம்கண்டியிலிருந்து ஒன்றரை மைல் தூரத்திலுள்ள, கட்டேகிரி, என்ற தடாகத்தின் சமீபத்தில் விஸ்தாரமாய் போடப்பட்டிருந்த பந்தலுக்குச் சென்று முதன்முதலில் அங்கு ஸ்ரீஸ்வாமிகளவர்களை தர்சனம் செய்துகொண்டார். தர்சனமானதும், மந்தஹாசத்துடன் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் யோகக்ஷேம விசாரம் செய்தார்கள். உடனே இந்த ராஜாவுக்கு கொஞ்சம் நேரம் வரையில் ஒன்றும் தோன்றுமல் ஒருவிதமான பரவசம் உண்டாய்விட்டது. ஆனந்தத்தினுல் நிறைந்து பூரித்துப்போன



ஜம்கண்டி ராஜா ராமசந்திர
அப்பா ஸாகேப்.

ராஜாவின் சரீரமெல்லாம் மயிர்க்கூச்சலுண்டாயிற்று. கண்களில் தாரை தாரையாய் ஜலம் பெருகவாரம்பித்தது. குரல் தழைத்தது. இதெல்லாம் அந்த ராஜாவின் ஜன்மாந்தர சம்ஸ்காரத்திலுண்டான உத்தமமான பக்திக்கு அடையாளமாயிருந்தது.

ஸர்வஜித் வருஷம் பாத்திரபத கிருஷ்ண சதுர்தசி 1887ம் ௵ செப்டம்பர்௴ 16௳ காலை 8-மணிக்கு உபய சம்ஸ்தான பிருதாவலிகளுடன் ஸ்ரீஸ்வாமிகள் ஜம்கண்டியில் பிரவேசம் செய்தார்கள். ராமதீர்த்தமென்ற ஸ்தலத்தில் ராஜாவினுல் சித்தப்படுத்தப்பட்டிருந்த விசாலமான ராஜகிருஹத்தில் தங்கினுர்கள்.

ஸ்வாமிகள் தர்சனமானது முதல்கொண்டு பிரதிக்ஷணமும் அவர்கள் விஷயத்தில ராஜாவுக்கு பக்தி அதிகரித்துக்கொண்டே வந்தது. ஸ்ரீஸ்வாமிகளை தன் இராஜதானியில் சிலகாலம் நிறுத்திக்கொண்டு இந்த ராஜா வெகு சிறந்த பக்தியுடன் பூஜித்துவந்தார். ஐரோப்பியதேசத்தில் மிக வேலைப்பாடாக செய்யப்பட்டு சுமார் 12000 ரூபாய் விலையுள்ள ஒரு வஜ்ரகண்டியை ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்தார். பிரதி வருஷத்திலும் சிருங்கேரியில் ஸ்ரீசாரதாம்பாள் சன்னிதியில் நடக்கப்பட்ட நவராத்திரி மகோத்ஸவகாலத்தில் மூலா நக்ஷத்திர தினத்தில் நடத்தப்படுகிற எல்லா சேவையும் தம் சம்ஸ்தானத்தியதாக நடக்க வேண்டியதென்றும் இதற்

காக தம் பிரதிநிதி மூலமாய் பிரதி வருஷமும் ஆயிரம் ரூபாய் 1000 தம் சம்ஸ்தானத்திலிருந்து பாரம்பரையாய் ஸ்ரீங்கேரிக்கு அனுப்பி வருவதாக ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் விக்ஞாபன பத்திரிகை மூலமாக தெரிவித்துக் கொண்டார். அது முதல் இதுவரையிலும் மேற்கண்ட சேவை இடைவிடாமல் நடந்து கொண்டு வருகிறது.

இந்த பிரகாரம் ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு அநேகவிதமான சேவைகள் செய்து அவர்கள் பரமானுக்கிரஹத்திற்கு பாத்திரராகி அவர்களால் செய்யப்பட்ட நல்ல உபதேசங்களை கேட்டுத் தெரிந்துகொண்டதுமல்லாமல் அவர்களிடமிருந்து மந்திரோபதேசம் பெற்றுக் கொண்டு ஆஸ்திக சிகாமணியாகி ஸ்ரீ ஸ்வாமிகளவர்களின் சிஷ்ய கோடிகளில் முக்கியராயிருந்து வரும் பாக்கியத்தைப் பெற்றார்.

ஸ்ரீஸ்வாமிகள் தம் யாத்திரையை பூர்த்தி செய்துகொண்டு சிருங்கேரிக்கு திரும்பி விஜயம் செய்வதற்குள்ளாக பல்லாரியில் அவர்கள் வாசம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் ராமசந்திர ராவு அப்பா சாகேப் அவர்கள் வந்து ஸ்வாமிகள் அவர்களை தர்சனம் செய்துகொண்டு தம் குமாரனுக்கு ஸ்வாமிகளிடமிருந்து மந்திர உபதேசம் செய்வித்து தம் ஸ்தலத்திற்குப் புறப்பட்டுப் போனதுமல்லாமல் சிருங்கேரிக்கு ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் திரும்பி வந்தபிற்பாடு தம்முடைய பரிவாரங்களுடன் சிருங்கேரிக்கு

வந்து ஸ்ரீமடத்திலிருந்து அனுக்கிரஹரூபமாக செய்யப்பட்ட சத்காரத்தைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீங்கேரியில் மறுபடியும், தங்க நாணயங்களால் பாதபூஜை செய்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் உபயோகத்திற்காக தம்மால் செய்யப்பட்டிருந்த திவ்யமான வெள்ளி பத்ராஸனத்தை ஸ்ரீ சாரதாம்பாள் சன்னிதியில் வைத்து அதன் கீழ்பாகத்தில் தம் குமாரரான தாசீ சாகேபர் என்பவர் அதிபால்யமாயிருந்தாலும அவரைப்படுக்க வைத்து அவர் முதுகுமேல் ஸ்ரீஸ்வாமிகள் பாதங்களை வைத்துக்கொண்டு ஏற வேணுமென்று பிரார்த்தித்துக்கொண்டார். அதுபோலவே ஸ்வாமிகளும் அவருடைய பக்திக்குக்கட்டுப்பட்டு அவரால் அர்ப்பணம் செய்யப்பட்ட பத்ராஸனத்தை ஸ்வீகரித்து ராஜாவுக்கும் ராஜாவின் அபிப்ராயத்திற்கும் கொஞ்சம்கூட குறைவில்லாமல் நடந்துகொண்டவரான அவர் குமாரருக்கும் பரம அனுக்கிரஹம் செய்து ராஜார்ஹமான மரியாதைகள் செய்து அனுப்பினார்கள். இந்த பத்ராஸனம் இப்போது ஸ்ரீ மடத்தில் நடக்கக்கூடிய எல்லா விசேஷ காலங்களிலும் ஸ்ரீஸ்வாமிகளவர்களால் உபயோகப்படுத்தப்பட்டு வருகிறது.

அங்கிருந்து புறப்பட்டு சின்ன சின்ன சம்ஸ்தானங்களான மிராஜ், சாங்கலி, குருந்தவாட முதலிய சம்ஸ்தானங்களில் ராஜர்களால் பிரார்த்திக்கப்பட்டு அந்தந்த ராஜர்களின் ராஜதானியில் விஜயம் செய்து அவ்விடத்திய ராஜர்களுக்கும் பிரஜைகளுக்கும் அனுக்

கிரஹம் செய்து, கொல்லாபுரம் என்ற சமஸ்தானத்துக்கு விஜயம் செய்தார்கள்.

இந்த கொல்லாபுரத்திய ராஜா அந்த காலத்தில் வயஸ் பிராப்தியுள்ளவராக இல்லை. அப்படியிருந்தும் ராஜமாதுருக்களால் விசேஷமாக சத்காரம் செய்யப்பட்டு, கொல்லாபுரம் மகாலக்ஷ்மி தர்சனம் செய்து கொண்டு வந்தார்கள். இந்த கொல்லாபுரத்தில் ஒரு மடம் இருக்கிறது. இதற்கு சங்கேசுவரமடம் என்று பிரசித்தி. இந்த மடமும் ஸ்ரீங்கேரி ஜகத்குருக்கள் ஸம்ஸ்தானத்தின் கிளை என்று அத்தேசத்திய ஜனங்கள் இந்த மடத்திய ஸ்வாமிகளை ஆராதித்துக்கொண்டு விசேஷமாக கௌரவிக்கிறார்கள். இந்த மடம் தம் சம்ஸ்தானத்திலேயே இருப்பதால் கொல்லாபுரம் ராஜா அந்த மடத்திய தர்மங்கள் நடக்கவேண்டியதற்காக சில இனும் கிராமங்கள் கொடுத்து நடப்பித்துக் கொண்டு வருகிறார். இந்த மடம் எந்த காலத்தில் யாரால் எப்படி ஸ்தாபிக்கப்பட்டதென்ற விஷயம் சரியான ஆதாரங்களைக்கொண்டு கண்டுகொள்வதற்கு இது வரையில் அவகாசம் கிடைத்திருக்கவில்லை. ஸ்ரீ ஜகத்குரு ஸ்வாமிகள் அவர்கள் கொல்லாபுரத்திற்கு விஜயம் செய்திருக்கும் சமயத்தில் சங்கேசுவரமடத்திலிருந்த ஸ்வாமிகளவர்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்களை தம் மடத்திற்கு வரவேண்டுமென்று பிரார்த்தனை செய்து கொண்டு தம் மடத்திற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஜயம் செய்திருந்த சந்தர்ப்பத்தில் ஆதீன மடாதிபதி

கள் நடந்துகொள்ளவேண்டிய ரீதியில் நடந்துகொண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய அனுக்கிரஹத்தை சம்பாதித்துக்கொண்டார்.

இந்த மகாராஷ்டிர தேசத்திற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தயவு பண்ணின காலத்தில், மகாராஷ்டிர பாஷாபரிசயம் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு விசேஷமாக இருக்கவில்லை. சிலகாலம் சஞ்சாரம் செய்த பிறகு அந்த பாஷையில் ஞானம் உண்டாயிருந்தாலும் கொல்லாபுரத்தில் வைதிகர்களும் லௌகிகர்களில் எல்லா ஜனங்களும் சாதாரணமாய் சம்ஸ்கிருத பாஷாக்ஞானம் உள்ளவராயும் தாராளமாக சம்ஸ்கிருத பாஷையிலேயே வியவஹாரம் செய்வதற்கு வேண்டிய யோக்கியதை உள்ளவராயும் இருப்பதை அறிந்து வெகுவாய் சந்தோஷித்து, கொல்லாபுரத்தில் வாசம் செய்து வந்த காலத்தில் அநேகமாய் தினந்தோறும் சம்ஸ்கிருத பாஷையிலேயே தர்ம விஷயமான உபந்நியாசங்கள் செய்து அங்குள்ள சிஷ்யமண்டலத்துக்கெல்லாம் ஆனந்தாதிசயத்தை உண்டு பண்ணினார்கள்.

இந்த யாத்திரையில் புனா சமீபம் வரையில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஜயம் செய்து அத்தேசத்திய ஜனங்களுக்கு இருக்கும் பக்தி விசுவாசங்களைக்கண்டு வெகுவாக சந்தோஷப்பட்டார்கள். காலரீதியினால் மாறிப்போயிருக்கும் அநேக ஆசாரங்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மனதிற்கு திருப்திகரமாக இருக்கவில்லை. புதிய நாகரீகத்தினால் சர்க்காரால் ஏற்படுத்தப்பட்டி

ருக்கிற ஜல வசதி முதலிய விஷயங்கள் ஸ்ரீஸ்வாமி களுக்கு ஜன்மம் முதல் வந்திருக்கிற அப்பியாஸத்தினால் ருசிக்கவில்லை. இவை முதலான சில விஷயங்களினால் தம் சங்கல்பப்பிரகாரம் உத்தர தேச சஞ்சாரம் செய்வதில் ஸ்வாமிகளுக்கு அபிப்பிராயம் குறைந்துகொண்டுவந்தது. இதனால் தம் யாத்திரையை முன்னுக்கு நடத்தாமல் சோலாப்பூர் பீஜபூர் மார்க்கமாய் பின் திரும்பினார்கள்.

மதராஸ் கவர்ண்மெண்டைச் சேர்ந்த பல்லாரி என்னும் ஊர் வெகு பெரிதானது. இந்த பிராந்தியத்தில், லிங்காயத மதஸ்தர்கள் அதிகமாயிருக்கிறார்கள். இவர்களில் அனேகர் தனவந்தர்களாயும் செல்வாக்குள்ளவர்களாயுமிருக்கிறார்கள். சுமார் 30-வருஷத்திற்கு முன்னிருந்து அந்த ஊரில் லிங்காயதருக்கும் பிராம்மணர்களுக்கும் ஏற்பட்ட சச்சரவினால் அந்த இடத்திற்கு எந்த மடாதிபதிகளும் பிரவேசம் செய்யக்கூடாதென்று நிர்ப்பந்திக்கப்பட்டிருந்தது. இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீ ஜகத்குருக்கள் யாத்திரைக்கிரமமாக பல்லாரி ஜில்லாவுக்கு விஜயம் செய்த சங்கதியை அறிந்து அங்குள்ள பிராம்மணர்களும் இதர ஜனங்களும் சேர்ந்து "குருக்கள் பல்லாரிக்கு விஜயம் செய்து எந்த மடாதிபதிகளும் பல்லாரிக்கு வரக்கூடாதென்பதாக சிலகாலம் முதல் ஏற்பட்டிருக்கிற நிர்ப்பந்தத்தை போக்கடித்து சிஷ்ய மண்டலிக்கு தர்சனம் கொடுத்து அநுக்கிரஹிக்கவேண்டும்"

என்று தெரிவித்துக்கொண்டார்கள். இந்த வேண்டுகோள் கேவலம் ஸம்ஸ்தானத்திய சிஷ்யஜனங்கள் மாத்திரம் செய்துகொண்டதல்ல. பிராம்மண ஜனங்களெல்லாரும், லிங்காயதர்கள் தவிர மற்ற அநேக ஜாதிஜனங்களும் சேர்ந்து செய்துகொண்ட விஜ்ஞாபனம். இதனால் அந்த பிரார்த்தனை நிராகரிக்கக்கூடியதாயிருக்கவில்லை.

இப்படி மேலே சொன்ன காரணத்தால் பல்லாரி பட்டணத்தில் பிரவேசம் செய்வதாய் நிச்சயமாயிற்று. இந்த சங்கதியை அவ்விடத்திய கலெக்டருக்கு தெரிவித்துக்கொண்டு லிங்காயதமதஸ்தர்களுக்கும் இதர மதஸ்தர்களுக்கும் இருக்கப்பட்ட விவாதங்களை விசாரணை செய்து நியாயமாக தீர்மானம் செய்து; ஸ்ரீஸ்வாமிகள் பல்லாரியில் பிரவேசம் செய்வதில் எந்த விதமாயும் தொந்திரவு உண்டாகாதபடி ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று கலெக்டருக்குத் தெரிவிக்கப்பட்டது. இதுபோலவே லிங்காயதமதஸ்தர்களும் கலெக்டரிடம் தங்கள் தாவாவை தெரிவித்துக்கொண்டு ஜகத்குருக்கள் அவ்விடம் வரத்தக்க விஷயத்திலும் தங்கள் மத குருக்கள் பல்லாரிக்கு வரலாமென்ற விஷயத்திலும், சர்க்கார் அவர்கள் விசாரணை செய்து நியாயமாக தீர்ப்பு செய்துகொடுக்கவேண்டுமென்றும் அந்தப்படி தாங்கள் நடந்துகொள்வதாயும் தெரிவித்துக்கொண்டார்கள்.

விவாதத்திலுள்ள விஷயங்களை விசாரித்ததில் லிங்

காயதமத குருக்கள் முந்திய வழக்கத்திற்கு விரோத மாகவும், இதர ஜனங்களுக்கு அசமாதானமுண்டுபண்ணக்கூடியதுமான, சில பிருதுகளை எடுத்துக்கொண்டு பல்லாரிக்கு வரவேண்டுமென்று யத்தினம் செய்தகாலத்தில் இதர ஜனங்கள் புது வழக்கத்திற்கு இடம் கொடாமல் தடைசெய்ததே காரணமென்று தெரிய வந்தது. ஜில்லா கலெக்டர், இரு கக்ஷிக்காரர்களிடத்திலும் இருக்கப்பட்ட பிருது பாவலிகளுக்கு சம்பந்தப்பட்ட தஸ்தாவேஜுகளை தருவித்துக்கொண்டு நன்றாக ஆலோசித்து சிருங்கேரி ஜகத்குருக்கள் இன்ன பிருதுகளை உபயோகித்துக்கொண்டு பல்லாரி பட்டணத்தில் பிரவேசம் செய்யலாமென்றும், லிங்காயத குருக்கள் இன்ன இன்ன பிருதுகளையே உபயோகிக்கலாமென்றும் தீர்மானம் செய்து ஜகத்குருக்கள் அவர்கள் பல்லாரிக்கு வரலாமென்றும் அதற்குத் தகுந்த ஏற்பாடு செய்திருப்பதாயும் அவர்கள் பிரவேசத்திற்கு எவ்விதமாகவும் தொந்திரவு உண்டாகமாட்டாதென்றும் தெரிவித்தார்.

இந்த தீர்மானம் லிங்காயதர்களுக்கு அவ்வளவு திருப்திகரமாக தோன்றவில்லை. ஸ்ரீஸ்வாமிகள் சொண்டூர் மார்க்கமாய் பல்லாரிக்கு விஜயம் செய்தார்கள். அன்றையதினம் அந்த பட்டணத்தில் கூடிய ஜனங்கள் கணக்கிடக் கூடியதாயிருக்கவில்லை. விசேஷமான கலஹம் உண்டாகி ஜனங்களின் அமைதிக்கு கெடுதியுண்டாகக்கூடுமென்ற உத்தேசம் ஜனங்களுக்கும்

சர்க்காருக்கும் மிகுதியாய் இருந்தது. இந்த உத்தேசத்தினால் சர்க்கார் அதிகாரிகள் செய்திருந்த ஏற்பாடு பார்த்தவர்களுக்கெல்லாம் பயமும் ஆச்சரியமும் உண்டாகும்படியிருந்தது. ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சகஜமான தம் பிருது பாவலிகளுடன் புறப்பட்டு பட்டண பிரவேசம் செய்தவுடனே இவர்களை தர்சனம் செய்த ஒவ்வொருவர் மனதிலும், ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் சாந்தமான சுவபாவம் பிரதிபலித்து வெகுகாலமாக மிகவும் கெட்டியாய் பிடித்திக்கொண்டிருந்த துவேஷ பாவனை எந்த திக்கில் ஓடிற்று என்பது யாருக்கும் தெரியாமலே எல்லா ஜனங்களும் ஒரேவிதமாக ஆநந்தக்கடலில் ஆழ்ந்தார்கள்.

இந்த விதமான முடிவு ஏற்பட்டது அந்த மகாநுபாவரின் ஸமபாவனையினாலே யல்லாமல் வேறெதுவும் காரணமல்லவென்று தாராளமாகச் சொல்லலாம்.

இந்த பல்லாரியில் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தம்முடைய சாதுர்மாஸ்ய சங்கல்பத்தை ஆரம்பம் செய்து அங்கு 2-மாசத்திற்கு அதிகமாக வஸம் செய்தார்கள். இந்த காலத்தில் அவ்விடத்திய சிஷியர்களால் சம்ஸ்தானத்தைச் சேர்ந்த எல்லா சிலவும் வஹிக்கப்பட்டு விசேஷமாக சேவை சத்காரங்களும் செய்யப்பட்டன. ஸ்ரீஸ்வாமிகள் பல்லாரியில் வாசம்செய்து கொண்டிருந்த காலத்தில், இவர்கள் தர்சனத்திற்காக ஜம்கண்டி ராஜா வந்திருந்ததாக முந்தியே பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

ஸ்வாமிகள் விஷயத்தில் ஈசுவர பாவனைகொண்டு விசேஷமாக பக்தி செய்துகொண்டிருந்த, மைசூர் சம்ஸ்தானத்தில் 18 வருஷகாலம் சர்வோத்தமமாக, திவான் பதவியில் இருந்து கீர்த்திசேஷராயிருக்கிற ஸர். கே. சேஷாத்திரி அய்யரவர்கள் ஸ்வாமிகளின் தர்சனத்திற்காக பல்லாரி வந்து அவர்கள் சன்னிதியில் ஸூத்திரபாஷ்ய சாந்தி செய்துகொண்டு அவர்கள் அனுக்கிரஹத்தைப்பெற்றுக்கொண்டார்.

இந்தவிடத்தில் சேஷாத்திரி அய்யர் அவர்கள் சம்பந்தமாக கொஞ்சம் பிரஸ்தாபிப்பது அப்பிரகிருதமானதென்று அபிப்பிராயப்படுவதற்கு இடமிருக்க மாட்டாது.

இந்த சேஷாத்திரி அய்யர் மதராசைச்சேர்ந்த பாலக்காட்டில் பிறந்தவர். இவர் சாதாரணமான அநுகூலத்தையுள்ள குடும்பத்தில் ஜனித்தார். இவர் தமயனுருடைய சகாயத்தினல் இங்கிலீஷ் அப்பியசித்து அதில் பெயர்பெற்று தேர்ந்தவர். இவர் புத்தி விசேஷத்தையும் மனே தார்டியத்தையும் சிறு பிராயத்திலேயே அறிந்து இந்த சேஷாத்திரி அய்யர், வெகு பிரசித்தராகக்கூடுமென்று தெரிந்து கொள்ளக்கூடிய தூரதிருஷ்டியுள்ள ரங்காச்சாரியார் அவர்களின் சகாயத்தினல் மைசூர் வந்து, இங்கு வேரூன்றி நிலைத்து 18-வருஷகாலம் திவான் பதவியை நிரந்தரமாக அநுபவித்து எங்கும் பரவிய கீர்த்தியை அடைந்து இருந்தார். இவர் சகவாசம், அப்பியாஸம், அனுஷ்டானம்

இவைகளெல்லாம் லோகவியவஹாரத்திற்கு சம்பந்தப் பட்டதே தவிர, பாரமார்த்திக விஷயமாக ஒரு க்ஷண மாவது இவர் மனது பிரவிருத்திக்கிறதற்கு காரணமே இல்லை. ஆனால் இவருடைய ஜன்மாந்தரஸம்ஸ்காரம் வெகு பலமாயிருந்ததினால் "ह्रियते ह्यवशोऽपि सः" என்று பகவான் உபதேசம் செய்தபடி பூர்வவாசனை இவரை பலாத்காரமாக பாரமார்த்திக வழியிலும் பிரவர்த்திக் கும்படி செய்தது.

இவரை பாரமார்த்திகவழியில் நடக்கும்படி செய் வதற்கு தூண்டுகோலாக சில காரணம் வேண்டியிருந் தது. அதற்கேற்றபடி ஸ்ரீமான் மகாராஜா சாமரா ஜேந்திர உடையார் அவர்களுடன்கூட 1885-வது வருஷத்தில் சிருங்ககிரிக்கு போகக்கூடிய சந்தர்ப்பம் கிடைத்தது. அக்காலத்தில் இவருக்கு ஸ்ரீஸ்வாமிகள் தர்சனம் ஆனவுடன் தன் மனதில் திரைபோல் குறுக் கிட்டிருந்த துர்வாசனை என்ற பிரதிபந்தகம் விலகி திடீரென்று ஒரு வெளிச்சம் உண்டானதாக தோன் றிற்று. அந்த தினமே துங்கபத்திராநதியில் ஸ்நா னம் செய்யவேண்டுமென்றும், தன் குலத்தில் பரம் பரையாய் வந்த, விபூதி தாரணத்திலும், நக்ஷத்திரத்தில் ஸந்தியாவந்தனம் செய்யவேண்டுமென்கிற விஷயத் திலும் இவருக்கு பலமான அபிப்பிராயம் உண்டாகி அந்த மாதிரியே ஆசாரனை செய்தார். ஏகாந்தமாக ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தர்சனத்திற்கு வந்து அவர் கள் தர்சன காலத்தில், மேற்கண்டபடி தன்னுடைய

மூர்த்திய ஸ்வபாவத்தையும் திருங்கேரிக்கு வந்து ஸ்வாமிகளின் தர்சனம் ஆனவுடன் தனக்கு உண்டான அனுபவத்தையும் தானாகவே ஸ்ரீஸ்வாமிகள் அவர்களுக்கு தெரிவித்துக்கொண்டார். ஸ்ரீஸ்வாமிகளும் சேஷாத்திரி அய்யர் தம்மிடத்தில் தெரிவித்துக் கொண்ட சங்கதியினால் மிகத் திருப்தியடைந்து அவருக்கு ஆஸ்திக புத்தி அதிகரிக்கும்படி உத்ஸாஹம் செய்து அக்காலத்தில் அவருக்கு வர்த்தமான ஜன்ம சகவாஸத்தினால் உண்டாயிருந்த சில சந்தேகங்களை சாஸ்திரஸம்பந்தமான சில யுக்திகளாலும் லோகதிருஷ்டாந்தங்களாலும் நிவர்த்தி செய்து அவருக்கு வேத சாஸ்திர விஷயத்திலும் ஸதாசாரம் ஸத்தர்ம விஷயங்களிலும் நம்பிக்கையுண்டாகும்படி செய்தார்கள்.

அதுமுதல் சேஷாத்திரி அய்யர் அவர்களுக்கு கடைசிகாலம் வரையிலும் ஸ்ரீ ஸ்வாமிகள் அவர்கள் விஷயத்தில் கௌரவமும் பக்தியும் மிகவும் அதிசயமாயிருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளிடமிருந்து அநேக மந்திரோபதேசம் செய்துகொண்டார். யோகசாஸ்திர விஷயமாக சில முக்கிய சங்கதிகளை அவர்களிடமிருந்து தெரிந்துகொண்டு அந்த மார்க்கத்தில் சிரமப்பட்டவர்களுடைய சகாயத்தினால் சிலகாலம் தானும் சிரமப்பட்டு அப்பியாசம் செய்திருந்தார். ஸ்ரீஸ்வாமிகள் அவர்களை அநேகம் தடவை தர்சனம் செய்து அவர்களுக்கு அந்தரங்க சிஷ்யராயிருந்து நிர்குண தியானம் செய்யவேண்டிய ரீதியை தெரிந்துகொண்டு

அந்த சுகத்தை அனுபவிக்கவேண்டுமென்று யத்னம் செய்துகொண்டிருந்தார். ஆனால் இவர் இராஜ்யபரி பாலன விஷயத்தில் ஸ்ரீமகாராஜருக்கு பிரதான மனுஷியராயிருந்து லௌகிக வியவகாரங்களிலேயே தன்னுடைய அதிக சமயத்தை உபயோகிக்கவேண்டிய நிர்ப்பந்தம் இருந்ததினால் இதர காரியங்களில் அதிக காலத்தை விநியோகம் செய்வதற்கு அவகாசமில்லாமல் எவ்விதமான அப்பியாசத்தையும் பூர்த்திசெய்து கொள்ள சாத்தியமாகவில்லை. லௌகிக நிர்ப்பந்தத்திலிருந்து விடுதலை ஏற்பட்டபிறகு சிலகாலம் ஸ்திரமாய் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சன்னிதியில் வாசம் செய்து தன் அப்பியாஸத்தை அதிகரித்துக்கொண்டு அதன் பிரயோஜனத்தை அனுபவிக்கலாமென்று அவருக்கு இருந்த ஆசை துரதிர்ஷ்டத்தினால் நிறைவேறாமல் போய்விட்டது.

இவ்விதமாய் நிர்மலமான சித்தமுடைய அந்தரங்கசிஷ்யரின் பிரிவு ஸ்ரீஸ்வாமிகள் அவர்களுக்கு சகிக்கமுடியாமலிருந்தது. இந்த குரு சிஷியர்கள் இருவருக்கும் உண்டாயிருந்த ருணநுபந்தத்திற்கு நிஜமான காரணம் அவ்வளவாக ஜனங்களுக்கு தெளிவாய் தெரிந்திருக்கமாட்டாது. சாமானியமாய் அவர் உத்யோகபதவியைத் தெரிந்து சம்ஸ்தான சம்பந்தமான காரியங்கள் விஷயமான சகாயத்திற்காக அவரிடத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ப்ரீதிவைத்திருப்பதாயும், சேஷாத்திரி அய்யர் ஸ்மார்த்த பிராம

ணாக இருந்து தனக்குள்ள அதிகாரபலத்தால் ஸ்மார்த்த மடத்திற்கு உபகாரம் செய்யவேண்டியது தன் காரியமென்ற அபிமானத்தால் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களிடத்தில் பக்தியையும் கௌரவத்தையும் காண்பித்துக்கொண்டிருந்தாரென்று மாத்திரம் ஜனங்கள் நினைத்து இருக்கலாம்.

இந்த கிரந்தகர்த்தா இந்த குரு சிஷ்யர்களின் விஷயத்தை பல சமயங்களில் வெகு விதமாகப் பார்த்து தெரிந்துகொண்டிருந்தார். இவ்விருவருக்கும் அதிகாரம், சம்பத்து, சாமானிய பிரயோஜனம் இவைகளில் ஆதரவும் உத்ஸாஹமும் இருக்கவில்லை. மிகுந்த புத்தி விசேஷமுள்ள இந்த குரு சிஷ்யர்கள் அநேக சந்தர்ப்பங்களில் பாரமார்த்திகமான விஷயங்களைப் பற்றி ஒருவர்க்கொருவர் செய்துகொண்டிருந்த விசாரத்தினால் பரஸ்பரம் உண்டான ப்ரீதி கௌரவங்களே இவர்களின் ஸ்நேஹானுபவத்திற்கு முக்கிய காரணமென்று தாராளமாய் இக்கிரந்தகர்த்தா சொல்லமுடியும்.

இந்த முக்கிய மந்திரியின் லௌகிக வியவகார சாமர்த்தியம் நம்முடைய தேசங்களிலும் தேசாந்தரங்களிலும் அதிக பிரசித்தியுள்ளதென்பது தெரிந்த விஷயம். பாரமார்த்திக விஷயத்திலும் இவர் யோக்யதை குறைந்திருக்கவில்லை. ஆகையால் "यद्यद्विभूतिमत्सत्त्वं" என்ற கீதாவசனத்தை அநுசரித்து, இவரை ஒரு அம்சபுருஷர் என்று சொல்லுவதில் சங்கோசப்படவேண்டியதில்லை.

பல்லாரியிலிருந்து புறப்பட்டு வரும் வழியில், ராயதுர்க்கம் தாலூகாவைச் சேர்ந்த பௌகுப்பே என்னும் கிராமத்தில் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தங்கினார்கள். இந்த கிராமத்தில் பிராம்மணர் வீடுகள் விசேஷமாக இல்லை. இந்த கிராமத்தில் ஸ்ரீமடத்தின் ஜாகைக்காக 2-வீடுகள் தயார் செய்யப்பட்டிருந்தன; இவ்விரண்டு வீடுகளும் ஒன்றோடொன்று சேர்ந்ததாக இருந்தன. விஸ்தாரமாயில்லை. ஸ்தலம் குறைவாயிருந்ததினால் 1-வீடு சந்திரமௌளீசுவர பூஜை நைவேத்யம் ஸ்வாமிகளவர்களின் பிக்ஷை இந்த காரியங்களுக்காகவும், மற்றொன்று ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஸ்நானம், ஆஹ்னிகம் இளைப்பாறுதல் இவை முதலான காரியங்களுக்காகவும், உபயோகப்படுத்தப்பட்டது. மத்யானம் பூஜை பிக்ஷை முதலிய காரியங்களான பிறகு சாயங்காலம் ஸ்நானம் ஆஹ்னிகம் முதலியன முடித்துக்கொள்வதற்காக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மற்ற கிருஹத்திற்கு விஜயம் செய்தார்கள். ஸம்ஸ்தானத்திய முந்தின சம்பிரதாயப்படி பரம்பரையாய் வந்திருக்கும் சந்திரமௌளீசுவரலிங்கத்திற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மத்தியான காலத்தில் மாத்திரம் அபிஷேகம் பூஜை முதலியது செய்து, பூஜையான பிறகு ஸ்ரீசந்திரமௌளீசுவரலிங்கத்தையும் ரத்னகர்ப்ப கணபதியையும் ஒரு சம்புடத்தில் பத்திரப்படுத்தி அந்த சம்புடத்தை ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இராத்திரி காலத்தில் விச்ரமித்துக்கொள்ளக்கூடிய ஸ்தலத்தில்

ஒரு பெரிய பெட்டியில் வைத்துக் காப்பாற்றுவது வழக்கம். அது போலவே அந்த தினத்திலும் பூஜை யான பிறகு சம்புடத்தில் சந்திரமௌளீசுவர லிங்கத் தையும் ரத்னகர்ப்ப கணபதியையும் வைத்து பூட்டப் பட்டிருந்த சம்புடம் ஸ்வாமிகளவர்களுடன் கூடவே அவர்களுக்கு இராத்திரி விச்ராந்திக்காக ஏற்படுத்தப் பட்டிருந்த கிருஹத்துக்கு கொண்டுவரப்பட்டு அங்கு ஒரு மரப்பெட்டியில் வைத்து பூட்டு போடப் பட்டது.

திருட்டு விஷயத்தில் பல்லாரி ஜில்லா எப்போதும் பிரசித்தியுள்ளதே. பௌகுப்பேக்கு ஸ்ரீஸ்வாமிகளவர் ர்கள் விஜயம் செய்த தினம் இராத்திரியிலேயே மடம் இறங்கி இருந்த வீட்டில் திருடர் பிரவேசித் தார்கள். ஷை வீடுகள் மண்மச்சுள்ளதாயும் பழைய வீடுகளாயுமிருந்ததினால் இதில் பிரவேசிப்பது வந்த கள்ளர்களுக்கு சுலபமாயிருந்தது. ஜாகை வீடுகள் 2-ம் ஒன்றுக்கொன்று சேர்ந்த வீடுகளென்று மேலே யே சொல்லப்பட்டது. 2 வீடுகளுக்கும் இடையி லுள்ள ஒரு அறையின் மேல் பக்கத்திய கூறை விழு ந்து சுவர் மாத்திரம் பாக்கியாயிருந்தது. ஆனால் அந்த அறைக்கு கதவு மாத்திரமிருந்து அந்த வாச லுக்கு பூட்டுப்போட்டிருந்ததினால் ஒருவரும் அதை கவனிக்கவில்லை. வந்த கள்ளர்கள் மேல் கூறை இல் லாமலிருந்த அறைக்குள் இறங்கி மத்தியானத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பூஜை செய்த வீட்டிற்கு போவ

தற்காக சுவரை இடிப்பதற்கு பிரயத்தினப்பட்டதா யும் அந்த பிரயத்தினம் சுலபமாக முடியாமல் போய் விடவே ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விச்ரமித்துக்கொண்டி ருந்த வீட்டின் உள்பக்கத்தில் பூட்டுப்போட்டு மூடி யிருந்த வாசல் வழியாய் உள்ளே பிரவேசித்து அங்கி ருந்த ஸ்ரீஸ்வாமிகளின் ஆஹ்னிகத்திற்கு உபயோகப் படுகிற வெள்ளிப்பாத்திரங்களையும் சுவர்ணத்தில் கட் டியிருக்கும் சில பெரிய ருத்திராக்ஷ கண்டிகளையும் பெரிய மரப்பெட்டியில் வைக்கப்பட்டிருந்த ஸ்ரீசந்திர மௌளீசுவரலிங்கம் ரத்னகர்ப்ப கணபதி, இவைகள டங்கிய சின்ன தாம்பிரப்பெட்டியையும் வலமுறிசங் கம் சுவர்ண கணபதி முதலிய விலையுயர்ந்த பதார்த் தங்களையும் எடுத்துக்கொண்டு போய்விட்டார்கள். இவ்வளவு சுலபமாய் சம்ஸ்தானத்திய பதார்த்தங்களை கொண்டு போவதற்கு கள்ளருக்கு எப்படி அவகாசம் கிடைத்ததென்று சந்தேகம் வருவதற்கு காரணமிருக் கிறது. ஆனால் சம்ஸ்தான சொத்துக்களைப்பாதுகாப் பதற்காக மைசூர் மகாராஜா அவர்களால் ஸ்ரீஸ்வாமி களவர்கள் பக்கத்தில் அனுப்பப்பட்டிருந்த பாரா சிபாய் ஜனங்கள் மற்றொரு வீட்டில், வெள்ளி தங்கம் மண்டபங்களை வைத்துப்பூஜை செய்த இடத்தில், காவல் காற்றுக்கொண்டிருந்தார்கள். குதிரை சவாரி கள் இராத்திரி காலமானதையால் தூரத்தில் இளைப் பாரிக்கொண்டிருந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இரா த்திரி காலத்தில் வாசம் செய்த அந்த வீட்டில் வெகு

சுவல்பமான பரிஜனங்கள் மாத்திரம் வெளிப்பக்கத்தில் அங்கங்கே படுத்து நித்திரை செய்துகொண்டிருந்தார்கள். இப்படிப்பட்ட சமயம் காலத்திற்குத் தக்கபடி உண்டான மடத்து ஜனங்களின் அஜாக்கிரதையினால் வந்த கள்ளருக்கு வெகு சாதகமாயிருந்தது.

காலையில் 5 மணிக்கு எழுந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களின் ஸ்நானத்திற்காக சித்தப்படுத்தக்கூடிய பரிஜனங்கள் ஸ்நானம் செய்து மடி வஸ்திரங்களை சித்தப்படுத்துவதற்காக வந்து பார்க்கும்போது ஸ்வாமிகளுடைய வஸ்திரம் வைத்திருந்த பெட்டிகள் முதல் நாள் இராத்திரி வைத்திருந்ததுபோல் இருக்கவில்லை. வித்தியாசமாயிருந்ததை அந்த பரிஜனங்கள் பார்த்து பரபரப்புடன் பேசிக்கொண்டிருந்த வார்த்தைகள் ஸ்ரீஸ்வாமிகளின் காதில் விழுந்தது. உடனே ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பரபரப்புடன் ஸ்வாமி வைத்திருந்த பெட்டி அப்படியே இருக்கிறதோ என்று கேட்ட பிறகு ஸ்வாமி பெட்டியை பார்க்க அதன் பூட்டு எடுக்கப்பட்டிருந்தது. கதவைத் திறந்து உள்ளே பார்க்கையில் ஸ்வாமி சம்புடம் இருக்கவில்லை. இந்த சங்கதி ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சன்னிதியில் தெரிவிக்கப்பட்டது. ஸ்வாமி சம்புடம் இல்லை என்ற சப்தம் அவர்கள் காதில் விழுந்ததும் அந்த சமயத்தில் அவர் மனோபாவம் எப்படி இருந்ததென்பதை விவரிப்பது யாராலும் சாத்தியமில்லை. அவர்கள் எவ்விதமான வார்த்

தையும் சொல்லவில்லை. மடத்திய அதிகாரிகளையா வது மற்ற ஜனங்களையாவது தருவித்து ஆலோசிக்க வில்லை. உடனே ஸ்நானத்திற்காகப்புறப்பட்டு ஸ்நா னம் செய்தார்கள். சுத்த வஸ்திரங்கள் இருந்த பெட் டிகளெல்லாம் கள்ளர்கள் தொட்டு அசுத்தமாயிருந்த தினல் நனைந்த ஈரவஸ்திரங்களையே தாரணம் செய்து கொண்டு அநுஷ்டானத்திற்காக வந்து பீடத்தில் அமர்ந்தார்கள். ஒருவருடனும் ஒரு வார்த்தையா வது பேசவில்லை. ஒரு நிமிஷமாவது வீணாய்க்கழிக்க வில்லை.

வெகு உக்கிரரூபத்தை எடுத்துக்கொண்டு நார சிம்ம மந்திர உபாசனைக்கு ஆரம்பம் செய்தார்கள்.

இப்படியாக மடத்தில் களவுபோன சங்கதி வெளிப்பட்டவுடன் குதிரை சவாரிகள் திக்குதிக்காக ஓடினார்கள். தத்க்ஷணமே சர்க்கார் போலீஸ் இலாகா அதிகாரிகளுக்கு சங்கதி அறிவிக்கப்பட்டது. ஜில்லா கலெக்டர் போலீஸ் சூப்பரிண்டெண்டெண்ட் வகை ராக்களுக்கெல்லாம் தந்தி மூலமாக களவுபோன சங்கதி தெரிவிக்கப்பட்டது. சாயங்காலம் வரையிலும், எவ்வ ளவு தூரம் போய் சுத்திப்பார்த்தாலும் யாராலும் எந்த விதமாயும் கள்ளர்களைக்குறித்தாவது அவர்கள் சென்ற வழியைப்பற்றியாவது கண்டுபிடிக்க கொஞ் சம்கூட அடையாளம் கிடைக்காமல், போன ஜனங் களெல்லாம் களைத்துப்போய் திரும்பி வந்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் எல்லோரும் போய்

எதிரில் நிற்பதற்காவது ஏதாவது வார்த்தை சொல்லுவதற்காவது ஒருவருக்கும் தைரியம் உண்டாகவில்லை. அன்றையதினம் மேல் என்ன நடக்கவேணும், பூஜாதிகள் நடக்கவேண்டியதெப்படி? போஜனம் முதலிய மற்ற வியவகாரங்கள் நடப்பது எப்படி? என்னும் விஷயத்தை சொல்லுகிறவர் யாரும் இல்லை. கேவலம் அராஜகம்போல் ஆகி பிரதி மனுஷியனுடைய சித்த விருத்தியும் ஸ்தம்பிதமாய் ஒருவரோடொருவர் வார்த்தை கூட சொல்லாமலே அவரவர்கள் அந்தந்த இடத்திலேயே சித்திரத்தில் எழுதிய பொம்மைகளைப்போல இருந்தார்கள். இந்த சங்கதி நடந்து இப்போது 32, 33 வருஷங்கள் ஆய்விட்டன. இப்போதும் கூட நடந்த சங்கதியை நினைப்பதும் அக்காலத்தை ஞாபகப்படுத்திக்கொள்ளுவதும் கூட ஸஹிக்க முடியாதென்று மனது பயப்படும்போது அந்த காலத்தில் எப்படி இருக்கலாமென்ற விஷயத்தை வாசகர்களே ஆலோசிக்கலாம். இந்த சமயத்தில் இந்த லேககன் கூடவே இருந்து அந்த மகாவிபத்தை அனுபவிப்பதில் தானும் பாகஸ்தனாயிருந்ததினால் இங்கே எழுதியிருக்கப்பட்ட எவ்வித சங்கதியும் அதிசயோக்தி என்று யோசிப்பதற்கு அவகாசமிருக்கமாட்டாது. திரியக்ஜந்துக்களான யானை, குதிரை, மாடு, கன்று இவைகளும் கூட தங்கள் ஆகாரத்தைக்கூட எடுத்துக்கொள்ளாமல் பிரமித்து நின்று கொண்டிருந்தன.

மடத்திலுள்ள எல்லா பிராம்மணர்களும் அவா

வர்களுக்கு தெரிந்திருந்த மந்திரங்களை ஜபம் செய்து கொண்டு எல்லாரும் ஸ்திரமான சித்தத்துடன் ஈசுவர பிரார்த்தனை செய்துகொண்டிருந்தார்கள்.

சாயங்காலம் 6, 7 மணிவரையிலும் எவரும் தைரியத்தை அவலம்பித்து அந்த தினத்திய காரியங்களை நடத்துவதற்கு பிரயத்னப்படாமலே இருந்து பிறகு இதர தேவர்களுக்கு பூஜை நடத்தி இராத்திரி சமையல் செய்வித்து இருந்த ஜனங்களுக்கு போஜனம் செய்விக்க மடத்திய அதிகாரிகள் பிரயத்தினம் செய்தார்கள். அன்று ராத்திரி 12 மணிக்கு மேல் சுமார் 1 மணி சமயத்தில் மற்ற பரிஜனங்கள் ஆகார சாஸ்திரத்தை செய்தார்கள்.

காலையில் 6 மணிக்கு உபாசனைக்காக பீடத்தில் உட்கார்ந்து கொண்ட ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இராத்திரி 10 மணிக்கு மேல் தாமாகவே எழுந்து பின்னும் ஸ்நானம் செய்து தீர்த்த பானத்திற்குக்கூட இடமில்லாமல் இருந்ததினுல் அப்படியே விச்ராந்தி அடைந்தார்கள். அந்தக்காலத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தாமாகவே யாரையாவது அழைத்து வார்த்தை சொன்னுல் அவர்களிடத்தில் கேட்ட கேள்விக்கு மாத்திரம் பதில் சொல்லக்கூடிய ஸ்திதியில் இருந்ததே தவிர வேறே யாரும் எந்த வார்த்தையையும் சொல்லுவதற்கு தைரியமேயில்லை.

மறு நாள்—என்றால் களவு நடந்த 3வது நாள்—இதன் விசாரணைக்காக சர்க்காரால் அனுப்பப்பட்ட

ராயதுர்க்கம் தாலூகா போலீஸ் இன்ஸ்பெக்டர் பிள ருப்பேக்கு வந்தார். இவர் ஸ்ரீவைஷ்ணவ பிராம்மண ருயும் ஸ்வாமிகளின் பூர்வாசிரமத்திய பிதாவான குணிகல் ராம சாஸ்திரிகளவர்களின் முக்கிய சிஷ்யரா யிருந்த விஜயராகவாச்சாரியருடைய சந்ததியைச் சேர்ந்தவராயும் இருந்தார். இந்த இன்ஸ்பெக்டர் இப்படிப்பட்ட காரியங்களைக்கண்டுபிடிப்பதில் வெகு சாமர்த்தியமுள்ளவரென்று பிரசித்தியும் நம்பிக்கை யும் பல்லாரி ஜில்லாவில் இவர் விஷயத்தில் சர்க்கார் அதிகாரிகளுக்கும் ஜனங்களுக்கும் உண்டாயிருந்தது. இந்த இன்ஸ்பெக்டர் வந்தவுடனே ஸ்ரீஸ்வாமிகளின் தர் சனத்திற்கு வந்தார். வந்தகாலத்தில் ஸ்ரீஸ்வாமிகள வர்கள் அனுஷ்டானத்திலிருந்தார்கள். அந்த சமயத் திலேயே அவர்களை தர்சனம் செய்து தன் வம்சா வளியை அவர்களுக்குத் தெரிவித்து தன்னிடத்தில் ஒரு விசுவாசம் அவர்களுக்கு உண்டாகும்படி செய்து கொண்டார். பிறகு வெகு தைரியத்துடன் அதி சுல பமாக நடந்து இருக்கிற காரியத்தைக்கண்டு பிடித்து சந்திரமௌளீசுவர ஸ்வாமியைக்கொண்டுவந்து ஒப்பு விக்கிறேன். அந்த விஷயத்தில் சிந்தைப்படவேண் டியதேயில்லை. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இவ்வளவு பிர யாசப்பட்டு உபாசனை செய்யவேண்டிய அவசியம் இந்த காரியத்தில் இருப்பதில்லை. தயவு செய்து பிக்ஷை செய்யவேண்டுமென்று தெரிவித்துக்கொண் டார்.

இன்ஸ்பெக்டருடைய ரூபத்தையும் அதற்குத் தகுந்த தைரியத்தையும் அதற்கு சரியான அவர் வார்த்தைகளையும் கேட்டு ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு அவரிடத்தில் அதிக ப்ரீதி உண்டாயிற்று. அப்போது ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அவரை நோக்கி "நாம் நரசிம்மனையே நம்பி அந்த மூர்த்தியின் தியானத்திலேயே இருக்கிறோம். ஆதி சங்கராச்சாரியாரவர்களுக்கு மதஸ்தாபனத்திற்காக நடத்திக்கொண்டிருந்த காரியங்களினால் உண்டான அதி மகத்தான ஆபத்துக்கள் லக்ஷ்மீ நரசிம்மனுடைய அனுக்கிரஹத்தினாலேயே பரிகாரமாயிருக்கிறதென்று சங்கர விஜய கிரந்தத்திலிருந்து தெரிய வருகிறது. நம்முடைய குருக்கள் நரசிம்ம உபாஸகராயிருந்து அதனால் அதிகமான பிரயோஜனத்தை அடைந்திருக்கும் விஷயம் நமக்குத் தெரிந்திருக்கிறது. இப்போது நமக்கு வந்திருக்கும் விபத்தைவிட பெரியது எதுவுமில்லை. ஜாதகரீதியாய் இந்த காலம் இந்த பாஞ்சபௌதிக சரீரத்திற்கு அபாயம் உண்டாகும்படி செய்யக்கூடியதென்று கேட்டிருக்கிறோம். இந்த காலத்தில் வைஷ்ணவ மதத்தை அவலம்பித்திருக்கிற உம்மை காரியத்தை முடிப்பதற்கு நாம் உபாஸித்து வருகிற தைவமான நரசிம்மனே தருவித்துக்கொண்டு வந்துவிட்டவனென்று நமக்கு பாவனை உறுதியாயிருக்கிறது. அது நிஜமாயிருக்கும் பக்ஷத்தில் உம்முடைய பிரயத்தினத்தினால் மறைந்து போயிருக்கிற் பாசிவமூர்த்தி பிரசன்ன

ஞய் நமக்கு திருஷ்டி கோசரமாகவே வேண்டும். அப்படியானல் ஜாதகரீதியாய் வரக்கூடிய மாரக தசையும் நிவர்த்தியாகக்கூடும். உம் கோரிக்கைப்படி இந்த அன்னமய சரீர போஷணைக்காக பிக்ஷை கிடைக்கலாமே தவிர அதற்கு வேறு விதமாக ஈசுவரசங்கல்பமிருந்தால் அந்தப்படியே நடப்பதல்லாமல் நம்முடைய பிரயத்தினத்தினுல் ஈசுவர சங்கல்பத்துக்கு விரோதமான ஆசாரணை ஒருக்காலும் ஆகமாட்டாது என்று அதிக கம்பீரமாய் சொன்னார்கள். பின்னும் நமக்கு வேண்டியது ஸ்வாமி மாத்திரமே தவிர மற்ற பதார்த்தங்களெல்லாம் அவைகளால் ஜீவனம் செய்யக்கூடிய பிராணிகளுக்கு உபயோகத்திற்காகவே இருக்கலாம் என்றும் தம் அபிப்பிராயத்தை இன்ஸ்பெக்டருக்கு குறிப்பித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்களின் உறுதியான சங்கல்பத்தை தெரிந்து கொண்ட அந்த அதிகாரிக்கு வேறே எந்த விதமான வார்த்தையும் தெரிவிக்க தைரியம் உண்டாகவில்லை. ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து "தன் பிரயத்தினம் ஸபலமாகும்படி தனக்கு அனுக்கிரஹிக்க வேண்டும்" என்று மாத்திரம் தெரிவித்துக் கொண்டு புறப்பட்டுப்போனார்.

இதில் 3 நாள் கழிந்து போய்விட்டது. ஸ்ரீஸ்வாமிகளின் மனது சலிக்கவில்லை. தைரியம் குறையவில்லை. உபாசனையில் அலுப்பு உண்டாகவில்லை. அதுவரையிலும் அனுகூலமான சமாசாரங்கள் ஒன்றும் கொஞ்சம்

கூட காதில் விழவே இல்லை. 5வது தினம் மத்தியானம் சமார் 12 மணிநேரத்தில் பிளகுப்பையிலிருந்து 3, 4 மைல் தூரத்தில் ஒரு பூமியை ஒரு குடியானவன் உழுதுகொண்டிருந்ததாயும் அவன் கலப்பையின் நுனி பட்டு சப்தம் உண்டானதின் மேல் பார்க்கும்போது ஒரு சிறியதாம்ர பெட்டி கிடைத்ததாக இன்ஸ்பெக்டருக்கு சமாசாரம் வந்திருப்பதாயும் அந்த இடத்திற்கு தான் போய் பார்த்து நிஜமான சங்கதியை சொல்லியனுப்புவதாக சமாசாரம் இன்ஸ்பெக்டரிடமிருந்து வந்தது. இந்த சமாசாரம் காதில் கேட்டடவுடனே போயிருந்த பிராணன் திரும்பி வந்தது போல் மடத்திலிருந்த எல்லா ஜனங்களும் தாங்கள் தாங்கள் செய்துகொண்டிருந்த ஜபதபங்களையும் மற்ற காரியங்களையும் விட்டு இன்ஸ்பெக்டரிடமிருந்து பின்னும் வரப்போகிற சமாசாரத்திற்காக வர்ஷ ஜலபிந்துவை சாதக பக்ஷிகள் எதிர் பார்ப்பது போல எதிர் பார்த்திருந்தார்கள். சமார் மத்தியானம் 2 மணிக்கு ஸ்வாமிகிடைத்திருப்பது வாஸ்தவம், மடத்தைச்சேர்ந்தஜனங்கள் வந்து பார்த்து ஸ்வாமியை எடுத்துக்கொண்டுபோகலாமென்று இன்ஸ்பெக்டரிடமிருந்து, 2-வது தடவை சமாசாரம் வந்தது. அந்தக்ஷணமே ஸ்ரீ மடத்திலிருந்து, பல்லக்கு பிருதுபாவலிகளுடன் எல்லா ஜனங்களும் வெகு உத்ஸாகத்துடன் புறப்பட்டு ஸ்வாமி கிடைத்த பூமி சமீபத்திற்குப் போனார்கள். 3, 4 மைல் தூரம் ஆபாலவிருத்தரும் ஓடினார்களென்

று சொல்லவேண்டியதல்லாமல் சாதாரண நடையாக ஒருவரும் நடந்து போகவில்லை. வெய்யிலின் கொடுமை என்றால் அதை வர்ணிப்பது சாத்தியமில்லை. மடத்திலிருந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களின் பரிவாரம் அங்கேபோய்ச் சேர்ந்த சமயத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டர் தன் பரிஜனங்களுடன் பெட்டியை தன் கையில் பிடித்துக்கொண்டு நின்றுகொண்டிருந்தார். திறந்து பார்த்ததில் ஸ்வாமிக்கு போட்டிருந்த தங்க கவசங்களை எடுத்துக்கொண்டு, சந்திரமௌளீசுவர லிங்கம் ரத்தகர்ப்ப கணபதி, இந்த ஸ்வாமிகளும், வலம்புரி சங்கம், ஆக இந்த 3 பதார்த்தங்கள் மாத்திரம் அந்த சிறிய பெட்டியில் வைத்து, நிலத்தில் வைக்கப்பட்டிருந்ததாகத் தெரியவந்தது. இந்த ஸ்வாமிகளை கண்ணால் அங்கே போன ஜனங்கள் பார்த்த 2-வது க்ஷணத்தில் திடீரென்று மழை ஆரம்பமாயிற்று. அது மழை காலமில்லை. அதற்குவேண்டிய குறிகளும் கொஞ்சமாவது இருக்கவில்லை. இப்படிப்பட்ட சமயத்தில் பல்லாரி ஜில்லாவில் மழை வரவேணுமானால் இதன் காரணத்தை எவரும் ஊஹிக்கும்படியாயிருக்கவில்லை.

அங்கே கிடைத்த ஸ்வாமி பெட்டியை பல்லக்கில் வைத்துக்கொண்டு விடாமல் பெய்துகொண்டிருக்கிற மழையில் நனைந்துகொண்டு சுமார் 5 மணிக்கு மடத்தின் வாசலில் வந்துசேர்ந்தார்கள். மடத்தின் வாசலில் உள்பிரவேசம் செய்த மாத்திரத்தில் தத்க்ஷணமே மழை நின்றுபோய் விட்டது. இதென்ன ஆச்சரியம்!

ஸ்வாமி பெட்டியை இன்ஸ்பெக்டர் பக்கத்திலி ருந்து ஸ்வாமிகளவர்கள் சன்னிதானத்தில் வைத்த வுடனே பீடத்தில் உட்கார்ந்திருந்த ஸ்வாமிகளவர் களின் சரீரம் பாய்ந்து கீழே விழுந்தது. கண்களில் தாரைதாரையாய் ஜலப்பிரவாஹம் புறப்பட்டது. சரீர மெல்லாம் நடுங்க ஆரம்பித்தது. சப்தம் வெளிப்படா மல் ஸ்தம்பித்துப் போய்விட்டது. இப்படியாக சுமார் அரைமணி காலம் அவர்கள் சித்தவிருத்தி பரவசமா யிற்று. கொஞ்ச நேரத்திற்குமேல் வெகு கருணையு டன் அங்கு வந்திருந்த இன்ஸ்பெக்டரை தன் சமீபத் தில் அழைத்து அவரை கட்டிக்கொண்டு அவர் சிரஸ் ஸில் அமிருதமயமான தம் ஹஸ்தத்தை வைத்து அவருக்கு அநேக ஜனங்கள் முன்னிலையில் செய்யப் பட்ட பரமானுக்கிரஹம் யாருக்கும் சாதாரணமாய்க் கிடைக்கக்கூடாததாயிருந்தது.

இந்த அதிகாரி இப்படிப்பட்ட மகானுபாவரிட மிருந்து இவ்விதமான அனுக்கிரஹத்தைப் பெற்றுக் கொள்வதற்கு இவருடைய புண்ய விசேஷம் எப்படிப் பட்டதாயிருக்கவேண்டுமோ, அதை அறிவது சாத்தி யமில்லை. இப்பால் அன்று சாயங்காலம் 6, 6½ மணிக்கு சூரியாஸ்தமாயிற்று இராத்திரி 7 மணிக்கு ஸ்நானம் ஆன்ஹிகம் முடித்துக்கொண்டு சந்திரமௌளீசுவா ஸ்வாமியை பூஜை செய்வதற்காக உட்கார்ந்த ஸ்ரீஸ்வா மிகள் அவர்கள் விடியற்காலம் 6 மணிக்கு பூஜையை சமாப்தி செய்தார்கள். அந்த தினத்தில் சந்தோஷம்

எப்படிப்பட்டதாயிருக்குமென்ற விஷயத்தை எவ்வித த்திலும் தெரிவிக்கமுடியாதது; தானே அனுபவித்துத் தான் தெரிந்துகொள்ளக் கூடியது. இந்தப் பிரகார மாக ஸ்வாமிகளவர்களுக்கு 32-வது வயதில் வந்த ஒரு பெரிய கண்டம் அவர்களுடைய நியமானுஷ்டானத் தினுல் பரிஹாரமாயிற்று. ஜகத்குரு சம்ஸ்தானத்தில் அவ்விடத்திய குரு பரம்பரையாக பூஜிக்கப்பட்டு வந் திருக்கிற சந்திரமௌளீசுவர லிங்கம், ரத்னகர்ப்ப கணபதி, இவைகள் ஆதி பகவத்பாதாசாரியர் அவர் களால் பூஜிக்கப்பட்டு அவர்களால் தக்ஷிணாம்நாய பீட த்தில் நியமிக்கப்பட்ட அவர்கள் சாக்ஷாத் சிஷ்யரான சுரேசுவராசாரியருக்கு வந்ததாயும் அதுமுதல் இதுவ ரையிலும் அந்த பரம்பரையில் குருக்களால் பூஜிக்கப்ப ட்டுவருகிறதாயும் தெரியவருகிறது. ஸ்ரீமதாசாரிய ஸ்வாமிகளவர்கள் காசி க்ஷேத்திரத்தில் இருக்கும்போ து விசுவேசுவரர் பிரத்தியக்ஷமாகி ஆசாரியர்களுக்கு 5 லிங்கங்கள் கைலாசத்திலிருந்தே கொண்டுவந்து பூஜிக் கும்படி அனுக்கிரஹம் செய்து கொடுத்ததாக, சிவ ரஹஸ்யம் என்னும் புராணத்தில் சொல்லப்பட்டிருக் கிறது. ஆசாரியஸ்வாமிகளவர்கள் விசுவேசுவர பிர சாதத்தினுல் கிடைத்த லிங்கங்களை தம் காலத்தில் பூஜை செய்துகொண்டிருந்து சன்மார்க்கப் பிரசார ணைக்காக தம்மால் ஸ்தாபிக்கப்பட்ட, சதுராம்நாய மடங்களிலும், ஒவ்வொரு லிங்கத்தை வைத்துப் பூஜிக் கும்படி தம் சிஷியர்களுக்கு ஆக்ஞை செய்து 1 லிங்

கத்தை சிதம்பர க்ஷேத்திரத்தில் வைத்து பூஜிக்கும்படி ஆக்ஞை செய்ததாக இதுவரையிலுள்ள ஜனவதந்தியினால் தெரியவருகிறது.

வெகு காலத்திற்கு முந்திய நடவடிக்கைகளைக் குறித்து இப்போது ஆலோசனை செய்து தீர்மானம் செய்யக்கூடிய அவ்வளவு சாமர்த்தியம் இக்காலத்திய நமக்கு இல்லவே இல்லை. இப்படிப்பட்ட ஆச்சரியமான விஷயங்களை சொல்லக்கூடிய நம்முடைய புராணங்களை நம்பி நமக்குண்டாகும் வீண் சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொள்வதற்கு பிராரப்த கர்மங்கள் நமக்கு அவகாசம் கொடுப்பதே இல்லை. இந்த காரணத்தினால் நாம் பார்க்கக்கூடிய பிரபஞ்சம், அதில் நமக்குள்ள அனுபவம், இதன்மேல் நமக்கு செல்லக்கூடிய புத்தி, இவைகளின் உதவியால் எப்போதும் ஆலோசனை செய்து வருவதிலேயே நம்முடைய காலத்தை வீணாய்க் கழித்து கஷ்டப்படவேண்டியதே தவிர ஏதாவது ஒரு விஷயத்தில் நம் பூர்விகர்கள் சொல்லியிருக்கும் சங்கதியை நம்பி அதன்மேல் அதற்கு அனுகூலமான யுக்திகளைத் தேடி விசாரம் செய்து விஷயத்தை நிஷ்கர்ஷை செய்துகொண்டு சுகத்தை அடையக்கூடிய அதிர்ஷ்டம் இக்காலத்தியவருக்கு எங்கிருந்து வருகிறது.

இது எப்படியாவது இருக்கட்டும். இப்போது நாம் சிருங்கேரி ஸ்ரீமடத்திலிருக்கப்பட்ட சந்திரமௌளீசுவரர் ரத்னகர்ப்ப கணபதி, இவைகளைப் பார்த்

தால் இவை, ஸ்படிகக்கல்போல் காணப்படுகிறது. ரத்ன பரீக்ஷைக்காரர்களிடம் பரீக்ஷை செய்து பார்த்தாலும் உத்தமமான ஸ்படிக சிலையை இத்துடன் சேர்த்துவைத்து ஒன்றுக்கொன்று தாரதம்மிய பரீக்ஷை செய்தாலும், இந்த ஸ்வாமி அளவிலுள்ள ஸ்படிக சிலையையும் சந்திரமௌளீசுவர சுவாமியையும் திராசில் வைத்து தூக்கிப் பார்த்தாலும் ஸ்படிக சிலையல்லவென்று தாராளமாக நிஷ்கர்ஷை செய்யவேண்டியதாயிருக்கிறது.

இந்த காரணத்தினுல் நவரத்னங்களில் ஒரு ஜாதி ரத்ன வகையில் சேர்ந்ததென்று தெரிந்துகொள்ள வேண்டும். அப்படி தெரிந்துகொள்வதில் புஷ்யராக ஜாதியைச் சேர்ந்ததென்று சிலர் அபிப்பிராயப்படுகிருர்கள். இதுவரையில் ரத்ன ஜாதியில் சேர்ந்த இவ்வளவு பெரிய ஆகாரமுள்ள ரத்னத்தில் ஸ்வாமியை அமைத்திருப்பது சாதாரணமாக யாருக்காவது திருஷ்டியில் விழுந்திருப்பதாக தோன்றவில்லை. இந்த ஒரு காரணத்தை நாம் யோசித்தாலும் இது அபூர்வமானதென்று ஒப்புக்கொண்டே தீரவேணும். அந்த சந்தர்ப்பத்தில் இது அமானுஷமானதென்று நம்முடைய புராணங்களில் சொல்லியிருக்கும் சங்கதியைநாம் நம்பின மாத்திரத்தில் நமக்குக்குறைவு ஒன்றுமில்லை. ஆனல் அந்த நம்பிக்கையினுல் விசேஷமான ஒரு பாவனை மனதில் உண்டாகி அந்த ஸ்வாமியை நாம் ஆராதிக்கிறதினுல் அதிகமான பிரயோஜனமுண்டாகிறது.



ஸ்ரீ மஹாஸ்வாமிகளின் பூஜாஸமயம்

ஒரு சமயம் இப்படி மேலே சொன்னதை நம்புவதி லும்கூட நமக்கு சில சந்தேகங்கள் பிறந்து நம்மை உபத்திரவிக்குமானாலும் கூட, இந்த ஸ்வாமி வெகு பெரியோர்களும் பரம சுத்தமான சரித்திரமுள்ளவரு மாக இருந்த அனேக மகானுபாவரான சிருங்கேரி மடத்திய குருக்களால் பூஜிக்கப்பட்டதாயிருக்கிற தென்ற விஷயத்தை நம்புவதிலாவது சந்தேகம் உண் டாகமாட்டாதல்லவா?

प्रतिमायां तु सान्निध्यं अर्चकस्य तपोबलात् ।

என்ற நியாயப்படி இந்த மூர்த்திகளில் ஈசுவர ஸான் னித்தியம் விசேஷமாயிருப்பதினால் இப்படிப்பட்ட பிம்பங்கள் மறைந்துபோகும் விஷயத்தில் இதைக் காட்டிலும் அதிகமான நஷ்டமும் மகத்தான விபத் தும் வேறே என்னவேண்டும். இந்த காரணத்தினால் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சந்திரமௌளீசுவரர் பிரிந்து போன காலத்தில் அவ்வளவு கடூரமான தபசு பண்ணி ஈசுவர பிரசாதத்தினால் திரும்பவும் அந்த மூர்த்திகளை அடைந்து லோகத்தின் க்ஷேமத்திற்காக அந்த மூர்த் திகளை பூஜித்து வந்து மேலால் தம் பரம்பரையில் உள் ளவராலும் அதுபோலவே பூஜித்து வருவதற்கு அனு கூலம் செய்தார்களென்று சொல்லவேண்டுமே யல்லா மல் வேறே ஒரு பிரயோஜனமும் அவர்களுக்கு சொந் தமாய் இருக்கவில்லை.

இது நடந்த பிறகு சிருங்கேரிக்கு திரும்பி வந்து தம் காலத்தில் கை தப்பிப்போயிருந்த ஸம்ஸ்தானத்

ஜிய முக்கிய பிராணமாயிருந்த மூர்த்திகளை தம் குருக்கள் அதிஷ்டானத்தில் ஒப்புவித்து பிற்பாடு அவர்கள் அனுக்கிரஹத்தைப் பெற்றுக்கொண்டு அதற்குப் பிறகு யாத்திரைக்கு ஆரம்பிக்கவேண்டுமென்று சங்கல்பித்து வெகு வேகமாய் பிரயாணம் செய்து சிருங்கேரிக்கு விஜயம் செய்தார்கள்.





## ៦-வது அத்தியாயம்.

### ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் மூன்றாவது யாத்திரை மைசூர் விஜயம்.

இரண்டாவது தடவை யாத்திரை செய்துகொண்டு சிருங்கேரிக்குத் திரும்பிவந்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இரண்டு வருஷகாலம் ஸம்ஸ்தானத்திலேயே வாசம் செய்து வித்யார்த்திகளுக்கு பாடம் சொல்லுவதிலும் ஸ்வத: கிரந்தங்களை பரிசீலனை செய்வதிலும் வித்யாபிரசாரம் செய்துகொண்டு தம்முடைய குருக்களின் பூஜையையும் ஸ்ரீசந்திரமௌளீசுவரர் பூஜையையும் ஆசரித்துக்கொண்டு ஆனந்தமடைந்திருந்தார்கள்.

இந்த காலத்தில் தாம் அத்தியந்த பாலிய வயஸ்ஸில் இருக்கும்போது தம் குருக்களின் பக்கத்திலிருந்து சஞ்சாரம் செய்துவந்த தக்ஷிணதேச யாத்திரை விஷயமாய் அம்பாள் பிரேரணையால் ஸ்வாமிகள் அவர்களின் மனதில் சங்கல்பம் உண்டாயிற்று. உடனே யாத்திரைக்கு வேண்டிய உபகரணங்கள் எல்லாம் சித்

தமாயிற்று. வழக்கம்போல் சர்க்கார் அவர்களால் ஆக வேண்டிய சகாயங்களைக் குறித்து ஆலோசித்து, தக்ஷிணதேச யாத்திரை சங்கல்பம் ஸ்ரீமன் மகாராஜா சாமராஜ உடையார் அவர்களுக்குத் தெரிவிக்கப்பபட்டது.

முந்திய ஸ்ரீநரசிம்ம பாரதீஸ்வாமிகள் அவர்களின் பரமானுக்கிரஹத்தினாலும் குலதேவதையான சாமுண்டேசுவரீ பிரசாதத்தினாலும் மைசூர் மகாராஜா சாமராஜேந்திர உடையார் அவர்களுக்கு சந்தான அபிவிருத்தியாகி ராஜகிருஹம் நந்தகோகுலம்போல பிரகாசமுள்ளதாயிருந்தது. இந்த சமயத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்களை தம் ராஜதானிக்கு வரவேற்றுக்கொண்டு ஈசுவரானுக்கிரஹத்தினால் கிடைத்திருக்கிற சந்ததிரூபமான சம்பத்தை அவர்களின் கருணை கடாக்ஷத்திற்கு பாத்திரமாகும்படி செய்து அவர்கள் அனுக்கிரஹத்தைப் பெறவேண்டுமென்ற குதூஹலம் பிரபுக்களின் மனதில் இருந்ததினால் ஸ்வாமிகளவர்கள் யாத்திரை விஷயமாய் அவர்களால் அனுப்பப்பட்ட ஸ்ரீமுகத்தை வெகு ஆதரவுடன் பெற்றுக்கொண்டு அவர்கள் சங்கல்ப பிரகாரம் பிரயாணமாகி தம் ராஜதானிக்கு விஜயம் செய்து தமக்கு தர்சனம் கொடுத்து அந்த சமயத்தில் நேரக்கூடிய சாதுர்மாஸ்ய சங்கல்ப வியாஸ பூஜாதி தர்மங்களை மைசூரிலேயே நடத்தி தமக்கும் தம் சந்ததிகளுக்கும் பரமானுக்கிரஹம் செய்து மேல் யாத்திரையை நடத்தவேண்டுமென்பதாயும் வழக்கப்படி தம்முடைய சர்க்காரிலிருந்தும் ப்ரிடிஷ் ஸர்க்காரி



மைசூர் மஹாராஜா சாமராஜேந்திர உடை
யாரும் அவர் புத்திரர் புத்திரிகளும்.

லிருந்தும் யாத்திரை விஷயமாக ஆகவேண்டிய சகாயங்கள் செய்துகொடுக்கும்படி தம் முக்கிய மந்திரிக்கு உத்திரவு செய்திருப்பதாயும் விக்ஞாபன பத்திரிகை மூலமாய் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களை பிரபுக்கள் பிரார்த்தித்தார்கள்.

காவருஷம் ஜ்யேஷ்ட பகுளபஞ்சமி சுக்கிரவாரம் தம் பரிவாரங்களுடன் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சிருங்கேரியிலிருந்து பிரயாணப்பட்டு ரிஷியசிருங்கமகரிஷி ஆசிரமமான கிக்க என்ற அக்கிரஹாத்திற்கு விஜயம் செய்து அங்கு வாசம் செய்தார்கள். மறுதினம் ரிஷ்ய சிருங்கேசுவர ஸ்வாமிக்கு மகாபூஜை செய்து, அந்த ஸ்வாமியின் பிரசாதத்தை ஸ்வீகரித்துக்கொண்டு சிக்கமகளூர், பேலூர், ஹாஸன் மார்க்கமாக பிரயாணம் செய்து ஆஷாடசுக்லத்விதீயை சுக்ரவாரம் மைசூர் ராஜதானியில் பிரவேசம் செய்தார்கள். முந்தின சம்பிரதாயத்தை அனுசரித்து விசேஷமான மரியாதையுடன் பிரபுக்கள் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களை வரவேற்றுக்கொண்டு அரண்மனையில் தூளிபாத பூஜை ஆனமேல், ராஜ புத்ரீ புத்ரர்களுக்கு ஸ்வாமிகளின் தர்சனம் செய்வித்து அந்தக் குழந்தைகளை அவர்கள் அனுக்கிரஹத்திற்கு பாத்திரராகும்படி செய்தார்கள். பிரபுக்களின் பக்தி விசுவாசங்களையும் அதற்கு அனுகுணமாக பலபூதராயிருக்கிற ராஜகுமாரர்களையும் பார்த்து பரமானந்த பரிதராகி ஸ்ரீசாரதா பிரசாதரூபமான ரத்னாபரணங்களினால் ராஜபுத்ரீ ராஜபுத்திரர்களை அனுக்கிரஹித்து

பிரபுக்களை நோக்கி "குருக்களுடைய அனுக்கிரஹத்தினால் பூர்ணராயிருக்கிறீர்கள்," என்பதாய் "प्रजया हि मनुष्यः पूर्णः" என்ற சுருத்யர்த்தத்தை ஞாபகப்படுத்தி அனுக்கிரஹித்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் வாசத்திற்காக சித்தப்படுத்தப்பட்டிருந்த நஞ்சராஜபகதூர் சத்திரத்தில் அவர்கள் வாசம் செய்து அங்கேயே சாதுர்மாஸ்ய சங்கல்பம் வியாஸபூஜை முதலிய ஆசிரம தர்மங்களையும் சரத் நவராத்திரி சம்பந்தமான சாரதாபூஜாதி மகோத்சவங்களையும் நிறைவேற்றினார்கள். சாதுர்மாஸ்ய தீக்ஷா காலமான இரண்டு மாதகாலம் சம்ஸ்தான சம்பந்தமான சிலவு முழுவதும் மகாராஜா அவர்களுடைய அரண்மனையிலிருந்து நிர்வஹிக்கப்பட்டது. மற்றும் இரண்டு மாதகாலம் சிஷ்யமண்டலிகள் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களை சத்கரித்தார்கள். இந்தப் பிரகாரம் நாலு மாதகாலம் ராஜதானியில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் வாசம் செய்தார்கள். அந்த வருஷத்தில் மழை இல்லாததினால் க்ஷாமத்திற்கு அறிகுறி கண்டுவந்தது. ஸ்ரீஸ்வாமிகள் நாலுமாதகாலம் தொடர்ச்சியாய் இடைவிடாமல் அந்தப் பட்டணத்தில் செய்துவந்த அன்னதானத்தினால் அநேக ஜனங்கள் க்ஷாம உபத்திரவத்திலிருந்து தப்பித்துக்கொண்டார்கள்.

மைசூர் சம்ஸ்தானம் வைதிக வித்யையில் தேர்ந்தவரான பண்டிதர்களுக்கு முக்கியமான ஒரு ஆச்ரயஸ்தானமாகும். முந்திய புறு ஸ்ரீமந்த பாஜீ ராயர்

அவர்களின் அவலம்பம் நின்றுபோனபிறகு அந்த சம்ஸ்தானத்திலிருந்த மகா மகா பண்டிதர்களெல்லாம் வறண்டுபோன குளத்திலுள்ள தாமரஸ புஷ்பங்களை விட்டு ராஜஹம்ஸங்கள் மற்றொரு ஜலாசயத்திலுள்ள பத்ம பங்க்திகளைச் சேர்வதுபோல் மைசூர் சம்ஸ்தானத்திய பிரபுக்களான மும்மடி கிருஷ்ணராஜ பிரபுக்களை அடைந்து அதுமுதல் இந்த சம்ஸ்தானத்திய மகாராஜாக்களால் ஆதரிக்கப்பட்டு அநேக பண்டிதர்கள் மைசூர் ராஜதானியில் ஸ்திரமாய் வாசம் செய்துகொண்டிருந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் கர வருஷத்தில் மைசூர் ஸம்ஸ்தானத்திற்கு விஜயம் செய்திருந்த காலத்திலும் பிரசித்தர்களானவர்களில் பண்டிதரத்னம் சீதாராம சாஸ்திரிகள், பண்டிதரத்னம் கஸ்தூரி ரங்காசாரியார், தர்மாதிகாரி காசி ராமா சாஸ்திரிகள், தர்மாதிகாரி கும்பகோணம் சேஷாசாரியார், தஞ்சாவூர் ஜில்லா பழமாநேரி சுந்தர சாஸ்திரிகள், காமகுண்டுலு சாமாசாரியார், விபாகம் ஸ்ரீகண்ட சாஸ்திரிகள், இவர் முதலிய சில பண்டிதர்கள், தர்க்க வியாகரண வேதாந்த சாஸ்திரங்களில் தேர்ந்த ஞானமுள்ளவர்கள் ஆஸ்தான வித்வான்களாக இருந்தார்கள்.

இந்த காலத்தில் ஸம்ஸ்கிருத வித்யையின் அபிவிருத்திக்காக ஸ்ரீமான் மகாராஜா சாமராஜ உடையார் அவர்களால் ஒரு பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டு மேலே சொன்ன பண்டிதர்களே அந்த பாடசாலையில் வித்யார்த்திகளுக்கு வேதசாஸ்திராத்யயனம் செய்விக்கும்

விஷயத்திலும் நியமிக்கப்பட்டிருந்தார்கள். முந்திய கிருஷ்ணராஜ பிரபுக்கள் காலத்தில் மைசூர் ஸம்ஸ்தானத்திலிருந்த பண்டிதர்களையும் அக்காலத்தில் அவர்களால் பாரமார்த்திகமாய் செய்யப்பட்டு வந்த வித்யா பிரசார ஸ்திதியையும் அறிந்தவர்களுக்கு அதிலிருந்து இப்பால் இருக்கும் ஸ்திதியைப் பார்த்தால் வெகு கேவலமான ஸ்திதியிலிருப்பதாக தோன்றிக்கொண்டிருந்தது. பிரகிருத ஸ்திதியை ஆலோசித்தால் மிகவும் ஆச்சரியகரமாயிருக்கிறது. இப்போதுள்ள மகாராஜா நால்வடி கிருஷ்ணராஜ பிரபுக்களவர்களுக்கு வேதசாஸ்திரங்கள் விஷயத்தில் பிராமாண்ய புத்தி ஸ்திரமாயிருக்கிறது. ஸம்ஸ்கிருத வித்யாபிரசாரத்திற்காகவும் பண்டிதர்களின் சம்ரக்ஷணைக்காகவும் பத்து மடங்கு அதிகமாக சிலவு சம்ஸ்தானத்திலிருந்து நடத்தப்படுகிறது. இப்படியிருந்தும் முந்திய ரீதியில் நூற்றில் அல்லது ஆயிரத்தில் ஒரு அம்சம்கூட ஸம்ஸ்கிருத வித்யாபிரசாரமும் நல்ல பாண்டித்யமும் இல்லாமலே ஆய்க்கொண்டு வருகிறது. காலமஹிமையோ? விசாரமில்லாத அவிவேகத்தின் பலமோ? அல்லது ஈசுவர சங்கல்பமோ? எது காரணமாயிருக்கலாமென்று நிச்சயிப்பதற்கு அசக்யமாயிருக்கிறது. வைதிக வித்யையை வித்யையில் பரிகணனம் செய்வதற்குக்கூட பின் வாங்கவேண்டி வந்து இருக்கிறது. முந்தி வேத சாஸ்திராத்யயனம் செய்து பண்டிதரென்று பிரசித்தர்களாயிருப்பவர்கூட இக்காலத்தில் தம் விஷயமாக

ஜனங்களுக்கு உண்டாயிருக்கும் உதாஸீனதையில் பிரமத்தை அடைந்து தம் பிரயாஸம் நிஷ்பலமாயிற்று. தம் காலத்தை வேதசாஸ்திர அத்யயனத்தில் வீணாக கழித்து புத்திஹீனராமேனமென்று தங்களுக்குள் தாங்களே வியசனப்படும்படியாய் விட்டது. தங்கள் புத்திரர்களை தங்களைப்போல் வீணாக காலம் கழித்து வேதவித்யையில் பிரவேசிக்காமலிருக்கும்படி பார்த்துக்கொள்வதில் ஜாகரூகதையை எடுத்துக்கொள்ளும்படியாயிற்று. பிராமணர்களிடத்தில் ஸகஜமாய் ரக்தத்தில் கலந்துவந்த சந்தோஷம் போனமார்க்கமே தெரியாமல் போய்விட்டது. ஆசை என்னும் பிசாசம் கால் முதல் தலை வரையில் உட்புகுந்து எக்காலத்திலும் தன்னுடைய சேஷ்டையைக் காண்பிக்கும் சந்தர்ப்பம் நேர்ந்து வந்திருக்கிறது. அப்படிப்பட்ட துஷ்டக்கிரஹத்தை ஓட்டுவதற்காக பிராமணர்களிடத்தில் ஹஸ்தகதமாயிருந்த மந்திரங்களின் சக்தி மிகவும் மந்தமாய்விட்டது. இதெல்லாம் இப்போதுள்ள ஸ்திதியினால் உண்டாகக் கூடிய துஷ்ட பலங்களை அனுபவிக்கவேண்டிய பிராணிகளுடைய அதிருஷ்டமேயல்லாமல் மற்ற எதினுடைய மாகாத்மியமென்று சொல்லலாம்?

வர்த்தமான பிரபஞ்சத்தில் புருஷ சிரேஷ்டர் பூர்வாபரவிசாரபார் (முன் பின் ஆலோசனையுள்ளவர்) சூக்ஷ்மபுத்தியுள்ளவர் பிரபஞ்சோத்தாரகர்கள் நாமே என்று இந்த அபிமானம் ஆபாலவிருத்தர்களுக்

கும் ஒரே விதமாய் நின்றுகொண்டு, பரம த்ருப்தர்களாயும், தூரதர்சிகளாயும், அபிமானமற்றவர்களாயும், சுத்தமான சரித்திரமுள்ளவர்களாயுமிருந்த முந்திய ஜனங்கள் நம்மால் திரஸ்கரிக்கப்பட்டார்கள். அவர்களால் ஆதிரிக்கப்பட்டுவந்த வேத சாஸ்திரங்கள் புத்தியில்லாதவர்களுடைய உபயோகத்திற்காக பத்திரப்படுத்தப்பட்டது. ஆனால் இக்காலத்தில் ஜனங்களின் தீர்மானம் மனுஷியனுடைய தாரதம்மியத்திற்கு அனுகுணமாக ஈசுவரனால் கொடுக்கபபட்ட புத்தியினால் ஆலோசனை செய்து நிச்சயிக்கப்பட்டதா? அல்லது அவிவேகத்தினால் செய்யப்பட்ட தீர்மானமா? என்ற சந்தேகம் சிலபேர்களை பாதித்துக்கொண்டிருக்கிறது. இக்காலத்திய நம் சித்தாந்தமே நியாயமாயும் யுக்தியுக்தமாயும் இருக்கும்பக்ஷத்தில், ஒவ்வொரு பிராணிக்கும் சுகத்தில் அபிலாஷையும் துக்கத்தில் வெறுப்பும் ஸ்வபாவமாயுள்ளதென்னும் விஷயத்தில் எவருக்கும் சந்தேகமில்லையே? அப்படி அபேக்ஷிக்கிறவர்கள் தம்முடைய பிரயத்தினத்தினாலேயே தங்கள் இஷ்டம் போலே சுகத்தைப் பெறுவதிலும் துக்கத்தை வராமல் தடுத்துக்கொள்வதிலும் சாமர்த்தியமுள்ளவர்களாயிருக்கையில் யாரும் எந்த சந்தர்ப்பத்திலும் துக்கத்தை அடையாமலே சுகமுள்ளவர்களாகவே இருக்கவேண்டும். இது மாத்திரம் எவருக்கும் அனுபவத்தில் வந்திருப்பதாக சொல்லுவதற்கு அவகாசமில்லையாகையால் நம்முடைய சித்தாந்தம் ஆலோசனையில்லா

மலுண்டான ஸித்தாந்தமென்று ஸிலராவது அபிப்பிரா யப்படாமலிருக்கமாட்டார்கள். ஆகையால் இந்த நம் ஸித்தாந்தத்தின் விஷயத்தில் கொஞ்சமாவது ஆலோசனை செய்து தீர்மானம் செய்துகொள்ளவேண்டியது ஆவசியகம்.

சகல பிராணிகளும் அபேக்ஷிக்கக்கூடிய சுகத்தை சம்பாதிப்பதில் திரவியம் ஒன்றே முக்கியகாரணம். இந்த விஷயத்தில் பிரமாணம் பர்த்துருஹரி சுபாஷிதத்தில் சொல்லியிருக்கும்,

यस्यास्ति वित्तं स नरः कुलीनः स पण्डितः स श्रुतवान्गुणज्ञः ।
स एव वक्ता स च दर्शनीयः सर्वे गुणाः काञ्चनमाश्रयन्ति ॥

சுகத்திற்கு சாதனமான திரவியத்தை சம்பாதிக்கவேண்டுமானால் வித்யாப்பாஸம் அதிக ஆவசியகமானது. திரவியசம்பாதனைக்கு காரணமான வித்யையென்றால் இங்கிலீஷ் பாஷாஜ்ஞானமே. இந்த ஜ்ஞானமில்லாதவர்கள் பசுக்களுக்கு சமானம். ஆகையால் இங்கிலீஷ் பாஷை அப்யாஸம் செய்யவேண்டும். வியாபாரத்தை நடத்தவேண்டும். ஸர்க்கார் உத்யோகத்தை சம்பாதிக்கவேண்டும். இங்கிலீஷ்பாஷையில் பூர்ணஜ்ஞானம் சம்பாதித்து பரீக்ஷை கொடுத்து தேர்தலடையவேண்டும். சர்க்காரிடமிருந்து ஸன்னது வாங்கி நியாயஸ்தலங்களில் வியவஹாரம் செய்யவேண்டும். பௌதிக (ஸைன்ஸ்) சாஸ்திரத்தைக் கற்று அதில் தேறி பஞ்சபூதங்களின் சேர்க்கையால் நடக்

க்கூடிய வியவஹாரங்களை நடத்துவதற்கு யத்னம் செய்யவேண்டும். தீவாந்தரத்தில் போய் வாசம் செய்வதாலும் அங்குள்ளவர்களின் சகாயத்தினாலும் திரவியசம்பாதனம் செய்யவேண்டிய ரீதியைத் தெரிந்துகொள்ளவேண்டும். ஒவ்வொருவனும் விவேசனை யில்லாமல் ஏதாவது ஒரு கைத்தொழில் செய்வதில் சக்தியை சம்பாதித்துக்கொள்ளவேண்டும். ஸ்திரீ, புருஷர், என்ற இரண்டு பேதமேயல்லாமல் மற்ற எவ்வித பேதங்களும் நிர்ப்பந்தங்களும் ஜனங்களுக்கு இருக்கக்கூடாது. ஒவ்வொருவனுக்கும் ஸ்வாதந்திரியம் இருக்கவேண்டுமே தவிர, யஜமானன் சேவகன், என்ற வித்யாசம் எந்த சந்தர்ப்பத்திலும் இருக்கக் கூடாது. இந்தப் பிரகாரம் எல்லா ஜனங்களும் நடக்கும்படி ஆனுல் அப்போது தான் தேசம் உயர்ந்த ஸ்திதிக்கு வரும். வித்வத்து அப்போது வந்ததாக ஆகிறது. திரவிய லாபம் ஏற்பட்டுவிட்டால் நாம் அபேக்ஷிக்கும் சுகம் அடைந்ததாக ஆகிறது என்பது நம்முடைய இக்காலத்திய சித்தாந்தமாயிருக்கிறது.

இந்தப்படி மேலேசொன்ன சித்தாந்தம் யுக்தி யுக்தமானதா, அல்லவா? இதன்மேல் உண்டாகக் கூடிய ஆக்ஷேபணைகளை சமாதானப்படுத்தி சித்தாந்தத்தை நிலைநிறுத்துவது சாத்தியமோ? அசாத்தியமோ, அது எப்படியாவது இருக்கட்டும். சகல ஜனங்களாலும் ஆதரிக்கப்படுவதாயும், அபேக்ஷிக்கப்

படுவதுமான சுகம் எது? அதின் ஸ்வரூபமென்ன? இந்த அம்சத்தை முன்பு நிர்மானம் செய்துகொள்ள வேண்டும். அப்படி விசாரம் செய்து நிஷ்கர்ஷை செய்யப்படும் சுகலாபத்தில் நம் சித்தாந்தத்திற்கு அபிமதமான திரவியம் ஒன்றே காரணமோ? அல்லது அதைக்காட்டிலும் அதிகமான காரணங்கள் இருக்கவேண்டுமோ? திரவிய சம்பாதனை இக்காலத்தியவர்களால் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிற ஆசாரனையை ஆசரிப்பதால் எந்த சந்தர்ப்பத்திலும் வியர்த்தமாகாமல் காரிய சாதனம் ஆகிறதோ? அல்லது திரவிய சம்பாதனை என்னும் காரியத்தை சாதிப்பதற்கு வேறு நம்முடைய சித்தாந்தத்தில் சேராமலிருக்கும் காரணங்கள் ஏதாவது இருந்து, அதுவும் ஆவசியகமோ? என்று ஆலோசனை செய்து நம் பிரகிருத சித்தாந்தத்தை ஸ்தாபித்துக்கொண்டால் ஒருவனுக்கும் இந்த விஷயத்தில் அபிப்பிராயபேதமில்லாமல் மனோநிச்சயம் உண்டாகி எல்லாரும் ஒரேவிதமான பிரயத்னம் செய்து சுகத்தை அடைவதற்கு மிகவும் அனுகூலமாகும். தேசோன்னதி உண்டாகி யஜமானன் சேவகன் என்ற வித்யாசம் நீங்கி எல்லாரும் ஸ்வதந்திரராகவே ஆகலாம்.

சுகம் துக்கம் என்ற இரண்டு பதார்த்தங்களும் தத்காலத்தில் உண்டாகக்கூடிய மனோவிருத்திகளே அல்லாமல் இவைகளுக்கு வேறே ஒருவிதமான ஸ்வரூபமும் இல்லை. இப்படி மனோவிருத்திரூபமான

சுகதுக்கங்கள் எல்லா பிராணிகளுக்கும் ஒரேவிதமாயிருப்பதென்றும் நிச்சயிப்பதற்கு சாத்தியமாக மாட்டாது. சாமான்யமாய் நாம் தெரிந்துகொண்டிருக்கிற சுகதுக்கங்களுக்கு காரண சாமக்ரிகள் வெவ்வேருகவே ஏற்பட்டிருப்பதினுல் காரியரூபமான சுகதுக்கங்களிலும், வித்தியாசம் இருந்தே தீரவேண்டுமல்லவா? பசி உபத்திரவத்தை தீர்க்கவேண்டியதற்காகவும் அன்னமயமான சரீரத்தை போஷணை செய்வதற்காகவும் எந்தப் பிராணிக்கும் ஆகாரம் ஆவசியகமாயிருக்கிறது. அப்படி செய்யப்படும் ஆகாரத்தினுல் உண்டாகக்கூடிய திருப்தி எல்லா பிராணிகளுக்கும் ஒரேவிதமாயிருக்குமென்று சொல்லுவதில் இதற்கு விரோதமாக பிரதிவாதம் செய்கிறவர்கள் அநேகமாய் எவரும் ஏற்படாமலிருக்கலாம். இப்படியிருந்தாலும் இப்படிப்பட்ட ஆகாரவிஷயத்திலும் சில சந்தர்ப்பங்களில் பிராணிகளுக்கு வெறுப்பும் துவேஷபுத்தியும் உண்டாவதினுல் எல்லா காலங்களிலும் எல்லாராலும் ஒரேவிதமாக ஆகாரத்தை சுகமென்று ஒத்துக்கொள்ளப்பட்டதாக ஆகாமலிருக்கையில் சுகலக்ஷணம் இதில் வந்ததாக ஆகவில்லை. நித்திரை எல்லா பிராணிகளுக்கும் சுககரமென்பதாயும் இந்த சுகம் சாதாரணமாக எல்லாராலும் ஒரேவிதமாக அபேக்ஷிக்கப்படுகிறதென்றும் சொல்லலாம். இப்படி சுகஸ்வரூபமான நித்திரையைக்கூட எவ்வளவோ ராத்திரிகளில் விட்டுவிட்டு நாம் வேறே வேறே காரியங்க

ளில் பிரவிருத்தி செய்வது நாம் அனுபவத்தில் கண்டு வரும்போது நித்திரை எல்லாருக்கும ஒரேவிதமாக சுககாரணம் என்று சொல்வது எப்படி? இதில்தான் சுகலக்ஷணம் எங்கு இருந்ததாக ஆயிற்று? முக்கிய மாக ஆகாரம், நித்திரை, இவ்விரண்டையுமல்லவா நாம் மனுஷியனுக்கு சுகமென்று நம்பி நம்முடைய எல்லாவிதமான பிரயத்னங்களையும் இவைகளுக்கா கவே நடத்துகிறவர்களாயிருக்கிறோமென்று வெகு வாக ஆலோசனை செய்தால் நிஷ்கர்ஷை ஆகக்கூடி யது. இவ்விரண்டிலும் சுகலக்ஷணம பூர்த்தியாக வரவில்லை என்று மேலே காட்டியிருக்கிறது. இவ்வி ரண்டும் சுகமென்று ஒப்புக்கொள்ளும்பக்ஷத்தில், இவைகள் விஷயத்தில் திருப்தியுண்டாயிருக்கும் சந் தர்ப்பத்திலாவது மற்ற காரணங்களால் வெறுப்பு உண்டாயிருக்கும் சந்தர்ப்பங்களிலாவது போதுமெ ன்ற புத்தி வரவேகூடாது. போதுமென்ற புத்தி எதில் எப்போதாவது ஒரு சமயத்தில் வந்தாலும் அது சுகலக்ஷணத்தில் சேராதாகையால், சுக மென்று சொல்லப்படுவதில்லை ஆகாரநித்திரை விஷ யமே இப்படி முடிவுபெற்றிருக்கும்போது இந்த பிர பஞ்சத்தில் எதுதான் சுகமாக இருக்கலாம? இந்த விஷயத்தில் ஒவ்வொரு பதார்த்தத்தையும் அதின் உபயோகத்தையும அதின் பிரயோஜனத்தையும் சாவ காசமாக ஈஸ்வரன் கொடுத்திருக்கிற புத்தியை கொஞ் சம் உட்புகுத்து ஆலோசனை செய்தால் நாம் தெரிக்

துகொண்டிருப்பது நாம் அநுபவித்துக்கொண்டிருப்பது ஒன்றும் ஒரு பதார்த்தமும் சுகமும் அல்ல, சுகஸாதனமும் அல்லவென்று வெளியாகாமல் போவதில்லை. இந்தப்படி உபயோகமில்லாத சுகத்தை சம்பாதிப்பதற்கும் அநுபவிப்பதற்கும் மனுஷ்யனுகவே பிறக்க வேண்டுமென்ற நிர்ப்பந்தமாவது அந்தப்படி மனுஷிய ஜன்மம் வந்ததற்கு பிரயோஜனமாவது ஒன்றுமிருக்கவில்லை. ஆகார வியவகாரங்கள் பசு, பக்ஷி, மிருகம் முதலியவைகளுக்கும் சாதாரணமானதே தவிர விசேஷமொன்றுமில்லை. ஆகையால் இதர பிராணிகளுக்கு முடியாமல் மனுஷியனுல் மாத்திரம் அடையக்கூடியதாயும் முக்காலத்திலும் நாசமில்லாததாயும் இருக்கப்பட்ட சுகம் வேறென்று உண்டென்று நம்பவேண்டும். அப்படிப்பட்ட சுகமே ஸர்வஜநங்களாலும் அபேக்ஷிக்கப்படுகிறது. அந்த சுகத்தை அடைவதற்கு சாதனங்கள் வேறே இருப்பதாகவே ஒப்புக்கொள்ளவேண்டும். அந்த சாதனத்தையும் அந்த சாதனத்தினுல் சாதிக்கக்கூடியவற்றையும் சொல்லக்கூடியதும் போதிக்கக்கூடியதுமே வித்யை என்று ஒப்புக்கொள்ளவேண்டும். அப்படிப்பட்ட வித்யையை அப்பியாஸம் செய்தால் நாம் இழந்துவிட்ட திருப்தி மறுபடியும் நம்மை தேடிக்கொண்டுவரும். சுற்றிக்கொண்டிருக்கிற ஆசையென்னும் பிசாசமும் தானுகவே ஓடிப்போகும். அப்போதே நமக்கு ஸ்வாதந்திரியம் உண்டாகும்.

நமக்கு வந்திருக்கிற மனுஷிய ஜன்மத்திற்கு பிரயோ ஜனம் அப்பொழுதே உண்டாகும்.

இக்காலத்திய நம்முடைய அறிவும் பிரயத்னமும் ஆசரணையும் இவைகளெல்லாம் அபேக்ஷிக்கப்படுகிற சுகப்பிராப்திக்கு எப்போதும் நிஜமான காரணமாகிற தில்லை. நாம் துக்கத்தையே சுகமென்று பிராந்தியால் தெரிந்துகொண்டு புத்தியில்லாமையால் முடிவைக் காண்பதற்கு அவகாசமில்லாமலாகி பைத்தியக்காரன் போல் உளருவதற்கும் பைத்யக்காரரின் வியவஹாரங் களைப்போல் வியாபாரங்கள் செய்யவும் பிரவர்த்தித் திருக்கிறோமென்ற விஷயத்தில் சந்தேகமொன்று மில்லை. மதகரமான (லாகிரி) வஸ்துக்களை சுகஹேது வென்று பிராந்தியினுல் தெரிந்துகொண்டு சேவனை செய்தால் நம் பாவனையால் அதிலுள்ள குணம் விலகி நம் பாவனைக்குத் தகுந்தபடி சுகத்தைக் கொடுக்கக் கூடிய சக்தி அதற்கு எங்கேயிருந்து வரும்? அந்தந்த பதார்த்தங்களில் இருக்கக்கூடிய குணங்கள் அந்தந்த பதார்த்தங்களுக்கு சகஜமாய் உண்டானவைகளல் லவா? வேப்பம்பழம் தித்திப்பு என்றும் மாம்பழம் கசப்பு என்றும் நாம் தெரிந்துகொண்டமாத்திரத்தில் நம் அறிவுக்குத் தக்கபடி மாறுதலடையுமா? ஆனுல் நமக்கு அவிவேகத்தினுலாவது, அப்பியாசத்தினுலா வது, ஹடத்தினுலாவது, அகங்காரத்தினுலாவது, குணமில்லாத பதார்த்தங்களை குணமுள்ளவைகளாக நாம் அறிந்துகொள்வதினுல் அப்படி தெரிந்துகொண்

டிருக்கிறவர்களுக்கு அது அனுபவிக்கக் கூடியதாய் ஆகுமே தவிர நிஜமான அவைகளின் குணங்கள் மாறுதலடைந்து சர்வ ஜனங்களுக்கும் சாதாரணமாய் அனுபவிக்கக் கூடியதாக ஆகிறதில்லை.

சுகசாதனமான திரவிய சம்பாதனத்தில் இக்காலத்திய மகான்களால் நிச்சயிக்கப்பட்டிருப்பதே காரணங்களாயிருக்கும் பக்ஷத்தில் இந்த மகா பிரயோஜனத்தை கொடுக்கக்கூடிய தனம் எவருக்குத்தான் வேண்டியதாயில்லை. எல்லாராலும் அபேக்ஷிக்கக்கூடிய சுகசாதனத்தை சம்பாதிப்பதற்காக ஒவ்வொருவரால் உபதேசிக்கப்பட்டு பிரயத்னப்படவேண்டிய அவசியம் உண்டோ? அப்படி பிரயத்னப்படுகிறவர்கள் எல்லோரும் தங்கள் பிரயத்தினத்திற்கு அனுகுணமாக பிரயோஜனத்தை அடைந்து சுகத்தை அனுபவித்திருக்கிறாரோ ஏராளமாக திரவியத்தை சம்பாதித்து இருக்கிறவர்களுக்கு திருப்தி உண்டாயிருக்கிறதோ? அவர்களுக்கு துக்க சம்பந்தமே இல்லாதபடி சுகானுபவம் மாத்திரம் தான் உண்டாகி வந்திருக்கிறதோ? மனுஷியப் பிரயத்தினத்தினலேயே எல்லாம் சாத்தியம் என்று சொல்லுகிறவர்களாய் அந்த விஷயத்தையே உறுதியாய் நம்பியிருக்கிறவர்கள் தேசத்தின் உன்னத ஸ்திதிக்கும் ஸ்வாதந்திரியம் சம்பாதித்துக்கொள்வதற்கும் இந்த இந்தியா தேசத்தில் தத்காலத்தில் அவதரித்து லோகத்தின் ஹிதத்திற்காகவே பிரயத்தினப்படுகிறவர்களில் அநேகருடைய

அபிப்பிராயத்தையும் அவர்களுடைய உபதேசத்தை யும் ஆலோசித்துப் பார்த்தால் தங்கள் இஷ்டம் சித் தியாக வேண்டியதற்காக, உதாசீனராக இருக்கவேண் டும். சர்க்கார் உத்தியோகங்களை விட வேண்டும். சர்க் காரிலிருந்து கொடுக்கப்படுகிற கௌரவத்திற்கும் பிர திஷ்டைகளுக்கும் ஆசைப்படக்கூடாது. தேசாந்தரம் த்வீபாந்தரங்களிலிருந்து வரும் சாமான்களைப் பார்த் து மயங்கக்கூடாது. அன்யதேசத்திய வித்யையைக் கற்றுக்கொள்ளப் பிரயத்தனம் செய்யக்கூடாது ஒற் றுமை அதிகமாக சம்பாதிக்கவேண்டும். காமக்ரோ தாதிகளினால் ஒருவருக்கொருவர் கலஹம் செய்து கொண்டு இதன் தீர்மானத்திற்காக மற்றவர்களிடத் தில் போகக்கூடாது. இது முதலான சூத்திரங்களை வைத்துக்கொண்டு இதன் அர்த்தத்தை விஸ்தாரமான வியாக்கியானங்கள் மூலமாய் ஜனங்களுக்கு போத னம் செய்துகொண்டு வருவதாய் தெரியவருகிறது.

மேற்கண்ட உபதேசத்தை நன்றாக ஸ்வீகரித்து அதன் அர்த்தத்தை நன்றாக யோஜித்து அந்தப்படி நாம் நடப்பதற்கு தைரியத்தையும் ஸ்திரதையையும் அடையும்பக்ஷத்தில் அதன் முடிவு எங்கேவந்து சேரு கிறது. முதலாவது திருப்தியை சம்பாதிப்பது, இரண் டாவது உதாஸீன பாவம், மூன்றாவது மனோதைரியம் இவைகள் தானே பிரயோஜனமாக ஏற்பட்டதாக ஆகிறது?

இந்த பிரயோஜனங்களை சம்பாதிப்பதற்காக

எப்போதும் மனதிற்கு கஷ்டத்தை கொடுக்கக்கூடிய காரியங்களை எதற்காக செய்யவேண்டும்? திரவியத்திலும் சிரமத்திலும் சம்பாதிக்கக்கூடியதாயும் அல்ப்பலத்தை கொடுக்கக் கூடியதாயுமுள்ள இங்கிலீஷ் அப்பியாஸம் செய்யவேண்டும்! தேசாந்தரங்களிலும் தீவாந்தரங்களிலும் வாசம் செய்வதும், அங்குள்ள ஜனங்களுடன் சகவாசம் செய்வதும் எதற்காக அபேக்ஷிக்கப்பட வேண்டும்? ஜாதி பேதங்களையும், ஆசார வியவகார நியமங்களையும் ஏன் விடவேண்டும்? இராஜ விரோதத்தினால் உண்டாகக்கூடிய பலன் என்ன? இந்த பிரயாசத்தைக் காட்டிலும் நம்மிடமிருக்கிற அகங்காரத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக்கொண்டுவந்து நம்முன்னோர் விஷயத்திலும் அவர்கள் எழுதிவைத்திருக்கும் கிரந்தங்கள் விஷயத்திலும் ஏற்பட்டுள்ள திரஸ்கார புத்தியைவிட்டு நம்பிக்கையும் கௌரவமும் அதிகமாகும்படி செய்துகொண்டுவரும் பக்ஷத்தில், ஏறிப்போயிருக்கும் மோகம் கிரமம் கிரமமாய் இறங்கி சித்தம் நிர்மலமாகி சுகஸ்வரூபத்தையும் அதன் சாதனத்தையும் தேடுவதற்கு நாம் சாமர்த்தியமுள்ளவர்களாகி நம்மால் பிரார்த்திக்கக்கூடிய சுகத்தை அடைவதற்கும் துக்கத்தை விலக்குவதற்கும் தகுந்தவர்களாகி சுகத்தை அனுபவிக்கலாமேயல்லாமல் வேறே எந்த வழியிலும் இஷ்டார்த்தசித்தி ஆகமாட்டாது.

வேதசாஸ்திரப் பிரசாரவிஷயத்திலும், பண்டி

தர்களை ரக்ஷிக்கும்விஷயத்திலும் கங்கணம் தரித்திருக்கிற ஸ்ரீமன்மகாராஜா நால்வடி கிருஷ்ண ராஜபிரபுக்கள் அவர்கள் எவ்வளவு அநுகூலம் ஏற்படுத்திக்கொடுத்திருந்தாலும் பிரதிக்ஷணமும் க்ஷீணதசையை அடைந்திருக்கிற வைதிகர்களேயும் வேதவித்யையும் விற்பதிஞல் உண்டான ஆச்சரியமும் மனோவியாகுலமும் மேற்கண்ட விசாரத்தை கொஞ்சம் இங்கு விசாரம் செய்வதற்கு காரணமாயிருந்தது. பகவான் சம்பூர்ணமாக அஜ்ஞானிகளாயும் அவிவேகிகளாயுமிருக்கிறவர் விஷயத்தில் அநுக்கிரகம் செய்து நமக்கு வேதசாஸ்திரங்களில் நம்பிக்கையும் திருப்தி என்ற பரமபாக்யத்தையும் கொடுத்து நம்மைக் காப்பாற்ற வேண்டுமே யல்லாமல் வேறுவிதமாய் நம்முடைய உன்னதஸ்திதிக்கு மார்க்கம் ஒன்றுமிருப்பதாகத் தோன்றவில்லை.

ஸ்ரீஸ்வாமிகள் மைசூர் ராஜதானியில் சாதுர்மாஸ்ய சங்கல்பம்செய்து அங்கே வாசம்செய்துகொண்டிருக்கும் காலத்தில் பாத்திரபதமாசத்தில் சமஸ்தானத்தில் வழக்கப்பிரகாரம் ஸபாகணபதி வைக்கப்பட்டது. இந்த கணபதி சந்நிதானத்தில் பிரதிதினமும் சாயங்காலம் 4-மணி முதல் சாயங்காலம் 7-8 மணி வரையிலும் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சபாத்தியக்ஷதையை வஹித்து நியாயம், வியாகரணம் வேதார்த்தம் முதலான சாஸ்திரங்களில் ஆஸ்தான வித்வான்கள், அரண்மனை பண்டிதர்கள், பாடசாலை வித்யார்த்திகள்

எல்லாரும் சபைகூடி வாக்கியார்த்தங்கள் நடத்திக் கொண்டிருந்தார்கள். "विवादश्च विवाहश्च समयोरेव शोभते" என்ற நியாயப்படி பாண்டித்ய விஷயத்தில் பரஸ்பரம் சமானரான மகாபண்டிதர்கள் தங்கள் தங்கள் பாண்டித்யத்தினாலும் புத்திவிசேஷத்தாலும் நடத்திவந்த சாஸ்திரார்த்த விசாரம் சாஸ்திரபரிபாஷாஜ்ஞானம் இல்லாதவர்களைக்கூட உத்ஸாஹமுள்ளவர்களாக செய்துவந்ததாகக்காணப்படும்போது ஸ்வத: அபிஜ்ஞர்களான பண்டிதர்களுக்கும் சாஸ்திராத்யயனத்தில் ஆஸ்தையுடன் அப்பியாசம் செய்துவருகிற வித்யார்த்திகளுக்கும் எவ்வளவு ஊக்கத்தையும் உத்ஸாஹத்தையும் உண்டாக்கியிருக்கக் கூடும்.

இப்படிப்பட்ட வித்வத் சபையை அலங்கரித்த வித்வான்களுடைய பாண்டித்தியத்தை ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் முகத்திலிருந்து அறிந்து சந்தோஷிப்பதற்காக ஒருநாள் சாமராஜேந்திர பிரபுக்கள் அவர்கள் சவாரி ஸ்ரீமடத்திற்கு விஜயம் செய்து பிரபுக்கள் அவர்கள் சபாலங்காரமாயிருந்து பண்டிதர்களால் வாக்யார்த்தங்களை நடத்தி பண்டிதர்களுக்கு விசேஷமாக உத்ஸாஹத்தை விருத்தி செய்தார்கள். வாக்யார்த்தங்கள் நடந்தபிற்பாடு பிரபுக்களுக்கு உண்டாயிருந்த சில சந்தேகங்களை அவர்கள் பிரார்த்தனையின் பேரில் சாஸ்திரீயமான யுக்திகளாலும் லௌகிகமான யுக்தி திருஷ்டாந்தங்களினாலும் பரிஹாரம் செய்து பிரபுக்கள் அவர்களின் ஆஸ்திக்யத்தை விருத்திய

லடைய செய்யவேண்டுமென்ற உத்தேசத்தினல் ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் இரண்டுமணி காலம் விக்ரஹாராதனம் சாஸ்திரியமானது ; இதனல் ஈசுவான் திருப்தியடைந்து அனுக்கிரஹிக்கிருரென்ற விஷயத்தில் பிரதிவாதிகளுடைய யுக்திகளையும் ஆக்ஷேபணைகளையும் அநேகவிதமாக கண்டனம் செய்து சித்தாந்த யுக்திகளாலும் அநேக பிரமாணங்களாலும் விக்கிரஹாராதனத்தை ஸ்தாபித்தார்கள். விக்கிரஹாராதனவிஷயமாய் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் உத்திரவுகொடுத்த சில விஷயங்கள் மாத்திரம் இங்கே சுருக்கமாய் சொல்லப்பட்டிருக்கின்றன.

விக்கிரஹாராதனம் ப்ரமாணபூதமான வேதத்தில் சம்ஹிதாபாகத்தில் சொல்லப்படவில்லை. ஆகையால் விக்கிரஹாராதனத்திற்குப் பிரமாணமில்லை.
1. ஸர்வத்திலும் வியாபகனுன பகவானை மருத் சிலாமயமான லிங்கங்களில் அடங்கியிருப்பதாக பரிச்சின்னபாவனை செய்வதினல் அந்த பகவானுடைய மாகாத்மியத்தைக் குறைத்ததாக ஆகிறது. இப்படி செய்வதினல் சர்வசமர்த்தனுன ஷாட்குண்யைச்வர்ய ஸம்பன்னனுன ராஜனைப்போல் கேவலம் உடுப்புகளை தரித்த வேஷதாரி அந்த ராஜனை ஏளனம் செய்வதுபோல் ஆகிறதினல் அந்த மாதிரி நடந்துகொள்ளும் வேஷதாரி அந்த ராஜனுக்கு ஆக்கிரஹத்திற்கு எப்படி பாத்திரனுவனே அதுபோல் விக்கிரஹாராதனம் செய்கிறவன் ஈசுவானுக்கு ஆக்ரஹபாத்

திரனுவனே தவிர அனுக்கிரஹ பாத்திரனுகமாட்டான். 2. பகவதம்ச சம்பூதனென்று பகவானே லோகஹிதார்த்தமாய் தசாவதாரங்கள் செய்தானென்று தெரிந்து ராமகிருஷ்ணுதி பிம்பங்களை பூஜிப்பது அவர் சரித்திரங்களால் மதாந்தரஸ்தர்களுக்கு பரிஹாஸாஸ்பதமாயிருக்கிறது. 3. சைதந்யமில்லாத விக்கிரஹங்களை வைத்து செய்யும் பூஜையினுல் திருப்தி அடைவதற்கும் தெரிந்துகொள்ளுவதற்கும் ஜடமான ம்ருத்சிலாதிகளுக்கு ஸாமர்த்தியமெங்கிருக்கிறது? 4. இவை முதலான காரணங்களினுல் விக்ரஹாராதனம் செய்வது அவிசாரிதரமணீயம் என்று பூர்வபக்ஷிகளின் அபிப்பிராயம்.

மேல்கண்ட பூர்வபக்ஷிகளுடைய ஆக்ஷேபணைகளுக்கு ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் சொன்ன சமாதானம்—விக்கிரஹாராதனத்திற்கு வேதபாகமான சம்ஹிதையில் பிரமாணம் சொல்லப்படவில்லையாகையால் அப்ரமாணிகமானதென்று சொல்லுவது யுக்தியுக்தமல்ல. வேதம் अनन्ता वै वेदाः என்ற பிரமாணத்தினுல் அனந்தமாயிருக்கிறது. இதில் சாகாபேதங்கள் அளவில்லாமலிருக்கின்றன. இப்போது நமக்கு பிரத்யக்ஷகோசாமாயிருக்கும் வேதம் அனந்தமான வேதத்தில் ஒரு பாகமேதவிர, நம்ம கோசரத்திற்கு வராத பாகம் அதிகமாகவே இருக்கிறது. அதினுல் வேதாப்பியாசத்தையே பூர்த்தியாக செய்யாமல் அதின் அர்த்த விசாரமில்லாமல் தத்வங்களைத் தெரிந்துகொள்ளாமல்

இருக்கும் ஜனங்கள் வேதத்தில் விக்ராஹாராதனைக் கிற்கு பிரமாணமில்லையென்று சொல்லுவது காந்தா சப்தம் ஸ்திரீலிங்கம் என்று மாத்திரம் தெரிந்து கொண்டிருந்தவன், கச்சித் காந்தா என்ற சுலோகத்தை ஆரம்பித்தவுடனே மகாகவியான காளிதாஸன், காசித் காந்தா என்று சொல்வதற்கு பதிலாக கச்சித் காந்தா என்று அபசப்தத்தை பிரயோகம் செய்திருக்கிறன் என்று ஆக்ஷேபித்தால் அது எப்படி பூர்வாபரஜ்ஞானமுள்ளவர்களால் ஆதரிக்கப்படுமோ அது போலவே ஆதரிக்கக்கூடியதாகும். வேதம் அனந்தமானது. அதில் அநேக பாகங்கள் நம்ம திருஷ்டிகோசரமாகவில்லை என்ற அம்சத்தை ஒப்புக்கொள்வதில் நம் பக்கை இல்லையானல் அது அப்படி இருக்கட்டும். வேதத்தில் ஸம்ஹிதை பிரமாணமானது, பிராமண உபநிஷத் பாகங்கள் அப்ரமாணமானது என்று எந்தப்பிரமாணத்தினால் சித்தமாயிருக்கிறது. இந்த விஷயத்தை சித்தப்படுத்திக்கொண்டல்லவா மேல் விசாரம் செய்ய வேண்டும்? ஸம்ஹிதை ஒன்றே பிரமாணமானதென்று சொன்னல் இதில் மந்திர பாகம் மாத்திரம் சொல்லியிருக்கிறதே தவிர மந்திரங்களுக்கு விநியோகம் சொல்லியிருக்கவில்லை. மந்திரவிநியோகம் வியாக்கியான ரூபமான பிராம்மணத்தில் சொல்லியிருக்கிறது. இந்த பாகம் அப்பிரமாணமாய்விட்டபிறகு எந்தவிதமாய் விநியோகப்படுத்தி பிரயோஜனத்தை அடைய வேண்டுமென்ற விஷயத்தைத் தெரிந்துகொள்ளாத

மனுஷியன் கட்டி கட்டியாய் சுவர்ணத்தை சம்பா
தித்து வைத்துக்கொண்டிருப்பதினால் எந்த பிரயோஜ
னம் அடையலாமோ, எவ்வித சந்தோஷத்தைப் பெற
லாமோ, அதே பிரயோஜனமும் அதே சந்தோஷ
மும் தான் மந்திர விநியோகத்தை தெரிந்துகொள்ளா
மல் கேவலம் மந்திரம் மாத்திரம் பிரமாணமென்று
நம்பி அதை சம்பாதித்திருக்கிறவனால் அடையக்கூடி
யது. ஆகையால் மந்திர விநியோகம் தெரிந்துகொள்
வதற்காக பிராம்மண பாகம் ஆவசியகமானது. அப்படி
ஆவசியகமான பிராம்மண பாகம் பிரமாணமானதென்
று நம்பாதபோனால் அதின்படி அனுஷ்டிப்பதற்கு
ஆகிறதில்லை யாகையால் அதை பிரமாணமென்று நம்ப
வேண்டும். மந்திரம் பிராம்மணங்கள் இரண்டும் பிர்ம
மஸ்வரூபத்தையும் அனுஷ்டானக்கிரமத்தையும் சொல்
லக்கூடியது. வேதசிரஸ் என்று சொல்லிக்கொண்டி
ருக்கப்பட்ட உபநிஷத்துக்கள் ஞானஸ்வரூபத்தையும்
அந்த மார்க்கத்தை சம்பாதிக்கும் கிரமத்தையும் தெரி
விக்கக்கூடியது. இது அப்பிரமாணமாகுமானால் பக
வான் சர்வ வியாபகனென்று அறிவதற்கும் அப்படி
தெரிந்துகொண்டு ப்ரகிருத விசாரத்தை நடத்துவதற்
கும் அவகாசமிருப்பதில்லை. அதினாலும் ஞானத்தை
யே ஒப்புக்கொள்ளாமலிருந்தால் சுகப்பிராப்திக்கு
மார்க்கமே இல்லாமல் போவதாலும் அந்த பாகத்தை
பிரமாணமானதென்றே நம்பவேண்டியிருக்கிறது. இந்
தப் பிரகாரம் காண்டத்திரயரூபமான வேதத்தை பிர

மாணமென்று ஒப்புக்கொண்டபிறகு ஸ்வயம்பிரகாச மான வேதத்திற்கு விக்கிரஹாராதனப் பிரகரணத்தை மந்திரபாகமான சம்ஹிதையிலேயே சொல்லவேண்டு மென்றும் மற்றொரு பிரகரணத்தை மற்றொரு பாகத் திலேயே சொல்லவேண்டுமென்றும் நிர்ப்பந்தமென்ன? சாமானியமான லௌகிக யுக்தியினுல் விசாரம் செய்து பார்த்தாலும் ராஜ்யபரிபாலனைக்காக ராஜனுல் செய்யப் படும் ராஜ சாஸனங்கள் (ஆல்கள்) அநேகமாயிருக்கின் றன. அதில் பூமி சம்பந்தமான நியமங்களைக் காட்டக் கூடியது, பூமியில் வெட்டி எடுக்கக்கூடிய பதார்த்தங் கள் சம்பந்தமான நியமங்களைக் காட்டக்கூடியது, வன சம்பந்தமான கிரமங்களை சொல்லக்கூடியது, பிரஜைக ளுடைய தாயபாகம் முதலிய விஷயங்களை நியமிக்கக் கூடியது, தண்டனைக்கு யோக்யமான காரியங்கள், அப்படிப்பட்ட காரியங்கள் செய்தவர்களுக்கு நிர்மா ணிக்கவேண்டிய தண்டனைகள் இவைகளை சொல்லக் கூடியது, இந்தப்படி அநேகவிதமான சட்டங்கள் ஏற்பட்டிருக்கின்றன. இவைகளில் ஒரு சட்டம் பிர மாணமென்றும் இன்னென்று அப்பிரமாணமென்றும் பூமி சம்பந்தமான சட்டம் மிகவும் முக்கியமானது, இதிலேயே தாயபாகம் முதலிய வியவகார சம்பந்த மான விஷயங்களும் சொல்லியிருக்கவேண்டியிருந்தது. அதில் அந்த விஷயம் சொல்லியிருக்கவில்லை யாகை யால் அது ராஜ சாஸனமல்லவென்றும் அது அப்பிர மாணமென்றும் சொல்லுவது சாத்யமோ? அப்படி

சொன்ன மாத்திரத்தினால் அந்தப்படி நடந்துகொள்ளாமலிருப்பது இராஜனுடைய ஆளுகைக்கு கீழ்ப்பட்டிருக்கும் மனுஷியனால் சாத்தியமாகிறதோ? ஆகையினால் ஸ்வயம்பிரகாசமாயும் சிருஷ்டிகாலத்தில் பகவானால் உச்சரிக்கப்பட்டதாயுமுள்ள வேதபாகம் எல்லாமே பிரமாணமானது. அந்த வேதத்தில் பகவானை ஆகாரத்துடன் உபாசனை செய்யவேண்டியதை ஸ்பஷ்டமாகவே சொல்லியிருக்கிறது. இந்த காரணத்தால் விக்கிரகாராதனைக்கு வேதப்பிரமாணமில்லை என்று சொல்லுவது யுக்தமல்ல.

வியாபகனான பகவானை பரிச்சின்னனாக பாவிக்கப்படுகிறதென்ற சங்கை பிரயோஜனமற்றது. பகவானை வியாபகனென்று ஒப்புக்கொள்வதனால் மண் கல் முதலியவைகளில் அவன் வியாபகதை இல்லையா? அவைகளில் ஈசுவரபாவனை செய்கிறவர் மற்றொன்றில் இல்லை என்று சொன்னதாக ஆகிறதோ? அல்லது ஆராதிக்கப்பட்ட மண் கல் முதலிய பிம்பங்களே ஈசுவரனென்று சொன்னதாக ஆகிறதோ? உபாசகருடைய யோக்கியதைக்குத் தக்கபடி ஸகுணோபாசனையையும் நிர்க்குணோபாசனையையும் சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறது. ஆரம்பத்தில் சகுணோபாஸனை செய்து ஸாகாரமான ஒரு மூர்த்தியை மனதினால் பிடித்துக்கொள்ளாமல் நிர்க்குணோபாசனை செய்வதில் மனதிற்கு சக்தி உண்டாகிறதில்லை. அது எப்படியெனில் லோஹமூர்த்தியை செய்கிறவன் மெழுகின்மேல் தான்

செய்வதாக உத்தேசித்திருக்கிற மூர்த்தியை செய்கிறன். அதின்மேல் சுத்தமான மண்ணைக் கட்டி அதை உலர்த்தி மண்ணில் மெழுகின் மூர்த்தியினுடைய அங்கங்களெல்லாம் பற்றிப் பிடித்துக்கொண்ட பிறகு மெழுக்கை உருக்கி எடுத்து லோஹத்தைக் காய்ச்சி அந்த மண்ணின் மூர்த்தியில் விடுகிறன். உருகி இருக்கிற லோகம் மண்ணின் மூசையில் (மூஷா) இருக்கிற மூர்த்தியின் ஒவ்வொரு அங்கஸ்தானங்களாக மேடுபள்ள பிரதேசங்களில் சேர்ந்து நிற்கிறது. அது ஆறிப்போனபிறகு உருகியிருந்த லோகம் கெட்டியாகி மூர்த்தியாகிறது. இதுபோல உபாசகனுடைய ஹிருதயத்தில் ஆகாரசகிதமான மூர்த்தியை வெகுநீண்டகாலம் வரையிலும் தியானம் செய்துகொண்டு வந்தால் மண்ணின் மூசையில் நிற்பதுபோல தியானம் செய்யப்பட்ட மூர்த்தியுடைய எல்லா அங்கங்களும் அப்படியே நிற்கிறது. இதை இளகிய மனது கெட்டியாக பிடித்துக்கொள்ளும்படி ஆகிறவரையிலும் விக்ரஹாராதனை செய்துகொண்டுவந்தால் அங்கே ஸகுணோபாஸனை பூர்த்தியானதாக ஆகி இந்த உபாஸகன் நிர்க்குணனும் ஸர்வவியாபகனும் பகவான் இருக்கிறன் என்று தியானம் செய்வதற்கு சக்தியுள்ளவனுகிறன். இந்த க்ரமம் விதாயகமான சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறதே தவிர சர்வசக்தனுன பகவானுடைய மாகாத்மியத்தையும் அவனுடைய வியாபகதையையும் குறைவு செய்வதற்காக எவராலோ புதிதாக கல்பிக்கப்பட்ட மார்க்கமல்ல.

ஸ்குணோபாசனையைக் காட்டிலும் நிர்க்குணோபாசனை அதிசிரேஷ்டமானதென்ற விஷயத்தில் சந்தேகமில்லை. ஆனால் அப்பியாஸகாலத்திலேயே அவ்வளவு சிரேஷ்டமான நிர்க்குணோபாசனையில் பிராணிகள் சமர்த்தர்களாகிறதில்லை. லோகத்தில் சிறியதாயும், தெளிவாயும், நேராயும், அழகாயும் அக்ஷரங்களை எழுதினால் அதைப்பார்த்து யார்தான் சிலாகிக்கமாட்டார்கள். அப்படி அக்ஷரங்களை எழுதுகிறவர்கள் ஆரம்ப காலத்தில் பெரிது பெரிதாய் மண்ணின்மேலும் பலகைமேலும், பிற்பாடு காகிதங்களிலும் அநேக காலம்வரையில் எழுதி எழுதி நன்றாக கைதேர்ந்த மேல் ஸர்வ ஜனங்களும் சிலாகிக்கும்படி எழுதுவதற்கு சக்தர்களாவார்களோ? அல்லது அக்ஷராப்பியாச காலத்திலேயே நன்றாக பழகிய அக்ஷரங்கள்போல எழுதுவார்களோ? இதுபோலவே முதலில் ஸாகாரமாகவும் பரிச்சின்னமாகவும் பகவானை பஜனம் செய்து நன்றாக அப்பியாசமான பிறகு நிராகாரமாகவும் அபரிச்சின்னமாகவும் தியானம் செய்யக்கூடுமாகையால் விக்ரஹாராதனம் ஆவச்யகம். இதனால் வேஷதாரி ராஜனை ஸௌனம் செய்வதுபோலாகிறதென்ற சங்கைக்கு அவகாசமில்லை. வேஷதாரி ராஜனைப்போல் உடுப்புகளை தரித்து அவன் ராஜனென்ற பிராந்தி இதர ஜனங்களுக்கு உண்டாகும்படி செய்து ராஜனைப்போல் ஸ்வதந்திரனாக ராஜகாரியங்களில் பிரவிர்த்தித்து ராஜனுடைய சக்திக்கு குந்தகமுண்டாகும்படி செய்வதற்கு யத்தினம் செய்தால் அந்த மனுஷியன்

ராஜத்துரோகி என்று எண்ணப்பட்டு ராஜ கோபத்தி ற்கு பாத்திரனுகி சிக்ஷைக்குள்ளாகிறான். ஸ்ருஷ்டியா ளகனுடைய ஸ்திதி இதுபோலாவதில்லை. தன்னிடத்தி லேயே ஈசுவரபாவனை செய்து, தானே ஈசுவரனென்ற அகங்காரத்துடன் இருக்கிறதில்லை. ஈசுவரபாவனையை வேறொரு பதார்த்தத்தில் செய்து எந்த சந்தர்ப்பத்தி லும் தான் விதேயனுயிருந்துகொண்டு தாழ்மையுடன் ஆராதிக்கிறுனைகயால் இவன் விஷயத்தில் ஈசுவரன் பிரசாதம் செய்வானே தவிர கோபம் செய்வதற்குக் காரணமில்லை. இந்த ஸ்திதி பகவானுடைய நிக்கிரகத் திற்கு காரணமானதென்று சொல்லுவதனுல், தீவாந் தரத்திலிருக்கிற நம் இந்தியா சக்கிரவர்த்திகளுடைய பிரதிகிருதி (படம்) யை இந்தியாவிலுள்ள ஜனங்கள் வைத்து கௌரவிப்பதிலுைம் அந்த பிரதிகிருதிக்கு உத்சவாதிகள் நடத்துவதிலுைம் தமக்கு அவமானம் செய்ததாக சக்கிரவர்த்திகள் தெரிந்து அப்படி செய் யக்கூடிய தம் பிரஜைகளை சிக்ஷைக்கு யோக்யர்களாக செய்யவேண்டுமல்லவா? இந்த விஷயம் அநுபவத் திலுல் தெரிந்தே இருக்கிறது. இதனுல் ஸாக்ஷாத் தாக சக்கிரவர்த்திகளுடைய சமீபத்திலிருந்து அவரை ஆராதிப்பதற்கு அவகாசமில்லாதவர் அவர் பிரதி கிருதியில் அந்த சக்கிரவர்த்திகளின் பாவனையை செய்து அவரை ஆராதிப்பது மூலமாய் சக்கிரவர்த்தி களின் பிரசாதத்திற்குப் பாத்திரமாவதுபோல் பகவா னுடைய பிரதிகிருதிரூபமான பிம்பங்களில் ஈசுவ

பாவனை செய்து ஆராதிப்பதினால் ஆராதகர்கள் ஈசுவர பிரசாதத்திற்கு பாத்திராகுவரே தவிர நிக்கிரஹத் திற்கு எப்போதும் பாத்திரர்களாக ஆகமாட்டார்கள்.

ராமகிருஷ்ணாதி லீலா மூர்த்திகளை ஆராதிப்பதி னால் அவர் சம்பந்தமான சரித்திரங்களை அறிந்த மதா ந்தரஸ்தரின் பரிகாசத்திற்கு பாத்திராரகவேண்டி வரு கிறதென்ற சங்கை பிறக்கவேண்டுமானால் அந்த மகான் களுடைய சரித்திர விஷயத்தில் மதாந்தரஸ்தர்களைப் போல ஆராதகருக்கும் ஒவ்வொரு சமயத்தில் வெறுப் புண்டாகாமலே இருக்கும்பக்ஷத்தில் தாம் ஹாஸ் யாஸ்பதமாவோமென்ற சங்கைக்கே அவகாசமில்லை. ஆகையால் உபாஸகருக்கும் ஈசுவரனுடைய விலாசங் களை புராணங்களிலிருந்து தெரிந்துகொள்ளத் தக்க காலங்களில் அவ்விஷயமாக (हेयबुद्धि) நிகிருஷ்ட புத்தி உண்டாகி அதின் மூலமாய் மேற்சொன்ன சங்கைக்கு அவகாசம் உண்டாகிறது. இதை பலப்படுத்துவதற்கு மதாந்தரஸ்தர் சகாயமும் ஏற்படுகிறது. இந்த சங் கையை விசாரத்தினால் போக்கடித்துக் கொள்வதினால் பிரபஞ்சரக்ஷணத்திற்காக அவதாரம் செய்த ராமகிரு ஷ்ணாதி விஷயங்களில் பக்தி உறுதியாகிறது.

இராமாவதாரம் லோகத்தில் தர்மத்தை ஸ்தா பிப்பதற்காகவே ஆனதென்று தெரிந்துகொள்ளவே ண்டும். இந்த மகா புருஷன் மகாவிஷ்ணுவின் அம் சமேயல்லாமல் வேறொருவனல்லவென்ற சங்கதியை இவர் அதிபால்யாவஸ்தையிலேயே விசுவாமித்திர

மகரிஷியுடைய யாகஸம்ரக்ஷணைக்காக இவரை அனுப்பவேண்டியதாய் விசுவாமித்திர மகரிஷிகளால் அபேக்ஷிக்கப்பட்ட தசரத மகாராஜன் தன்னுடைய எல்லா சைனியங்களுடன் தானே நேரில் வந்து யாகஸம்ரக்ஷணை செய்கிறேனென்று எவ்வளவு விதமாக தெரிவித்துக்கொண்டபோதிலும் அந்த ராமமூர்த்தியினுடைய ஸ்வரூபத்தை அறிந்து இருந்த விசுவாமித்திர மகரிஷிகள் அஸஹாயனும் பாலனுமான ராமனை,மாத்திரமே தன் சகாயத்திற்காக அபேக்ஷித்து அழைத்துக்கொண்டுபோய் யாகஸம்ரக்ஷணை செய்வித்துக்கொண்டார் என்ற சரித்திரத்தைத் தெரிந்துகொள்வதினாலேயே ராமன் சாமான்ய மனுஷியனல்லவென்ற சங்கதி நன்றாய் வெளியாகிறது. இப்படிப்பட்ட மாகாத்மியமும் அதற்கு அனுகுணமான பராக்கிரமமும் தன்னிடத்திலிருக்கக்கூடியதை தெரிந்து இருந்த ராமன் நியாயமாய் தனக்கு பிராப்தமான ராஜ்யத்தைவிட்டு அரண்யவாசத்திற்காக போகிறதற்கு நிஷ்காரணமாக தன் பிதாவால் செய்யப்பட்ட ஆக்ஞைக்கு கட்டுப்பட்டு (चीरवसन) சீரவஸ்திராதிகளை தரித்துக்கொண்டு கந்தமூலாசனங்கள் செய்துகொண்டு ரிஷி சரியைகளில் இருப்பதற்காக புறப்பட்டுப்போனது, பிறகு தன் சகோதரரான பரதன் வந்து சித்திரகூடத்தில் எவ்வளவுதூரம் திரும்பிவர வேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டாலும் பிதுருவாக்கியபரிபாலனமென்ற தர்மத்தை விடுவதற்கு கொஞ்சமும் அபிப்பிராயமில்

லாதவராக பின் திருப்பி வருவதற்கு சம்மதிக்காமலே பூர்வம் நிச்சயிக்கப்பட்டதான அரண்ய வாசத்தையே முன் நடத்திய அவர் சரித்திரத்தை அறிவதால் இந்த மகானுபாவன் தர்ம ஸ்தாபனைக்காக மாத்திரம் பூமியில் அவதரித்தானென்று சொல்லுவதில் சந்தேகமென்னவிருக்கிறது. அதர்மப் பிரவர்த்தகனான ராவணாசுரனையும் அவன் துஷ்ட பிரவிருத்திக்கு சகாயராயிருந்த இதர கோர ராக்ஷசர்களையும் யுத்தத்தில் ஜயித்த இந்த மகாபுருஷனுடைய பராக்கிரமத்தையும் தைரியத்தையும் ஸ்தைர்யத்தையும் தெரிந்துகொண்டால் இவர் மனுஷ்யனென்று நினைப்பது யாராலாவது சாத்தியமோ? அந்த துஷ்ட ராக்ஷஸனை சம்ஹரித்தது தர்ம ஸ்தாபனைக்கே யல்லாமல் கேவலம் தன் பத்னியை அடைவதற்காக செய்த பிரயத்தினமென்று, ஆதியோடந்தமாய் அவர் சரித்திரத்தை அறிந்தவர்கள் அபிப்பிராயப்படுவதற்கு அவகாசமிருக்கிறதா? ராம சரித்திரத்தில் எந்த பாகத்திலாவது அவர் விஷயத்தில் அனாதரவு உண்டாகும்படியான நடவடிக்கைகள் காணப்பட்டு வருகிறதா? பாரியையை விட்டுப் பிரிந்த காலத்தில் சாமான்யர்களைப்போல் அவர் அனுபவித்ததாக ராமாயணத்தில் சொல்லப்பட்ட வியோக துக்கத்தை மாத்திரம் முக்கியமாய் வைத்துக்கொண்டு அவர் சாமான்யர் என்று தெரிந்துகொள்ளக்கூடாது. அசாதாரணமான அவருடைய மற்ற காரியங்களால் தான் மானுஷசரீரத்தை எடுத்து மனுஷ்யனைப்போல்

இருந்துவருவதினால் அந்த பாவத்தைக் காண்பிவிப்ப தற்காக அந்தப் பிரகாரம் காண்பிவித்துக்கொண்டா ரென்று அறியவேண்டுமே யல்லாமல் வேறுவிதம் சொல்வதற்கு அவகாசமில்லையாகையால் தர்மஸ்தாப னைக்காகவே அவதரித்த இந்த மகா புருஷன் விஷயத் தில் எந்த சந்தர்ப்பத்திலும் திரஸ்கார புத்தி செய்யக் கூடியதல்ல.

இதுபோலவே கிருஷ்ணசரித்திரத்தில் அவர் லீலைகள் சில சொல்லப்பட்டிருக்கின்றன. இந்த லீலை களை சரித்திரங்களால் தெரிந்துகொண்டவர்களுக்கு ஒவ்வொரு காலத்தில் பிராந்தி உண்டாகிறது. இதற் குக் காரணம் விசாரமில்லாமையே தவிர வேறல்ல. யுத் தத்திற்கு எதிராய் வந்த அர்ஜுனன் அஞ்ஞானத்தி னால் சோகமோகங்களால் மூடப்பட்டு பராங்முகனா னதும் அந்த சந்தர்ப்பத்தில் கிருஷ்ணனால் உபதேசம் செய்யப்பட்டிருக்கும் பகவத்கீதையை மகான்களால் செய்யப்பட்டிருக்கிற வியாக்யானங்களின் சகாயத்தி னால் நன்றாக அர்த்தம் செய்துகொண்டால் அவ்வித மான மகா உபதேசம் செய்தவன் யாரென்று வெளி யாகிறது. அதுபோல் பகவத்கீதையில் பதினொன் றாவது அத்தியாயமான விசுவரூபாத்தியாயத்தை வா சித்து அதன் அர்த்தத்தை நன்றாக அனுசந்தானம் செய்வதினால் கிருஷ்ணாவதாரம் செய்தவர் யார் என் பது ஸ்பஷ்டமாகிறது. இந்த மகா புருஷன் நடத் தியிருக்கும் ஒவ்வொரு காரியமும் அந்தந்த சந்தர்ப்

பத்தை அனுசரித்து லோகஹிதத்திற்காகவேயல்லாமல் ஸ்வப்பிரயோஜனத்திற்காகவாவது அக்ஞானிகளைப்போல் தெரியாமலாவது நடத்தினதல்ல. இந்த விஷயத்தை விசாரம் செய்து தெரிந்துகொள்ளவேண்டும். தர்ம சாஸ்திரத்தில் விதி சாஸ்திரமென்றும் நிஷேத சாஸ்திரமென்றும் இரண்டுவிதமாகப்பிரிக்கப்பட்டிருக்கிறது. விதி சாஸ்திரம் விதியில் சொல்லப்பட்ட கர்மங்களை அனுஷ்டானம் செய்வதற்காகவும், நிஷேத சாஸ்திரம் நிஷித்தமான காரியங்களை விடுவதற்காகவும் சொல்லியிருக்கிறது. இந்த சாஸ்திரங்களுக்கு அக்ஞானிகள் மாத்திரம் விஷயர்களே தவிர ஞானிகள் இந்த விதி நிஷேத சாஸ்திரங்களுக்கு விஷயரல்ல. அது எப்படியெனில் கேவலம் பாலியத்தில் அக்ஞானதசையில் இருக்கிற குழந்தை ஸ்வபாவமாய் மண்ணைத் தின்பது, பால் குடிக்கவேண்டுமானால் அழுவது இந்த அனுபவம் எல்லாருக்கும் உள்ளதே? இதற்கு காரணம் ஹிதாஹித பரிஞானமில்லாமலிருப்பதைத் தவிர வேறொன்றுமில்லை. அந்த பரிஞானமில்லாத சிசு மண்ணைத் தின்றால் அதற்கு பாதகம் உண்டாகுமென்றும், பாலைக் குடித்துக்கொண்டுவந்தால் அந்த சிசுவுக்கு ஸாதகமாகுமென்றும் பரிஞானமுள்ள தாய் தந்தையர்கள், மண்ணைத் தின்னாமல் நிஷேதம் செய்வார்கள். பாலைக் குடிக்கும்படி கைகளையும் கால்களையும் பிடித்து நிர்ப்பந்தித்து பாலைக் குடிக்கும்படி செய்வார்கள். இந்த விதி நிஷேதங்களுக்கு உள்பட்டு

நடக்கும் அந்த சிசு ஸ்வபாவமாக விருத்தி அடைகிறது. ஆகையால் மேற்கண்ட விதி நிஷேதங்களுக்கு அந்த அஞ்ஞானதசையிலிருந்த சிசு விஷயன் என்று ஸ்பஷ்டமாய் அர்த்தமாகிறது. இந்த விதி நிஷேதங்கள் கொஞ்சம் வயதான மேல் மண் தின்னத்தக்க பதார்த்தமல்லவென்றும் அன்னம் முதலியவை சாப்பிடுவதால் சரீரபுஷ்டியுண்டாகிறதென்று தெரிந்தவர் விஷயத்திலும் அஞ்ஞானதசையில் எவர் மேலே சொன்ன விதி நிஷேதங்களுக்கு கட்டுப்பட்டிருந்தாரோ, அந்த சிசுக்களுக்கே கொஞ்சம் வயசு ஆகி ஹிதா ஹித பரிஞானம் வந்த மேல் அவர்கள் விஷயத்திலேயே முன் விதி நிஷேதங்களுக்கு அவகாசமில்லையென்றும் தெளிவாய் தெரிந்தே இருக்கிறது. இந்த காரணத்தால் விதி நிஷேத சாஸ்திரங்கள் அஞ்ஞானிகளைக்குறித்து ஏற்பட்டிருக்கிறதே தவிர ஞானிகள் விஷயத்தில் இந்த சாஸ்திரங்களுக்கு பிரவிருத்தியில்லை. ஆகையால் அஞ்ஞானிகளான நம் விஷயமாய் தர்ம சாஸ்திரத்திலே சொல்லியிருக்கும் நிஷித்த கர்மங்களை பகவான் ஆசரித்திருப்பதாக நாம் தெரிந்து அவர் விஷயத்தில் நிராகாரபுத்தி நாம் செய்யக்கூடாது. அது நம் திருஷ்டியில் நிஷித்த கர்மமாயிருந்தாலும் பகவான் ஞானியாயிருப்பதால் அந்த கர்மத்தை அனுஷ்டானம் செய்வதினால் அதினாலுண்டாகக்கூடிய பாதகம் (பாவம்) அவருக்கு இல்லை. அது எப்படி என்றால் இப்போது லோகத்தில் பூமியை பரீக்ஷை செய்கிறவன் சில சந்தர்ப்பங்களில்

மண் தின்னக்கூடிய பதார்த்தமல்லவென்று தெரிந்த வனுயிருந்தாலும் அந்த மண்ணின் குணத்தைக்கண்டு பிடிப்பதற்காக வாயில் போட்டுக்கொண்டு பரீக்ஷிப்ப துண்டல்லவா? அதனுல் தனக்கு கெடுதல் உண்டா கும்படி செய்துகொள்ளுவனே? இதுபோலவே ஞானியும் ஏதோ ஒரு கார்யத்திற்காக நடத்துகிற காரியத்தினுல் அதின் சம்பந்தமில்லாமல் செய்துகொள்ள முடியும்.

ஆகையினுலேயே விதிநிஷேத சாஸ்திரங்களுக்கு அவர் விஷயமல்லவென்று சாஸ்திர சித்தாந்தம். மற்றொருவிதமாக யோசித்துப்பார்ப்போம். ராஸக்கிரீடா காலத்தில் இரண்டிரண்டு ஸ்திரீ ஜனங்கள் மத்தியில் ஒவ்வொரு கிருஷ்ணனுக அநேக ஸ்திரீகள் அநேக கிருஷ்ணர்கள் இருந்ததாக சொல்லியிருக்கிறது. மத்தியத்தில் எந்த சம்பந்தமும் இல்லாத மற்றொரு கிருஷ்ணன் கானம் செய்துகொண்டிருந்ததாகவும் தெரியவருகிறது. இதில் எந்த கிருஷ்ணன் அதர்மபிரவர்த்தகன் என்று நிர்ணயம் செய்யலாம்? இந்த காரணத்தை யோசித்துப் பார்த்தாலும் கிருஷ்ணனுல் நடத்தப்பட்ட லீலைகள் எல்லாம் அமானுஷமான லீலைகளாகவே இருப்பதால் அவர் சர்வசக்தரான பகவானே யல்லது வேறல்லவென்பதால் அவர் விஷயத்தில் எவ்வித சந்தர்ப்பத்திலும் அல்ப புத்தி செய்யக்கூடியதல்ல. மதாந்தரஸ்தர்கள் இவ்வளவு ஆலோசனை செய்து பரிகாசம் செய்கிறவர்களல்லவாகையாலும்

அவர்கள் அன்னியர்களை பரிகாசம் செய்து அவர்கள் மனதைக்கலங்கும்படி செய்வதே அவர்கள் அபிஸந்தியானதினாலும் அந்தக் காரணத்திற்காக ராமகிருஷ்ணரை திவிக்கிரஹங்களை ஆராதிப்பது அவிசாரிதரமணீயம் (ஆலோசனையில்லாமல் வழக்கத்தில் வந்தது) என்று அபிப்பிராயப்படுவது சரியல்ல.

நாலாவது கேள்வி நிற்கக்கூடியதே அல்ல. ஈசுவரன் சர்வ வியாபகனென்று சொல்லுகிறவர் 'ஸர்வ' என்பதில் அடங்கிய மண் கல் முதலியவைகளில் சைதன்யம் இல்லை என்றும் ஜடம் என்றும் சொல்வது எப்படி? ஈசுவரபாவனையுடன் நாம் இங்கே ஈசுவரனை பஜனம் செய்தாலும் பூஜித்தாலும் நமஸ்காரம் முதலிய பூஜ்ய மரியாதைகள் செய்தாலும் ஸர்வவியாபகனான ஈசுவரன் தெரிந்துகொள்ளும் சாமர்த்தியமுள்ளவனாயிருப்பதினால் நாம் செய்யக்கூடிய ஒவ்வொரு சத்காரமும் அவர் விஷயமாகவே ஆகிறபடியால் அவரே அதற்கு தகுந்த பலத்தை கொடுப்பாராகையால் விக்கிரஹாராதனை மந்தாதிகாரிகளுக்கு அத்யாவசியகமாயிருப்பதாலும் அது சாஸ்திரத்தினாலும் யுக்திகளாலும் சித்திக்கிறபடியால் விக்ரஹாராதனை செய்யவேண்டியது ஆவச்யகம் என்று ஸ்ரீஸ்வாமிகளவர்கள் உத்தரவு கொடுத்தார்கள். அந்த காலத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய வாக்கு தோரணியையும், அவர்களுக்குள்ள ஞானத்தையும், அவர்கள் பிரதிபையையும், போதனாசாமர்த்யத்தையும், அவர்களுக்கு வேதசாஸ்திரங்களில் இருந்த

நம்பிக்கையையும், பிரபுக்களும் மற்றுமுள்ள பண்டிதர்களும் மற்ற ஜனங்களும் கூட தெரிந்து ஆனந்தத்தில் மூழ்கினார்கள்.

இந்த காலத்தில் பாலிய விவாகத்தால் அநேக அனர்த்தங்கள் உண்டாகிறதென்றும் இந்த நிர்ப்பந்தத்திற்குள்பட்ட ஜனங்கள் வெகுவிதமான கஷ்டநஷ்டங்களுக்கு லக்ஷியமாக வேண்டியிருக்கிறதென்றும், இக்காரணத்தால் பாலிய விவாகத்தைத் தடுப்பதான ராஜகீயமான சட்டம் ஏற்படுத்தி சர்க்கார் அவர்கள் பாலிய விவாஹத்தைத் தடுக்கவேண்டியது ஆவசியகமென்றும், பிரார்த்தனை தேசவாஸி ஜனங்களால் கொண்டுவரப்பட்டு மகாராஜா சர்க்காரவர்களுடைய ஆலோசனையிலிருந்தது. இந்த சந்தர்ப்பத்தில் இதை தர்மசாஸ்திர பிரமாணங்களை அனுஸரித்து விசாரம் செய்து சாஸ்திர விரோதமில்லையென்பதாயும் ஜனங்களுக்கு அனுகூலப்படுத்தும்படிக்கும் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய அபிப்பிராயத்தைப்பெற்று சட்டம் செய்யத்தக்கதென்று ஆஸ்திகசிகாமணிகளான சாமராஜ பிரபுக்கள் தம் திவானுக்கு உத்திரவு செய்தார்கள். பிரபுக்கள் அவர்களுடைய அபிப்பிராயத்தை மைசூர் சம்ஸ்தானத்திய திவானாயிருந்த சேஷாத்திரி அய்யர் ஸ்வாமிகளிடத்தில் தெரிவித்துக்கொண்டார். தர்மபரிபாலனவிஷயத்தில் பிரபுக்களுக்கு இருந்த ஆதரவையும் அவர் நம்பிக்கையையும் ஸ்வாமிகள் தெரிந்துகொண்டு மிகவும் திருப்தியடைந்தார்கள்.

ஒரு நாள் மத்தியானம் மூன்று மணிமுதல் இராத்திரி எட்டு ஒன்பது மணி வரையிலும் ஸ்ரீமடத்தில் உபய ஸம்ஸ்தானத்திய பண்டிதர்களும் ராஜகிய முக்கிய அதிகாரிகளும் கூட ஸ்ரீஸ்வாமிகள் சமுகத்தில் சபை கூடி சாஸ்திர விசாரம் நடத்தப்பட்டது. விசாரம் செய்த பிற்பாடு சர்வசம்மதமாக பாலிகைகளுக்கு கர்ப்பாஷ்டமத்துக்கு முந்தி விவாகம் நடத்தத் தக்கதல்ல, என்றும் ஐம்பது வருஷம் ஆனமேல் புருஷன் விவாகம் செய்து கொள்ளுவது தப்பு என்றும் இந்தப்படி ராஜசாஸனம் செய்து பாலிய விவாகத்தைத் தடுக்கலாமென்று ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் அபிப்பிராயத்தை குறிப்பிட்டதுமல்லாமல் ஸ்ரீமுகம் மூலமாய் தம் அனுமதியையும் கொடுத்தார்கள். இந்த அபிப்பிராயம் அந்த காலத்தில் சர்வசம்மதமாகவே இருந்ததினால் சுவல்ப வித்தியாசத்துடன், பாலிகைகளுக்கு எட்டு வருஷம் பூர்த்தியாவதற்கு முந்தியும் புருஷன் ஐம்பது வருஷங்களுக்கு மேற்பட்டும், விவாஹத்தை தம் ராஜ்யத்தில் நடத்தக்கூடியதல்லவென்று ராஜசாஸனமூலமாய் பாலிய விவாஹம் தடுக்கப்பட்டு இதுவரையில் எத்தனை தடவை எவ்வளவு ஜனங்கள் மேற்கண்ட சட்டத்தை மறுபடியும் மாற்றி வயது பரிமாணத்தை அதிகப்படுத்தவேண்டுமென்று தெரிவித்துக் கொண்டிருந்தாலும், மற்ற இந்திய தேச ராஜர்களால் இந்த விஷயத்தில் ராஜசாஸனம் கல்பிக்கப்பட்டு அனுஷ்டானத்தில் கொண்டுவரப்பட்டிருக்

தாலும் வேத சாஸ்திரங்களில் சம்பூர்ணமான நம்பிக்கையும் அது மூலமாய் தர்ம ஸூக்ஷ்மங்களையும் லோக ஹிதத்தையும் தெரிந்து இருந்த மகானுபாவர் விஷயத்தில் உள்ள கௌரவபுத்தி நம் பிரபுக்களிடத்தில் ஸ்திரமாக நிலைகொண்டு இருப்பதால் அவிசாரரமணியமான ஜனங்களுடைய பிரார்த்தனை இதுவரையில் அனுஷ்டானத்தில் வருவதற்கு அவகாசம் கொடுக்கப்படவில்லை.

ஒரு சமயத்தில் ஆங்கிலேய வித்யா விசாரதர்களாயும், லௌகிக வியவஹாரங்களில் அசாதாரணமான சாமர்த்தியத்தை சம்பாதித்தவர்களாயும் மைசூர் ஸம்ஸ்தானத்தில் முக்கிய அதிகாரிகளாயுமிருந்த இந்த சம்ஸ்தானத்திய திவான் சேஷாத்திரி அய்யர், கவுன்ஸிலராயிருந்த சஞ்சலராவு பந்தலு, ஆனந்தராயர், ஜட்ஜியாயிருந்த நரஹரிராயர் இவர்கள், முதலான சுமார் நூறு ஜனங்களுக்கு மேற்பட்ட லௌகிக மகாஜனங்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தர்சனத்திற்கு கூட்டமாய் சேர்ந்து ஸ்ரீமடத்திற்கு வந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம்மிடத்தில் வந்த சிஷ்யர்களை அதிக ஆதரவுடன் வரவேற்றுக்கொண்டு அவர்களுக்கு தர்ம சூக்ஷ்மங்களைக்குறித்து போதனை செய்தார்கள். இந்த காலத்தில் அங்கு வந்திருந்த அதிகாரிகள் தங்கள் (समयबन्ध) கட்டுப்பாட்டை அனுசரித்து ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் சில சந்தேக விஷயமாய் கேள்வி கேட்டார்கள். இதில் முக்கியமான கேள்வி

இந்து தர்மசாஸ்திரங்களெல்லாம் இந்தியாவிலுள்ள ஆஸ்திகர்களான ஜனங்களை பரிபாலனம் செய்வதற்காக மகரிஷிகளால் கல்பிக்கப்பட்டு அந்தந்த காலத்தில் ராஜ்யபரிபாலனம் செய்துவருகிற இந்தியராஜர்களால் விசேஷமாக ஆதரிக்கப்பட்டதாய் வெகு தீர்க்க காலமிருந்து நடவடிக்கையில் கொண்டுவரப்பட்டிருக்கிறது. அன்னியதேசத்தாரின் ராஜாங்கம் இந்தியா தேசத்தில் நிலைக்கும் வரையிலும் ஜனங்கள் சம்பந்தமான லௌகிக பாரமார்த்திக வியவகாரங்களெல்லாம் அநேகமாக தர்மசாஸ்திரங்களை அனுசரித்தே நடத்தப்பட்டிருந்தது. அன்னிய தேசத்தார் ராஜாங்கம் நம் தேசத்திற்கு வந்தபிறகு சில விஷயங்களில் மாத்திரம் தான், தர்மசாஸ்திரங்களையும் இந்து ஜனங்களுடைய ஆசாரணையையும் அனுசரித்து சில சட்டங்களை பாஷாந்தரத்தில் மொழிபெயர்த்து கல்பிக்கப்பட்டு அனுஷ்டானத்தில் கொண்டுவந்திருந்தாலும் அநேக விஷயங்களில் தர்மசாஸ்திரங்களே ராஜசாஸனம்போல எண்ணப்பட்டு எல்லா ஜனங்களாலும் அந்த சாஸ்திரங்களை அனுசரித்து நடக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. இந்த தர்ம சாஸ்திரங்கள் வெகுகாலத்திற்கு முந்திசெய்யப்பட்டவைகள். இப்பால் எந்த சந்தர்ப்பத்திலும் அந்தந்த காலானுகுணமாக மாற்றப்பட்டதாக தோன்றவில்லை. இக்காலத்திலுள்ள ஜனங்களால் கொஞ்சமும் தர்மசாஸ்திரங்களில் விதாயகமான விதிகளை அனுசரித்து நடப்பதற்கு

சாத்தியமேயல்ல. பிரஜாபரிபாலனம் செய்கிற ராஜர்கள் ஜனங்கள் அமைதிக்கு குந்தகமில்லாமல் ராஜ்ய பரிபாலனம் செய்வதற்காக தம்மால் கல்பிக்கப்படுகிற ராஜ சாஸன ரூபமான சட்டங்களில் அப்போதைப் போது காலத்தையும் ஜனங்களின் ஸ்வபாவத்தையும் அனுசரித்து திருத்தங்கள் செய்யப்பட்டதாக முந்திய ராஜசரித்திரங்களாலும் அனுபவத்தினாலும் கண்டுவருகிறது. அதுபோல லோக க்ஷேமார்த்தமாக கருணாநிதிகளான மகரிஷிகளால் செய்யப்பட்டிருக்கும் தர்ம சாஸ்திரங்களை சுலபமான ரீதியில் மாறுதல் செய்வதற்கு அந்த மகரிஷிகளுக்கு சமானராய் ஸர்வலோக மான்யராயிருக்கிறவர்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஒருவரே சமர்த்தரென்ற பாவனை தங்களுக்கு உறுதியாயிருப்பதினால் காலத்திற்கு அனுகுணமாக முந்திய தர்ம சாஸ்திரங்களில் அவசியமான திருத்தங்களை செய்து கொடுக்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள்.

சிஷியர்களால் செய்யப்பட்ட பிரார்த்தனையை சாவகாசமாய் கேட்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் அபிப்பிராயத்தை அந்த சபையில் வெளியிட்டார்கள். நம் பீடத்தில் முந்திய மகரிஷிகளிடமிருந்த யோக்யதை ஞானம் அனுஷ்டானம் சக்தி இது முதலிய குணங்களில் ஒன்றுவது இல்லாமலிருந்தாலும் அந்த மகரிஷிகளுக்கு சமானர் என்று நம்பீடத்தில் ஜனங்களுக்கு பாவனை இருப்பது வெகு சந்தோஷகரமே! ஜனங்கள் செய்யும் பாவனைக்கு எந்த பதார்த்தத்தில்

எந்த பாவனையை பலமாய் செய்கிறார்களோ அந்த பதார்த்தத்தில் அந்த குணம் இருக்கவேண்டுமென்ற நிர்ப்பந்தம் ஒன்றுமில்லை. ஆனால் பாவனானுகுணமாக பலப்ராப்தி ஆவதில் சந்தேகமொன்றுமில்லை. ஆனால் எந்த திருஷ்டாந்தத்தை முன்னிட்டுக்கொண்டு நீங்கள் தர்மசாஸ்திரங்களில் திருத்தங்கள் செய்து கொடுக்கும்படி தெரிவித்துக்கொண்டிருக்கிறீர்களோ அந்த திருஷ்டாந்தம் விஷமதிருஷ்டாந்தமானதாகையால் தார்ஷடாந்திகத்தில் சமன்வயப்படுகிறதில்லை, ராஜகியமான நிபந்தனைகளை கல்பிக்கிற ஸபாஸதர்கள் வித்யாவந்தராயும், முன்பின் விசாரம் செய்ய சமர்த்தர்களாயும், தூரதிருஷ்டியுள்ளவர்களாயும் இருப்பார் என்ற விஷயத்தில் எவருக்கும் சம்சயமில்லை. ஆனால் தங்கள் முந்திய காலத்தின் ரீதியை முந்திய சரித்திரங்களின் சகாயத்தால் தெரிந்துகொள்ளுவார். முந்தின ரீதிகளை மாற்றவேண்டியதற்கு சேர்ந்தகாலத்தைக்கண்டுபிடித்துக்கொண்டு வர்த்தமானகாலத்தில் செய்யக்கூடிய நிபந்தனைகள் எதிர்காலத்தில் எவ்வளவு காலம் வரை பாறுமல் இருக்கக்கூடுமென்ற விஷயத்தை ஊஹத்தால் தெரிந்துகொண்டு நிபந்தனைகளை ஏற்படுத்துவார். இதைக்காட்டிலும் அதிகமான (ஞானம்) சாமர்த்தியம் சாமான்ய ஜனங்களுக்கு இருக்கக்கூடுமென்பதை ஒப்புகொள்வதற்கு அவகாசமில்லையாகையால் அப்படி செய்யப்பட்ட நிபந்தனைகளை காலானுகுணமாகவும் தற்காலத்திலுள்ள ஜனங்களின்

சக்தியை அனுசரித்து, ராஜகீயமான சட்டங்களில் திருத்தங்களை செய்வது யுக்தமாகவே இருக்கிறது.

இந்து தர்ம சாஸ்திரங்களை செய்திருக்கிற மகரிஷிகள் சாமான்யரல்ல. இவரிடத்திலிருந்த யோகசக்தியினாலும் தபஸ் சக்தியினாலும் காலத்திரயஞானிகளென்று பிரசித்தியடைந்திருந்தார்கள். ஆகையால் பவிஷ்யத்காலஸ்வபாவமும் ஜனங்களுடைய சக்தியும் ஊகையினால் தெரிந்துகொள்ளவேண்டிய ஆவசியகம் மகரிஷிகளுக்கு இருக்கவில்லை. இந்த மகரிஷிகள் தர்மசாஸ்திரத்தைக் கல்பித்த காலத்திலேயே அந்தந்த காலத்திற்கும் ஜனங்களுடைய சக்திக்கும் தக்கபடி தர்மங்களை ஏற்படுத்தியிருக்கிறார்களே தவிர எல்லா காலங்களிலும் ஒரேவிதமான தர்மத்தை ஆசரிக்கத் தகுந்ததென்றும் அதற்கு விரோதமான தர்மாசரணையினால் ஜனங்கள் தோஷிகளாகிறார்களென்றும் சொல்லி இருக்கவில்லை. (கிருஷி) வியவசாயம் பிராம்மணனுக்கு சகஜ தர்மமென்று எந்த யுகத்திலும் தர்மமாக சொல்லியிருக்கவில்லை. கலியுகத்தில் தான் கலப்பை பிடித்து உழுவதினால் பிராம்மணன் கிருஷி வேலை செய்வது தர்மமென்று சொல்லியிருக்கிறார்கள். மற்ற யுகங்களில் ஸ்வர்ணஸ்தேயம், ஸுராபானம் பிரம்மஹத்தி தங்கத்தை திருடுவது, கள் குடிப்பது, பிராம்மணனைக் கொல்வது முதலான பாபங்களுக்கு மாணாந்த பிராயச்சித்தம் செய்யவேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். அப்படிப்பட்ட மகா பாதகங்கள் இந்த யுகத்தில் கேவ



ஸ்ரீ மஹாஸ்வாமிகள்
நரசிம்ஹவனத்தில்
ஆந்ஹிகத்திலிருப்பது.

லம் குறைந்த பிராயச்சித்தத்தை அனுஷ்டிப்பதினால் நிவர்த்தியாகுமென்று சொல்லியிருக்கிறார்கள். இது போலவே காலானுகுணமாகவும் அந்தந்த காலத்தி லுள்ள ஜனங்களுடைய சக்திக்குத் தக்கபடிக்கும் மக ரிஷிகள் அனுக்கிரஹ பூர்வமாக நிபந்தனைகளைக் கல் பித்திருக்கிறார்களென்று வெளிப்படுகிறது.

இன்னொரு சங்கதியை ஆலோசிப்பதினால் மக ரிஷிகள் நடந்ததும நடக்கப்போவதுமான சங்கதிகளை அறிந்து இருந்தார்களென்ற விஷயம் தெரியவரலாம். பாரதம் முதலிய இதிஹாஸங்களைச் சொல்லியிருக்கும் வியாஸ மகரிஷிகள் பிரபஞ்ச ஸ்திதி கிருதயுகாதிகளில் எப்படி இருந்ததென்பதையும், கலியுகத்தில் சிலகாலம் கழிந்த மேல் எந்த மாதிரியில் வரலாமென்ற விஷயத் தையும் குறிப்பித்திருக்கிறார். பாரதத்தில் சொல்லி இருக்கும மாதிரியையும் பிரகிருத காலத்தில் இருக் கும் பிரபஞ்ச ஸ்வபாவத்தையும் ஒன்றுக்கொன்று யோஜித்துப் பார்த்தால் அநேக வருஷங்களுக்கு முன் சொல்லியிருக்கும் சங்கதிகளில் சிலது இப்போதே அனுபவத்தில் வந்திருப்பதாயும் இன்னம் அநேக விஷயங்கள் நம் அனுபவத்திற்கு கொஞ்ச காலத்தி லேயே வரக்கூடியவைகளாயுமிருக்கின்றன. இந்த பார தத்தை எழுதியவர் வியாசரல்லவென்றும் ஒருவரே செய்ததல்லவென்றும், வெவ்வேறு காலங்களில் அநே கர்களால் எழுதப்பட்டதென்றும் கலியுகத்திய மகானு பாவர்களின் சித்தாந்தமென்று தெரியவருகிறது. அது

எப்படியாவது இருக்கட்டும், அந்த பாரதம் எந்த காலத்தில் எவரால் எழுதுவதற்கு ஆரம்பம் செய்யப் பட்டது? ஆரம்பம் செய்தவர் எவ்வளவு தூரம் வரையில் எழுதியிருந்தார்? இரண்டாவது பாரதகர்த்தா யார்? அவர் எப்போ ஆரம்பம் செய்து எதுவரையில் எழுதினர்?

இந்தப் பிரகாரம் எத்தனை தடவை எவ்வளவு ஜனங்களால் எழுதப்பட்டது? என்ற விஷயம் இன்னமும் இந்த கலியுகத்திய மகானுபாவர்களால் நிச்சயிக்கப் பட்டதாகத் தோன்றவில்லையாகையால் அப்படி நிஷ்கர்ஷை ஆகிறவரையில் நம் முன்னோர் பரம்பரை கிரமமாய் நமக்கு கொடுத்திருக்கிற ஞானத்திலேயே நம்பிக்கை வைத்து பாரதம் வியாச மகரிஷிகளால் செய்யப்பட்டதென்று ஒப்புக்கொள்வதினால் அபாயம் ஒன்றும் வருவதில்லை. மேலே சொன்னபடி பாரதம் பிறந்த காலமாவது, செய்தவர்களாவது இதுவரையில் நிஷ்கர்ஷை செய்யப்படாமலிருப்பதினால் நாம் தெரிந்துகொண்டபடி பாரதம் பிறந்ததல்லவென்று தாராளமாய் சொல்லலாம். அந்த சந்தர்ப்பத்திலும் நம் முன்னோர்களுக்கு மேல்வரும் சங்கதிகள் தெரிகிற சாமர்த்தியம் இருந்ததாக இக்காலத்திய நம் அனுபவத்தினால் ஒப்புக்கொள்ளவேண்டும். அப்படிப்பட்டவர்கள் பெரியோர்களென்றும் ஞானிகளென்றும் நாம் ஏன் ஒப்புக்கொள்ளக்கூடாது? இதனால் காலத்திரய ஞானிகளான மகரிஷிகளால் முன்னதாகவே காலத்தையும்

ஜனங்களையும் அறிந்துகொண்டு செய்யப்பட்டிருக்கிற தர்ம சாஸ்திரங்களில் திருத்தங்களை அல்ப ஞானர்களான நாம் செய்வதற்கு அவகாசம் எங்கு இருக்கிறது.

ஒருவேளை முந்திய மகரிஷிகளையும் அவர்கள் ஞானத்தையும் அவர்கள் சாமர்த்தியத்தையும் ஒப்புக்கொள்ளுவதற்கு இக்காலத்திய நம் புத்திசாமர்த்தியத்தாலும், நேர்ந்திருக்கிற சந்தர்ப்பங்களினாலும் அவகாசமில்லை என்று நாம் சொல்லக்கூடும். இந்த காரணத்தால் காலானுகுணமாக தர்ம சாஸ்திரங்களை மாற்றுவதற்கு போதுமான அவகாசமிருப்பதாயும் அந்த காரியத்தில் நம்மை பிரவிர்த்திக்கும்படி செய்து அனுகூலப்படுத்திக் கொடுக்கும்படிக்கும் நீங்கள் கேட்கக்கூடும்.

இக்காலத்திய காலஸ்திதியினாலும் ஜனங்களுக்கு இருக்கக்கூடிய அனுகூலம், அபேக்ஷை இவைகளாவன், அன்ய திரவியங்களை அபகரிப்பது, அன்ய ஸ்திரீகளைத் தேடுவது, முதலிய காரியத்தில் அவிவேகிகளுக்கு அபேக்ஷை உண்டாகக்கூடும். அந்த ஜனங்கள் கூட்டம் அதிகமாயிருந்து அவர்களெல்லாம் சேர்ந்து, அன்ய திரவியாபஹாரணம், அன்ய ஸ்திரீகளைச் சேருதல் முதலியவைகள், சிக்ஷார்ஹமல்லவென்று ராஜசம்பந்தமான நிபந்தனைகளில் திருத்தம் செய்துகொடுக்கும்படி ராஜனிடத்தில் அபேக்ஷித்தால் வெகு ஜனங்கள் பிரார்த்தனை என்று அங்கீகரித்து அந்தப்படியே சட்டங்களை ராஜர்கள் திருத்தி மாறுதல் செய்துகொடுப்பார்களோ? அப்படி மாற்றுவதில் அப்படிப்பட்ட

ராஜனால் ஆளப்படுகிற ராஜ்யம் க்ஷேமமாய் இருக்கு மோ? அந்த ராஜனுடைய நிலைமை நியாயமான நிலைமை என்று சிலாகிக்கக்கூடியதாகுமோ? ஆகையால், நன்றாக ஆலோசனை செய்து குணதோஷங்களை அறிந்து யுக்தி யுக்தமான ஆலோசனை கொடுத்தால் அவ் விஷயத்தில் பிரவிர்த்திக்கலாமேயல்லாமல் விசாரமில்லாமல் கொடுக்கக்கூடிய ஆலோசனைக்கு அவகாசம் கொடுத்து அந்தப்படி நடந்துகொள்ளக்கூடிய ராஜன் லோகத்தில் நிந்திக்கக்கூடியவனாகிறான்.

அது அப்படியிருக்கட்டும். இப்போது உங்கள் அபேக்ஷை நம்முடைய நடவடிக்கைகளுக்காக சாஸ்திரத்தை புதிதாய் எழுதிக்கொடுக்க வேண்டுமென்பதல்லவா? சாஸ்திரமென்றால், அதன் அர்த்தமென்ன? தன் இச்சைப்படி தங்குதடையில்லாமல் பிரவிர்த்திக்கிற மனுஷியனை அங்குசம்போலான சாஸ்திரத்தினால் பிடித்துநிறுத்தக்கூடியதுதானே சாஸ்திரமென்ற சப்தத்தினாலுண்டாகக்கூடிய அர்த்தம். இவ்விதமான சாஸ்திரம் இப்போது சித்தமாகவே இருப்பதினால் அந்த சாஸ்திர நிபந்தனைக்கு உள்பட்டு நடப்பது அசாத்யமென்று உங்கள் அபிப்பிராயமாயிருக்கிறது. உங்கள் பிரவிர்த்திக்குத் தக்கபடிக்கும், உங்களை எந்த சந்தர்ப்பத்திலும் தடை செய்யாமலும் இருக்கும்படி சாஸ்திரமென்று, பெயருடன் மாத்திரம் ஒரு கிரந்தத்தை நாம் எழுதிக்கொடுத்தால் உங்கள் இஷ்ட சித்தி ஆனதாக ஆகிறது. அப்படிப்பட்ட கிரந்தத்தை எழுதிக்கொ

டுக்கிற நம் விஷயத்தில் மகரிஷிதுல்யரென்ற கௌரவத்தை நீங்கள் செய்வீர்கள். இந்த பிரயோஜனத்திற்காக எழுதிக் கொடுக்கக்கூடிய கிரந்தத்திற்கு தர்ம சாஸ்திரமென்று பெயர் வைத்த மாத்திரத்தில் என்றைக்கும் அது தர்ம சாஸ்திரமாகமாட்டாது. சாஸ்திரீயமான அனுஷ்டானத்தினால் வரக்கூடிய பிரயோஜனமும் நம் நூதன சாஸ்திரானுஷ்டானத்தினால் வரமாட்டாது. ஆகையால் தத்காலத்தில் நமக்கு கஷ்டமாய்த் தோன்றினாலும் பரிணாமத்தில் நமக்கு மகா பலத்தையே கொடுக்கக்கூடியதாகையால் இக்காலத்தில் அவ்வப்பொழுது உண்டாகும் மனோவிருத்தியை தடுத்து கூடியமட்டில் தர்ம சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் தர்மங்களை ஆசரிப்பதினாலும் அதர்மங்களென்று சொல்லியிருக்கும் காரியங்களை பூர்த்தியாகவும் ஆசரிக்காமலே விட்டுவிடுவதினாலும் சிரேயஸ்ஸை அடையத்தக்கது க்ஷேமகரமென்று உபதேசம் செய்தார்கள்.

இந்தப்படி மேல் சொன்ன பிரகாரம் ஸ்ரீஸ்வாமிகள் சொன்ன சமாதானத்தின் மேல் யாவரும் ஆக்ஷேபயுக்திகள் சொல்லும்படியாயிருக்கவில்லையாகையால் எல்லாரும் மௌனமாய் இருக்கவேண்டியதாயிற்று.

இப்பால் சுமார் 29-30 வருஷங்களுக்கு முன் இந்து தர்மசாஸ்திரங்களினால் தடுக்கப்பட்டிருக்கிற சமுத்திர யானத்தையும், தீவாந்தர வாசத்தையும், தென்தேசத்திய பிராம்மணர்கள் இப்போது போலவ்

வளவு நிச்சங்கமாக செய்துகொண்டிருக்கவில்லை. அது வரையில் நம் தேசத்திய பிராம்மணர்களில், ஒன்று இரண்டு பேர் சமுத்திரயானம் செய்து தீவாந்தர வாசம் செய்து வந்திருந்ததாயும் அவர்கள் பிராம்மண சங்கத்திலிருந்து அப்புறப்படுத்தப்பட்டிருந்ததாகவும் தெரியவந்திருக்கிறதே தவிர மற்றவர்கள் யாரும் இவ் விஷயத்தில் பிரவர்த்தகர்களா யிருந்ததாகத் தெரிய வில்லை. ஸ்ரீஸ்வாமிகள் மைசூர் ராஜதானியில் வாசம் செய்துகொண்டிருந்த காலத்தில் அவர்கள் அனுமதி யைப்பெற்று சமுத்திரயானம் செய்து தீவாந்தரங்கள் போய் வரவேண்டுமென்ற உத்தேசம் மைசூர் தேசத் தில் பிரக்யாதியுள்ள சிலர்களுக்கு மனதில் தோன்றிக் கொண்டிருந்தது. அந்த சந்தர்ப்பத்தில் அந்த வித மான தங்கள் உத்தேசத்திற்கு காலபாவத்தினலுண் டாயிருக்கும் ஆவசியகதையைக்குறித்து, கீழ் சொல்ல ப்பட்ட பிரகாரம் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் தெரிவித்துக் கொண்டார்கள். நம் இந்தியாதேசம் தேசாந்திரஸ் தர்களின் ஆளுகைக்கு உள்பட்டது. அவர்கள் சக்கி ரவர்த்திகளாகி நம் தேசிய ராஜர்கள் ஸாமந்த ராஜர்க ளாக ஏற்பட்டு அவர்களுக்கு அதீனராயிருக்கிறார்கள். இதனல் நம் தேசத்திய சம்பத்து பராக்கிரமம் ஸ்வா தந்திரியம் எல்லாம் சக்கிரவர்த்திகளின் கையிலடங்கி யிருக்கிறதென்பது ஸஹஜமாயிருக்கிறதல்லவா? இக் காலத்திய சந்தர்ப்பங்களினல், தேசிய வித்யாப்பியா சத்தினலும் வியவஹாரங்களை நடத்துவது அசாத்திய

மாயிருக்கிறது. இராஜாங்கத்தின் மாறுபாட்டால் புதிதாய் நம் தேசத்தாரால் அப்பியாசம் செய்யப்பட்ட தொழில்களுக்கு தேவையுள்ள அநேக பதார்த்தங்கள் தீவாந்திரத்திலிருந்தே வரவேண்டிய ஆவசியகம் ஏற்பட்டிருக்கிறது. அந்த பதார்த்தங்களை சில சந்தர்ப்பங்களில் பிராந்தியினாலும் சில சந்தர்ப்பங்களில் சுலபமாய் கிடைக்கிறதென்ற காரணத்தாலும் எல்லா ஜனங்களும் வெளியிலிருந்து வரக்கூடிய சாமான்களையே உபயோகித்து வந்திருந்ததினால் நம் ஸ்வதேசிகள் உபயோகத்திற்காக ஸ்வதேசத்தில் உண்டாகிவருகிற அநேக சாமான்கள் நம்மாலேயே அனாதரவு செய்யப்பட்டுவந்து அந்தத் தொழிலாளிகளுக்கு பிரோத்ஸாஹமில்லாமல் நிராதரவானார்கள். ராஜகீய வித்யாப்பியாசம் செய்விப்பதற்காக வேண்டிய சௌகரியங்கள் சக்கிரவர்த்தி சர்க்காரவர்கள் ஏற்படுத்திக் கொடுத்திருப்பதினால் தேசீயமான வித்யை அனாதரவுக்கு கொண்டுவரப்பட்டு அபிவிருத்தி அடையாமல் போயிருக்கிறது. இப்படியே ஆங்கிலேய வைத்யசாலைகள் பிரதி ஒரு ஸ்தலத்திலும் பிரஜைகளுடைய அனுகூலத்திற்காக ஸ்தாபிக்கப்பட்டு அதிகமான சௌகரியத்தை உண்டுபண்ணிவருவதால் நம் தேசத்திலிருந்த வைத்தியர்களுக்கு அவலம்பனமில்லாமல் போகவே ஆயுர்வேத சிகித்ஸா முறை பெயர்மாத்திரந்தானிருக்கிறது. இது போலவே ஒவ்வொரு விஷயத்திலும் சக்கிரவர்த்தி சர்க்கார் அவர்கள் தம் குடை நிழலில் ஜீவித்து வரும்

ஜனங்களுடைய யோகக்ஷேமங்களுக்காக செய்திருக்கிற ஏற்பாட்டினுல் இன்னம்மேலால் நம் தேசவாஸிகள் அன்ய தேசங்களுக்கு பிரயாணம் செய்து சில காலம் தேசாந்தரத்தில் வாசம் செய்து அவ்விடத்திய வித்தியாப்பியாசத்தினுலும் அவ்விடத்திய ஜனங்களுடைய சகவாசத்தினுலும் வேண்டிய அறிவுகளை சம்பாதித்துக்கொண்டு வந்தாலொழிய நம்முடைய க்ஷேமத்துக்காக சர்க்காரால் கொடுக்கப்பட்டிருக்கிற அநேக விதமான சகாயங்களை நாம் அனுபவிப்பதற்கும் தேசியர்களுக்குள்ள ஒருவருக்கொருவர் செய்யக்கூடிய உபகாரங்களை செய்வதற்கும் நம் ஜீவனத்தை சம்பாதித்துக்கொண்டு ஜீவிப்பதற்கும் அவகாசம் மிகவும் குறைந்து வருவதாக தோன்றிவருவதால் முக்கியமான இந்த சந்தர்ப்பத்தில் தீவாந்தரத்திற்கு போய் வர வேண்டிய ஆவசியகம் அதிகமாக உண்டாயிருக்கிறது.

இந்த காரணத்தால் சமுத்திரயானம் செய்து திரும்பி வந்தவர்களை தர்மசாஸ்திரப்படி நம் கூட்டத்திலிருந்து விலக்கி வரும் பக்ஷத்தில் நாளடைவில் நம் சங்கத்தில் ஜனங்களுடைய சங்கியை குறைந்து கொண்டு வந்து சங்கத்தின் சக்தி குன்றிவிடும். இதனுல் ஒருவருக்கொருவர் அபிமானமும் ஐகமத்யமும் தப்பி வெகு விதமான தொந்திரவுக்கு ஆளாகிறோம். ஆகையால் நம் இந்தியாவில் சங்கபரிஷ்காரத்திற்காக ஏற்பட்டு எங்கள் அப்யுதயத்தை சிந்தித்துக்கொண்டு வருகிற ஸ்ரீஸ்வாமிகள் வர்த்தமான காலஸ்திதியை

யோசித்து பிராம்மணர்கள் ஸமுத்ரயானம் செய்து தீவாந்தர வாசம் செய்து திரும்பி வருவதற்கும், அப்படி வந்தவர்கள் அல்பமான பிராயச்சித்த அனுஷ்டானத்தினால் தங்கள் கூட்டத்தில் சேர்ந்து வியவகாரம் செய்துகொள்ளும் விஷயத்திலும் அனுமதி கொடுக்கவேண்டுமென்று தெரிவித்துக்கொண்டார்கள்.

சிஷ்யர்களால் செய்துகொள்ளப்பட்ட பிரார்த்தனையை சாவகாசமாய் முழுவதும் தெரிந்துகொண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அடியில் கண்ட பிரகாரம் தம் அபிப்பிராயத்தை சூசனம் செய்தார்கள்.

சமுத்திரயானம் இந்து தர்ம சாஸ்திரங்களினால் நிஷேதம் செய்யப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட நிஷித்தாசாரணத்தை இஷ்டப்படாமல் ஒரு தடவை செய்தவர்களுக்கு பிரபலமான பிராயச்சித்தானுஷ்டானத்தினால் பாரலௌகிக சுத்தி உண்டென்றும் இந்த லோகத்தில் ஸம்வியவஹாரத்திற்கு யோக்யதை யதோக்தமான பிராயச்சித்தத்தை அனுஷ்டித்தாலும் உண்டாகிறதில்லையென்றும் சாஸ்திரங்களில் சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனாலும் ஸமுத்திரயானம் பிராயச்சித்தானுஷ்டானம் சாஸ்திரப்படி செய்தாலும் இவ்வுலகத்தில் ஸம்வியவஹார யோக்யதையை கொடுப்பதில்லை என்று சொல்லுகிற தர்மசாஸ்திரங்களில் சமுத்திரயானம் அவ்வளவு பலமான தோஷமென்று அபிப்பிராயப்படுவதற்கு காரணங்கள் என்னவென்று சொல்லியிருக்கவில்லை. எப்படியிருந்தாலும் அவ்வ

ளவு பிரபலமான தோஷமென்று சொல்வதற்கு நிமித்தத்தை ஆலோசித்துப்பார்த்தால் நியாயமானகாரணம் இருக்கிறதென்று கண்டுபிடிப்பது அசாத்தியமில்லை. அது எப்படி என்றால்

शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।

ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥

என்பதாக பிராம்மணனுக்கு ஸஹஜமான கர்மங்கள் ஒன்பது கர்மங்களென்று நிர்ணயம் செய்திருக்கிறார்கள்.

இவைகளில் சமம் என்றால் பிரபஞ்சத்திலிருக்கக்கூடிய பிரதி ஒரு விஷயத்திலும் தோஷமிருக்கிறதென்று அநேகந்தடவை விசாரம் செய்து அறிந்து விஷயங்களிலிருந்து மனதை திருப்பி தன் விஷயமாகவே நிற்கும்படி செய்யக்கூடிய அப்பியாஸத்திற்கு சமம் என்று அர்த்தம் செய்திருக்கிறார்கள். இரண்டாவது தமமென்றால் கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து இவ்விதம் பத்து இந்திரியங்களையும் விஷயங்களின் பக்கம் போகாமல் அந்தந்த இந்திரியஸ்தானங்களிலேயே தடுத்து நிற்கும்படி அப்பியாசம் செய்வது தமமென்று செல்லப்படுகிறது. மூன்றாவது தபஸ் என்றால் இது சாரீரமென்றும் வாங்மயம் என்றும், மானஸிகமென்றும் மூன்று விதமாக பிரிக்கப்பட்டு அதில் தேவபிராம்மணர் முதலியவர்விஷயமாக செய்யப்படுகிற நமஸ்காரம் முதலான பூஜை, சௌசம், ஆர்ஜவம், பிரம்மசர்யம், அஹிம்ஸை, இவை

ான் சரீரத்தினால் செய்யக்கூடியதபஸ் என்றும், வாசிகமென்றால் எவ்விதமான சமயத்திலும் யாருக்கும் உத்வேகம் உண்டாகாதபடி ஸத்யமாயும் பிரியமுமான வார்த்தை சொல்லுவதும், வேதாப்பியாசம் செய்வதும், இதையே வாசிகமான தபஸ் என்றும் சொல்லுவார்கள். 3வது மானஸிகமென்றால், மந:பிரஸாத: என்றால் திருப்தி என்றும் சித்தசுத்தி என்றும் சொல்லலாம். ஸௌம்யத்வம், என்றால் முகத்தில் தெளிவை உண்டுபண்ணக்கூடிய அந்தக்கரண விருத்தி மனோபாவமென்றும் தெரிந்துகொள்ளலாம். மௌநம் பேசாமலிருப்பது. இப்படி அர்த்தம் செய்வதில், வாக்கை நிர்ப்பந்தம் செய்யவேண்டுமானால் மனது நிர்ப்பந்திக்கப்படாமல் ஆகமாட்டாது; ஆகையால் மௌனத்தை இதில் சேர்த்திருக்கிறது. ஆத்மவிநிக்ரஹம் என்றால் எல்லா விதத்திலும் மனதைத்தடுப்பது. பாவஸம்சுத்தி என்றால் அன்யரிடத்தில் வியவஹாரம் செய்யக்கூடிய காலங்களில் வஞ்சனை இல்லாமல் சுத்தமான பாவத்துடனிருப்பது. இது மானஸிகமான தபஸ் என்று அர்த்தம் செய்திருக்கிறார்கள். இந்தப்பிரகாரம் முக்கரணங்களால் ஸாதிக்கவேண்டிய மேற்கண்ட கர்மாசரணைக்கு தபஸ் என்று அர்த்தமாகிறது. 4வது சௌசம் என்றால், இது பாஹ்யம் ஆந்தரம் என்று இருவகையாக பிரிக்கப்பட்டது. இதில் பாஹ்ய சௌசமென்றால், மண் ஜலம் முதலானவைகளால் அந்தந்த வர்ணாசிரமானுகுணமாக சாஸ்திரங்களில் சொல்லிய

பிரகாரம், சுத்தி செய்துகொள்ளுவது பாஹ்ய சௌச மென்றும், காமம் குரோதம் முதலிய தோஷங்களை விட்டு இருப்பதினால் மனதிலுள்ள அசுத்தி போய் சுத்தமாகுவதால் அவைகளைவிட்டு இருப்பது ஆந்தர சௌசமென்றும் சொல்லியிருக்கிறது. 5 வது க்ஷாந்தி என்றால் பொறுமை; எவரிடத்திலிருந்தாவது தொந்திரவு உண்டானாலும் அதற்கு பதில் செய்யாமல் தனக்குண்டான தொந்திரவை பொறுத்துக் கொள்வது என்று அர்த்தம். 6-வது ஆர்ஜவம் என்றால் நேரான ஸ்வபாவம். அதாவது எத்தருணத்திலும் எவரிடத்திலும் வக்கிர ஸ்வபாவத்தைக்காண்பிக்காமல் இருப்பதென்று அறியவேண்டும். 7-வது ஞானமென்றால் வேதசாஸ்திர ஞானமென்று பொருள். 8-வது விஞ்ஞானமென்றால் தன்னால் விசாரம் செய்யப்பட்ட சாஸ்திரார்த்தத்தை அனுபவத்திற்குக்கொண்டு வருதல் என்று அர்த்தம். 9-வது ஆஸ்திக்யம் என்றால் பிரபஞ்சத்திற்கு வேறாக இந்த பிரபஞ்சத்திற்கும் காரணமான பரமேசுவரன் ஒருவர் உண்டு. என்ற நம்பிக்கைக்கு ஆஸ்திக்யமென்று பெயர்.

இந்த விதமாய் பிராம்மணனுக்கு மேற்கண்ட ஒன்பது குணங்களும் ஸஹஜமானவையென்றும் அனுஷ்டிக்கத் தகுந்தனவென்றும் சொல்லியிருக்கிற குணங்களில் ஏதாவது ஒரு குணம் குறைந்தாலும் அதற்கு லோபம் வந்தாலும் அவன் பிராம்மணனென்று சொல்லிக்கொள்ளுவதற்கில்லையே? இந்த குணங்களை காப்பா

ற்றிக்கொள்ளவேண்டுமானாலும் அதைவிருத்திசெய்து கொள்ளவேண்டுமானாலும் அதற்கு பிரசாரமுள்ள தேசத்திலும் அந்த ஜனங்களுடைய மத்தியத்திலும் இடைவிடாமல் வாசம் செய்து பிரயத்தினத்துடன் தப்பிப்போகாமல் பார்த்துக்கொண்டால் மாத்திரம் அது நிற்குமே தவிர மேற்கண்ட குணங்கள் கொஞ்சமும் பிரசாரமே இல்லாத தேசத்தில் வாசம் செய்வதினாலும் இந்த குணங்களில் ஒன்றையாவது அறியாத ஜனங்களுடன் சகவாசம் செய்வதினாலும் சம்பூர்ணமாய் பிராம்மணனுக்கு சகஜமான குணங்களெல்லாம் தப்பிப்போய் பிராம்மண்யமே இல்லாதபடி ஆய்விடும். இந்த பிராம்மணன் எந்த பிராயச்சித்தத்தினால் சுத்தனானாலும் இவனை விட்டுப்போன குணங்கள் மருபடி திரும்பிவருவதற்கு அவகாசமில்லையாகையால் இவனுடைய சகவாசம் மற்றவர்களுக்கும் சகஜமான குணங்களை போக்கடித்துவிடக்கூடுமாகையால் அப்படிப்பட்டவனை தங்கள் கூட்டத்திலிருந்து வெளியில் விடவேண்டுமென்று சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிறார்கள். இந்த அபிப்பிராயத்தை உலக திருஷ்டாந்தத்தினாலும் சாதிக்கலாம். அது எப்படியெனில் ஒரு புஷ்பக்கொடியில் மார்த்தவம் சுகந்தம் கோமளபாவம் முதலிய குணங்களுடன் கூடவே புஷ்பங்கள் உண்டாவதால் அந்த புஷ்பங்களுக்கு மேற்கண்ட மார்த்தவாதி குணங்கள் சகஜ தர்மங்களென்று சொல்லவேண்டும். இந்த குணங்களில் புஷ்பம் தனக்கு உத்பத்தி ஸ்தான

மாயிருக்குமிடத்தில் ஒன்றுக்கொன்று சகாயத்துடன் கூட்டமாக சேர்ந்து இருக்கும் வரை புஷ்பத்தை விட்டுப்போகிறதில்லையாகையால் அந்த புஷ்பங்கள் ரமணீயமாகவே இருக்கின்றன. இதன் நடுவில் ஒரு புஷ்பத்தை கொடியை விட்டு விலக்கி மேற்கண்ட குணங்களில் ஒரு குணமாவது இல்லாத மற்றொரு பதார்த்தத்துடன் சேர்த்துவைத்தால் அதிலிருந்த குணங்களெல்லாம் அதி சீக்கிர காலத்திலேயே நஷ்டமாகி புஷ்பத்தை விரூபமாக செய்கிறதென்ற விஷயம் அனுபவத்திற்கு வந்ததாகவே இருக்கிறது. அவ்விதமான புஷ்பத்தை எந்த பரிஷ்காரம் செய்வதினால் அதில் போயிருந்த சகஜமான மார்த்தவாதி குணங்களை திரும்பி வரும்படி செய்து உபயோகிக்கும்படி செய்யலாம். ஸ்தலாந்தரத்திற்கு போவதாலும் வேறு பதார்த்தத்தின் சேர்க்கையாலும் சகஜமான குணங்களால் விடப்பட்டு இன்னும் விரூபத்தை அடைந்து பெயர் மாத்திரம் பாக்கியாயுள்ள புஷ்பத்தை சகஜ குணங்களுடன் கூடியிருக்கிற வேறு புஷ்பங்களுடன் மறுபடியும் சேர்ப்பதினால், அப்படி சேர்க்கப்பட்ட புஷ்பத்தின் சகவாசத்தினால் மற்ற புஷ்பங்களிலுள்ள சகஜ குணங்கள் அதி சீக்கிரத்தில் நஷ்டமடைந்து அந்த புஷ்பங்கள் விரூபமாய்விடுகிறதென்பது அனுபவத்தில் கண்ட விஷயமல்லவா? இதுபோல் சகஜதர்மங்களைப்போக்கடித்துக்கொண்ட பிராம்மணன் எந்த சம்ஸ்காரத்தினாலும் மறுபடி தன் தர்மங்களை சம்பாதிக்கமாட்டா

ளென்றும் அந்த பிராம்மணனுடைய சகவாசத்தினல் இதர பிராம்மணர்களிலுள்ள சகஜமான குணங்களுக்கும் லோபம் உண்டாகுமென்றும் சொல்லுவதிலும் அந்த அம்சத்தை நம்புவதிலும் என்ன ஆக்ஷேபனை யிருக்கிறது. இந்த காரணத்தினுலேயே ஸமுத்திரயானம் அவ்வளவு விசேஷமான பாதகமென்று சாஸ்திரங்களின் தாத்பரியமென்று தாராளமாக சொல்லலாம்.

(சுராபானம்) கட்குடித்தால் மகா பாதகமென்று கணக்கிடப்பட்டிருக்கிறது. சாமான்யமாய் பார்த்தால் இதனுல் பிறருக்கு யாதொரு தொந்திரவும் ஹிம்சையும் செய்ததாக ஆகிறதில்லை. பானம்செய்கிறவனுக்கு அதினுல் உண்டாகக்கூடிய தொந்திரவு மிகவும் குறைவாக இருப்பதாகவே தோன்றுகிறது. இப்படிப்பட்ட காரியத்தை மகா பாதகத்தில் சேர்த்து இதற்கு மஹானந்த பிராயச்சித்தம் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? இதன் காரணத்தை ஆலோசித்தால் எல்லாவிதமான பாபங்களை செய்வதற்கும் சுராபானம் என்ற ஒருபாதகமே மூலகாரணமாகலாமாகையால் சுராபானம் மகா பாதகமென்று சொல்லியிருப்பது யுக்தமென்று தோன்றுமல் போகாது. லோகத்தில் இந்த விஷயத்தில் ஒரு இதிஹாஸம் சொல்லுவதுண்டு. அதெப்படி என்ருல்—ஒரு பிராம்மணன் பண்டிதராயும் ஆசாரசீலனுயும் அனுஷ்டானபரனுயுமிருந்தான். இவன் ஒரு தினம் ஏதோ ஒரு கிராமத்திற்கு பிரயாணமாய் வீட்டிலிருந்து தனியாய் புறப்பட்டான்.

வழியில் துஷ்டர்களான சிலர் போய்க்கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில் ஸ்வபாவமான அந்த ஜனங்களுடைய துஷ்ட புத்தியினால் நிராபராதியான இந்த பிராம்மணனுக்கு தொந்திரவு செய்யவேண்டுமென்று அந்த ஜனங்களுக்குத் தோன்றி இவனை பாலத்காரமாக பிடித்துக்கொண்டார்கள். அந்தக் காலத்தில் பிராமணன் தன்னை ஹிம்சை செய்யாமல் விடவேண்டுமென்று வெகுவிதமாய் அவர்களிடத்தில் சொல்லிக்கொண்டான். பிற்பாடு இந்த பிராமணன் கோரியபடி இவனை விடவேண்டுமானால் தாங்கள் சொன்னபடி நடப்பதானால் விட்டுவிடுவதாக சொன்னார்கள். அவர்கள் ஹிம்சையை பொறுக்கமுடியாமல் எப்படியாவது அந்த துஷ்ட ஜனங்களிடமிருந்து தப்பித்துக்கொண்டு போகவேணுமென்ற அபிப்பிராயமுள்ள பிராம்மணன் நீங்கள் சொல்லுகிறபடி கேட்கிறேன் என்று சொன்னான். அப்போது அவர்களுடன் பிரயாணம் செய்துகொண்டிருந்த சண்டாளியான ஒரு ஸ்திரீயைக் காண்பித்து அவளிடத்தில் சம்போகம் செய்தால் விடுகிறோமென்று சொன்னார்கள். இந்த வார்த்தையைக் காதில் கேட்ட அந்த பிராம்மணனுக்கு அந்தப்படி நடந்துகொள்வதைக் காட்டிலும் இவர்களிடமிருந்து தன்னுடைய பிராணனை போக்கடித்துக் கொள்வது சிலாக்கியமென்று தோன்றி அந்த துஷ்டர்களுடைய வார்த்தையை மறுத்துவிட்டான். பிறகு அந்த ஜனங்கள் அந்த ஸ்திரீயின் இடுப்பில் இருந்த ஒரு குழந்தையை

பிராம்மணன் முன்னே வைத்து இந்தக் குழந்தையின் கழுத்தை முறித்துக் கொன்றால் அவனை நிர்ப்பந்திக்காமல் விடுவதாக தெரிவித்தார்கள். இந்தப் பேச்சு அந்த பிராம்மணனுக்கு முதலில் கேட்ட பேச்சைவிட கர்ணகடூரமாயிருந்தது. தன் கழுத்தையே முறித்துக் கொன்று பிராணனை வாங்கிவிடலாமென்று அந்த ஜனங்களுக்கு தெரிவித்துக் கீழே உட்கார்ந்தான். பிறகு அந்த துஷ்டர்கள் ஒரு பாத்திரத்தில் கள்ளைக்கொண்டுவந்து முன்னே வைத்து அதைக் குடித்தால் விட்டு விடுவதாக சொன்னார்கள். அப்போதும் பிராம்மணன் சுராபானம் மகா பாதகமென்று தெரிந்திருந்தும் பிராணன் மேல் இருக்கிற அபிமானத்தால் எப்படியாவது பிராணனை ரக்ஷித்துக்கொண்டால் தான் செய்யும் சுராபானத்தால் பிறருக்கு ஹிம்சை செய்ததாக ஆகவில்லை. பின்னும் தானாக தன் இஷ்டத்தினால் சுராபானம் செய்யவில்லை. இந்த துஷ்டர்களின் நிர்ப்பந்தத்திற்காக இந்த சமயத்தில் சுராபானம் செய்து பிறகு சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட பிராயச்சித்தத்தை செய்வதால் சுத்தியை சம்பாதித்துக் கொள்ளலாமென்று யோசித்து சுராபானத்தை அங்கீகரித்து பானம் செய்தான். எப்போதும் சுராபானம் செய்யாதவனானபடியால் தக்ஷணமே மதகரமான பதார்த்தத்தை சேவித்ததினால் புத்தி மயக்கம் கொண்டு முதலில் தான் செய்வதற்கு மறுத்துவிட்ட ஸ்திரீ சம்போகத்தையும் செய்து சிசுஹத்தியையும் தானாகவே செய்து முன்னுக்குப்

புறப்பட்டான், என்று தெரியவருகிறது. இந்த இதிஹாஸத்தை அறிந்து ஆலோசித்துப் பார்த்தால் சுராபானம், சகலவிதமான பாபங்களுக்கும் மூலமானதென்று யார் தான் நம்பமாட்டார்கள். இந்தக் காரணத்தை தெரிந்த மகானுபாவர்கள் சுராபானத்தை மகா பாதகமென்று எப்படி சொல்லியிருக்கிறாரோ அதுபோலவே பிராம்மணனுக்கு சகஜமான குணங்களை எல்லாம் போக்கடித்து சுராபானம் முதலிய மகா பாதகங்களை லக்ஷியமில்லாமலும் நாணமில்லாமலும் செய்யும்படி மனுஷ்யனுக்கு மனோவிருத்தியை உண்டு பண்ணக்கூடிய தேசாந்தரவாசத்திற்கும் அங்குள்ள ஜனங்களின் சகவாசத்திற்கும் காரணமான ஸமுத்திரயானம் பிரபல தோஷமென்று அபிப்பிராயப்பட்டு சாஸ்திரங்களில் சமுத்திரயானத்தை முற்றிலும் தடுத்து இருக்கலாமென்று சொல்லலாம். ஆகையினால் காலமஹிமையினால் ஸ்வபாவமாகவே பிரபஞ்சத்தில் தர்மலோபம் உண்டாகிக் கொண்டுவருகிற சந்தர்ப்பத்தில் தர்ம பிரசாரத்திற்காகவே முன்னோரால் நியோகம் செய்யப்பட்டிருக்கிற நாங்கள் பிரபலமாயும் காரணத்துடன் கூடியும் தர்ம சாஸ்திரங்களினால் தடுக்கப்பட்டிருக்கும் ஸமுத்திரயானம் பிராம்மணருக்கு காலஸ்வபாவத்தினால் ஆகலாமென்றும் சாமான்ய பிராயச்சித்தங்களினால் அப்படிப்பட்ட ஜனங்கள் மற்றவர்களுடன் ஸம்வியவஹாரத்திற்கு யோக்யர்களென்றும் சம்மதித்து அபிப்பிராயம் கொடுப்பதில் ஸ்வதந்திரர்களல்ல.

ஆனுல் நீங்கள் சொல்லுகிறபடி நிஷித்தமான ஸமுத்திரயானத்தையும் தீவாந்தர வாசத்தையும் அவ் விடத்திய ஜனங்களுடைய சகவாசத்தையும் செய் யாத பக்ஷத்தில் உங்களுடைய இவ்வுலகத்திய வியவ ஹாரங்கள் நடந்து ஜீவிப்பதே கஷ்டமென்ற விஷயம் நிஜமாயிருக்கும்பக்ஷத்தில் அந்த கஷ்டத்தைப்பரி ஹாரம் செய்து கொண்டு நீங்கள் சிரேயஸ்ஸை அடை யும் விஷயத்தில் உங்களைப்போலவே உங்கள் அப்யுத யத்தை எப்போதும் சிந்தித்துக்கொண்டிருக்கிற நமக் கும் ஆலோசிக்கவேண்டியது அவசியமாகவே இருக் கிறது. எவனுவது ஒரு கஷ்டம் வந்திருக்கும் சமயத் தில் எத்தனை விவேகசாலியாயிருந்தாலும் எவ்வளவு புத்திசாலியாயிருந்தாலும் அவன் விவேகத்தின் மே லும் புத்தியின் மேலும் வந்த கஷ்டம் இருள்போலே மூடிக்கொண்டு, யுக்தம் அயுக்தம் என்ற ஞானம் இல் லாமல் செய்வது சகஜமானது. அந்த காலத்தில் தன க்கு ஹிதசிந்தகரென்றும் ஆப்தரென்றும் நம்பி இருக் கிறவரோடு கூட தீர ஆலோசித்து வந்த கஷ்டங்களை பரிஹரித்துக்கொண்டு சுகத்தை அடைவது புத்தி சாலிகளுடைய காரியம். நாங்கள் எந்த சந்தர்ப்பத்தி லும் உங்களுக்கு அனிஷ்டத்தை கோரக்கூடியவரல்ல வென்றும் அதினுல் நமக்கு ஒரு பிரயோஜனமுமில்லை என்றும் உங்களுக்கு நன்ருகத்தெரியும். அதினுல் தத் காலத்தில் உங்களுக்கு நேர்ந்திருப்பதாக நீங்கள் அபிப்பிராயப்படுகிற கஷ்டங்களை எந்த விதத்திலும்

தர்ம லோபமில்லாமல் பரிகாரம் செய்து கொள்வ தற்கு அனுகூலமான மார்க்கம் இருப்பதாக நமக்குத் தோன்றிக்கொண்டிருக்கிறது. அந்த மார்க்கத்தை சுருக்கமாய் உங்களுக்குக்காண்பிக்கிறோம். அதை தெரிந்துகொண்டு சாவகாசமாக யுக்தாயுக்தங்களை ஆலோசித்து உங்களுக்கும் யுக்தமானதாயும் அனுகூலமானதாயும் தோன்றும் பக்ஷத்தில் அந்தப்படி நடந்து கொள்வது க்ஷேமமென்று தம்முடைய அபிப்பிராயத்தை அடியில் கண்ட பிரகாரம் ஸ்ரீ ஸ்வாமிகள் வெளியிட்டார்கள்.

இந்த தர்ம சாஸ்திரங்களில் ஸமுத்திரயானத்தினால் தடை செய்யப்பட்டவர்கள் பிராம்மணன், க்ஷத்ரியன், வைசியன், என்ற மூன்று வர்ணத்தார்களே தவிர நாலாவது வர்ணத்தியவனுக்கு இந்த நிர்ப்பந்தமில்லை. இந்தியா தேசத்திலுள்ள நாலுவர்ணத்திய ஜனங்களில் முதல் மூன்று வர்ணத்தாருடைய சங்கியை மூன்றில் ஒரு பாகமென்றும் நாலாவது வர்ணத்தாருடைய சங்கியை மூன்றில் இரண்டு பாகமாகயிருக்கலாமென்றும் தோன்றுகிறது. இந்த தருணத்தில் இந்தியா தேசத்திய ஜனங்களின் முன்னேற்றத்திற்கு ஸமுத்திரயானம் தீவாந்தர வாசம் ஆசாணையில் கொண்டுவராமலிருந்தால் அவகாசமே இல்லையென்று உங்கள் அபிப்பிராயமே நிஜமாயிருக்கும்பக்ஷத்தில் அதிக சங்கியையுள்ளவர்களாயும் தர்ம சாஸ்திரங்களினால் நிர்ப்பந்திக்கப்படாதவர்களாயும் இருக்கிற நாலா

வது வர்ணத்தாருக்கு பாக்கி மூன்று வர்ணத்தாரும் சேர்ந்து வேண்டிய சகாயம் செய்து அவர்களை உத்ஸாஹப்படுத்தி தீவாந்தரத்திற்கனுப்பி அந்த ஜனங்களுக்கு இக்காலத்திற்கவசியமான வித்யாப்பியாசத்தை செய்வித்து வேறு விதமான அறிவையும் கற்பித்து அவர்கள் மூலமாய் தேசத்தின் உயர்வுக்கு வேண்டிய பிரயத்தினங்களை நடத்தினால் நாலாவது வர்ணத்தாரின் கூட்டம் எண்ணிக்கையில் அதிகமாயிருப்பதினாலும் முற்காலம் முதல் எல்லா காலங்களிலும் அந்த ஜனங்கள் மற்ற மூன்று வர்ணத்தாருக்கும் அதீனராக இது வரையில் சகாயராகவே இருந்ததாக தெரியவருவதினால் இந்த சந்தர்ப்பத்தில் மூன்று வர்ணத்தாராலும் அடையக்கூடிய சகாயத்திற்காக விசேஷமான நன்றியுடன் முன்னைவிட அதிகமாக மூவர்ணத்தாரை கௌரவித்து அவர்களுக்கு சகாயகராக நிற்கக் கூடுமாகையாலும் இதினால் ஐகமத்யம் அதிகரித்து தேசம் முன்னுக்கு வரக்கூடுமாகையாலும் அந்தப்படி நடத்துவதினாலேயே உங்களுடைய உத்தேசம் சித்தமாகும்போது வெகு காலமிருந்து நடவடிக்கையில் இல்லாத ஒரு காரியத்தை இப்போது அனுஷ்டானத்திற்கு கொண்டு வந்து தூரதிருஷ்டியுள்ளவர்களாயும் ராக துவேஷங்களில்லாதவர்களாயுமிருந்த முந்திய மகானுபாவர்களால் அதர்மமென்று சொல்லப்பட்டிருக்கிற காரியத்தை ஸகஜதர்மமென்பதாக ஸ்தாபிக்க வேண்டுமென்று பிரயத்தினப்படுவதினால் அதிகமான

பிரயோஜனமென்னவிருக்கிறது? இந்தியாதேசத்தில் பிராம்மணர்கள் முதலிலிருந்தே காயிகமான வியாபாரங்களில் விசேஷமாக பிரவிருத்திக்காமலே மானஸிக வியாபாரங்களை அதிகமாக நடத்தி வந்தவர்களாயும் வித்யாவந்தர்களாயுமிருந்தார்களென்றும் இதனால் தங்களுக்கு உண்டாயிருக்கும் புத்தி சாமர்த்தியத்தால் மற்றவர்களைவிட, எந்த பாஷையிலாவது எந்த விஷயத்திலாவது, எவ்வளவு சூக்ஷ்மமாயிருந்தாலும் எவ்வளவு அபூர்வமாயிருந்தாலும் அவ்விஷயங்களை அறிந்துகொள்ளும் விஷயத்தில் பிராம்மணர்களுக்கு உள்ள ஸாமர்த்தியம் மற்றவர்களுக்கு இல்லாமல் போனதால் பிராம்மணர்களே தேசோன்னதிக்காக இக்காலத்திற்குத்தக்கபடி வேண்டிய யத்னங்களைநடத்தவேண்டுமேயல்லாமல் மற்றவர்கள் மூலமாய் நடத்துவதற்கவகாசமில்லை என்று சிலர் அபிப்பிராயப்படுவதாகத்தெரியவருகிறது. இந்த அபிப்பிராயத்தை ஒரே விதமாக எல்லா ஜனங்களும் அங்கீகரிக்கமாட்டார்கள். அப்படியானாலும் வெகு காலமிருந்து வேறொரு காரியத்தில் பிரவிருத்திக்காமல், நியதமான தங்கள் ஆசார வியவகாரங்களினாலும் தங்கள் அனுஷ்டானங்களினாலும் சாந்தர்களாயும் சந்துஷ்டர்களாயும் இருந்துகொண்டு வித்தியாப்பியாசத்திலேயே தங்கள் காலத்தை அதிகமாக செலுத்தி அதின் சகாயத்தினால் மற்றவர்களைவிட கொஞ்சம் அதிகமான புத்தி சாமர்த்தியத்தை பிராம்மணர்கள் சம்பாதித்தார்களென்ற விஷ

யத்தை கொஞ்சமாவது மற்றவர்ணத்தார்களும் அங்கீகரிக்காமலிருக்கமாட்டார்கள். ஆனால் மானஸிக வியாபாரங்களை நடத்தி அதின் பிரயோஜனத்தைப்பெற வேண்டுமானால், மனது சுத்தமாகயிருக்கவேண்டும். மனசுத்தி என்றால் இதில் சஞ்சலமில்லாமையே என்று சொல்லலாம். அப்படி ஆகவேண்டுமானால் ராகத்வேஷம் முதலிய விருத்திகள் தணியவேண்டும். இதற்கு சாதனம் ஆகாரசுத்தி, ஸத்கர்மானுஷ்டானம், பயத்தை உண்டாக்கக்கூடிய காரியங்களை விடுதல், இவைகளே முக்கிய காரணங்கள் என்பது பிரசித்தம். பிராம்மணனுக்கு தர்மமாக சாஸ்திரங்களில் வாதிக்கப்பட்டிருக்கும் தர்மங்களை ஆலோசித்தால் ஒவ்வொரு தர்மமும் மனசுத்திக்கே அனுகுணமாயிருப்பதே தவிர ஒன்றாவது அதற்கு விரோதமாக இருப்பதாகக்காணப்படுவதில்லை. அப்படிப்பட்ட தர்மங்களை சொன்னபடி கூடியவரையில் முன்னோர்கள் நடத்திக்கொண்டு தங்கள் தர்மானுஷ்டானங்களுக்கு சகாயராயிருந்த க்ஷத்ரியர், வைசியர், சூத்திரர், இந்த மூன்று வர்ணத்தாரின் க்ஷேமத்தைக்கோரிக்கொண்டிருந்தார்களென்றும் அந்த காலத்தில் தேசம் மேலான ஸ்திதியிலேயே இருந்து எவ்விதமான கலக்கத்திற்கும் அவகாசமிருக்கவில்லையென்றும் தெரியவருகிறது. அப்படி இல்லை என்று சொல்லுவதற்கு ஆகமாட்டாதன்றோ? எந்தக்காலத்திலும் நம் தேசத்தில் சம்பத்து இருக்கவில்லை என்றும் தேசத்திலுள்ள ஜனங்கள் சுகமாயி

ருக்கவில்லை யென்றும் தெரியும் பக்ஷத்தில் இந்தி யா தேசத்திய சம்பத்தை அடைவதற்காக அன்ய தேசத்தார் பிரயத்னப்பட்டு இந்தியாவில் ஐசுவரியத் தை தங்கள் ஸ்வாதீனமாக்கிக்கொண்டார்களென்று இப்போது நாம் அபிப்பிராயப்படுவதற்கு அவகாச மேது? இந்த ஒரு காரணத்தாலேயே நம் தேசம் ஒரு காலத்தில் விசேஷமான சம்பத்துடன் கூடியிருந்த தென்று சொல்லவேண்டுமல்லவா? அப்படி சொல்வ தானால் அன்யனால் பிரயத்தனத்தை முன்னிட்டு அபேக்ஷிக்கக்கூடிய சம்பத்தைப் பெறுவதற்காக நம் தேசத்தார் என்ன பிரயத்னம் செய்து பாக்கியசாலி களாக இருந்தார்களென்னும் விஷயத்தை ஆலோசனை செய்து தெரிந்துகொள்ளவேண்டுமல்லவா? ஐசுவரி யத்தை சம்பாதிக்கும் காரியத்தில் முன்னோர்கள் செய்த வெகு விதமான பிரயத்னத்தை ஆலோசனை செய்தால் எல்லா சம்பத்துக்கும் சுகத்திற்கும் காரண மான தர்மானுஷ்டானத்தில் மாத்திரம் அதிகமான பிரயத்தினம் நடத்திக் கொண்டிருந்தார்களென்று சொல்லவேண்டுமேயல்லாமல் வேறே எந்த பிரயத்ன மும் செய்ததாக தெரிந்துகொள்வதற்கு தகுந்த பிர மாணங்கள் கிடைக்குமென்று தோன்றவில்லை.

பிருகிருதத்தில் முன்னோர்கள் எந்த பிரயத்னத் தை விசேஷமாக செய்து பாக்கியத்தை சம்பாதித்து இருந்தார்களோ அந்தப்பிரயத்னம் முற்றிலும் நின்று போய்விட்டது. வெகு கஷ்டப்பட்டு முன்னோர்கள் சம்

பாதித்திருந்த பாக்கியமெல்லாம் இக்காலத்திய ஜனங்களின் அவிவேகத்தினல் அழிந்துகொண்டு வந்துவிட்டது. இதற்குமேல் சம்ஸ்தானத்திற்கு நியாயமான மார்க்கத்தைக்கண்டுபிடிக்கமுடியாமல், திடீரென்று நீரில் மூழ்கினவன் அபாயத்தைத்தப்பித்துக்கொண்டு கரைசேர்வதற்கு ஏதாவதொரு பிடிப்பு கிடைத்து தான் தப்பிக்கொண்டேனே என்ற கலவரத்தால் ஹிதாஹித விவேகமில்லாமல் தன்னை அபாயத்திலிருந்து தப்பித்துக்கொள்வதற்காக வந்தவர்களை தான் தழுவிக்கட்டிக்கொள்ளுவதினல் வந்தவருக்கும் தனக்கும் சேர்ந்து அபாயம் உண்டாகுமென்று ஆலோசிக்காமல் தன்னை பிடிக்க வந்தவருக்கும் கலவரத்தை உண்டுபண்ணி அவர்களையும் முழுகடித்து தானும் முழுகும்படி செய்யக்கூடிய பிரயத்னம்போலே இக்காலத்திய ஜனங்களால் செய்யப்படும் யத்னம் சரியான மார்க்கத்தைக் கண்டுபிடிக்கமுடியாமல் புத்தியில்லாமையால் செய்யக்கூடிய யத்னங்களாயிருப்பதே தவிர வேறில்லை. அதெப்படியெனில் தேசத்தின் உயர்வுக்கும் ஜனங்களின் சுகத்திற்கும் முக்கிய காரணம் என்று உங்களால் நினைக்கப்படுகிற திரவியம் காரணாந்தரங்களால் தேசாந்தரத்தில் போயிருப்பது நிஜமாயிருக்கும் பக்ஷத்தில் எந்த வழியாய் எந்த பிரயத்தினத்தினல் தேசாந்திரத்தில் சேர்ந்திருக்கிறதோ அதே வழியில் அதே யத்னத்தால் தானே மறுபடி போன திரவியம் நம்ம தேசத்திற்கு திரும்பிவரவேண்டும். இதுவரையி

லுள்ள அனுபவத்தால் உங்கள் சம்பத்தை பலாத்காரமாயும் மோசகமாவும் அன்னியர் ஸ்வாதீனமாக்கிக்கொண்டதாக சொல்லுவது அவ்வளவு யுக்தமல்ல. காரணமில்லாமல் காரிய முண்டாவது அனுபவத்திற்கு ஒற்றதல்லவாகையால் இந்த விஷயத்தில் ஒரு காரணமிருக்கவே வேண்டும். அந்த காரணம் இந்தியா தேசத்தாரின் புத்தியில்லாமை என்றே சொல்லுவதில் தோஷமென்ன ? நம்மிடத்தில் ஸ்திரமாய் நின்று எந்த காலத்திலும் எந்த விதமான தவருதலுக்கும் ஏற்படாமல் நம்மை ஜாகரூகமாய் காத்துக்கொண்டிருந்த தர்மத்தை பலாத்காரமாய் தூர தள்ளும்படியாய் வந்து விட்டது. இதினால் தூராசை பரமமித்ரனைப்போல் நம்மிடம் வந்துசேருவதற்கு இடம் கொடுக்கப்பட்டது. இந்த ஹிதசத்ருவின் சகவாசத்தினால் சுத்தமான புத்தி மலினமாகி அதன் சக்தி குறைந்துவிட்டது. புத்தி இல்லாத மனுஷியன் யாருக்குத்தான் ஸ்வாதீனமாகமாட்டான். அப்படிப்பட்ட மனுஷியன் எந்தத் தவருதலுக்குத்தான் தப்பித்துக்கொள்ள முடியும் ? இந்த ஒரு காரணத்தினாலேயே எல்லா விதமான அனர்த்தங்களும் நேர்ந்து வந்ததே தவிர வேறொரு காரணமுமில்லை. ஆகையால் இந்த ரகஸ்யத்தை நன்றாக ஆலோசித்து, பரமமித்திரன் போல் நடனம் செய்து நம்மை சேர்ந்து நம்முடைய ஸ்வரூபத்தையே நாசம் செய்து கொண்டிருக்கிற ஆசை என்கிற பரம துரோகியை தூரத்தள்ளவேண்

டும். அப்படி செய்யவேண்டுமானால் தூரத்தில் விடப் பட்டிருக்கும் தர்மத்தை பரமமித்ரனென்று நம் ஸமீபத்தில் சேர்த்துக்கொண்டு வரவேண்டும். அந்த பலமான தர்மத்தை இடைவிடாமல் நம்முடன் சேர்த்துக்கொண்டால் துர்ப்பலமான ஆசைக்கு இடமில்லாமல் போய் நம்மிடத்தில் நிற்பதற்கு தைரியமில்லாமல் ஆய்விடும். அப்போது நம்ம புத்தி நிர்மலமாக ஆகி அதன் சக்தி அதிகரிப்பதினால் நாம் சமர்த்தராகவும் ஸ்வதந்திரராகவும் ஆகிறோம். அந்த தருணத்தில் இதர ஜனங்கள் நம்மை சுளுவாய் சுவாதீனம் செய்து கொள்ளுவதற்கும், தவறுதலுக்கு நாம் ஆளாவதற்கும் இடமில்லையாகையால் நாம் சுகத்தை அனுபவிக்கலாம். இதற்கு விரோதமாய் நம் அவிவேகத்தால் இடம் பெற்று நம்முடன் சேர்ந்து நமக்கு துரோகத்தையே செய்து வருகிற ஆசையை மித்திரனாக பாவித்து அதன் இஷ்டம்போல் விருத்தியடைந்து நம்மை கெடுப்பதிலேயே பிரயத்தினம் செய்து வருகிற ஆசைக்கு அனுகூலத்தை ஏற்படுத்தி அதை விருத்தி செய்வதற்காக தர்மவிரோதங்களான நடவடிக்கைகளை நடத்துவதற்கு யத்னம் செய்வது புத்திசாலிகள் செய்யக்கூடியதோ? அது நியாயமானதென்று யார்தான் அங்கீகரிப்பார்கள்? ஆசையினால் மனுஷ்யனுக்கு திருப்தி ஒன்றே பெரியபாக்கியம். அந்த பாக்யத்தை சம்பாதித்தவன் எந்த காலத்திலும் கஷ்டப்படமாட்டான். இந்த பாக்கியம் இந்து தேசத்தாரிடம் சுவ

பாவமாகவே இவர்கள் நடத்தையால் பூர்ணமாய் நிறைந்திருந்தது. அதிலும் பிராம்மணர்களிடத்தில் வெகு அதிகமாகவே இருந்ததென்றும் சொல்லலாம். இப்பால் இந்த பாக்யம் குறைந்துகொண்டுவந்ததினுலேயே இந்தியா தேசத்திய சம்பத்து அன்யதேசத்தார் கையில் போய்விட்டதென்றும் அதினுல் அநேக விதமான கஷ்டங்களுக்கு இந்தியர்கள் ஆளானர்களென்றும் பிரதிக்ஷணமும் உங்களுக்கு தோன்றும்படி உங்கள் மனதுகளைக் கலக்கி உங்களை தொந்திரவு செய்துகொண்டிருக்கிறது.

இதனுல் நம் அபிப்பிராயம் எல்லா ஜனங்களும் விரக்தர்களாகவேண்டுமென்றும் பிரபஞ்சத்தை மறந்து ஆத்மஞானிகளாக வேண்டுமென்பதல்ல. இது சித்தபரிபாகமில்லாதவர்களுக்கு சாத்தியமென்று நாம் தெரிந்துகொண்டிருக்கவில்லை. நம் தர்மானுஷ்டானத்தில் விசுவாசம் வைத்து கூடுமானவரையில் தர்மலோபமில்லாத விதத்தில் நடந்துகொண்டு வருவதற்கு பிரயத்னம் செய்தால் திருப்திக்கு தடையான காரியங்கள் அநேகமாக குறையும். வியாபாரங்கள் குறைந்துகொண்டு வரும்போது மனதிற்கு சஞ்சலமதை குறையும். இதனுல் மனுஷ்யன் தன்னுடைய ஜீவனை ரக்ஷிப்பதற்கு அவசியமாயுள்ள அன்னவஸ்திராதிகளை சம்பாதனம் செய்வதற்கு மாத்திரம் பிரயத்னமுள்ளவனுய் திருப்தியை சம்பாதிப்பான். இந்த பிரயத்னத்தை செய்து திருப்தி என்னும் பரமபாக்கியத்தை சம்பா

திப்பது அவிரக்தர்களான சம்சாரிகளுக்கும் அஸாத்தியமல்ல. இந்த தேசத்தில் இது வரையில் பாம்பரையாக பிராம்மணனுக்குள்ள அப்பியாசத்தினுல் பிராம்மணன் திருப்தியை சம்பாதிப்பது வெகு சுலபம். அதற்கு பிரயத்னம் செய்யாமல் இப்போது சில காலமாய் நம் தேசத்தாரிடம் அன்ய ஜனசகவாசத்தினுல் அப்பியாசம் செய்யப்பட்டு வளர்ந்துகொண்டிருக்கிற ஆசையையே மேன்மேலும் வளரும்படி செய்யும் பிரயத்னத்தை நடத்திக்கொண்டு வந்ததில் எந்த காலத்திலும் எவ்வளவும் சந்தோஷ லேசமுமில்லாமலாயிருக்கிறது. இந்த நம் அபிப்பிராயத்தை சாவதானமாயும் இதுவரையிலுள்ள உங்கள் அனுபவத்தைக்கொண்டும் ஆலோசனை செய்தால் அப்போது நம் அபிப்பிராயத்தையே சம்மதித்து நீங்கள் நம்மை அனுசரித்து வருவீர்களேயல்லாமல் வேறே மார்க்கத்தை அனுசரிப்பதற்கு இடமிருக்கமாட்டாது. ஆகையினுல் ஆலோசனையில்லாமல் தத்காலத்தில் அனுகூலமென்று தவருதலாய் தோன்றிக்கொண்டிருக்கிற கெட்ட வழியைபபிடித்துக்கொண்டு சஞ்சாரம் செய்வதை விட்டு நன்ருக ஆலோசனை செய்து அனுகூலமான மார்க்கத்தில் இருப்பது க்ஷேமம்.

முந்திய பாரதராமாயணம் முதலிய சரித்திரங்களையும் இக்காலத்திய சரித்ரங்களையும் பார்ப்பதினுல் பிரபஞ்ச ஸ்திதி எப்போதும் ஒரே விதத்தில் இருந்ததாகவாவது ஆயுதபலத்தினுல் ஸ்வாதீனமாகசெய்து

கொண்டிருந்த ராஜ்யம் ஸ்திரமாய் ஒருவராலேயே அனுபவிக்கப்பட்டதென்பதாகவாவது தெரியவருகிறதோ? ஒருகாலத்தில் பராக்கிரமத்தினாலும் யுக்தியினாலும் சம்பாதிக்கப்பட்ட ராஜ்யத்தை அப்படிப்பட்ட பராக்கிரமம் அதற்கு சகாயமான சதுரங்க பலம் பிரயத்னம் முதலியவை முந்தினவனைக்காட்டிலும் எந்த விதத்திலும் குறைவில்லாமலிருந்தாலும் அநேகர் ராஜ்யத்தை இழந்துகொண்டு கஷ்டப்பட்டதாக நீங்கள் கேட்டு அறியவில்லையா? இதனால் கேவலம் மனுஷிய பிரயத்தனம், பராக்கிரமம், மனுஷிய சகாயம், புத்தி வல்லமை, இவைகளே சம்பத்தை சம்பாதிப்பதிலும், சம்பாதிக்கப்பட்டதை இழந்துவிடுவதற்கும் போதுமான காரணங்களென்று சொல்லுவதற்கும், அதை ஒப்புக்கொள்வதற்கும் அவகாசமில்லையல்லவா? இந்த மேற்கண்ட சாதனங்களை தயார் செய்து கொடுத்து யத்னம் செய்கிற மனுஷியனுக்கு நல்லது அல்லது கெட்டதை உண்டுபண்ணக்கூடிய வேறே ஒரு பிரபலமான காரணமிருப்பதென்று புத்திசாலிகளால் அங்கீகரிக்கப்படவேண்டுமல்லவா? அப்படிப்பட்ட பிரபலமான காரணத்தை நம்பியாவது அல்லது அதில் நம்பிக்கை வைக்காமலாவது அந்த காரணம் ஒற்று வந்திருந்த காலத்தில் மனுஷியனால் நடத்தப்படும் ப்ரயத்னத்தால் அதின் பலத்தை அனுபவித்துவருகிற மனுஷியனுக்கு அதற்கு விரோதமான காரணம் நேர்ந்து வருகிறவரையிலும் அவன் விஷயத்தில் இதரர்கள் செய்

யும் எவ்விதப் பிரயத்னங்களாலும் யாதொரு குறை வையும் உண்டுபண்ணுவதற்கு முடியாமல் போகிறது. இந்த விஷயத்தை நன்றாக நமபி ஒவ்வொருவரும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டு அதற்குத் தகுந்தபடி நடந்துகொள்வது ஆவசியகம்.

பிராம்மணனுக்கு அதர்மமென்று தர்ம சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற சமுத்திரயானத்தை இந்த காலத்தில் அனுஷ்டானத்தில் கொண்டுவாராமல் ஒரு நிமிஷகாலமாவது கழிப்பது கஷ்டமாயிருக்கிறதென்ற விஷயத்தில், அநேகவிதத்தில் உங்களுக்கு நேர்ந்திருக்கிற தொந்திரவுகளை விவரித்து, சமுத்திரயானம் செய்வது யுக்தமென்று நம் அனுமதியை பெறுவதற்காக நம்மிடத்தில் வந்திருக்கும் உங்களுக்கு வெகு சுருக்கமாயும், அதிக அர்த்தங்களடங்கியதும் சூத்திரம்போல் சொல்லியிருக்கப்பட்ட திருப்தி சம்பாதனம் அவசியம் செய்யவேண்டியது, என்ற ஒரு பதிலேயே இது வரையிலுமுள்ள உங்கள் அனுபவத்தினாலும் புத்தி சாமர்த்தியத்தாலும் விஸ்தாரமாக வியாக்கியானம் செய்துகொண்டு ஆலோசித்துப் பார்த்தால் உங்களால் காண்பிக்கப்பட்ட ஒவ்வொரு தொந்தரவுகளையும் விலக்கிக்கொண்டு சுகமாயும் சந்தோஷத்துடனும் ஜீவிப்பதற்கு இது ஒன்றே உபாயம் போதுமானதென்று உங்களுக்கே வெளிப்படையாய் தெரியவரலாம். காலம் மனுஷ்யனுக்கு அதர்ம பிரவிருத்திக்கு ஒருகாரணமாயிருக்கிறது. கால ஸ்வபாவத்தினாலேயே உண்

டாகக்கூடிய அதர்ம பிரவிருத்தியைத் தடுப்பது எவ ராலும் சாத்தியமல்ல. இந்தக் காரணத்தினால் கேவ லம் அஸ்வாதீனனாகி காலானுகுணமாக அதர்மத்தில் பிரவிருத்தனானவனை மருபடி தங்கள் சங்கத்தில் சேர்த் துக்கொள்ளாமல் விலக்கிக்கொண்டு வருவதினால் கிரம மாய் சங்கத்திய சக்தி குறைந்து அதிலிருந்து பலம் குன்றிப்போகுமென்று யோஜிப்பது விசார சீலர்களுக் கும் வாஸ்தவமாக ஆத்மஹிதத்தை அபேக்ஷிக்கிற வருக்கும் யுக்தமானதல்ல.

நம் சரீரத்திலுள்ள ஒவ்வொரு அங்கமும் நமக்கு உபயோகமானது. சரீரத்தில் மனுஷியனுக்கு இருக் கவேண்டிய எல்லா அங்கங்களும் சரியாயிருந்தால் சரீர சம்பந்தமான வியாபாரங்கள் எப்படி நடக்குமோ அப்படி எந்த அங்கமாவது ஊனமானால் நடப்பதில் லையென்பது அனுபவத்தில் தெரிந்தே இருக்கிறது. இந்த காரணத்தினால் மனுஷியனுக்கு தன்னுடைய எல்லா அங்கங்களிலும் அபிமானம் ஒருவிதமாகவே இருப்பதே தவிர அதில் தாரதம்மியம் ஒன்றுமிருப்ப தில்லை. இப்படியிருந்தாலும் ஏதாவது ஒரு அங்கம் ஸர்ப்பதஷ்டமானாலும் அல்லது ஒரு அங்கத்தில் விர ணம் உண்டானாலும் அதன் சம்பந்தத்தினால் மற்ற எல்லா அங்கங்களுக்கும் விஷசம்பந்தமுண்டாகி சரீர நாசமே உண்டாகுமென்ற நம்பிக்கையும் பயமும் உண் டானால் தன் ஹிதத்தை எதிர்பார்க்கக் கூடிய மனுஷி யன் அபிமானத்திற்குரிய எந்த அங்கமானாலும் தக்கூ

ணமே சிதைத்து தோஷமற்ற மற்ற அங்கங்களை காப்பாற்றிக்கொள்ளுவானே, அல்லது துஷ்டமான அங்கத்தை சிதைப்பதினால் அங்கஹீனனாவோமென்றும் அந்த ஒரு அங்கத்தை இழந்து கொள்வதினால் தன் காரியங்களுக்கு குந்தகமுண்டாகுமென்றும் யோசித்து விஷசம்பந்தமுள்ள அங்கத்தை நிறுத்திக்கொண்டு அதன் சம்பந்தத்தினால் பூராவாய் சரீரத்திற்கே அபாயம் வரும்படி செய்துகொள்ளுவானோ? பரிசுத்தரான அநேகருடைய மத்தியில் தோஷமுள்ள ஒருவன் சேருவதினால் (பிரத்யவாயம்) அதிகமான தோஷமென்னவென்று சங்கை ஒன்றிருக்கலாம். இந்த விஷயத்தில் முந்தி சொல்லப்பட்ட புஷ்ப திருஷ்டாந்தத்தினால் உங்களுக்கு சமாதானம் வந்ததாக ஆயிருக்கிறது. மற்றொரு திருஷ்டாந்தத்தினாலும் உங்கள் சங்கையை பரிஹாரம் செய்யலாம். அதெப்படியென்றால் பரிசுத்தமான பாலை ஒரு பெரிய பாத்திரத்தில் அதின் நடுவில் சிறியதான ஒரு விஷ பிந்துவை சேர்ப்பதினால் கறைத்து எந்த தோஷம் உண்டாகலாமோ அந்த தோஷமே சுத்தரானவர்களின் மத்தியில் பாபியானவனை சேர்த்துக்கொள்ளுவதினாலும் உண்டாகுமே தவிர வேறில்லை. ஆகையால் தர்மானுஷ்டானம் செய்கிற ஜனங்கள் எவ்வளவு சிறிய தொகையுள்ளவர்கள் சுத்தர்களாக பிரபஞ்சத்தில் பாக்கியாயிருந்தாலும் அவர்களாலேயே பிரபஞ்சத்திற்கு வேண்டிய சகாயம் உண்டாகி உயர்ந்த ஸ்திதிக்கு வரக்கூடுமாகையால் அந்த

விஷயத்தில் பயமும் சங்கோசமும் செய்யவேண்டிய தில்லை என்று ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டார்கள்.

இந்தப்பிரகாரம் அவர்கள் இதற்கு சுமார் 30 வருஷங்களுக்கு முன் சமுத்திரயானம் செய்வதற்கு அனுமதி பெறுவதற்காக வந்த சிஷியர்களுக்கு யுக்தியுக்தமாயும் சாஸ்திரீயமாயும் சொன்ன ஹிதவசனங்களில் ஜனங்கள் சம்பூர்ணமாய் நம்பிக்கை வந்து திருப்தியடையாமலிருந்தாலும் வெகு காலமாய் வந்த அப்பியாசத்தினாலும் சங்கத்திலுள்ளவர்களுடைய நிர்ப்பந்தத்தினாலும் நிச்சங்கமாக ஸமுத்திரயானம் செய்வதற்குப் பின்வாங்கினார்கள். 30 வருஷங்களுக்குப் பிறகு இப்பால் கால ஸ்வபாவத்தினால் ஜனங்களிடத்தில் அதர்ம பிரவிர்த்தி அதிகரித்துக்கொண்டு வந்ததினாலும் இந்த காரணத்தினாலேயே சங்கத்தாரிடத்தில் வெகுகாலமிருந்து வேரூன்றியிருந்த நிர்ப்பந்தங்கள் நழுவிக்கொண்டு வந்ததாலும் ராஜ்யபாரம் செய்யக்கூடிய சர்க்கார் அவர்களும்கூட வேண்டியமட்டில் திரவிய சகாயம் செய்து உதவிசெய்து வந்ததினாலும், இதுவரையிலும் அநேக ஜனங்கள் சமுத்திரயானம் செய்து தீவாந்திரத்தில் வாசம் செய்து திரும்பி தேசத்திற்கு வந்திருக்கிறார்கள். அப்படி வந்தவர்கள் சங்கத்தாரால் விலக்கப்படாமலே அநேகமாய் தங்கள் தங்கள் சங்கத்தாருடன் கூட சேர்ந்து வியவகாரங்கள் நடத்திக்கொண்டிருப்பதாயும் காணப்படுகிறது. இந்தப்

பலனைத்தான் தேசத்திற்கும் தேசிய ஜனங்களுக்கும் முன்னேற்றத்திற்காக சம்பாதிக்கவேண்டுமென்று 30 வருஷங்களுக்குமுன் சிலர் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களிடத்தில் தெரிவித்துக்கொண்டது. இப்போது பிரகிருதத்தில் நாம் பூர்ண காமர்களானோமே? இதனால் நம் தேசத்திற்கு ஆயிருக்கும் பிரயோஜனத்தையும் தேசிய ஜனங்களுக்குண்டாயிருக்கும் சுகத்தையும் தேசாந்தரத்திற்குப்போயிருந்த ஸ்வதேசியர்களின் சம்பத்து திரும்பி தேசத்திற்கு வந்த விதத்தையும் குறித்து யோசிப்பதற்கு இது சரியான சமயமல்லவா? அப்படி யோசித்துப்பார்த்தால் தர்ம லோபம் செய்து கொண்டு ஒரு நிமிஷமாவது புத்திக்கு ஸ்திரதை இல்லாதபடி திரவிய சம்பாதனம் செய்யவேண்டுமென்ற விஷயத்தில் ஆசையொன்று முடிவில்லாமல் அதிகரித்திருக்கிற பலன் மாத்திரம் எங்கும் பரவியிருப்பதாக சொல்லலாமேயல்லாமல் வேறே எந்த பலனும் நம் தேசியர்களால் அடையப்பட்டதாக ஆகவில்லையென்று தைர்யமாக சொல்லலாம். இந்த பலனுக்கு காரணத்தை புதிதாக தேடவேண்டியதெதற்கு?

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் முந்தி உத்தரவு செய்த பிரகாரம் தேசாந்தரவாஸம் அவ்விடத்திய ஜனங்களுடைய சகவாசாதிகளினால் நம் தேசியரிடத்தில் பெயர் மாத்திரமாவது ஒட்டிக்கொண்டிருந்த பிராம்மணனுக்கு முக்கியமாயும் ஸத்வ பிரதானமாயுள்ள சாந்தி தாந்தி முதலிய குணங்களையெல்லாம் நிர்மூலமாக செ

ய்துவிட்டது. இதற்கு பதிலாக ராஜஸ, தாமஸ பிரதானங்களான அகங்காரம் மமகாரம் முதலியவைகள் கணக்கில்லாமல் பிராம்மணர்களை நாடிக்கொண்டன. இந்த குணங்களுடைய மகிமையினால் राजा प्रत्यक्षदैवतं ॥ अष्टाभिर्लोकपालानां मात्राभिर्निर्मितो नृपः ॥ नाविष्णुः पृथिवीपतिः ॥ என்ற சாஸ்திர மரியாதைகளினால், ராஜர்கள் விஷயத்தில் நம் இந்து தேசத்திய ஜனங்களுக்கு இருந்த பாவனை தப்பிப்போய்விட்டது. நம்மிடத்திலிருந்த பாவனை எப்போது விபரீதமாக ஆயிற்றோ, அந்த சந்தர்ப்பத்தில் நம் விஷயத்தில் ராஜர்களுக்கும் நம்பிக்கையும், விசுவாசமும் குறைந்து போவது சகஜம் தானே? இந்த பிரயோஜனம் இப்பால் நம் தேசியரால் பெற்ற பிரயோஜனங்களில் ஒன்றாக இருப்பதென்று கணக்கிடக்கூடியதாயிருக்கிறது. பிராம்மணன் எக்காலத்திலும் அல்ப சந்துஷ்டனாய் தனக்கு தர்மமென்று சொல்லப்பட்டிருக்கும் காரியங்களில் அன்றி வேறொன்றில் பிரவேசிக்காமல் கூடுமானவரையில், தாங்களாகவே பக்தியையும் கௌரவத்தையும் தம்மிடத்தில் செய்யும்படிக்கும், மற்றவர்கள் க்ஷேமமாயிருந்து பிராம்மணர்களுக்கு சகாயராயிருக்கட்டுமென்று மனப்பூர்வகமாய் சிந்திக்கும்படிக்கும் பிராமணரிடத்தில் இருந்த நிலைமை வேறு விதமான மாறுதலை அடைந்து இருப்பதினாலும் ராஜவிசுவாசம் அநேகமாய் குறைந்துகொண்டு வந்திருக்கக்கூடுமென்ற நம்பிக்கையினாலும், இந்து தேசத்தி லுள்ள பிராம்மணரால்

லாதவர் எல்லாரும் சாமான்யமாக பிராம்மணர்களை நிந்திக்கும்படிக்கும் பிராம்மணர்களை துவேஷிக்கும் படிக்கும் ஆயிருப்பதாக தோன்றிவருகிற மகாபிரயோஜனம் ஒன்று புதிதாக சம்பாதித்ததாக ஆயிற்று. ஈசுவரனால் படைக்கப்பட்ட பிரபஞ்சத்தில் அந்தந்த தேசகாலங்களுக்குத் தக்கபடி அந்தந்த தேசியர்களுடைய ஜீவனத்திற்காகவும் அவரவர்களுடைய பிரயோஜனத்திற்காகவும் சுகத்திற்காகவும் நியாமகரான தேவரால் கல்பிக்கப்பட்ட பதார்த்தங்களும் காண்பிக்கப்பட்ட மார்க்கங்களும் வெவ்வேறாக விருந்தாலும் நியாமகன் இன்னொருவன் நம்ம திருஷ்டியில் படாமல் இருக்கிறான் என்ற நம்பிக்கை ஜனங்களிடம் தப்பிப்போனதினால் தேசகாலங்களின் சகாயத்தை யோசிக்காமலே, எந்த தேசத்திலாவது, எந்த காலத்திலாவது எந்த காரியத்தையாவது செய்து அதன் பிரயோஜனத்தை யாராக் இருந்தாலும் அடையலாமென்ற ஆசையும் அபிமானமும் அதிகரித்து வந்ததினால் கேவலம் சுரங்கவேலையினால் தங்கள் சௌக்கியத்தையும் தங்கள் ஜீவனத்தையும் நடத்திக்கொண்டுவந்த தேசாந்தரத்தாரைப் பார்த்து அவரைப் பின்தொடர்ந்து நடப்பதால் நம்ம சம்பத்துக்களை அதிகரித்துக்கொண்டு அதிகமான சுகத்தை அனுபவிக்கலாமென்ற நம்பிக்கை ஒவ்வொருவருடைய மனதிலும் ஊன்றிக்கொண்டிருக்கிறது. அதற்குத் தகுந்தபடி தேசிய சர்க்கார் அவர்களுடைய சகாயமும் ப்ரோத்ஸாஹமும் உதவி

வந்தது. இதனால் வெகுகாலம் தொட்டு இந்தியா தேசத்தில் ஸ்வபாவமாக ஜனங்களிடத்தில் எந்த காரியங்கள் நடவடிக்கையில் இருந்ததோ எந்த மார்க்கத்தைப் பிடிப்பதினால் தங்கள் ஜீவனத்தை நடத்திக் கொண்டுவந்தார்களோ அதன்விஷயத்தில் உதாசீன பாவமும் அனாதரவும் உண்டாய்விட்டது அன்னிய தேசத்தாருடைய வியாபாரங்களை நடத்துவதற்காகவும் அவர்களுடைய ஆசாரங்களை ஆசரிப்பதற்காகவும் அடிக்கடி நம்ம தேசத்தாரின் திரவியத்தை வெளிதேசத்தாருக்குக் கொடுத்து அநேகமான யந்திர சாமான்களைக் கொண்டுவரும்படியாய் விட்டது. இதன் விஷயத்தில் ஆரம்பத்தில் நம்மால் கொடுக்கப்பட்ட திரவியமும் மத்திய காலத்தில் அந்த சாமான்களை காக்கும் பொருட்டு பல தடவைகளில் நம்மால் கொடுக்கப்படும் திரவியமும் மறுபடி நமக்குத் திரும்பி வருவதில்லை என்ற நம்பிக்கையிருக்கக் கூடுமானாலும் கொஞ்சமாவது அந்த விஷயத்தை ஆலோசிக்காமல் புதுவழியில் இறங்குவதினால் விசேஷமாக திரவியத்தை சம்பாதிப்போமென்ற இந்த அபிமானம் நம் தேசீய ஜனங்களிடம் பூர்ணமாய் நிறைந்திருப்பதாக தோன்றிக்கொண்டிருக்கிறது. நதியில் வெள்ளம் அதிகமாக வந்திருக்கிறதென்று சொல்ல வேண்டுமானால் முதலில் இருந்த ஜலத்தை விட வேறு ஜலம் வேறு பக்கத்திலிருந்து வந்து நிறைந்திருக்கிற காலத்தில் பிரவாகம் வந்திருக்கிறதென்ற வியவஹாரத்திற்கு அவகாசமிருக்கிறதோ

அல்லது அதிகமானவெய்யிலினால் வற்றிப்போயிருக்கிற நதி ஜலத்தை ஒரு அணை பலமாக கட்டி அதன் தடையினால் முன்னுக்கு ஜலம் போகாமல் நிற்கும் போது அணையின் பின் பக்கத்தில் அந்த அணையின் அளவிற்குத்தக்கபடி ஜலம் நின்றிருப்பதைப்பார்த்து நதியில் ஜலம் ஜாஸ்தியாயிருப்பதாயும் பிரவாகம் வந்திருப்பதாயும் லோகத்தில் வியவகாரம் செய்வார்களோ? அது போலவே சம்பத்து விருத்தியாகிறதென்றால் வேறொரு தேசத்திலிருந்தும், வேறொரு மார்க்கத்திலிருந்தும் திரவியம் வந்து நம் தேசத்திரவியத்தில் சேர்ந்தாலல்லவோ நம் தேசியர் பாக்கியம் அதிகமானதாகத் தெரிந்துகொள்ளலாம். அப்படியே சொல்லிக்கொள்ளலாம். இதுவரையிலுமுள்ள அனுபவத்தினால் இந்த பாவனை யாராவது பார்த்திருக்கிறரோ? சிலர் அபிப்பிராயத்தில் வெளியிலிருந்து இழந்து போன திரவியத்தைத் தருவித்துக் கொள்ளுகிற உத்தேசத்தினால் நடத்தப்படுகிற பிரயத்னங்கள் பிரயோஜனப்படமாட்டாதென்று தெரிவதே இல்லை. இப்படியிருந்தும் இனிமேலாவது நம் தேசத்திய விபவம் வெளிப்போகாமல் தடுப்பதற்காக மாத்திரமே நம் பிரயத்தினம் என்று சொல்வதாக தெரியவருகிறது. இந்த பிரயத்னமாவது நடத்துவது நிஜமாயிருக்கும்பக்ஷத்தில்,

न जातु कामः कामानामुपभोगेन शाम्यति ।
हविषा कृष्णवर्त्मेव भूय एवाभिवर्धते ॥

என்றபடி, எரிந்துகொண்டிருக்கிற அக்னிஜ்வாலையை அணைப்பதற்காக அதிகமான ஜலத்தை அக்னியில் இறைத்தால் அந்த அக்னிஜ்வாலை அணையுமோ, அல்லது நெய் தாரையையாவது அதைவிட வேகமான மண் எண்ணெயையாவது வாரிவாரி எரிகிற அக்னிஜ்வாலையில் இறைப்பதால் ஜ்வாலையை அணைக்கமுடியுமோ? நம் தேசத்தார், அன்யதேசத்தாரால் அவர் தேசானுகுணமாக வியவகாரங்களை நடத்துவதற்கும் அதனால் அவர்கள் ஜீவயாத்திரா நிர்வாகம் செய்து கொள்வதற்கும் அநேககாலமாக கண்டுபிடிக்கப்பட்ட உபாயங்களையும் செய்யப்பட்டுவரும் பிரயத்தினங்களையும் நம் தேசிய ஜனங்கள் கண்டுபிடிப்பதற்காகவும் உபாயங்களைக் கண்டுபிடித்த பிறகு அவைகளை அனுசரித்து பிரயத்னங்களை நடத்துவதற்கும் தேச கால ஸ்வபாவங்களை கவனிக்காமல் போனாலும் தேசாந்தாரின் சகாயமே முக்கியமாக வேண்டியிருக்கிறதல்லவா? இதுவரையிலுள்ள அனுபவத்தினால் தேசாந்தரத்தாரின் சகாயமும் அவர்களால் தயார் செய்யப்பட்ட பதார்த்தங்களின் சகாயமும் இல்லாமல் நம் தேசத்திய ஜனங்கள் யாராவது சுவதந்திரமாய் தேசாந்தரத்தார் நடத்துகிற வியாபாரங்களை அவர்கள் செய்யும் மாதிரியை விட்டு வேறுவிதமாய் நடத்தியிருப்பதாயும் அதனால் பிரயோஜனத்தை அடைந்திருப்பதாயும் தெரியவந்திருக்கிறதோ? ஆரம்பத்தில் சில காலம் வரையில் அன்னியர் சகாயத்தினால் நம் தேசத்

ஜிய ஜனங்கள், அன்ய தேசத்தார் நடத்துகிற வியாபாரங்களை நடத்தி வந்தாலும் அது சம்பந்தமான அறிவும் அநுபவமும் அதிகரித்த பிறகு அவர்கள் சகாயத்தை அபேக்ஷிக்காமலே நாமே ஸ்வதந்திரமாய் எல்லா வியாபாரங்களையும் நடத்தக் கூடுமென்று ஒரு சமாதானம் சிலரால் சொல்லப்பட்டு வரலாம். இந்த அபிப்பிராயம் காரியத்தினால் ஸ்திரமாகவேண்டுமானால் பிராமணனுக்கு சகஜ தாமமென்று முந்தி சொல்லிய சாந்தி முதலிய குணங்கள் சம்பூர்ணமாக தேசாந்தரத்தாரிடம் சேர்ந்து இருப்பது என்னும் மகா பாக்கியம் அவர்களிடத்தில் ஸ்திரமாக நிற்குமானால் அப்போது அவர் வியாபாரங்களில் அந்த ஜனங்களுக்கு துவேஷமும் உதாசினதையும் உண்டாகி இதர தேசத்தார் தங்கள் வியவகாரங்களை நன்றாக அறிந்து அவைகளை ஸ்வதந்திரமாக நடத்திக்கொண்டு சுகமாக இருக்கட்டுமென்ற அபிப்பிராயம் அந்த ஜனங்களுக்கு உண்டாகி ரகஸ்ய விஷயங்களை நமக்கு அந்த ஜனங்கள் போதிப்பாரானால் அவர்கள் நடத்துகிற எல்லா வியாபாரங்களையும் நாம் நடத்துவதற்கு சுதந்திரர்களாகலாம். அதனால் உண்டாகக்கூடிய பிரயோஜன விஷயம் எப்படியாவது இருக்கட்டும். அந்த விசாரம் பிரகிருதத்தில் அனாவசியகம். இந்த மேற்கண்ட சங்கதி சாத்தியமா? இந்த விஷயத்தை நன்றாக ஆலோசிக்கவேண்டும்.

அப்படிக்கில்லாமல் மற்றொருவரைப் பார்த்து அவரைப்போல் நாமும் நடக்கவேண்டுமென்ற ஆசை

யினால் மாத்திரம் செய்கிற பிரயத்னங்களாலனர்த் தங்கள் உண்டாகுமேயல்லாமல் அர்த்த லாபமொன் றுமில்லை. இப்பால் நம் தேசீய ஜனங்களுக்குள் அநேகர் துணிகள் செய்யும் யந்திரங்களையும் இரும்பு சாமான்கள் செய்யும் யந்திரங்களையும் இதுபோலவே அநேக வேலைகள் செய்வதற்காக அநேக யந்திரங்களை தேசாந்தரத்திலிருந்து தருவித்து நம் தேசத்தில் வைத்து வேலைகளை நடத்திக்கொண்டிருக்கிறார்கள். அப்படி தருவிக்கப்பட்ட யந்திர சாமான்களுக்காக ஏராளமான பணத்தை யந்திரங்கள் செய்தவர்களுக்கும் அந்த சாமான்களை நம் தேசத்தில் கொண்டுவந்து கொடுப்பவருக்கும் கொடுத்து யந்திரங்களைக் கொண்டுவந்திருக்கிறார்கள். அவர்கள் வருமானத்தை அவர்கள் வைத்திருக்கும் கணக்கைப் பார்த்து ஆலோசனை செய்தால் இதுவரையில் அவர்களால் சிலவு செய்யப்பட்டிருப்பதும், அது சம்பந்தமாக இப்போதும் பிரதிக்ஷணமும் சிலவு செய்து வருவதுமான பணத்தின் மொத்தத்தின் மேல் நூற்றுக்கு 12 முதல் 36 ரூபாய் வரையில் வட்டி வருகிறதென்று சொல்லுகிறார்கள். சிலர் தாங்கள் சிலவு செய்த பணமெல்லாம் தமக்குத் திரும்பிவந்து பிரகிருதத்தில் வந்துகொண்டிருக்கிற வருமானம் எல்லாம் தமக்கு லாபமாக வந்துகொண்டிருக்கிறதென்று சொல்லிக்கொண்டு சந்தோஷப்பட்டுக்கொண்டிருக்கிறார்கள். இந்த அம்சம் நிஜமல்லவென்று எவரும் சொல்லமாட்டார்கள். ஆனால் நம் தேசத்தாரு

க்கு வந்துகொண்டிருக்கிற திரவியம் யாருடையது? எவரிடமிருந்து வருகிறது? இதன் பலனும் தேசிய ஜனங்களுக்கு என்னவிதமாக உண்டாகிக்கொண்டிருக்கிறது? என்ற ஆலோசனை மாத்திரம் கொஞ்சம் சாவகாசமாக செய்யவேண்டும். அப்படி விசாரம் செய்தால் அதிகமான திரவியத்தை ஆரம்பத்தில் செலவுசெய்து யந்திரங்களைத் தருவித்தவர்கள் தங்கள் பணத்துக்கு அதிகமாக வட்டி வரவேண்டுமென்ற விஷயத்திலும் பிறகு வட்டிக்குக் கடன் வாங்கி யந்திரங்கள் வைத்தவர்கள் தங்கள் கடன் தீர்ந்து தமக்கு அதிகமான லாபம் வரவேண்டுமென்ற விஷயத்திலும் ஆதுரர்களாயிருப்பது சகஜம். அப்படியில்லாமல் தேசியருக்கு சகாயம் செய்யவேண்டியதிலேயே கவனமுள்ளவராயிருந்தால் அப்படி யோசிக்கிறவர் பெயரே இல்லாமல் போய்விடும். ஆகையினால் அந்தவிதம் அவர்கள் யோசிப்பதற்கு சாத்தியமேயில்லை. தங்கள் லாபத்தை யோசிப்பதானால் ஒன்றுக்கு நாலுமடங்கு இதரர்களிடமிருந்து அடையவேண்டிவருகிறது. ஜனங்களானாலோ லாபநஷ்டங்களையும் மேல் உண்டாகும் பரிணாமத்தையும் யோசிக்கக்கூடிய சாவகாசமில்லாதவராக சுலபமாயும் காலதாமசமில்லாமலும் இருப்பதில் மாத்திரமே கவனமுள்ளவர்களாய், गतानुगतिको लोकः என்றபடி ஒருவரைப்பார்த்து மற்றொருவர் முன் விழுந்து குறைந்த செலவினால் சாதிக்கக்கூடிய அல்பமான காரியத்திலும் தங்கள் திரவியத்தை அதிக

மாக சிலவழித்து தத்காலத்திலுண்டாகும் சுகத்தை அடைவதற்கு அபேக்ஷையுள்ளவர்களாயிருக்கிறார்கள். இதனால் அநேக ஜனங்களிடத்தில் தாரதம்மியத்துடன் பாவித்துக்கொண்டிருக்கிற நம் தேசீயர்களின் சம்பத்து கிரமம் கிரமமாக சில ஜனங்களிடம் மாத்திரம் சேர்ந்து ஏழைகளின் தொகை தேசத்தில் எண்ணமுடியாமல் அதிகமாவதினால் தேசீயர் கஷ்டம் வெகு அதிகமாகிவிடலாம். தரித்திரரில் அநேகர் தங்கள் ஜீவனத்திற்காக தேகப்பிரயாஸத்துடன் அநேக காரியங்களை செய்து அதனால் அடையக்கூடிய சுவல்பப் பிரயோஜனத்தைக் கொண்டே திருப்தியடைந்து தங்கள் ஜீவனத்தை சுதந்திரமாக நடத்திக் கொண்டிருந்தார்கள். அப்படிப்பட்ட அநேககாரியங்களை யந்திரங்களின் உதவியால் நடத்தி அதிக லாபத்தை அடையவேண்டுமென்ற ஆசையினால் சில பேர் ஏற்பட்டிருப்பதினால் அநேக ஜனங்கள் ஜீவனத்திற்கு பங்கம் ஏற்பட்டு அதன்மூலமாய் கஷ்டப்படும்படி ஆயிருக்கிறது. இந்த பாகத்தை நன்றாக ஆராய்ந்து பார்த்தால் இதனால் தேசத்தின் உன்னதியும் தேசத்திய ஜனங்களின் சௌக்கியமும் அதிகரிக்கப்பட்டதாகத் தெரியவருகிறதோ? மனுஷ்யனுடைய சரீரம் அன்னமயமானதுதானே. இந்த சரீரரக்ஷணைக்காகவும் இதை போஷிப்பதற்காகவும் ஆகாரயோக்யமான பதார்த்தங்கள் தானே முக்கியசாதகமாயிருப்பது. இந்த பிரயோஜனத்தை அடைவதற்கு

எந்த காலத்திலாவது யாரிடமிருந்தாவது தன்னிடத்
தில் சம்பாதித்துவைத்துக்கொண்டிருக்கும் திரவியத்
தையும் விலையுயர்ந்த ரத்னங்களையும் அநேகமான லோ
ஹங்களையும் அப்படியே உபயோகித்துக்கொண்டு
அன்னமயமான சரீரத்தை போஷணை செய்துகொள்
வது சாத்தியமோ? அது சாத்தியமில்லையானால் எவ்
வளவு திரவியம் சம்பாதித்தவனும் ஆகாரயோக்ய
மான பதார்த்தங்களை சம்பாதிப்பதற்காக எவ்வளவா
னாலும் தன்னிடமிருக்கப்பட்ட திரவியத்தைக் கொடு
த்து சம்பாதிக்கவே வேண்டுமல்லவா? இந்த தருணத்
தில் சகலமான பயிர்களுடைய விருத்திக்கும் ஆதார
மாக பகவானால் படைக்கப்பட்டிருக்கிற இந்துஸ்தா
னத்தில் ஆகாரத்திற்கு வேண்டிய பதார்த்தங்களையே
அதிகமாக விருத்திசெய்து வருவதினால் அப்படி சம்
பாதிக்கப்பட்ட பதார்த்தங்களுக்கு நம்மால் அபேக்ஷி
க்கப்படுமளவு பணத்தை நமக்கு கொடுத்து அந்த
பதார்த்தங்களை அபேக்ஷிக்கிறவர்கள் அடையாமலிருப்
பது சாத்தியமோ? இந்த விஷயத்தை நன்றாக அறி
ந்து நம் தேசிய ஜனங்கள் நடந்துகொள்வதினாலும்,
நம்ம தேசியருடைய உபயோகத்திற்காக வேண்டிய
இதர பதார்த்தங்களையதிகப்படுத்துவதினாலும் நம்
தேசத்திலேயே உண்டாகும்படி செய்வதினாலும் தனி
கர்கள் பிரயத்னப்பட்டால் அதனால் நம் தேசத்திய
(சில்பாதிகளை) கைத்தொழில்களை தேசததில் விருத்தி
செய்து ஜனங்களை யபிவிருத்திக்குக் கொண்டுவருவ

தினாலும், நம் தேச சம்பத்து வெளியில் போகாமலும் காலக்கிரமத்தில் விருத்தியடையும்படிக்கும் செய்யலாமாகையால் தேசமும் அதிலுள்ள ஜனங்களும் சுகத்தைப் பெறலாமே தவிர ஆலோசனையில்லாமல் நம்ம தேசியரால் தத்காலத்தில் நடத்தப்பட்டுவருகிற வியாபாரங்களினால் இந்த பலனை எவ்வளவேனும் பெறுவதற்கு எந்த காலத்திலும் ஆகமாட்டாதென்ற விஷயத்தை தீர்க்கதர்சிகள் ஒப்புக்கொள்ளாமலிருக்கமாட்டார்கள்.

சிலர் அபிப்பிராயத்தில் இந்துதேசத்திலிருந்த முன்னோர்கள் வர்ணாசிரமாசாரங்களென்ற பெயருடன் சில நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தியிருக்கிறார்கள். பிரகிருதத்தில் அந்த நிர்ப்பந்தங்களுக்கு நடமாட்டமில்லையானாலும் அங்கே அங்கே மினுமினுப்பூச்சிகளின் பிரகாசம்போல், வாய்ப் பேச்சில் மாத்திரமாவது மின்னிக்கொண்டிருக்கிறது. இதனாலேயே நம் தேசியரிடத்தில் ஐகமத்யமில்லாமலாகி எல்லா அனர்த்தங்களுக்கும் இது ஒரு காரணமாயிருக்கிறது. ஆகையால் வர்ணாசிரமாசாரங்கள் என்ற சப்தத்தின் பிரசாரத்திற்கு அவகாசமில்லாமல் செய்தாலொழிய இந்துதேசம் அபிவிருத்திக்கு வரமாட்டாதென்று சொல்லுவதாகத் தெரியவருகிறது. இதன் உண்மை எப்படி இருக்குமோ? இந்த அபிப்பிராயத்தை சொல்லுகிற மகானுபாவர்களுக்குத் தான் தெரியும். லோகத்தில் ஒருதாய் வயற்றில் பிறந்தவர்களாயும், பிறந்ததுமுதல் ஒரேவித

மான ஆகார வியவகாரங்களால் போஷிக்கப்பட்டவர்களாயுமுள்ள சகோதரர்களில் ஸ்வபாவமான ப்ரீதியும், ஒற்றுமையும், ஸ்திரமாய் நிலைத்து இருப்பதையாவது பார்த்திருக்கும் பக்ஷத்தில் வேறு வேறு ஆசாரங்களினாலும், ஜாதிபேதங்களினாலும், மத பேதங்களினாலும் ஜனங்களுக்கு ஒற்றுமை உண்டாவதற்கு அவகாசம் தப்பிப்போயிருப்பதாக சொல்லும் அபிப்பிராயத்தைக் கொஞ்சமாகிலும் நிஜமாயிருக்கலாமென்று நம்பலாமாயிருந்தது. சகோதரர்களிடத்திலேயே ஒருவருக்கொருவர் அனுராகமும் ஒற்றுமையும் இல்லாமலிருப்பதைப் பார்த்துவருகிற பிரபஞ்சத்தில் வர்ணாசிரம தர்மமென்ற சப்தத்தைக்கூட இல்லையென்று செய்துவிடுவதால் எப்படி ஐகமத்யம் சம்பாதிக்கப்பட்டதாகுமோ அது அறிவுக்கு புலப்படுவதாயில்லை. ஒருவருக்கொருவர் அனுராகமில்லாமைக்கும், ஒற்றுமையில்லாமைக்கும், பிராணிகளுடைய ராகதுவேஷங்கள் முதலிய குணங்கள் காரணமே தவிர, துஷ்டான பல சாலிகளைக்கண்டு பயந்து எங்கேயோ ஒரு குகையில் பதுங்கிக்கொள்ளுகிற சாதுவைப்போல், சப்தத்தில் மாத்திரம் இருந்துகொண்டு, எங்கேயோ ஒரு மூலையில் அடங்கி ஜீவித்துக்கொண்டிருக்கிற வர்ணாசிரம தர்மங்கள் என்ன செய்யமுடியும்? இதை சப்தத்திலும் கூட இல்லாமல் நிர்மூலம் செய்வதற்கு விரதம் பூண்டிருக்கிற மகானுபாவர்கள் தங்களுடைய நடவடிக்கையால் அநேகமாய் இதுவரையில் வெகுதூரம்

தங்கள் உத்தேசத்தை சாதித்து இருக்கிறார்களே அதினுடைய பலனாகத்தானே இப்போதைய பிராம்மணர் பிராம்மணரல்லாதார் இவர்களிடத்தில் உண்டாயிருக்கிற பரஸ்பரஸ்நேஹம் என்று சொல்லலாம்.

ஆகையினால் இதற்கு முப்பது வருஷங்களுக்கு முன் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நம் தேசீயர்களுக்கு உபதேசம் செய்த திருப்தி சம்பாதனம் என்ற சூத்திரத்தின் மேல் நமக்கு இப்போதுள்ள அனுபவத்தினால் விஸ்தாரமாக வியாக்கியானம் செய்து விசாரம் செய்தால் இதன்மேல் சொன்ன விஷயங்கள் அஸமஞ்சஸமான வாதங்களென்றும் யுக்தியற்றவைகளென்றும் அபிப்பிராயப்படுவதற்கு அவகாசமில்லையாகையால் அவிவேகத்தால் நம்மிடத்தில் பிரதி நிமிஷத்திலும் வளர்ந்துகொண்டுவருகிற ஆசையை கிரமம் கிரமமாய் குறைத்துக்கொண்டுவருவதற்கும் திருப்தியை அதிகரித்துக்கொள்வதற்கும் நம் தேசீயர்களுடைய பூர்வாசாரங்களிலும் அவர்கள் செய்துள்ள ஹிதபோதனையிலும் நம்பிக்கை வைத்து நாம் யத்னம் செய்து வந்தால் நம் தேசம் சம்பதது நிறைந்ததாகி தேசீய ஜனங்கள் சுகத்தை அனுபவிப்பார்களே தவிர வேறே எந்த பிரயத்னங்களினாலும் சாத்தியமாகமாட்டாதென்று தோன்றுகிறது.

ஸ்ரீமான் மகாராஜா சாமராஜா உடையார் அவர்கள் ஆக்ஞையை அனுசரித்து அப்போது அரண்மனை கண்ட்ரோலராயிருந்த சுப்பராயர் பிரார்த்தனையை

அங்கீகரித்து ஸ்ரீசாம ராஜேந்திரர் சாஸ்வதீ பிராசாத பாடசாலை என்ற வித்யா மந்திரத்தில் அந்த பாடசாலையின் அபிவிருத்திக்காகவும் பிரபுக்களுடைய அப்யுதயத்திற்காகவும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பாடசாலைக்கு விஜயம் செய்து வைதிக விதானப்படி கர வருஷம் கார்த்திகைமாஸம் சுக்கிலபக்ஷம் திருதியை புதவாரம் சுபலக்கினத்தில் கணபதியை பிரதிஷ்டைசெய்து வித்யா கணபதி என்னும் நாமதேயம் கொடுத்து பிரதிஷ்டை செய்தபிறகு மூர்த்தியில் விசேஷமாக சான்னித்யம் உண்டாவதற்காக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தாமே பூஜை செய்து எல்லாருக்கும் அனுக்கிரஹம் செய்தார்கள். மத்யானம் சுமார் 2 மணி சமயத்தில் ஸ்ரீ சாமராஜ பிரபுக்கள் அவர்கள் பாடசாலைக்கு விஜயம் செய்து தம் அப்யுதயத்திற்காக ஸ்ரீஸ்வாமிகளவர்களால பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும் கணபதி தர்சனமும ஸ்வாமிகளின் தர்சனமும் செய்துகொண்டு ஸ்வாமிகளவர்களிடமிருந்து தீர்த்தபிரசாதம் பெற்றுக் கொண்டு ஆனந்தத்துடன் அரண்மனைக்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளும் சாயங்காலம் தம் வாசஸ்தானத்திற்கு வைபவத்துடன் வந்து சேர்ந்தார்கள். மற்றொரு நாள் ஸ்ரீமன் மகாராஜாவின் பிரார்த்தனையை அனுசரித்து ஸம்ஸ்கிருதபாடசாலைக்கு விஜயம் செய்து, ராஜமந்திரி முதலிய பரிவாரங்களுடன் கூட வந்திருந்த பிரபுக்களவர்களாலும், ஆஸ்தான பண்டிதர்களாலும் நிறைந்த சபையில், ஸம்ஸ்கிருத

வித்யா விஷயமாயும் சாதாரண தர்ம விஷயமாயும் 3 மணிகாலம் விஸ்தாரமாக உபந்யாஸம் செய்து எல்லோரையும் ஆனந்தமடையச்செய்தார்கள்.

இந்தப்பிரகாரம் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நாலுமாத காலம் ராஜதானியில் வாசம் செய்து அந்த காலத்தில் தம் தர்சனத்திற்காக வந்துகொண்டிருந்த ஸ்ரீமன் மகாராஜர் அவர்களுக்கும் மற்றுமுள்ள சிஷ்ய மண்டலிகளுக்கும், தனித்தனியாகவும் பொதுவாகவும் சாஸ்திரீயமான யுக்திகளாலும் லௌகிகமான யுக்திகளாலும் திருஷ்டாந்தங்களுடன் செய்த உபதேசத்தினாலும், விஸ்தாரமான உபந்யாஸங்களாலும் காலானுகுணமாக உண்டாயிருந்த அநேக சந்தேகங்களைப் போக்கடித்து வேதசாஸ்திர விஷயத்தில் நம்பிக்கையும் தைவபக்தியும் அதிகமாகும்படி செய்து, ஆபால விருத்தர்களாலும் கௌரவிக்கப்பட்டு மேலுள்ள தம் யாத்திரையைத்துவக்கினார்கள்.





## 7. வது அத்தியாயம்.

### ஸ்ரீஸ்வாமிகள் மூன்ருவது யாத்திரை தொடர்ச்சி.

ஸ்ரீமகாஸ்வாமிகளவர்கள் கரவருஷம் கார்த்திகை மாதம் கிருஷ்ணபக்ஷம் ஏகாதசி சுக்கிரவாரம் மைசூரில் திவான் ஸர். கே. சேஷாத்திரி அய்யாவர்கள் கிருஹத்தில் காலையில் ஸ்நானம் ஆஹ்னிகங்களை முடித்துகொண்டு அவர்களுக்கு அசாதாரணமாய் ஏற்பட்டுள்ள சகல ராஜமரியாதைகளுடன் 8-மணிக்குப் பிரயாணப்பட்டு அரண்மனைக்கு விஜயம் செய்து ஸ்ரீமான் மகாராஜ சாமராஜேந்திர பிரபுக்களுக்கும் மற்றுமுள்ள ராஜ குடும்பத்தாருக்கும் ராஜயோக்கியமான வஸ்திர விசேஷங்களாலும் பலமந்தாக்ஷதை முதலான பிரசாதங்களாலும் அனுக்கிரஹித்து தம் அந்தரங்க பக்தராயும் சம்பூர்ண அனுக்கிரஹத்திற்கு பாத்திரராயுமுள்ள பிரபுக்களுக்கு ஸ்வாமிகளுடைய பிரயாணத்தினுலுண்டான மனோபாவத்தை பிரபுக்களுடைய ஆகார விசேஷத்தினுல் அறிந்தவர்களாகி அதிகப்பிரிய

மான அல்லது விசேஷ கௌரவாஸ்பதமான வஸ்து சமீபத்திலேயே இருக்கும் காலத்தில் மனது அந்த வஸ்துவின் விஷயமாகவே இருப்பது மிகவும் அபூர்வம், அப்படிப்பட்ட வஸ்து தூரத்திலிருக்குமானால் அநேகமாய் மனது அதன் விஷயமாகவே இருப்பதாக சொல்லலாமாகையால் பிரபுக்கள் தம் வியோகத்திற்காக சிந்திக்க வேண்டிய ஆவசியகமில்லை என்று மகாராஜாவுக்கு சமாதானம் செய்து அரண்மனையிலிருந்து புறப்பட்டு நஞ்சனகூடுக்கு சமீபத்திலுள்ள சிக்கய்யன் சத்திரம் என்ற ஸ்தலத்தில் ஒரு சிவாலயத்தில் அன்று தினம் வாசம் செய்தார்கள்.

அதற்கு மறுநாள் காலையில் ஸ்நானம் ஆஹ்னிகங்களை செய்துகொண்டு நஞ்சனகூடு என்ற பிரசித்தி பெற்ற காளபுரீ க்ஷேத்திரத்தில் பிரவேசம் செய்தார்கள். இந்த காளபுரீ க்ஷேத்திரம் புராணப் பிரசித்தமானது. கபிலா கௌண்டிநீ என்ற இரண்டு நதிகளின் மத்தியத்தில் இந்த க்ஷேத்திரம் அமைக்கப்பட்டிருக்கிறது. இது கர்னாடக தேசத்திற்கு அதிபதிகளான மைசூர் மகாராஜருக்கு ராஜதானியான மைசூரிலிருந்து பதினாலுமைல் தூரத்தில் தெற்கிலுள்ளது. இந்த க்ஷேத்திரத்தில் பிரஸன்னபார்வதீ சமேதராக ஸ்ரீகண்டேசுவரரென்ற பிரசித்த நாமதேயத்துடன் பரமசிவன் ஆவிர்ப்பாவத்தை அடைந்திருக்கிறார். பிதாவான ஜமதக்னி மகரிஷியின் ஆக்ஞையை பரிபாலனம் செய்வதற்காக பரசுராமனால் செய்யப்பட்ட மாதரு

ஹத்தி தோஷ நிவிருத்திக்காக ஜமதக்னி மகரிஷியின் ஆக்ஞையினாலேயே பூப்பிரதக்ஷிணத்திற்குப் புறப்பட்ட பரசுராமன் இந்த க்ஷேத்திரம் வந்து இங்குள்ள ஸன்னிவேசங்களைப் பார்த்தபிறகு சிலகாலம் வரையில் இந்த ஸ்தலத்தில நின்று தபஸ் செய்யவேண்டுமென்று அவருக்கு மனோபாவமுண்டாயிற்று. கபிலாதீரத்தில் தன் ஆசிரமத்திற்காக ஒரு ஸ்தலத்தை உத்தேசித்து அந்தப் பிரதேசம் மரம் கொடி செடிகளால் அடர்ந்து இருந்ததினால் தன் ஹஸ்தத்திலுள்ள கோடாலியால் மரங்களை வெட்ட ஆரம்பித்தார். இந்த சமயத்தில் திடீரென்று ரக்தப்பிரவாஹம் புறப்பட்டு பரசுராமருடைய கோடாலி ரக்தமயமானதுமல்லாமல் இவர் தேகமெல்லாம் ரக்தத்தினால் நனைந்துபோய் விட்டது. இதைப் பார்த்து அந்த தீரனுடைய மனது வெகுவாக சஞ்சலம் கொண்டு மிக விசனத்துடன் காரணத்தை யோசித்துக்கொண்டிருக்கும் காலத்தில் லிங்கரூபமாயிருந்த பரமசிவன் அவர் திருஷ்டியில் தென்பட்டார். இதைப்பார்த்தவுடன் மகா பாதகமான மாதுருஹத்தி தோஷத்தை நிவாரணம் செய்வதற்காக வந்த தனக்கு அதைக்காட்டிலும் ஆயிரமடங்கு அதிகமான பாதகத்தைக் கொடுப்பதான ஈசுவராபராதம் சம்பவித்திருப்பதை அறிந்த இவருடைய மனது அக்காலத்தில் எப்படி இருக்கலாமோ ஈசுவரனுக்கே தான் தெரியும். தக்ஷணமே தன் கோடாலியால் தன் சிரஸ்ஸை வெட்டிக்கொண்டு ஆத்மஹத்தி செய்துகொள்வதற்கு அக்

காலத்திலுண்டான அவிவேகத்தால் பிராயத்தினம் செய்யும்போது கருணாமூர்த்தியான பகவான் தன் நிஜஸ்வரூபத்துடன் ஆவிர்ப்பவித்து பரசுராமனுடைய கைகளைப் பிடித்துக்கொண்டு அவர் பிராயத்தினத்தை நிறுத்தினார். அந்த சந்தர்ப்பத்தில் பரம பக்தரான பரசுராமருக்கு அபயமளித்து சந்திரகலை மாதிரி பரசுவின் அடியால் உண்டான கலையை தன் சிரஸ்ஸில் எப்போதும் தரிப்பதாயும் தன் சங்கல்பத்தினால் பரிசுத்தமாயும் சகல ரோகங்களையும் பரிஹாரம் செய்யக்கூடியதாயும் இந்த ஸ்தலத்தில் பிரசித்திபெற்ற மிருத்திகையைப் பூசுவதனால் ரக்தப்பிரவாஹம் நின்றுபோவதாயும் தனக்காக ஒரு ஆலயம் கல்பித்து தன்னை ஆராதனம் செய்வதினால் சகல தோஷங்களும் நிவிருத்தியாகி தன் அனுக்கிரஹத்திற்கு பாத்திரனாகி விடுவாய் என்பதாயும் ஈசுவரன் பரசுராமனுக்கு அனுக்கிரஹம் செய்ததாயும் அந்தப்படியே அவர் நடத்தி கிருதார்த்தனானதாக இங்கு ஸ்தலபுராணத்திலுள்ளது. இப்படிப்பட்ட கலி பிரபாவமுள்ள காலத்தில் கூட இந்த க்ஷேத்திரத்தில் அந்த பரமசிவன் ஆக்ஞையினால் நடந்துவருகிற விசேஷங்களைப்பார்த்தால் முன் சொல்லிய ஸ்தலபுராணத்தில் விசுவாசம் வைக்காமலிருக்க முடியாது. அதுக்க பிராபவமுள்ள முன் காலத்தில் ஒருக்கால் இராஜன் ஸ்வாமி மாகாத்மியத்தை பரீக்ஷிப்பதற்காக தன் அரண்மனையில் இரண்டு கண்களும் தெரியாமல் குருடாயிருந்த ஒரு யானையை இந்த

க்ஷேத்திரத்தில் ஸ்வாமி சேவை செய்வதற்காக அனு ப்பியிருந்ததாயும் தன்னால் உத்தேசிக்கப்பட்டிருக்கிற காலத்தில் அந்த யானைக்கு இரண்டுகண்களும் தெரியும்படி ஆனால் தான் ஸ்வாமியிடத்தில் சக்தி இருப்பதாக ஒப்புக்கொள்ளுவதாயும் அப்படி நடக்காவிட்டால் தேவாலயத்தையே நிர்மூலமாய் செய்வதாயும் சபதம் செய்துகொண்டதாயும் சேவைக்காக அனுப்பப்பட்ட யானைக்கு பிரதிதினமும் காலையில் கபிலாநதியில் ஸ்நானம் செய்வித்து தேவாலயத்தின் வெளிப் பிராகாரத்தில் 12 பிரதக்ஷிணம் செய்வித்து ஸ்வாமி தீர்த்தத்தில் மிருத்திகையை கலந்து கண்களில் பூசிக் கொண்டு வந்ததாயும் ராஜன் உத்தேசித்த காலத்தில் கண்கள் மேலே பூசியிருந்த மிருத்திகையை எடுத்துப் பார்க்கையில் இரண்டு கண்களும் நிர்மலமாய் தெரியும்படி ஆயிருந்ததாயும் இந்த ஆச்சரியத்தைப்பரீக்ஷித்துத்தெரிந்துகொண்டராஜன் மிகவும் சந்தோஷித்து ஹகீம்(வைத்யன்) நஞ்சுண்டனென்று ஸ்வாமிக்கு பெயராக அழைக்க ஆரம்பித்தானென்று ஜனங்களின் வதந்தி இப்பொழுதும் பிரபலமாயிருக்கிறது. மேற்கண்ட இந்த ஐதிஹ்யம் இப்பால் 120 வருஷங்களுக்குள் நடந்ததாக தெரியவருகிறது. இவ்வளவு சமீபகாலத்தில் நடந்ததாக ஜனங்கள் சொல்லிக் கொண்டிருக்கிற இந்த ஜனவதந்தியை நம்பாமலிருப்பதற்குக்காரணமில்லை.

இந்த ஸ்வாமி சேவைக்காக எல்லா ஜாதி ஜனங்க

ளும் விசேஷமாக வருகிறார்கள். அநேகர் தம்முடைய குலதைவமென்று தெரிந்து தங்கள் வம்ச பாரம்பரிய கிரமமாய் ஆராதனை செய்கிறார்கள். குஷ்டவியாதியினாலும் அக்ஷிரோக (கண் வியாதி) த்தினாலும் குக்ஷிரோகத்தாலும் (வயிற்றின் வியாதி) பீடிக்கப்பட்ட ஜனங்கள் மற்ற சிகித்ஸைகளால் பரிஹாரமடைவது அசாத்தியமென்று நிச்சயமானபிறகு இந்த க்ஷேத்திரத்தில் வந்து வாசம் செய்து நியமத்துடன் தேவ சேவை செய்கிறார்கள். அவர்கள் நியமத்திற்கும் பக்திக்கும் தக்கபடி அநேகர் பலன் அடைந்திருக்கிறார்களென்பது பிரத்தியக்ஷமாயிருக்கிறது. ஜனங்கள் தங்களுக்கு நேர்ந்த கஷ்டங்கள் நிவர்த்தி ஆவதற்காக சரீர பிரயாசையுடன் கடினமாக ஸ்வாமி சேவை செய்வதாக பிரார்த்தனை செய்துகொண்டு அந்த ஸ்வாமி அனுக்கிரஹத்தினால் தங்கள் கஷ்டங்கள் பரிஹாரமடைந்தபிறகு இந்த க்ஷேத்திரத்தில்வந்து தாங்கள் பிரார்த்தித்துக்கொண்டிருந்தபடியே சேவை நடத்துகிறார்கள். இந்த சேவைகளில் அதிகஷ்டமான சேவை ஒரு பக்கத்தினால் தேவஸ்தானத்தை சுற்றிலும் நிலத்தின்மேல் விழுந்து ஒரு ஒரு அங்குலமாக நகர்ந்து நகர்ந்து நடத்தக்கூடியது. இந்த கஷ்டமான சேவையை யநேகம் பேர்கள் நடத்துகிறார்கள்.

பிரதிமாதங்களிலும் பூர்ணிமையில் இந்த க்ஷேத்திரத்தில் ரதோத்ஸவம் நடக்கிறது. அநேக ஜனங்கள் பூர்ணிமை திதியில் இந்த க்ஷேத்திரத்திற்கு வந்து

ஸ்வாமி சேவை செய்து ரதத்தின் மேலே ஸ்வாமி தர்சனம் செய்வதாக பிரார்த்தனை செய்துகொண்டு அநேக பூர்ணிமா தினங்களில் வந்து சேவை நடத்துகிறார்கள். இப்போதைய மகாராஜா ஸர்வ்வடி கிருஷ்ணராஜபிரபுக்கள் பன்னிரண்டு பூர்ணிமை திதிகளில் ஸ்ரீகண்டேசுவர தர்சனமும் அந்த ஸ்வாமியின் சேவையும் நடத்துவதாக பிரார்த்தித்துக்கொண்டிருந்ததாக தெரியவந்திருக்கிறது. அவர்கள் சங்கல்பப்படியே பிரதி பூர்ணிமா திதியிலும் ராஜதானியிலிருந்து விஜயம் செய்து கபிலாநதியில் ஸ்நானம் செய்து அதிக நியமங்களுடன் ஒருவருஷகாலமும் ஸ்வாமி சேவையை முடித்து பாமரஜனபக்தியை முன்னைவிட இந்த ஸ்வாமி விஷயத்தில் அதிகமாக்கியது என்று தாராளமாய்ச் சொல்லலாம். இந்தப்பிரகாரம் ஜனங்களுக்கு ஸ்வாமி தர்சனம் சேவை இவைகளால் ஆகக்கூடிய பிரயோஜனங்கள் அனுபவத்திற்கு வந்து அநேகர் ஸ்ரீகண்டேசுவர ஸ்வாமி மாகாத்மியத்தைக் குறித்து விசேஷமாக புகழ்ந்துகொண்டிருக்கும் சந்தர்ப்பத்தில் ஸ்வாமியினிடத்தில் சக்தி இல்லை என்றாவது, சக்தி இருப்பதாக நினைத்து ஸ்வாமி சேவை செய்வதும் ஸ்வாமியைப் புகழ்வதும் ஆலோசனையில்லாத மூடர்கள் செய்கிற காரியம் என்று அபிப்பிராயப்படுவது அவ்வளவு யுக்தமானதென்று யாரும் சொல்லமாட்டார்கள். ஆனால் நம்ம பாவனைக்குத் தகுந்தபடியே எல்லாவிதமான பலன்களும் உண்டா

வதென்ற விஷயத்தில் சந்தேகமில்லை. அப்படியிருந்தாலும் அவ்விதமான உறுதியான பாவனை எந்த ஸ்தலத்தில் வெகு ஜனங்களால் செய்யப்படுகிறதோ அதைத்தான் மகாக்ஷேத்திரமென்று சொல்லவேண்டும். எந்த மூர்த்தியில் அப்படிப்பட்ட நிச்சலமான பாவனையை ஜனங்கள் செய்கிறார்களோ அந்த ஸ்வாமியையே விசேஷமான சக்தியுள்ள ஸ்வாமியென்று லோகத்தில் சொல்லுவார்கள். அவ்விதமான நம்பிக்கை வெகு ஜனங்களுக்கு இந்த க்ஷேத்திரத்திலும் இங்குள்ள ஸ்வாமி விஷயத்திலும் விசேஷமாயிருப்பதாக மூர்த்தியே சொல்லியிருப்பதாலும் இந்த க்ஷேத்திரம் உத்தமமான சிவக்ஷேத்திரமென்று சொல்லுவதில் ஆக்ஷேபணையில்லை. ஸ்ரீமன் மகாராஜர் அவர்கள் சர்க்காரிலிருந்து விசேஷமாக தஸ்திகள் ஏற்படுத்தி சர்க்காரவர்கள் சொந்த விசாரணையில் வைத்துக்கொண்டு இந்த தேவாலயத்தில் 6 காலபூஜையும் நித்ய நைமித்திக உத்ஸவங்களையும் மிகவும் விமரிசையாக நடத்திக்கொண்டு வருகிறார்கள். இந்த தேசத்திற்கு அதிபதிகளான ஸ்ரீமன் மகாராஜர் அவர்கள் ஸ்ரீகண்டேசுவரரிடத்தில் விசேஷமாக பக்தி செய்யக்கூடியவராயும், ஸ்வாமி பூஜாதிகளில் எவ்விதமான லோபங்களும் உண்டாகாதபடி நடப்பதை விசேஷமாக தம் கவனத்தில் வைத்திருப்பதாகத் தெரிந்துவருகிறது.

ஸ்ரீகண்டேசுவரர் விஷயத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு விசேஷமான கௌரவமும் பக்தியும் சர்ப்பத்தி

யிருந்த காலத்திலிருந்து தொடர்ந்து வந்திருக்கிற தென்ற விஷயம் இந்த கிரந்தத்திய 1,2 அத்தியாயங்களை வாசிப்பதினலேயே தெரிந்துகொள்ளப்படலாம். பரம பக்தரான ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இந்த க்ஷேத்திரத்தில் இருபத்திரெண்டு நாள் வாசம் செய்து அநேக பிரகாரமாக ஸ்ரீகண்டேசுவரரை ஆராதனம் செய்து ஸ்ரீமான் மகாராஜர் அவர்களுடையவும் அவர் குடும்பத்தார்களுடையவும் சிரேயஸ்ஸுக்காகவும் தம் சிஷிய ஜனங்களுடைய சிரேயஸ்ஸிற்காகவும் ஸ்வாமியைப் பிரார்த்தனை செய்துகொண்டு இங்கிருந்து முன்னே பிரயாணத்திற்கு ஆரம்பம் செய்தார்கள்.

நஞ்சன்கூடிலிருந்து புறப்பட்டு சாமராஜநகரம் குண்டலுப்பட்டை ஹெக்கடதேவன் கோட்டை எடத்துறை ஹுணஸூர் அரகல்கூடு மார்க்கமாய் காவேரி நதி உத்பத்தி ஸ்தானமான தலைக்காவேரி என்ற திவிய ஸ்தல யாத்திரைக்காக குடகு தேசத்தில் பிரவேசம் செய்தார்கள். இந்த தேசத்தில் விசேஷமாக பிராம்மணர் வாசமாயிருக்கவில்லை. அந்த தேசத்திலுள்ள குடகு ஜனங்களே பாக்கியவந்தர்களாயும் பிரசித்தர்களாயுமிருக்கிறார்கள். அத்தேசத்திலுள்ள முக்கியமான தேவாலயங்கள் சத்திரங்கள் முதலிய தர்மஸ்தானங்கள் அவ்விடத்திய ஸ்தல ஜனங்களான குடகு ஜனங்களின் விசாரங்களுக்குட்பட்டவைகளாய் அவ்விடத்திய தர்மங்களெல்லாம் வெகு விதரணையுடன் நடத்தப்பட்டுக்கொண்டு வருகின்றன. ஸ்ரீஸ்வாமிகளவர்

கள் அந்தப் பிராந்தியத்தில் விஜயம் செய்தகாலத்தில் அத்தேசத்தில் பிரசித்தரான குடகு ஜனங்கள் ஸ்ரீஸ்வாமிகளை வெகு கௌரவத்துடனும் பக்தியுடனும் வரவேற்றுக்கொண்டார்கள். மடகேரியிலும் பாகமண்டலத்திலும் ஸ்ரீஸ்வாமிகள் வாசத்திற்காக தேவஸ்தானங்களிலேயே வேண்டிய அநுகூலங்கள் செய்து கொடுத்து தேவஸ்தானத்திலிருந்து ஸ்ரீஸ்வாமிகளுக்கும் அவர் பரிவாரங்களுக்கும் சத்காரம் நடத்தினதுமல்லாமல் அநேக பெரிய மனிதர்கள் தங்கள் தங்கள் குடும்ப ஜனங்களுடன் ஸ்ரீஸ்வாமிகள் வாசம் செய்திருந்த இடத்திற்கு வந்து அவரவரந்தஸ்துக்குத் தகுந்தபடி வெவ்வேறாக பிக்ஷை பாதபூஜை முதலிய சேவைகளை அதிக ஆதரவுடன் நடத்தி அவர்களிடமிருந்து தீர்த்தப் பிரசாதங்களை ஸ்வீகரித்து அவர்களுடைய அனுக்கிரஹத்திற்கு விசேஷமாக பாத்திரர்களானார்கள்.

காவேரி உத்பத்தி ஸ்தானத்திற்கு சமீபமான பாகமண்டலமென்ற ஸ்தலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் 3 தினம் வாசம் செய்து நதி உத்பத்தி ஸ்தானத்தில் ஸ்நானம் செய்து தங்க நாணயங்களால் காவேரி நதியை பூஜை செய்து பிராமண போஜனம் முதலியவைகளை விசேஷமாக நடத்தினார்கள். அங்கிருந்து சஞ்சாரக் கிரமமாய் ஸ்ரீரங்கப்பட்டணத்திற்கு சமீபத்திலுள்ள பச்சிமவாகினிக்கு விஜயம் செய்தார்கள். அவ்விடத்தில் தம்முடைய குருக்களின் ஆராதனை நடத்தப்பட்டது.

இந்த சமயத்தில் தம்முடைய எதிர்பார்க்கப்படாத வரவினல் ஸ்ரீஸ்வாமிகளுக்கு தம் பக்தி விசுவாசங்களைக் காண்பிவித்து அவர்களனுக்கிரஹத்தைப் பெற வேண்டுமென்ற உத்தேசத்தினல் மைசூர் ஸ்ரீசாமராஜ பிரபுக்கள் பகல் 5 மணி சமயத்தில் பச்சிமவாகினிக்கு விஜயம் செய்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்களின் தர்சனத்தை சம்பாதித்து அவர்களின் உத்தரவைப் பெற்றுக் கொண்டு ராஜதானிக்கு விஜயம் செய்தார்கள். பச்சிமவாகினியிலிருந்து மண்டயம், மத்தூர், சிவன்சமுத்திரம், கொள்ளேகாலம் சாமராஜநகரம், மார்க்கமாக பிரயாணம் செய்து கணவாய் இறங்கி மதராஸ் ஆதிபதயத்தைச் சேர்ந்த கோயம்புத்தூர் ஜில்லா சத்தியமங்கலத்திற்கு விஜயம் செய்தார்கள். சத்தியமங்கலத்தில் சம்ஸ்தானத்திற்குச் சேர்ந்த விஸ்தாரமான ஒரு மடம் பவானிநதி தீரத்திலிருக்கிறது. அந்த மடத்திலேயே வஸதிசெய்துகொண்டந்த வருஷத்திய சாதுர்மாஸ்ய சங்கல்பத்தை நடத்தினர்கள். சத்தியமங்கலத்தில் சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் பூர்த்தியானமேல் கோபிசெட்டிபாளையம் என்ற பிராம்மண அக்கிரஹாரத்திற்கு விஜயம் செய்து அங்கு சாத் நவராத்திரி மகோத்ஸவத்தை நடத்தினர்கள். இந்த கிராமத்தில் சிவக்கொழுந்தை முதலியார் என்பவன் பூமிவியவசாயத்தினல் கூடியவரையில் செல்வமுடையவன். இவன் தன்னுடைய தகப்பனல் செய்யப்பட்டிருந்த சங்கல்பத்தை அனுசரித்து கோபிசெட்டிபாளையத்தில்

சுப்பிரமணிய மூர்த்தியை பிரதிஷ்டை செய்வித்து நித்யபூஜாதிகள் நடக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்று யோசித்துக்கொண்டிருந்தான். ஸ்ரீசுவாமிகள் அவர்கள் கோயிசெட்டிபாளையத்திற்கு விஜயம் செய்தபிறகு இந்த மகானுடைய ஆஜ்ஞையை அனுசரித்து வைதிகவிதானமாக சுவாமி பிரதிஷ்டை செய்வித்து வைதிகர்களைக்கொண்டே நித்யபூஜாதிகள் நடக்கும்படி செய்தால் தன்னால் செய்யப்பட்ட தேவஸ்தானம் ஸர்வஜனங்களாலும் ஆதரிக்கப்பட்டு ஆசந்திரார்க்கஸ்தாயியாயிருக்கக் கூடுமென்ற அபிப்பிராயம் அவனுக்குண்டாகி அந்தக் கிராமத்தில் முக்கியஸ்தரான பிராமணர்கள் மூலமாய் தன்பிரார்த்தனையை ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் விக்ஞாபனம் செய்துகொண்டான். அதுவரையில் தக்ஷிணதேசத்தில் வைதிக விதானப்படி தேவப்பிரதிஷ்டை செய்யும் கிரமமே தெரிந்தவர் யாரும் இல்லையென்றும் அந்த மார்க்கத்தை அனுசரித்து எந்த தேவருக்கும் பிரதிஷ்டை நடந்திருப்பதில்லையென்றும் சொல்லுவதில் சங்கோசப்படவேண்டியதில்லை. பிராம்மணர்கள் மூலமாய் தம் காதில் விழுந்த அந்த பக்தனுடைய பிரார்த்தனையை அங்கீகரித்து ஆஸ்தானத்திய பண்டிதர்களையனுப்பி அவர்களுடைய சகாயத்தினால் அங்குள்ள வைதிக பிராம்மணர் மூலமாய்வேதோக்தவிதானமாக சுபபிரமண்ய ஸ்வாமி பிரதிஷ்டை நடப்பதற்கு ஸ்வாமிகள் உத்தரவு கொடுத்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் ஆஞ்ஞையை அனுசரித்து விதிப்படி தேவதா பிரதிஷ்டை நடந்த பிறகு ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் தாமே தேவாலயத்திற்கு விஜயம் செய்து மூர்த்தியில் விசேஷமாக சான்னித்யம் உண்டாவதற்காக ஸ்வாமியை பூஜை செய்து தேவதா சான்னித்யம் உண்டாக்கக் கூடிய அநேகமஹாமந்திரங்களால் மூர்த்தியை அபிமந்திரணம் செய்து வைதிக விதானமாக பிரதிஷ்டை செய்யப்பட்டு வைத: தம்மால் ஆராதிக்கப்பட்டிருக்கும் ஸ்வாமியை எந்தவிதமாயும் சந்தேகிக்காமல் எல்லாவைதிகர்களும் பூஜிக்கலாமென்று ஆக்ஞை செய்து அங்கிருந்து முன்னே ஈரோடு, பவானி முதலான கிராமங்களில் சிஷ்யஜனங்களால் பிரார்த்திக்கப்பட்டவர்களாய் அந்தந்த கிராமங்களிலுள்ள ஜனங்களின் பிரார்த்தனைக்குத் தக்கபடி மூன்று, நான்கு, எட்டு, பத்து, பதினைந்து தினங்கள் வரையிலும் வாசம் செய்து ஸ்ரீமத் சாரதா சந்திரமௌளீசுவரர் முதலான தேவதா தரிசனம் தீர்த்த பிரசாதம் இவைகளினால் வெளிப்படையாயும் ஸ்ரீஸ்வாமிகளின் ஸன்மார்க்க உபதேச சிரவணத்தினால் ஆந்தரமாயும் சுத்தியைப்பெற்று ஜனங்கள் கிருதார்த்தர்களாகும்படி அனுக்கிரஹம் செய்துகொண்டு ஒரு வருஷத்திற்கதிகமான காலம் வரையிலும் அதி நிர்மலமான காவேரி நதிதீரத்திலுள்ள பிராம்மண அக்கிரஹாரங்களிலேயே சஞ்சாரம் செய்தார்கள்.

திருச்சினப்பள்ளியிலிருந்து மேற்கே பதினைந்து

மைல் தூரத்தில் அகண்டகாவேரி தீரத்தில் அய்யம் பாளையம் என்ற ஒரு கிராமமிருக்கிறது. இது பிராமணை கிராமமல்ல இந்த கிராமத்தில் ஷண்முகம் பிள்ளை என்பவரின் மகன் தாண்டவராயபிள்ளை என்று ஒரு கனவான் இருந்தார். இவர் வேளாள ஜாதியைச் சேர்ந்த ஸத்சூத்ரர், இவருடைய பூர்வீகர்கள் காவேரி தீரத்தில் விசேஷமாக சிலாக்கியமான பூமிகள் சம்பாதிக்கப்பட்டு பூமியை வ்யவசாயம் செய்வதினால் பாக்கியவந்தர்களாயிருந்தார்கள். இவருக்குள்ள ஆஸ்திகளில் மூன்றிலொருபங்கு சொத்தை இந்த தாண்டவராயபிள்ளையின் முன்னோர்களே தர்ம காரியங்களுக்காக விநியோகப்படுத்த வேண்டுமென்றும் மீதி இரண்டு பங்கு சொத்துக்களை தங்கள் சந்ததியிலுள்ளோர் அனுபவிக்கவேண்டுமென்றும் சிலாசாஸனமூலமாய் வியவஸ்தை செய்து இருந்ததாகத் தெரியவருகிறது. அப்படி தர்மத்திற்காக உபயோகப்படுத்தும்படி முன்னோரால் குறிக்கப்பட்ட சொத்துக்களின் விசாரணை இந்த சந்ததியாராலேயே நடத்தப்பட்டு அதன் வருமானத்தினால் வழிபோக்கான பிராமணர்களுக்கு அன்னதானம் செய்யும் ஒரு தர்மம் மாத்திரம் நடத்தப்பட்டுக்கொண்டு வந்தது. இந்த வம்சத்தில் பிறந்த தாண்டவராயபிள்ளை என்பவரின் புண்ய பரிபாகத்தால் தம் குடும்பத்தாரால் செய்யப்பட்டிருக்கும் தர்மத்தை விருத்திப் படுத்தி தர்ம சொத்துக்களின் வருமானத்தை முழுவதும் தர்ம

விஷயமாகவே விநியோகம் செய்துவரவேண்டுமென்ற எண்ணம் இவருக்கு உண்டாயிறறு. இந்த குடும்பத்தார் தண்டாயுதபாணியான சுப்பிரமணியஸ்வாமியிடத்தில் அதிகமான பக்தி செய்துகொண்டு இருந்ததினால் தண்டாயுத சுப்பிரமணியஸ்வாமிக்கு விசாலமாக ஒரு ஆலயம் நிர்மாணம் செய்து அந்த ஸ்வாமியை பிரதிஷ்டை செய்து நித்திய நைமித்திக பூஜை ஆராதனம் முதலிய உத்ஸவங்கள் ஸ்திரமாக நடக்கும்படி செய்யவேண்டுமென்ற அபிப்ராயமுண்டாய் இந்த அபிப்பிராயம் அவர் மனதிலேயே அதிகரித்துக்கொண்டிருந்தது. இவ்வித சந்தர்ப்பத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சவாரி அந்தப் பிராந்தியத்தில் விஜயம் செய்து சிஷ்ய கோடிகளை அனுக்கிரஹித்துக்கொண்டு காவேரி தீரத்திலேயே சஞ்சாரம் செய்துகொண்டிருக்கிற சங்கதியை அறிந்துகொண்ட தாண்டவராயபிள்ளைக்கு தன் உத்தேசத்தை நிறைவேற்றிக் கொள்வதற்கு அனுகூலமான சமயம் நேர்ந்து வந்ததென்று நிச்சயமாயிற்று. இந்த கிருஹஸ்தன் அதி புத்திசாலியாயும் வெகு தூரதிருஷ்டியுள்ளவனுமிருந்தான். தான் நாலாவது வர்ணத்தைச்சேர்ந்தவனாயிருப்பதினால் தன்னால் புதிதாய் கல்பிக்கப்படும் தேவாலயம் ஸர்வஜனங்களாலும் ஆதரிக்கப்படமாட்டாதாகையால் இந்த தேவாலயம் உத்தம ஸ்திதிக்கு வரமாட்டாதென்றும் லோகமான்யர்களாயும் பரம சுத்த சரித்திரமுள்ளவர்களாயும் இருக்கிற ஸ்ரீஸ்வாமிகள் அவர்களே இக்காரி

யத்தை எடுத்துக்கொண்டு சிஷ்யனுன தன்னுடைய சகாயத்தினுல் நிறைவேற்றும்படி ஏற்பாடாகும் பக்ஷத்தில் இந்த பெரிய காரியம் திருப்திகரமாக பூர்த்தி ஆகி ஆசந்திரார்க்க ஸ்தாயியாய் ஸர்வ ஜனங்களும் ஆதரிக்கும்படியாகுமென்று யோசித்து இந்த தன் அபிப்பிராயத்தை முன்னதாகவே வெளியிடாமல் ஸ்ரீசுவாமிகளவர்கள் அய்யம்பாளையத்தின் மார்க்கமாக விஜயம் செய்து அனுக்கிரஹித்து அதன் பிறகு மேல் பிரயாணத்தை நடத்தவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டான்.

ஸ்ரீஸ்வாமிகள் அய்யம்பாளையத்திற்கு விஜயம் செய்த பிறகு அந்த மகானுபாவருடைய தர்சன மாத்திரத்தினுல் தாண்டவராயபிள்ளையவர்களுக்கு தங்கள் குலதைவமாகிய தண்டாயுதபாணியே தனக்கு தர்சனம் கொடுத்து அனுக்கிரஹிப்பதற்காக ஸ்ரீசுவாமிகள் ரூபத்துடன் வந்ததாக தெரியவந்தது. இந்த பாவனை இந்த கிரஹஸ்தனுடைய மனதில் உறுதியாயிருந்ததினுல் ஸ்வபாவமாக ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்வதற்கு முன்னதாகவே இந்த கிருஹஸ்தனுல் யோசிக்கப்பட்டிருந்த காரியத்தை ஸ்ரீஸ்வாமிகள் மூலமாக எந்த விதத்திலாவது நிறைவேற்றி கிருதார்த்தனுகவேண்டுமென்ற விஷயத்தில் ஆத்திரம் வெகுவாய் அதிகரித்தது.

மறுநாள் தாண்டவராயபிள்ளையவர்கள் தன் அபிப்பிராயத்தை இந்த லேககன் மூலமாகவே ஸ்ரீஸ்

வாமிகளவர்கள் சன்னிதியில் அறிவித்து அவர்கள் தங்கள் அமிருதமயமான ஹஸ்தத்தினல் அஸ்திவாரக்கல் ஸ்தாபித்து மேல் பிரயாணம் விஜயம் செய்து வந்தால் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சங்கல்பபிரகாரம் சேது யாத்திரை பூர்த்தி செய்துகொண்டு திரும்பி வருவதற்குள் தேவாலயம் நிர்மாணம் செய்விப்பதாகவும் மறுபடி அந்த மார்க்கமாகவே அவர்கள் வந்து தேவதாப்பிரதிஷ்டை செய்வித்து ஸ்வஸ்தானத்திற்கு பிரயாணமாகலாமென்றும் ஸ்ரீஸ்வாமிகளிடம் விக்ஞாபித்துக்கொண்டார். மேற்கண்ட விக்ஞாபனை ஸ்ரீஸ்வாமிகளுக்கு அறிவிக்கப்பட்டவுடன் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் உடனே அனுமதிகொடுப்பதில் தயங்கினர்கள். பிற்பாடு லோக ஹிதார்த்தமாய் ஸ்ரீமதாதி சங்கராசாரிய சுவாமிகள் அநேக ஸ்தலங்களில் தேவதா மூர்த்திகளை ஸ்தாபித்து லோகானுக்கிரஹம் செய்தது போல சிஷ்ய ஜனங்களின் சகாயத்தால் ஸ்ரீசுவாமிகளே சர்வ ஜனோபயோகியாக அகண்டகாவேரி தீர்த்தத்தில் தேவாலய நிர்மாணம் செய்வித்து தேவதாப்பிரதிஷ்டை செய்து அனுக்கிரஹிக்கவேண்டுமென்று அடிக்கடி தெரிவித்துக்கொண்ட மேல் அந்த கிருஹஸ்தனுடைய சங்கல்பம் தன் உபயோகமாத்திரத்திற்காக செய்யப்பட்டதல்லவென்ற விஷயத்தை நன்றாக தெரிந்து அவர் கோரிக்கைப்படியே நடத்துவதாக அனுமதி கொடுத்தார்கள்.

தேவாலய நிர்மாணத்திற்காக உத்தேசிக்கப்பட்ட

இடத்தில் விஜய வருஷம் சைத்ர சுக்கில ஸப்தமி அபிஜித் முகூர்த்தத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஸ்ரீசாரதாம்பா சந்திரமௌளீசுவராதி தேவதா பூஜை முதலிய நித்யகர்மானுஷ்டானங்களை நிறைவேற்றிக்கொண்டு தாம விஜயம் செய்து ஸ்ரீசம்ஸ்தானத்திய சிலவில் ஆரம்பத்தில் கணபதி பூஜை முதலிய கர்மகலாபங்களைபிரம்மணர்கள் மூலமாக நிறைவேற்றி தேவாலயம் அமைப்பதற்காக அஸ்திவார சிலையை ஸ்தாபனம் செய்தார்கள். தாண்டவராயபிள்ளைக்கு பிரசாதம அனுக்கிரஹித்து தாம் ஸேது யாத்திரை நடத்திக்கொண்டுவருவதற்குள்ளாக தேவாலயம் நிர்மாணம் செய்து சித்தப்படுத்தும்படிக்கும் இந்த ஆலயத்தில் விஷ்ணுமூர்த்தியையும் பார்வதி பரமேசுவர மூர்த்தியையும கூட பிரதிஷ்டை செய்வதற்கு தகுந்த அனுகூலம் கல்பித்திருக்கும்படிக்கும் அந்த சிஷ்யனுக்கு ஆக்ஞை செய்து முன்னுக்கு தங்கள் யாத்திரையை ஆரம்பம் செய்தார்கள்.

இந்த சமயத்தில் சாதுர்மாஸிய சங்கல்ப்ப காலம் நெருங்கி வந்தது. காவேரீ தீர்த்தத்தை விட்டு ஆமராவதீ தீரத்திலுள்ள கிராமங்களில் இருக்கிற சிஷ்ய ஜனங்களை அனுக்கிரஹிப்பதற்காக அந்தப்பிராந்தியத்திற்கு விஜயம் செய்தார்கள். கோயம்புத்தூர் ஜில்லா உடமல்பேட்டை தாலுகாவிற்குச் சேர்ந்த வாரதாராஜபுரம் (கொழுமம்) என்ற அக்கிரஹாரத்தில் சாதுர்மாஸ்ய தீக்ஷையை நடத்திக்கொண்டார்கள். இதற்கு

சமீபத்திலுள்ள கடத்தூர் என்னும் அக்கிரஹாரத்தில் நவராத்திரியில் நடத்தவேண்டிய சாரதா பூஜாதிகளான தர்மங்களை நிறைவேற்றிக்கொண்டு மதுரை ஜில்லாவிற்கு சேர்ந்த பழனி என்ற ஸுப்ரமண்ய க்ஷேத்திரத்தில பிரவேசித்தார்கள்.

இந்த க்ஷேத்திரம் தக்ஷிணதேசத்தில் வெகு பிரசித்தமாயுள்ளது இந்த க்ஷேத்திரத்தை தர்சனம் செய்வதற்காகவும் இந்த க்ஷேத்திரத்திலுள்ள தண்டாயுதபாணி சுப்பிரமணிய மூர்த்தி தர்சனத்திற்காகவும் வெகு ஜனங்கள் வருவார்கள். ஒரு தினமாவது பால் காவடி பக்தரால் கொண்டுவரப்படாமலிருப்பதில்லையென்ற பிரசித்தி அதிகமாயிருக்கிறது. இந்த க்ஷேத்திரத்தில சில நாள் வாசம் செய்து ஸ்ரீதண்டாயுதபாணி ஸ்வாமிக்கு ஸ்ரீசுவாமிகளவர்கள் தம் ஹஸ்தத்தினால் விசேஷமாக பூஜை செய்து திண்டுக்கல் மார்க்கமாக மதுரைப்பட்டணத்திற்கு விஜயம் செய்தார்கள், இந்தப்பட்டணத்தில் ஸ்ரீசுவாமிகளவர்களை சிஷ்ய ஜனங்கள் வெகு பக்தியுடனும் விசேஷமான வைபவத்துடனும வரவேற்றுக்கொண்டார்கள். மூர்த்திய வழக்கத்தை அனுசரித்து ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசுவராலயத்தில் ஒரு பாகமான கலியாண மண்டபத்தின் ஸ்ரீசுவாமிகளவர்கள் வஸதி செய்துகொண்டார்ள்.

ஸ்ரீசுவாமிகளவர்கள் மதுரையில் வாசம் செய்துகொண்டிருக்கும் காலத்தில் சேதுபதிகள் வம்சத்தைச் சேர்ந்த ராமநாதபுரத்திய ராஜான பாஸ்கர சேது

பதி, என்பவர் அவர்கள் தர்சனம் செய்து ஒரு
தினம் மதுரைப்பட்டணத்திலுள்ள ஸகல ஜனங்களுக்
கும் அவர்களுடைய தர்சன ஆனந்தம் கிடைக்கும்படி
செய்யவேண்டுமென்று உத்தேசித்து அவர்களை திவ்
வியமான புஷ்பங்களால் அலங்கரிக்கப்பட்ட ஸவர்ண
பல்லக்கில் ஆரோகணம் செய்வித்து இராஜவீதிகளிலும்
மற்றுமநேகவிடங்களிலும் தோரணங்களால் அலங்கா
ரம் செய்வித்து மகாவிபவத்துடன் உத்ஸவம் நடத்தி
வைத்தார். அன்று தினம் அங்கு சேர்ந்திருந்த ஜனங்
கள் கணக்கிடமுடியாததாயிருந்தது. ஆபாலவிருத்
தரும் ஸ்ரீஸ்வாமிகளை தர்சனம் செய்து ஆனந்தத்
தில் மூழ்கி இந்த ஆனந்தத்திற்கு காரணபூதராயி
ருந்த சேதுபதியை அநேகவிதமாய் ஸ்லாகித்தார்கள்.
ஸ்ரீஸ்வாமிகள் சேதுயாத்திரை நிமித்தமாய் வந்தி
ருக்கிற சங்கதியைத் தெரிந்துகொண்ட பாஸ்கர சேது
பதிராஜர் தனக்கு ஸ்வாதீனமாயுள்ள தேசத்திற்கு
விஜயம் செய்து உத்தேசிக்கப்பட்டிருக்கும் சேதுயாத்
திரையை முடித்துக்கொண்டு தன் வாசஸ்தானமாகிய
ராமநாதபுரத்தில் சாதுர்மாஸ்ய சங்கல்பம் சரத் நவ
ராத்திரி பூஜாதிகளான தர்மங்களை நடத்தி தனக்கும்
தன்னுடைய பிரஜைகளுக்கும் சம்பூர்ணமாக அனுப்பி
யும் செய்து முன்னுக்கு விஜயம் செய்யவேண்டு
மென்று ஸ்வாமிகளவர்கள் சந்நிதானத்தில் விக்ஞா
பனம் செய்துகொண்டார்.

அந்தப்படியே ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சவாரி மது

ரையிலிருந்து பிரயாணப்பட்டு மார்க்கத்தில் ராமனுத புரம் ராஜருக்கு சேர்ந்த கிராமங்களில் ஆங்காங்கு வாசம் செய்து இராமேசுவர க்ஷேத்திரத்தில் பிரவேசித்தார்கள். இஙகேயும் முந்திய ஙிபந்தனைப்படி இராமனுதசுவாமி தேவாலயத்தில் 3வது பிராகாரத்தில் வஸதி செய்துகொண்டார்கள். ராமநாதபுரம் எல்லையில் சுவாமிகள் பிரவேசம் செய்தது முதல்கொண்டு அவர்களுக்கும் அவர் பரிவாரங்களுக்கும் வேண்டிய எல்லாவித அனுகூலங்களும் ராமநாதபுரம் ராஜனுலேயே கல்பிக்கப் பட்டிருந்தது. இன்னம் ஸ்வாமிகள் அந்த ராஜரின் சம்ஸ்தானத்தை விட்டு வெளியே போகும் வரையிலும் எந்த தினத்திய பிக்ஷை இதர சிஷ்யரால் நடத்தப்படவில்லையோ அந்த தினத்தைச்சேர்ந்த சம்ஸ்தானத்திய செலவுக்காக இருநூற்றி ஐம்பது (250) ரூபாய் வீதம் தன் கஜானுவிலிருந்து கொடுக்கத்தகுந்ததென்று சங்கல்பித்து பாஸ்கர சேதுபதி அந்தப்படியே நடத்தினர்.

ராமேசுவரத்திலிருந்து சேது ஸ்நாநனத்திற்காக தனுஷ்கோடிக்கு விஜயம் செய்து அங்கே மூன்று நாள் வாசம் செய்து விதிப்படி சேது ஸ்நானம் செய்து சமஸ்தான வழக்கப்படி அந்த க்ஷேத்திரத்தில் நடத்த வேண்டியதான தர்மங்களை நடத்தி பிற்பாடு சம்ஸ்தானத்தில் ஆசிரிதராயிருந்த வித்வான்களுக்கும் மற்றபரிஜனங்களுக்கும் அவரவர்கள் தாரதம்யத்தை அனுசரித்து சுமார் 30 அல்லது 40 ஜனங்களுக்கு 300 ரூ. முதல்

1070 ஞூ. வரையில் ஸ்திரமான ஜீவனம் ஏற்படுத்திக் கொள்வதற்காக கொடுக்கும்படி ஆக்ஞை செய்து அந்தப்படி நடந்த பிறகு மறுபடி ராமேசுவரத்திற்கு விஜயம் செய்தார்கள். ராமேசுவரத்தில் ஸ்ரீராமனுத ஸ்வாமிக்கு சுவாமிகள் தாமே விசேஷமாக பூஜை செய்து அந்த க்ஷேத்திரத்தில் சில தினங்கள் வாசம் செய்து அங்குள்ள சிஷ்ய மண்டலிக்கு அனுக்கிரஹம் செய்து சேதுபதிகளின் பிரார்த்தனைப்படி ராமனுத புரம் வந்து சேர்ந்தார்கள் இங்கே சாதுர்மாஸ்ய சங்கல்பமும் நவராத்திரியில் நடத்தவேண்டிய சாரதா பூஜை உத்ஸவம் முதலியவைகளை இங்கேயே நடத்தினார்கள்.

சேதுபதிகளுடைய அரண்மனையில் வம்ச பாரம்பர்யமாய் அவர்களால் ராஜராஜேசுவரி அம்மனுடைய ஆராதனையும் நடததப்பட்டுக்கொண்டு வந்தது இது சம்பந்தமாய் நவராத்திரி காலத்தில் விசேஷமாக பூஜை உதஸவாதிகளெல்லாம் நடத்தப்படத்தக்கதாயிருந்தது. இந்த உத்ஸவம் ஸ்வாமிகளவர்கள் ராமனுதபுரத்தில் வாசம் செய்து கொண்டிருந்த காலத்திலும் பாஸ்கரசேதுபதிகளால் வெகு விமர்சையாய் நடத்தப்பட்டது ஆனல் ராஜராஜேசுவரி அம்மன் பூஜையும் அங்கே நடத்தப்படுகிற உத்ஸவங்களும் பிராம்மணர் மூலமாய் நடத்தப்படத்தக்கதாயிருந்ததே தவிர மற்றவர் மூலமாக நடத்தப்படுவதாயிருக்கவில்லை. இப்படியிருந்தாலும் நவராத்திரியில் ஒரு



இராமநாதபுரம் பாஸ்கர ஸேதுபதி மஹாராஜா

தினம் ஸஹஸ்ர பூஜை என்ற பெயரால் ஆயிரம் ஜீவ ஜந்துக்களை அம்மன் தேவஸ்தானத்தில் பலியாகக் கொடுக்கக்கூடிய ஒரு வழக்கம் வெகு காலமிருந்து நடந்து வந்துகொண்டிருந்தது. இந்த விஷயம ஸ்வாமிகளுக்கு தெரிந்தவுடன் இந்த குரூரமான நடத்தையை நிறுத்தவேண்டுமென்று ஸ்வாமிகளவர்கள் சித்தத்தில் தோன்றிற்று. எந்த சந்தர்ப்பத்திலும் தம் அபிப்பிராயத்தை திடீரென்று வெளியிடக்கூடிய ஸ்வபாவம் ஸ்வாமிகளிடத்தில் இருக்கவில்லை. இப்படியிருக்கையில் ஒரு நாள் அவர்கள் தர்சனத்திற்காக வந்த பாஸ்கர சேதுபதிகள் தானுகவே அவர்களிடத்தில் மேற்கண்ட ஸஹஸ்ர பூஜா பிரஸ்தாபத்தை எடுத்து இந்த வழக்கத்தை நிறுத்தவேண்டுமென்ற அபிப்பிராயம் தனக்கு இருந்தாலும் வெகுகாலமிருந்து வந்திருக்கும் இந்த வழக்கத்தை நிறுத்துவதற்கு தனக்கு தைரியமில்லை என்றும் ஸ்வாமிகளவர்கள அனுமதி கொடுத்தால் தான் தைரியமாய் அந்த குரூர காரியத்தை நிறுத்தி விடுவதாகவும் அறிவித்துக்கொண்டார்.

பாஸ்கர சேதுபதிகள் தாமாகவே வந்து பிரஸ்தாபம் செய்து தம்முடைய அபிப்பிராயத்தை ஸ்வாமிகளிடத்தில் தெரிவிக்கவே இந்த விஷயத்தில் முதலிலேயே யோசித்திருந்த ஸ்வாமிகளுக்கு பகவத் சங்கல்பத்தினாலேயே தமக்கு முதலில் சங்கல்பம் பிறந்ததென்றும் அதை பலப்படுத்துவதற்காகவே ராஜன் மனதிலும் இம்மாதிரி சங்கல்பமுண்டாகி அவராகவே

தம்மிடத்தில் தெரிவித்துக்கொள்ளும்படியான சந் தர்ப்பம் நேர்ந்ததென்றும் அறிந்து வெகுவாக சந் தோஷித்தார்கள். அப்படியிருந்தும் வெகு காலமி ருந்து ஒரு காரியம் நடந்து வந்ததாக தமக்கு தெரிய வந்தால் அந்த காரியம் ஆலோசனையின்மேல் நடந்தி ருக்கட்டும், ஆலோசனையில்லாமல் நடந்திருக்கட்டும், அந்த காரியத்தை திடீரென்று உடனே நிறுத்துவ தற்கு சுவாமிகள் பிரயத்தினப்படுகிறதில்லையாகை யால் ராஜரால் கேட்கப்பட்ட பிரச்னத்துக்கு மறுநாள் உத்தரம் சொல்லுவதாக சொல்லி அனுப்பினார்கள்.

அன்று ராத்திரி மடத்தில் அம்மன் பூஜை செய்து ராமனாதபுரம் ராஜரின் அரண்மனையில் வாமமார்க்கத் தை அனுசரித்து நடந்து வருகிற பூஜையை நிறுத்தி தக்ஷிணமார்க்கத்தில் நடக்கும்படி செய்வது ஈசுவர சம்மதமாயிருந்தால் அந்த விஷயத்தில் அன்று ராத் திரி ஸ்வப்னத்தில் சூசனை கொடுக்கவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டார்கள். இந்த மகானுபாவன் எப்போதும் ஸ்வப்பிரயோஜனத்தை விட்டு லோகஹி தத்தை கோரக்கூடியவராயிருந்ததினால் இவர்பக்திக்கு அனுகுணமாக அன்று ராத்திரி ஸ்வப்னத்தில் ஈசுவர சம்மதிரூபமான சூசனை இங்கே கீழே குறித்து விவரிக் கப்பட்டிருக்கிற பிரகாரம் உண்டாயிற்று. பிராம்மண ரல்லாத ஒரு ஸ்திரீ தன் ஹஸ்தங்களில் ஒன்றில் ஒரு பானபாத்திரமும் மற்றொன்றில் ஸம்மார்ஜனியும் பிடித் துக்கொண்டு மலினமான வஸ்திரங்களை தாரணம்

செய்துகொண்டு சுவாமிகள் எதிரில் வந்து 'நான் புறப்பட்டுப்போவேன்' என்று சொன்னதாயும் அதே காலத்தில் கொஞ்சகாலம் கழிந்து, ஸர்வாலங்கார பூஷி தையான மற்றொரு சுமங்கிலி தான் வந்தேனென்று சொன்னதாயும் சுவாமிகளின் மனதில் தோசாமாயி ற்று. இந்த ஸ்வப்னத்தைக்கண்ட அவர்களுக்கு வெகு வாக ஆனந்தமுண்டாகி அப்போதே ராமநாதபுரம் ராஜர் அரண்மனையில் நடந்துவந்த ஆயிரம் ஜீவஜந் துக்களை ஹிம்ஸை செய்கிற குரூரமான கர்மத்தை நிறுத்தி ஸாத்விக பூஜை முதலியவைகளை நடத்தும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்று தீர்மானித்துக்கொ ண்டார்கள். மறு நாள் அதிக ஆதுரத்துடன் சுவாமிக ளுடைய ஆக்ஞையை தெரிந்துகொள்வதற்காக வந்த ராஜரிடத்தில் அவர்களுடைய ஸ்வப்ன சமாசாரத் தையும் அதற்கு முன்னதாக அவர்களுக்குண்டாயி ருந்த சங்கல்பத்தையும் அதற்கு அனுகுணமாக ராஜர் வந்து தாமாகவே பிரஸ்தாபம் செய்தது முதலிய சங் கதிகளெல்லாம் விஸ்தாரமாக தெரிவித்து வாமமார்க் கத்தை அனுசரித்து தேவியை பூஜை செய்வதினால் உண்டாகக்கூடியபலனையும் தக்ஷிணமார்க்கக்கிரமமாய் செய்யும் பூஜையின் பலனையும் ராஜருக்கு உபதேசம் செய்து அல்ப பலத்தைக்கொடுக்கக்கூடிய வாமமார்க்க பூஜை வெகு காலமிருந்து நடந்து வந்திருந்தாலும் அதைவிட்டு அதிகமான பலனைக் கொடுக்கக்கூடிய ஸாத்விக பூஜையை சந்தேகமில்லாமல் நடத்தலா

மென்று உத்தரம் கொடுத்தார்கள்.

அந்தப்படி சம்ஸ்தானத்திய வித்வான்களை அனுப்பி ராஜராஜேசுவரி மூர்த்தியின் கலாகர்ஷணம் செய்வித்து வேதோக்தவிதானப்படி ஸ்ரீசக்கிர யந்திரத்தை ஸ்தாபித்து ராஜராஜேசுவரீ அம்மனுக்கு சாபிரதிஷ்டை செய்வித்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தாம் விஜயம் செய்து, பூஜை செய்து இந்த தேவாலயத்தை அரண்மனை ஆவரணத்திலிருந்து வேறுபடுத்தி, வேறு ஆவரணம் கல்பித்து இந்த அம்மன் நித்ய பூஜாதிகள் ஸ்திரமாக நடப்பதற்காக அந்த ராஜரால் (12000) பன்னிரண்டாயிரம் ரூபாய் வருமானமுள்ள ஒரு கிராமத்தை அம்மன் தேவாலயத்திற்காக தானமாகக் கொடுப்பித்து, ஸ்ரீசம்ஸ்தானத்திலிருந்தே அவ்விடத்திய பூஜைக்காக 2 பிராம்மணர்களை நியாமகம் செய்து ராஜருக்கும் பிரஜைகளுக்கும் அனுக்கிரஹம் செய்ததுமல்லாமல் வைதிக மார்க்கத்தையும் ஸ்தாபனம் செய்தார்கள்.

ராமநாதபுரம் பாஸ்கர சேதுபதி ராஜா வெகு மேதாவியாயிருந்தார். இவருடைய கொடை, எங்கும் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. இவர் தம்முடைய திரவியங்களை எல்லாம் தர்ம மார்க்கத்திலேயே முக்காலே மூணுவீசமும் செலவு செய்தாரென்று தாராளமாய் சொல்லலாம். இந்த ராஜருக்கு ஸஹஜமாயிருந்த உதாரதைக்கு இவருக்கிருந்த வருமானம் போதாததாயிருந்தது. இந்தக் காரணத்தால் வராளமாய்க் கடன் செய்தவராய் பாம்பரையாய் வந்திருந்த தன் ராஜ்யத்

தைப் பிந்தி வரப்போகிற தன் பிரதிநிதிகளுக்கு நிற்கும்படி செய்கிறுரென்ற ஸம்பவம், அந்தக் காலத்தில் தோன்றும்படியாயிருக்கவில்லே. இந்த சந்தர்ப்பத்தை அநேகர் முகத்திலிருந்து ஸ்ரீஸ்வாமிகள் அறிந்து சேது ராஜ்யம் புராதானமானது, அதை நிற்கும்படி செய்வது தமக்கு அவசிய காரியமென்று நிச்சயித்துக் கொண்டார்கள். ஒருநாள் பாஸ்கர சேதுபதிகள் தம் தர்சனத்திற்கு வந்தகாலத்தில் அவர் தமக்குச்செய்த சத்காரங்களினுலும் தம் விஷயத்தில் ராஜர் செய்து வருகிற பக்தியினுலும் சந்துஷ்டராக இருப்பதாயும், ஔதார்ய விஷயத்தில் கர்ணனிடத்திலிருந்ததாக பாரதத்தில் சொல்லியிருப்பதைக் காட்டிலும் எந்த பாகத்திலும் உம்மிடத்திலுள்ள ஔதார்யம் குறைந்திருப்பதாகத் தெரியவில்லேயாகையால் இப்பேர்ப்பட்ட உதாரசிலரான உம்மிடத்தில் எந்த வஸ்துவையும் அபேக்ஷிப்பதற்கு சங்கோசப்படவேண்டிய ஆவசியகமில்லே என்று தோன்றுவதால் நமக்கு குருதக்ஷிணேயாக உங்கள் ராஜ்யத்தைக் கொடுக்கவேண்டுமென்று ஸ்வாமிகள் அவர்கள் கேட்டார்கள். இந்தப் பிரகாரம் அவர்களிடமிருந்து வந்த ஆக்ஞையைக் கேட்ட அந்த ராஜனுடைய சந்தோஷத்திற்கும் ஆச்சிரியத்திற்கும் கரையில்லாமலாய்விட, அப்போது உடனே எழுந்து அவர்கள் ஆக்ஞையை அனுசரித்து தன் ஆதினத்திலிருக்கும் தேசத்தை அவர்களுக்கு குருதக்ஷிணேயாக சமர்ப்பணம் செய்திருக்கிறேன், என்று

சொல்லி இந்த மகாதீர புருஷனான ராஜன் நமஸ்காரம் செய்தான். மறுதினம் ராஜா அரண்மனையில் அவர் பிரஜைகளையும் அவர் அதிகாரிகளையும் சேர்க்கும்படி ராஜருக்குத் தெரிவித்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் பரிவாரங்களுடன் அரண்மனைக்கு விஜயம் செய்து அங்கு கூடியிருந்த சபையில் ராஜகுமாரரை வரவழைத்துக் கொண்டு குருதக்ஷிணையாக தம் சிஷ்யரான பாஸ்கர ஸேதுபதிகளால் தமக்கு ஸமர்ப்பணம் செய்யப்பட்ட ராமநாதபுர ராஜ்யத்தை அவர் குமாரரான ராஜராஜேசுவர முத்துராமலிங்க ஸேதுபதிகளுக்கு அனுக்கிரஹ பூர்வமாகக் கொடுத்திருப்பதாக அவர்கள் தெரிவித்தார்கள். இந்த சம்விதானத்தை அறிந்த ஆபாலவிருத்தரும் அன்று தினம் அனுபவித்த சந்தோஷத்தையும், லோகஹிதத்தை மாத்திரம் எதிர்பார்த்திருக்கும் ஸ்ரீ ஸ்வாமிகளவர்களையும் மற்றும் அபூர்வமான மனோநிச்சயமுள்ள ராஜனையும் ஸ்தோத்திரம் செய்த ரீதியை இங்கு விவரிப்பதற்கு சாத்தியமில்லை.

இந்தப் பிரகாரம் சேது ராஜ்யத்தை உத்தாரணம் செய்து பாஸ்கர சேதுபதி ராஜரால் செய்யப்பட்ட அதி நிர்ப்பந்தத்திற்கு உள்பட்டு அவர் குடும்ப க்ஷேமார்த்தமாக ஸ்ரீசாரதா சந்திரமௌளீச்வர தேவதாபூஜா ஆராதனாதிகளுக்கு உபயோகமாகும்படி ராஜனால் தானசாஸனமூலமாய் கொடுக்கப்பட்ட ஐந்து கிராமங்களை அங்கீகரித்து பாஸ்கர சேதுபதிகளுக்கு ரத்னமயமான சிரோபூஷணத்தை ஸம்ஸ்தானத்திலி

ருந்து சேர்ப்பித்து அந்த ராஜருக்கும் ராஜ குடும்பத்தாருக்கும் பரம அனுக்கிரஹம் செய்து அங்கிருந்து பிரயாணமானார்கள்.

மதுரை ராமனாதபுரம் ஜில்லாக்களில் நாட்டுக்கோட்டை செட்டிகளென்ற பெயரால் ஒருவகையார் இருக்கிறார்கள். இந்த ஜனங்கள் விசேஷமாக வியாபாரங்கள் நடத்துவது மூலமாய் ரொம்ப தனிகர்களாயிருக்கிறார்கள். தக்ஷிண தேசத்தில் உள்ள புராண பிரசித்தமான சிவாலயங்களில் ஜீர்ணோத்தாரணம் செய்வது, வேதபாடசாலைகள் வைத்து பிராமண வித்யார்த்திகளுக்கு அன்னவஸ்திரங்கள் கொடுத்து வேதாத்யயனம் செய்விப்பது, அன்னசத்திரங்களை பெரிய பெரிய க்ஷேத்திரங்களில் வைத்து அன்னதானம் செய்வது, தடாகங்களை நிர்மாணம செய்வது, முதலான பூர்வீக தர்மங்களை தனித்தனியாகவும் சமுதாய ரூபமாயும் செய்வது இந்த ஜனங்களிடத்தில் சகஜமாக ஏற்பட்டு அந்தப்படி மிகவும் விசேஷமாக ஆசரணையில் கொண்டு வரப்பட்டிருக்கிறது. இந்த வகையில் சேர்ந்த ஜனங்களிலேயே விரக்தரான ஒருவரைத் தெரிந்தெடுத்து கோவிலூர் என்ற ஸ்தலத்தில் முன்னோர்களால் ஸ்தாபிக்கப்பட்ட மடாதிபத்தியத்திற்காக நியமித்து அந்த மடத்தில் இந்த பரதேசி அங்கே வரக்கூடிய ஜனங்களுக்கு பாஷாந்தரத்தில் மொழிபெயர்த்திருக்கிற அத்வைதக் கிரந்தங்களை பாடம் சொல்லும்படி ஒரு ஏற்பாடு வெகுகாலமிருந்து ஏற்பட்டு நடந்து வந்து

கொண்டிருக்கிறது.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ராமநாதபுரத்தில் வாசம் செய்யும் காலத்திலேயே கோவிலூர் மடத்திய பரதேசியை அவர்கள் சன்னதிக்கு அனுப்பி அவர் மூலமாய் அவர்கள் சவாரி தம் பிராந்தியத்திற்கு விஜயம் செய்து தங்களுடைய சத்காரத்தை ஏற்றுக்கொண்டு அனுக்கிரஹம் செய்கிறதற்காக நாட்டுக்கோட்டை செட்டிகளால் பிரார்த்திக்கப்பட்டு அந்தப் பிரதேசத்திற்கு விஜயம் செய்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்களை வெகு ஆதரவுடன் தங்கள் கிராமங்களுக்கு வரவேற்றுக்கொண்டு அந்தந்த ஜனங்களுடைய விபவத்திற்குத் தக்கபடி ஸ்ரீஸ்வாமிகள் சேவையை நடத்தி அவர்களுடைய அனுக்கிரஹத்திற்கு பாத்திரர்களானார்கள். இந்த சந்தர்ப்பத்தில் சிருங்கேரியில் ஸ்ரீசாரதாம்பாள் தேவஸ்தானத்தை சிலாமயமாக செய்யும் ஆலோசனை வந்து நாட்டுக்கோட்டை செட்டிகள் சமூகத்திலிருந்து இந்தக் காரியம் நிறைவேற்றத் தக்கதென்று தீர்மானம் செய்துகொண்டு உத்தேசமாய் சமூகமாய் (பொதுவாக) முப்பதினாயிரம் ரூபாய் சேர்த்து கோவிலூர் மடத்திய ஸ்வாமிகள் வசத்தில் அந்த திரவியத்தைக் கொடுத்து அவர் மூலமாய் அம்பாள் தேவஸ்தானத்தின் காரியங்களை நடத்துவதற்கு சுவாமிகளின் அனுமதிக்காக பிரார்த்தித்துக்கொண்டார். இந்த ஜனங்களுடைய உத்தமமான சங்கல்பத்தை அறிந்து ஆனந்தித்து ஈசுவர சங்கல்பம் உங்கள் பக்கத்து ஜனங்கள் மூலமாக

வே சாரதாம்பாள் தேவாலய ஜீர்ணோத்தாரணம் நடக்கக்கூடியதாக இருக்கும்பக்ஷத்தில் அந்தப்படியே நடக்கலாமென்று அனுமதி கொடுத்தார்கள்.

சிருங்கேரி மடத்திய குரு பரம்பரையிலுள்ளவர்களுக்கும் மைசூர் மகாராஜர் சந்ததியாயிருக்கும் பரஸ்பரம் ப்ரீதிகௌரவங்கள் விசேஷமாயிருப்பதாக அநேக சந்தர்ப்பங்களினால் தெரிந்து வந்திருக்கிறது.

समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।

என்ற பகவத் வாக்கியப்படி ஸர்வஸமரான சிருங்கேரி ஸ்வாமிகள் அவர்களுக்கு மைசூர் மகாராஜா சந்ததியவர்களின் விஷயத்தில் மாத்திரம் இதர ஜனங்களிடத்திலிருப்பதைவிட அதிக ப்ரீதி இருப்பதைக்குறித்து இதரர் சந்தேகிக்கலாமல்லவா ? இதற்கு காரணத்தை விசாரித்தால சிருங்கேரி வியாக்கியான பத்திரபீடத்தில் இதற்கு சுமார் அறுநூறு வருஷங்களுக்குமுன் பட்டபத்ராராயிருந்த வித்யாரண்ய சுவாமிகளால் விஜயநகரசம்ஸ்தானம் ஸ்தாபிக்கப்பட்டு அவ்விடத்திய ராஜர்கள் வித்யாரண்யஸ்வாமிகளின் பரமானுக்கிரஹத்திற்கு பாத்திராகி ஒரு காலத்தில் சக்கரவர்த்திகளாக இருந்துகொண்டிருந்தார்களென்ற விஷயம் மூந்திய சரித்திரங்களால் ஜனங்கள் ஞாபகத்திற்கு வரலாம். அப்படி வித்யாரண்ய சுவாமிகளவர்கள் அனுக்கிரஹத்தினால் சம்பாதிக்கப்பட்ட கர்னாடக ராஜ்யத்தை தர்மமாக பரிபாலனம் செய்து வந்த விஜயநகரத்திய

ராஜர்கள் தர்மமார்க்க பரிபாலனத்திற்காக ஏற்பட்ட சிருங்கேரி மடத்திய குருக்கள் விஷயத்தில் அதிக மான பக்தி விசுவாசங்களைக் காண்பித்துக்கொண்டு ஸ்ரீசுவாமிகளவர்கள் செய்யும் தர்மமார்க்க பிரசாரத்தில் சகாயமாக இருந்ததாக தெரிந்து வருகிறது. காலக்கிரமத்தில் விஜயநகர சம்ஸ்தானம் சிதிலமாய்ப்போன பிறகு; அவ்விடத்திய கர்னாடக சிம்மாசனம் மைசூர் மகாராஜ சந்ததியாரின் ஸ்வாதீனத்திற்கு வந்து மைசூர் ராஜ சந்ததியார் கர்னாடக சிம்மாசனாரூடராகி கர்னாடகராஜ்யத்தை பரிபாலனம் செய்யக்கூடிய சந்தர்ப்பம் நேர்ந்து வந்தது. மஹனீயரான வித்யாரண்ய சுவாமிகளவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட கர்னாடக சிம்மாசனாதிபதிகளான மைசூர் ராஜ சந்ததியார் முந்திய விஜயநகரத்திய ராஜர்கள் போலவே சிருங்கேரிமடத்திய குருக்கள் விஷயத்தில் விசேஷமான பக்திகௌரவங்கள் வைத்து சுவாமிகளவர்களுக்கு தர்மமார்க்க பிரசாரம் செய்கிற விஷயத்தில் சகாயராக இருக்கிறார்கள். இந்த காரணத்தினால் உண்டாயிருக்கிற அனுராகம் ஸர்வஸமர்களான குருக்களிடத்தில் பக்ஷபாத ரூபமான தோஷத்தை ஆரோபணம் செய்வதற்கு சாமர்த்தியமுள்ளதாகமாட்டாது. பகவத் கீதையில் ஸர்வஸமனென்றும் தனக்கு ப்ரியனும் த்வேஷ்யனுமில்லை என்றும் சொன்ன பகவான்,

अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।
तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥

என்று சொல்லியிருப்பதினால் முன் சொன்னதற்கும் பின்பு சொன்னதற்கும் உள்ள விரோதத்தை பரி ஹாரம் செய்வதற்காக அநந்யபாவத்துடன் தன்னை சிந்திக்கிறவர்கள் விஷயத்தில் அவர்களை சம்பந்தித்த யோகக்ஷேமத்தை தான் வஹிக்காமலிருந்தால் தனக்கு நைர்க்கிருண்யம் ஏற்படுவதாகையால் பகவான் அந்தப்படி சொல்லியிருப்பது யுக்தமானதென்று அர்த்தம் செய்திருக்கிறபடி தம் விஷயத்திலும் எப்போதும் ப்ரீதிகௌரவங்களை வைத்து தம் சம்பந்தமான, என்றால் தமக்கு கர்த்தவியம் என்று குரு ஆக்ஞானுசாரமாக ஏற்பட்டுள்ள காரியங்களில், சகாயர்களாயிருக்கப்பட்ட மைசூர் ராஜ சந்ததியாரின் க்ஷேமத்தைக் கோருவதிலும் அவர்களுக்கு அனுக்கிரஹம் செய்வதிலும் சிருங்கேரி குருக்கள் அது தமக்கு ஒரு அவசிய கர்த்தவியமான கார்யமென்று கட்டுப்பட்டவராயிருந்ததினால் இந்த விஷயத்தில் சந்தேகத்திற்கு இடமில்லை. இந்த விசாரம் இங்கே செய்வதற்கு ஒரு சந்தர்ப்பம். இந்த கிரந்தத்திற்கு விஷயமான ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காலத்தில் சேர்ந்ததை இந்த லேககன் பார்த்து அனுபவித்தான். அந்த காலத்தில் இதை ஆலோசனம் செய்து தனக்கும் இதாருக்கும் உண்டான சங்கையை பரிகாரம் செய்துகொண்டதினால் அதைக்குறித்து பிரஸ்தாபிக்கவேண்டிவந்தது.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் கோவிலூரில் வாசம் செய்திருக்கும் காலத்தில் அவர்களுக்கு அந்தரங்க பக்தரா

யும் அவர்கள் பரமானுக்கிரஹத்திற்கு பாத்திராயு மிருந்த மைசூர் சாமராஜ பிரபு அவர்கள் திடீரென்று கல்கத்தாப் பட்டணத்தில் தைவாதீனராஞர்களென்ற விஷயம் பாஸ்கர சேதுபதி ராஜஞல் அனுப்பப்பட்ட தந்தியால் தெரியவந்தது. இந்த சங்கதி காலையில் ஸ்நானம் செய்து தம கர்மானுஷ்டனத்திலிருந்த ஸ்ரீ ஸ்வாமிகளவர்களுக்கு இந்த லேககன் தெரியப்படுத்தினுன். இந்த கர்ணகடூரமான சமாசாரத்தைக் கேட்டவுடன் அவர்கள் முககமலம் தக்ஷணமே வாடிப் போனதாகக்கண்டது. கண்களிலிருந்து அதிக உஷ்ணமான ஜலபிந்துக்கள் முத்துமுத்தாய் சொரிந்து கீழே விழவாரம்பித்தது. தலை நிலத்தில் படும்படி குனிந்தது. இந்த விதமாய் அவர்களுக்கு உண்டான விகாரபாவத்தைக் கண்டவர்களுக்கு அதிக ஆச்சரியமும், தன் வியோகத்தினுல் அபிமான சூன்யரான இப்படிப்பட்ட மகானுபாவரைக்கூட விகாரமடையும்படி அவர்கள் ப்ரீதிக்கு பாத்திராயிருந்த சாமராஜ பிரபுக்கள் விஷயத்தில் விசேஷமான கௌரவமுமுண்டாயிற்று. காலை 8-மணிமுதல் சாயங்காலம் 8-மணி வரையில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் ஆஸனத்தைவிட்டு அசையவில்லை. அன்று நடக்கவேண்டிய பூஜாதிகளையும் கவனிக்கவில்லை. மடத்தில் தீர்த்தப் பிரசாதத்துக்கு வந்த இதர சிஷ்யர்களையும் விசாரிக்கவில்லை. மகா பக்த சிகாமணிகளான சாமராஜ பிரபுக்களின் வியோக விஷயமாகவே அவர்கள் சித்தம் பதிந்திருந்தது. பிறகு ராத்திரி 8

மணிக்குமேல் ஸ்நானமாகி அன்று அநுஷ்டானங்க ளெல்லாம் நடந்து சந்திரமௌளீசுவர ஸ்வாமி பூஜை 12-மணிக்கு முடிக்கப்பட்டது. எவ்வளவு ஞானிகளா னாலும் அஸங்கரானாலும் அபிமானம் தப்பிப்போகிற தில்லை. ஞானிகளுக்கு இந்த அபிமானம் ஸ்வார்த்த மாக வரக்கூடியதல்லவாகையால் அவர்களுக்கு பந்த ஹேதுவாகிறதில்லை. அக்ஞானிகளுக்கு இந்த அபி மானமே முக்கியமான பந்தஹேதுவாகி சம்சாரத்தை அதிகரிக்கச் செய்கிறது.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சிருங்கேரியை விட்டு சேது யாத்திரைக்காக பிரயாணப்பட்டு அதுவரையில் நாலு வருஷம் ஆகிறது. சங்கல்பித்த சேதுயாத்திரையும் பூர்த்தி ஆய்விட்டது. இந்த சந்தர்ப்பத்தில் ஸ்தலத் திற்கு திரும்பி வரவேண்டுமென்ற விஷயத்தில் கவன முண்டாயிற்று. அதற்குள் தாம்பிரபாணீ தீரவாசிக ளான சிஷ்ய ஜனங்களுக்கு ஸ்ரீஸ்வாமிகள் சவாரி தங் கள் பிராந்தியத்திற்கு விஜயம் செய்யாமல் திரும்புகிற தென்ற சங்கதி தெரியவந்தது. அந்தப் பிரதேசத்தில் முக்கியரான சிலர் மதுரை ஜில்லாவில் ஸ்ரீஸ்வாமிகள் சஞ்சரித்துக்கொண்டிருக்கும் காலத்திலேயே வந்து திருநெல்வேலி ஜில்லாவில் பிரவேசம் செய்து அங் குள்ள சிஷ்ய மண்டலிகளுக்கும் தர்சனம் கொடுத்து அனந்தரம் ஸ்தலத்திற்கு விஜயம் செய்யவேண்டு மென்று பிரார்த்தனை செய்துகொண்டார்கள். பக்த பராதீனர்களான ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சிஷ்யர்களின்

பிரார்த்தனையை நிராகரிக்கும்படி இல்லாததினால் அவர்கள் பிரார்த்தனையை அங்கீகரித்துக்கொண்டு திருநெல்வேலிக்கு வருவதாயும் நீண்டகாலம் அந்தப் பிராந்தியத்தில் சஞ்சாரம் செய்வதற்கு அவகாசமில்லையாகையால் அந்த ஜில்லாவிலுள்ள சிஷ்யர்களெல்லாரும் திருநெல்வேலிக்கு வந்து ஸ்ரீமத் சாரதா சந்திரமௌளீசுவராதி தேவதா தர்சனம் செய்து தீர்த்தப் பிரசாதங்களை ஸ்வீகரித்துக்கொள்ளும்படி ஏற்பாடு செய்தால் அனுகூலமாயிருக்குமென்றும் தம்மிடத்திற்கு வந்திருந்த திருநெல்வேலி பிராந்தத்திய சிஷ்யர்களுக்கு உத்தரவு செய்து பிறகு திரும்பி மதுரை மார்க்கமாக திருநெல்வேலி ஜில்லாவில் பிரவேசம் செய்தார்கள்.

திருநெல்வேலி போய் சேரும்வரை மார்க்கத்திலிருக்கும் கிராமங்களில் அங்கங்கு நின்று சிஷ்ய ஜனங்களுக்கு அனுக்கிரஹம் செய்துகொண்டு ஜய வருஷம் மாகபகுளதுவிதியையில் திருநெல்வேலியில் பிரவேசம் செய்வதற்காக டவுனுக்கு 2 மைல் தூரத்தில் தாம்பிரபாணீநதிதீரத்தில் இருக்கும் சந்தியாமண்டபத்திற்கு விஜயம் செய்தார்கள்.

அவ்விடத்தில் ஸ்நானம், காலை அனுஷ்டானம் முதலியது முடிந்தவுடன் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தர்சனத்திற்காக வந்து காத்துக்கொண்டிருந்த அநேகாயிரம் பேர் பிராம்மணர்களுக்கு தர்சனம் கொடுத்து அவர்கள் பிரார்த்தனைப்படி நதீ தீரத்திலேயே சுவர்ணபல்லக்கில் ஆரோஹணம் செய்தார்கள். இந்த

தாம்பிரபர்ணி தீரமான திருநல்வேலி ஜில்லாவில் பிரா ம்மணசமூகம் கொஞ்சம் அதிகமாயுண்டு. அநேகமாய் தாம்பிரபர்ணீ நதியினுடைய ஆனுகூலியம் அதிகமா யிருப்பதினால் ஜனங்கள் கூடியவரையிலும் தனிகரா கவே இருக்கிறார்கள். ஸ்ரீஸ்வாமிகளின் சவாரி அந்த பிராந்தியத்தில் சாவகாசமாக சஞ்சரிப்பதில்லை என்ற சங்கதி முந்தியே தெரிந்திருந்ததினால் அந்த ஜில்லா வைச்சேர்ந்த அநேகக்கிராமத்திய ஜனங்கள் ஒரேகால த்தில் திருநெல்வேலியிலேயே ஸ்ரீஸ்வாமிகள் தர்சன த்திற்காக சேர்ந்து இருந்ததினாலும் அந்த தினத்தில் சேர்ந்த பிராம்மண ஸமூஹம் அதிகமாகவே இருந் தது. பார்ப்பதற்கு மிகவும் ஆச்சரியமாயும் ஆனந்த காமாயும் இருந்தது. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சிவிகை யில் ஆரோஹணம் செய்தவுடன் அநேகப் பிராம்ம ணர்கள் வேஷ்டிகளை இடுப்பில் கட்டிக்கொண்டு பல்ல க்கை தங்கள் தோள்களில் தூக்கவாரம்பித்தார்கள். அதுவரையில் இந்தப் பிரகாரம் நடந்தது எந்த ஜில் லாவிலும் கண்டதில்லை. வாத்தியகோஷங்களுடனும் வேதகோஷங்களுடனும் மங்களார்த்திகளுடனும் ஆ பாலவிருத்தர்களும் மிகுந்த உத்ஸாஹத்துடனும் சந் தோஷத்துடனும் எல்லா பிராம்மண அக்ரஹாரங்க ளிலும் ராஜவீதிகளிலும் உத்ஸவம் நடத்தி சாலிவாடீ ச்வர தேவஸ்தானத்தில் வஸதி செய்வித்தார்கள்.

திருநெல்வேலியில் சிலகாலம் வாசம் செய்து அங்குள்ளவர்களுக்கும் அந்த ஜில்லாவிலுள்ள மற்ற

கிராமங்களிலிருந்து வந்த சிஷியர்களுக்கும் தேவதா தர்சனம் தீர்த்தப்பிரசாதங்களாலும ஸதுபதேசங்களி ளுலும் அனுக்கிரஹம் செய்து தாம்பிரபர்ணீ நதி மூல மான பாண தீர்த்தமென்ற ஸ்தலத்தைக்குறித்துப்பிர யாணமானார்கள். இந்த ஸ்தலம் அதிக ரமணீயமாகி யும் விசாலமாயுமுள்ளது. இந்த ஸ்தலத்தில் மூன்று நாள் வாசம் செய்தார்கள். தாம்ரபர்ணீ நதி மூலமான பர்வதம் சிங்கம்பட்டி ஜமீன்தாரின் ஜமீனுக்கு சேர்ந்த தாயிருந்ததினுல் ஸ்வாமிகளவர்கள் வஸதிக்குவேண் டிய அனுகூலங்கள் ஜமீன்தாரால் செய்யப்பட்டன. ஸ்வாமிகளவர்கள் விஜயம் செய்திருந்த காலத்தில் ஜமீன்தாருக்கு சந்தானம் இருக்கவில்லை. அவரால் செய்யப்பட்ட பக்திக்கும் ஸத்காரத்திற்கும் சந்தோ ஷமடைந்த ஸ்வாமிகள் அவருக்கு தீர்த்தபதி என்னும் பிருது கொடுத்து புத்திர சந்தானம் சீக்கிரத்திலுண் டாகுமென்று அனுக்கிரஹித்தார்கள்.

ऋषीणां पुनराद्यानां वाचमर्थोऽनुधावति ।

என்ற பிரமாணப்படி மகானுபாவரால் செய்யப்பட்ட அனுக்கிரஹத்திற்கு பலன் ஜமீன்தாருக்கு கிடைத் தது. அவர் அதை அனுபவித்துக்கொண்டிருக்கிறுர். இந்தப்பிரகாரம் நாற்பது தினம் மாத்திரம் திருநெல் வேலி ஜில்லாவில் சஞ்சரித்து செய்யவேண்டிய காரி யங்களில் பாக்கியாயிருந்த அய்யம்பாளையம் தண்டா யுதபாணி பிரதிஷ்டையை பூர்த்தி செய்வதற்காக அய்யம்பாளையத்திற்கு விஜயம் செய்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆரம்பித்திருந்த தேவால யத்தை சிலகாலத்திலேயே சிலாமயமாய் நிர்மாணம் செய்வித்து தேவதாப்பிரதிஷ்டைக்காக சித்தப்படுத்திக்கொண்டிருந்த தாண்டவராயபிள்ளையின் ஸாஹஸத்திற்கும் அவர் உத்ஸாஹத்திற்கும் ஸ்ரீஸ்வாமிகள் அதிக ஆச்சரியமடைந்தார்கள். பிரதிஷ்டைக்கு உபயோகமுள்ள எல்லா சாமான்களும் அந்த கிருஹஸ்தனால் தயாரிக்கப்பட்டிருந்தது. மன்மத வருஷம் சைத்திரபகுள தசமி சுக்கிரவாரம் ஸுமுகூர்த்தத்தில் தண்டாயுத சுப்பிரமணிய ஸ்வாமி, பிரசன்ன பார்வதீ சமேத பிரசன்ன பரமேசுவர ஸ்வாமி, ஸ்ரீநிவாச மூர்த்தி பிரதிஷ்டை ஸ்ரீஸ்வாமிகளவர்களின் ஆக்ஞையினால் நியமிக்கப்பட்ட பண்டிதர்களாலும் வேதாத்யயன சம்பன்னரான பிராம்மணர்களாலும் நடத்தப்பட்டது. ஸ்ரீஸ்வாமிகள் பிரதிஷ்டாந்தரம் தேவாலயத்திற்கு விஜயம் செய்து மூர்த்தியில் கலாவாஹனம் செய்து கலாசான்னித்யத்திற்கு உபயோகியான அநேகமகாமந்திரங்களால் மூர்த்தியை அபிமந்திரணம் செய்து யதாசாவகாசமாய் மகாபூஜையை ஸ்ரீஸ்வாமிகள் ஸ்வயமாகவே செய்து அன்று அங்கே சேர்ந்திருந்த எல்லா சிஷியர்களுக்கும் தீர்த்த பிரசாதங்கள் கொடுத்து அனுக்கிரஹித்தார்கள்.

பரம பக்தரான தாண்டவராயபிள்ளை அவர்களின் பிரார்த்தனையை அனுசரித்து அகண்டகாவேரீதீரத்தில் லோகஹிதார்த்தமாய் ஸ்ரீஸ்வாமிகளவர்களை

ஆரம்பம் செய்து தேவாலய நிர்மாணம் செய்வித்து தேவதா பிரதிஷ்டையும் விதிப்படி செய்வித்து விசேஷமாக தேவதா ஸான்னித்யம் அந்த மூர்த்திகளில் இருப்பதற்காக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஸ்வயம் அர்ச்சனைசெய்து நித்ய பூஜை ஆராதனை முதலிய கிரமங்களும் அவர்களாலேயே ஏற்படுத்தப்பட்டதாயிருப்பதினால் இந்த தேவாலயம் அது முதல் இதுவரை அநேக மண்டபங்களாலும் பிராகாரங்களாலும் கோபுரங்களாலும் விருத்தி செய்யப்பட்டு இருப்பதுமல்லாமல் விசேஷமான ரத்னாபரணங்களும் ஸ்வர்ணாபரணங்களும் கூட ஸ்வாமி உபயோகத்திற்காக சேகரிக்கப்பட்டு தாண்டவராயபிள்ளையாலும் அவருக்குப்பின் அவர் குமாரர்களாலும் நித்ய நைமித்திகாதி அநேக உத்ஸவங்கள் விசேஷமாக நடத்தப்பட்டு வருவதினால் மிகுந்த உன்னத ஸ்திதியிலிருந்து வருகிறது.

முன் பிரஸ்தாபித்த பிரகாரம் சிருங்கேரி சேர வேண்டுமென்ற குதூஹலம் அதிகரித்து வந்ததினால் சேலம் ஜில்லாவிற்கு வந்து கணவாய் ஏரி ஒசூர் ஆனேக்கல் மார்க்கமாக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பங்களூர் பட்டணத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்த சந்தர்ப்பத்தில் பங்களூருக்கு வருகிற உத்தேசமிருக்கவில்லை. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆனேக்கல்லில் வாசம் செய்யும் காலத்தில் பங்களூரிலுள்ள அநேகம் சிஷ்ய மண்டலிகள் அவர்களின் தர்சனம் பங்களூரில் தங்களுக்கு கிடைக்க வேண்டுமென்றும் சம்ஸ்தானத்தில் சவாரி

பங்களூருக்கு விஜயம் செய்து அநேக வருஷங்களாயிருப்பதாயும் மைசூர் சம்ஸ்தானத்திற்கு நேத்திரம் போலுள்ள பங்களூர் பட்டணத்திற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஜயம் செய்து அந்த பட்டணத்தையும் அதிலுள்ள ஜனங்களையும் அனுக்கிரஹித்து மேல் பிரயாணம் நடத்த வேண்டுமென்று விக்ஞாபனபத்திர மூலமாய் தெரிவித்துக்கொண்டார்கள்.

சமீபகாலத்தில் உண்டாயிருந்த ஸ்ரீசாமராஜ பிரபுக்களின் வியோகதுக்கம் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பங்களூர் வருவதைத்தடுத்துக்கொண்டிருந்தாலும் அந்த பிரபுக்களின் முக்கிய மந்திரி முதலானவர்களைப்பார்த்து அவர்கள் மூலமாக வயது வராமலிருக்கும் பிரபுக்களின் யோகக்ஷேமங்களை விசாரித்து ராஜபரிவாரத்திற்கு தத்காலோசிதமான ஸதுபதேசங்களினால் சமாதானம் சொல்லி மேல் புறப்படவேண்டியது அவசியமென்று சுவாமிகளவர்கள் யோசித்திருந்ததினால் பங்களூர் மார்க்கமாய் பிரயாணம் செய்யவேண்டுமென்று நிச்சயம் செய்து பங்களூருக்கு விஜயம் செய்தார்கள்.

அப்போது மைசூர் சம்ஸ்தானத்தில் திவான் ஆக விருந்த ஸர். கே. சேஷாத்திரி அய்யர் அவர்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பங்களூருக்கு விஜயம் செய்யும் சங்கதியை அறிந்து முந்தி பிரிட்டிஷ்சர்க்கார் மூலமாய் மைசூர் ராஜாங்கம் நடத்தப்பட்டு வந்த காலத்தில் முந்திய நரசிம்ம பாரதீஸ்வாமிகள் அவர்கள் பங்களூருக்கு

விஜயம் செய்திருந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீமான் மைசூர் மகாராஜா மும்மடி கிருஷ்ணராஜ பிரபுக்களின் கோரிக்கைப்படி கம்மிஷனர் அவர்களால் நடத்தப்பட்டிருந்த மரியாதைகளின் சம்பந்தமான தஸ்தாவேஜுகளை தருவித்துப்பார்த்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பங்களூருக்கு விஜயம் செய்வதற்கு வேண்டிய அனுகூலங்களை ஏற்படுத்தி ஸகலவிதராஜமரியாதைகளுடன் அவர்களை வரவேற்றுக்கொண்டார்.

ஒருவாரம் பங்களூரில் வாசம் செய்து ராஜ மந்திரிகள் முதலான ராஜபரிவாரங்களில் முக்கியமானவர்களுக்கெல்லாம் தர்சனம் கொடுத்து ராஜகுடும்பத்தின் யோக க்ஷேமங்களை எல்லாம் விசாரித்து சாமராஜ பிரபுக்கள் விஷயத்தில் தமக்கு இருந்த ப்ரீதிக்கு அனுகுணமாக ராஜகுடும்பத்தாருக்கு தனக்காக தெரிவிக்க வேண்டிய சங்கதிகளைத் தெரிவிக்கும்படி சேஷாத்திரி அய்யரவர்களிடத்தில் தெரிவித்து அதிகாரிகளுக்கும் தத்காலத்திற்கு உசிதமான பிரிய வசனங்களால் சமாதானப்படுத்தினார்கள்

பின்னும் பங்களூரிலுள்ள சிஷ்ய மண்டலிகளுக்கெல்லாம் தர்சனம் கொடுத்து தீர்த்த பிரசாதங்களினால் அனுக்கிரகித்து அங்கிருந்து முன்னதாக தும்கூர் மார்க்கமாய் சிருங்கேரி சேர்வதற்கு நிச்சயித்தார்கள்.

இதற்குள் ரீஜண்டாயிருந்து ராஜ்யபாரத்தையும் வயது பிராப்தமாகாமலிருந்த ராஜகுமாரர்களையும் பாலனம் செய்துகொண்டிருந்த பரம விவேகசாலிகளான

சாமராஜ பிரபுக்களின் பட்டமஹிஷி வாணீ விலாஸ ஸன்னிதான கெம்பநஞ்சம்மண்ணியவர்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பங்களூரிலிருந்து தம் ராஜதானிக்கு விஜயம் செய்து அத்தியந்தம் துக்க சமுத்திரத்தில் மூழ்கியிருக்கும் தமக்கும் தம் புத்ரீபுத்ரர்களுக்கும் தர்சனம் கொடுத்து அளவில்லாத தம் துக்கம் சமனமடையும்படி ஸ்ரீஸ்வாமிகள் அவசியமான விவேகோபதேசத்தினால் அனுக்கிரஹித்து முன்னே பிரயாணம் செய்ய வேண்டுமென்று தம் மந்திரி மூலமாய் பிரார்த்தித்தார்கள்.

மகாராக்ஞீ அவர்கள் மிகுந்த சோகத்திலாழ்ந்த மனமுடையவராயிருந்தும் சகஜமாக அவர்களாடியிருந்த விவேகத்தை முன்னிட்டு அக்காலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் தர்சனத்தில் தமக்குண்டாயிருக்கும் ஆதரவை வெளியிட்ட விஷயத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சந்தோஷிக்கக் கூடியதாயிருந்தாலும் ராஜகுடும்பத்தாரிடத்தில் அவர்களுக்கு இருந்த ப்ரீதியினாலும் கருணையினாலும் பிரார்த்திக்கப்படாமலே மைசூர் வந்து, துக்கமடைந்திருக்கும் மகாராக்ஞீ அவர்களுக்கும் ராஜகுமாரர்களுக்கும் காலோசிதமான விவேகத்தை உபதேசிப்பதினாலும் சமாதானப்படுத்தி தைரியத்தை அடையும்படி அனுக்கிரஹம் செய்வது தாம் செய்ய வேண்டிய காரியங்களில் ஒன்று என்ற விஷயத்தை தெரிந்துகொண்டிருந்தாலும் சாமராஜ பிரபுக்களிடத்தில் ஸ்ரீஸ்வாமிகளுக்கு ஸ்வபாவமாகவே இருந்த ப்ரீதி

யினால் அவர் வியோகம் கேவலம் ஸஹிக்கமுடியாததா யிருந்து மகாராக்ஞீ அவர்களால் பிரார்த்திக்கப் பட்டவாயிருந்தாலும் மைசூருக்கு பிரயாணப்படும் விஷயத்தில் பின் வாங்கும்படி செய்துவிட்டது.

இந்த சந்தர்ப்பத்தில் மகாமேதாவிகளான சேஷாத்திரி அய்யாவர்களே ஸ்ரீஸ்வாமிகளை சமாதானப்படுத்தி அவர்கள் மைசூருக்கு பிரயாணம் செய்வதை அங்கீகரிக்கும்படி செய்யவேண்டி வந்தது.

பிறகு பங்களூரிலிருந்து பிரயாணம் செய்து மன்மத வருஷம் ஜேஷ்ட பகுள பஞ்சமீ புதவாரம் மைசூர் ராஜதானியில் பிரவேசம் செயதார்கள். பட்டணத்தில் பிரவேசம் செய்யும் காலத்திலும் அரண்மனைக்கு சமீபத்தில் வரக்கூடிய காலததிலும், எப்போதும் மந்தஹாஸத்துடன் சோபித்துக்கொண்டிருந்த ஸ்ரீஸ்வாமிகளுடைய முககமலம் அதிகமான விகாரத்தை அடைந்து பார்க்கிறவர்களின் மனம் கலங்கிப்போகும்படி செய்தது. அரண்மனை பெரிய வாசலில் விசுவாமித்திரமகரிஷியின் யாகசம்ரக்ஷணைக்காக தாய்தந்தைகளை விட்டு தனியாக அதிபாலிய வயஸஸில் போயிருந்த ராம லக்ஷ்மணர்களைப் போல் ஸ்ரீஸ்வாமிகள் வரவை எதிர்பார்த்துக்கொண்டிருந்த ராஜகுமாரர்களைப் பார்க்கவே ஸ்ரீஸ்வாமிகளுடைய மனோபாவம் எந்தவிதத்தில் பரிணாமத்தை அடைந்ததென்ற விஷயத்தை எவராலும் எவ்விதத்திலும் விவரித்துச் சொல்வது அசாத்தியம்.

அபிமானம் என்ற பந்தம் எப்படிப்பட்டவரையும் கட்டாமல் விடுவதில்லை என்ற விஷயம் முந்தியே சொல்லப்பட்டிருக்கிறது. ஆரண்மனைக்கு விஜயம் செய்து மகாராணி அவர்களுக்கும் ராஜபுத்திரர்களுக்கும் தர்சனம் கொடுத்து அநேகவிதமான தர்மோபதேசங்களினால் அவர்களை சமாதானப்படுத்தி தமக்காக சித்தப்படுத்தப்பட்டிருந்த ஸம்ஸ்கிருத பாடசாலையில் வஸதி செய்துகொண்டார்கள்.

மகாராக்ஞீ அவர்களுக்கு மந்திரோபதேசம் செய்து சிவபூஜை முதலான தர்மங்களை ஆசரிக்கும்படி அனுக்கிரஹித்து அங்கிருந்து பிரயாணம் செய்து பச்சிமவாஹினீ கிருஷ்ணராஜப்பேட்டை மார்க்கமாக தம் பரிவாரங்களுடன் ஆஷாட சுக்கில ஸப்தமி ஸ்திர வாரம் சிருங்கேரியில் பிரவேசம் செய்தார்கள்.





## 8-வது அத்தியாயம்.

## சிருங்கேரிவாஸமும் வேதாந்தப்ரவசனமும்.

ஸ்ரீசுவாமிகள் அவர்கள் சிருங்கேரிக்கு விஜயம் செய்து ஸ்ரீசாரதாம்பாள் தர்சனம் செய்யும் சமயத்தில் தம் கருணை என்ற அமிருதப்ரவாஹத்தில் ப்ரதிபிம்பமாகத்தோன்றியிருக்கிற மைசூர் சம்ஸ்தானத்திய இராஜகுமாரர்களுடைய சிரேயஸ்ஸை வெகுவிதமாக பிரார்த்தனை செய்து தாம் பிரார்த்தனை செய்யும் விதத்தை சுலோகரூபமாக ரசனம் செய்து அதை பிரதிதினமும் இராத்திரிகாலத்தில் ஸ்ரீசாரதாம்பாள் தீபாராதனையானபிறகு பிராம்மணர் மூலமாய் அம்மன் சன்னிதியில் சொல்லும்படி செய்து அந்த சமயத்தில் அங்கே சேரக்கூடிய எல்லா ஜனங்களும் இராஜகுமாரரின் சிரேயஸ்ஸைக் கோரும்படி ஏற்பாடு செய்தார்கள். அதிபாலியத்தில் பிதாவை விட்டுப் பிரிந்து வருந்தியிருக்கிற அந்த இராஜ குமாரர்கள் ஸ்ரீசுவாமிகள் மைசூர் இராஜதானிக்கு விஜயம் செய்திருந்த சந்தர்ப்பத்தில் அவர்களை தம் ராஜகிருஹத்திற்கு வர



மைசூர் மஹாராஜரும் யுவராஜரும்.

வேற்றுக்கொள்வதற்காக அரண்மனை பெரிய வாயில் எதிர்பார்த்துக் காத்துக்கொண்டிருந்ததைப் பார்த்தும் ஸ்ரீஸ்வாமிகளுக்குப் பரமகருணை உண்டாகி அது முதல் அவர்கள் மனதில் ஸ்திரமாக நிலைத்திருந்த மனோபாவத்தை எக்கவிதத்தில் வெளிப்படுத்தியிருக்கிறார் என்னும் விஷயத்தை அடியில் பதிப்பித்திருக்கும் ச்லோகங்களினால் கொஞ்சம் தெரிந்துகொள்ளலாம்.

## ஸ்ரீசாரதாஸ்துதி.

(பக்திஸுதாதரங்கிணீ பக்கம் 440.)

श्रीरामलक्ष्मणाविव सौहार्दं प्राप्य सुस्थिरं सुचिरम् ।
श्रीचामराजपुत्रौ जीयास्तां शारदाम्ब तव कृपया ॥ १ ॥
भारति संपद्भरितौ बुद्ध्या चैवातितीक्ष्णया पूर्णौ ।
आयुष्मन्तौ सुखिनौ भूयास्तां चामराजसुकुमारौ ॥ २ ॥
राज्याभिवृद्धिमतुलां प्रापय्याश्वेभपत्तिवृद्धिं च ।
पालय कमलजजाये चामक्षितिपालवर्यसुकुमारौ ॥ ३ ॥
गजतुरगवाहनस्थावपि रथमध्येषु सुस्थितौ वाणि ।
संरक्ष संततं बहुकरुणे श्रीचामराजसुकुमारौ ॥ ४ ॥
देवद्विजगुरुभक्तिं सुदृढां दत्वा च विनयसंपत्तिम् ।
पालय पद्मजमानिनि सततं श्रीचामराजसुकुमारौ ॥ ५ ॥
गिरिसानुषु गहनेष्वपि मार्गेष्वनिशं समस्तदेशेषु ।
सर्वापद्भ्यः पालय विधिभामिनि चामराजसुकुमारौ ॥ ६ ॥
वाक्पाटवमतिदृढतां नीरोगत्वं च वपुषि सुयशश्च ।
दत्वाब्जयोनिजाये कारुण्यात् पाहि चामनृपपुत्रौ ॥ ७ ॥
वश्यान् विधाय नृपतीन् दत्वा चैकातपत्रसाम्राज्यं ।

श्रीचक्रकृतनिवासे वाण्यव चामाम्बनीपसुकुमारौ ॥ ८ ॥
श्रीनाथमुखनिषेव्ये श्रीविद्यादानदक्षपदविनुते ।
श्रीशारदाम्ब पाहि श्रीमन्तौ चामराजसुकुमारौ ॥ ९ ॥
वाणितावककविलासप्रमुखौ पाणिनिर्जितपयोरुहगर्वौ ।
सामवेदनुतदिव्यचरित्रे चामभूपतनयौ परिपाहि ॥ १० ॥
यद्यस्ति मयि कृपा तव विनुता स्तुत्यानया गिरां देवि ।
शिष्याविमौ मदीयौ पाहि श्रीचामराजसुकुमारौ ॥ ११ ॥

ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் காலுவருஷகாலம் தேச சஞ்சாரம் செய்து காலமஹிமையினால் ஜனங்களுக்கு பிரதிக்ஷணத்திலும் பெருகிக்கொண்டுவருகிற அதர்ம மார்க்கபிரவிருத்தியையும், குறைந்துகொண்டுவருகிற வேதசாஸ்திரபிரசாரத்தையும், அபூர்வமாய்ப் போன வேதசாஸ்திர பிராமாண்யபுத்தியையும், மூர்த்திமத்தாய் வளர்ந்துவரும் அகங்காரம், மமகாரங்களையும், தங்குதடையில்லாமல் தமக்கு கேட்கும்படி நேர்ந்த அனுவசியகமான சந்தேகங்களையும், அதற்குத் தக்கபடியுள்ள அனுஷ்டானங்களையும், அநேகம்தடவைகளில் வெகுவிதமாய் பார்த்து, அப்படிப்பட்ட கெட்ட நடவடிக்கைகளால் உண்டாகிற தேச உபத்திரவத்தையும் ஜனங்களுக்குண்டாகும் கலக்கத்தையும் கண்டு, அவைகளைத் தடுப்பதற்காக தம்மால் செய்யப்பட்டநல்வழிக்கேற்ற உபதேசரூபமான பிரயத்தினம் பிரவாஹம் போல் மேன்மேலும் மோதிக்கொண்டு வந்துகொண்டிருக்கிற தர்மசத்ருக்களை அடக்குவதில் வல்லமையுள்ள பிரதிபந்தகமாகமாட்டாதென்ற விஷ

யத்தை நன்றுதெரிந்துகொண்டவருகி, மிகுந்த வருத்தமடைந்த மனதுடன் கூடியவராகக் காணப்பட்டார்கள். இவர்கள் சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தபிறகு, சுமார் 15-நாள்வரையிலும், அவர்கள் புத்தி, ஏதோ விகல்பமாயிருப்பதாகவே தோன்றிற்று. இந்த சமயத்தில் இவர்கள் யாரிடத்திலும் விசேஷமாக வார்த்தை சொல்லவில்லை. தம் எதிரில் வந்து நமஸ்காரம் செய்து நின்றுகொண்டிருந்தாலும் தாமாக வந்தவரை எவ்விதமான கேள்வியும் கேட்கிறதில்லை. ஸ்நானுதிகளான நித்ய கர்மானுஷ்டானங்களை சுருக்கமாய் நிறைவேற்றிக்கொண்டு எப்பொழுதும் தலையைக்குனிந்து கொண்டு சிந்தையுடன் ஏகாந்தத்தில் உட்கார்ந்து கொண்டிருப்பதே தவிர மற்ற எவ்விதமான வியவகாரத்தையும் கவனிக்கவில்லை. பலவந்தமாக சரீரயாத்திரைக்கு வேண்டிய உசிதமான ஆகாரசேவனத்தில் ஸ்ரீஸ்வாமிகளைப் பிரவிருத்திக்கும்படி இதரர் செய்ய வேண்டிவந்தது. அவர்களுக்கு இந்த ஜடாவஸ்தை வந்ததற்கு காரணத்தைத்தெளிவாகத் தெரிந்துகொள்ளுவதற்கு இடமில்லாமல், சமீபத்திலுள்ளவர்கள் விசேஷமாக கவலைப்படும்படியாக ஆய்விட்டது. பதினைந்து நாள் கழிந்தபிறகு அவர்களுடைய ஸ்திதி எவ்விதமான திருஷ்டமான பரிஹாரமில்லாமல் தானுகவே காணுமல் போய்விட்டது. இதற்கு அறிகுறியாக அவர்கள் இந்த கிரந்தகர்த்தாவை அழைத்து, உடனே வேதசாஸ்திர அபிவிருத்திக்காக ஸ்ரீசாரதாம்

பாள் சன்னிதானத்தில் ஒரு பாடசாலையை ஸ்தாபனம் செய்யவேண்டுமென்றும் ஸ்தலத்திலும் பரஸ்தலத்திலுமிருந்து வரப்பட்ட வித்தியார்த்திகளுடைய அன்னவஸ்திரங்களுக்கு அனுகூலமான ரீதியில் ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் ஆஜ்ஞாபனம் செய்தார்கள். அவர்கள் ஆஜ்ஞைப்படி உபாத்தியாயர்களையும் அத்தியயனம் செய்யத்தகுந்த ஸ்தலத்திய சில வித்தியார்த்திகளையும் கூட ஸங்கிரஹம் செய்து சாலிவாகன 1818 மன்மத வருஷம் சிராவண சுக்கில ஷஷ்டி சனிவாரம் ஸ்ரீசாரதாம்பாள் சன்னிதியில் விசேஷமாக பூஜாதிகள் நடத்தி அம்பாள் பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு "सद्वियासंजीविनी" என்ற பெயரில் ஒரு பாடசாலை ஸ்தாபிக்கப்பட்டு வேதசாஸ்திர அத்தியயனம் செய்விப்பதற்கு ஆரம்பம் செய்யப்பட்டது.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சாஸ்திராத்தியயனம் செய்து வியுத்பன்னராயிருந்த சில ஜனங்களுக்கு வேதாந்த சாஸ்திரபாடம் சொல்லுவதற்கு ஆரம்பித்து அதிக உத்ஸாகத்துடன் பிரம்மஸூத்ரம், உபநிஷத், கீதாபாஷ்யம் என்ற பிரஸ்தானத்ரயத்தையும் 3 வருஷ காலத்தில் ஒரு தடவை பூர்த்தியாக பாடம் சொன்னார்கள். இந்தக் காலத்தில் வேதசாஸ்திர கிரந்தங்களைப் பார்த்துவருவதும் பாடம் சொல்லுவதும் தவிர வேறே ஒரு காரியத்திலும் அவர்கள் காலயாபனம் செய்யவில்லை.

ஒரு சமயத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சிருங்கேரிக்கு விஜ



ஸ்ரீமஹாஸ்வாமிகளும் நான்கு சிஷ்யஸன்னியாஸிகளும்.

யம் செய்தவுடன் சில நாள் உண்டாயிருந்த அவர்களுடைய ஜாட்யாவஸ்தைக்கும் வித்யாபிரசார விஷயத்தில் இப்போது உண்டாகி பிரதி நிமிஷமும் அபிவிருத்தியடைந்துவருகிற உத்ஸாகத்திற்கும் காரணமென்னவென்று அவர்களிடம் இந்த கிரந்தகர்த்தா பிரஸ்தாபித்தார். அந்த சந்தர்ப்பத்தில் தம் ஜாட்யாவஸ்தைக்கு பிரபஞ்ச ரீதியைப் பார்ப்பதினால் உண்டான நிகிலே காரணமென்றும் காலமஹிமையினால் உண்டாகிக்கொண்டுவருகிற அதர்ம பிரவிருத்தியை நிவரென்று தடுப்பது சாத்தியமில்லையென்றும் அதற்காக ஆலோசனை செய்வதும் வேறுவிதமாய் பிரயத்தினம் செய்வதும் பிரயோஜனமற்றதென்று தீர்க்கமாக யோசனை செய்ததில் நிச்சயிக்கப்பட்டதென்றும் அனுகூலமான காலத்தை எதிர்பார்த்து வேதசாஸ்திரங்கள் லோபத்தை அடையாமல் காப்பாற்றிக்கொண்டு ஈசுவர பிரசாதத்தை சம்பாதித்துக் கொள்ளுவதற்காக ஸ்ரீபகவத் பூஜா, பிரார்த்தனை, தியானம் முதலியவைகளால் தம் காலத்தைக் கழிக்கவேண்டியது யுக்தமென்று நினைத்து தம் உத்வேகத்தை கொஞ்சம் கொஞ்சமாக குறைத்துக்கொண்டு வேதசாஸ்திர பிரசாரத்தில் உத்ஸாகம் கொண்டதாக உத்தரவு கொடுத்தார்கள். இந்தக் காலத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஸ்ரீசாரதாம்பாள் சன்னிதியில் பிரார்த்தனை ரூபமாய் சொல்லியிருக்கிற இரண்டு சுலோகங்கள் இதனடியில் பதிப்பிக்கப்பட்டிருக்கின்றன. அந்த சுலோகங்களின் அர்த்

தத்தை தெரிந்துகொள்ளுவதினால் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மனோவிருத்தி பிரபஞ்ச விஷயத்தில் எந்த ரீதியில் இருந்ததென்ற விஷயம் தெளிவாய் தெரியும்.

नास्तिक्यबुद्धिहतमानसवारिजातान्
त्यक्तात्मकर्मनिचयान्बहुशो द्विजाद्यान् ।
कृत्तोत्तमाङ्गजततीन्विनिरीक्ष्य दुःख-
वार्धौ निमग्नमिममम्ब सुखे नियुङ्क्ष्व ॥ १ ॥

ईशोऽस्ति जन्म विचित्रतरं हि जन्तोः
लोकान्तरं च निजकर्मकृतौ सुखापम् ।
पापानि पापफलदाश्च तथैव लोकाः
इत्यम्ब लोकततये वितराशु बुद्धिम् ॥ २ ॥

மூன்று வருஷகாலம், எப்போதும் பாஷ்யம் முதலிய கிரந்தங்களில் காலக்ஷேபம் செய்வதில் ஆஸக்தியுள்ளவராயிருந்த ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு ஏகாந்தவாசத்தில் அபிருசி அதிமாக வந்தது. இந்த அபிப்பிராயம் இவர் பால்ய வயஸ்ஸிலேயே உண்டாயிருந்து காரணாந்தரங்களால் பின் திரும்பியதென்று முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. சில வருஷங்களுக்கு முந்தி ஸ்ரீமடத்திற்கு தெற்கு திசையில் துங்கா நதிக்கு அப்பால் அரண்யமாயிருந்தது. புலி முதலிய துஷ்ட மிருகங்களுடைய வாசத்திற்கு அனுகூலமாயும், ஊரிலிருக்கும், பசு, முதலியவைகளுக்கு உபத்திரவமுண்டாகக்கூடியதாயும் இருந்த பிரதேசத்தை சீர்திருத்தி தபோவனமாகச் செய்வதற்கு பிராரம்பம் செய்யப்பட்டிருந்தது. இந்த வனத்திற்கு "நரசிம்மவனம்" என்று

ஸ்ரீஸ்வாமிகள் தம் குருக்கள் ஞாபகத்திற்காக நாமதேயம் கொடுத்திருந்தார்கள். அதுவரையில் அந்த பிரதேசம் பூருவாக சீர்திருத்தப்பட்டிருக்கவில்லை. தவிரவும் வாசயோக்கியமான கட்டிடங்களொன்றும் கட்டியாயிருக்கவில்லை. அப்படியிருந்தும் அந்த வனத்தில் பர்ணசாலை ஏற்படுத்திக்கொண்டு அதில் வாசம் செய்ய வேண்டுமென்று அபிப்பிராயம் ஸ்ரீஸ்வாமிகளுக்கு உண்டாயிற்று. விகாரி வருஷத்திய ஆசுவயுஜபகுள பஞ்சமி தினம் காலையில் ஸ்ரீசாரதாம்பாள் உத்ஸவ மூர்த்தியுடன் ஸ்ரீஸ்வாமிகள் நாசிம்ம வனத்திற்கு விஜயம் செய்தார்கள். அன்று மத்தியானம் ஸ்ரீசாரதாம்பாள் சந்திரமௌளீசுவர ஸ்வாமிகளின் பூஜை தத்கால உபயோகத்திற்கு நிர்மாணம் செய்யப்பட்டிருந்த பந்தலில் நடந்து மிதமாக பிராம்மணபோஜனமும் நடத்தப்பட்டது. சாயங்காலம் 5-மணிக்கு ஸ்ரீசாரதாம்பாளை வடகரையிலுள்ள தேவாலயத்திற்கு விஜயம் செய்விக்கலாமென்று உத்திரவு செய்து சந்திரமௌளீசுவரருடன் சுவாமிகள் அன்று இராத்திரி வெகு ஸ்வல்பமான பரிஜனங்களுடன் அங்கேயே வாசம் செய்தார்கள். அதுவரையிலும் அவர்கள் அபிப்பிராயம் வெளிப்பட்டிருக்கவில்லை. மறுதினம் காலையில் இந்த லேககனிடம் தம் அபிப்பிராயத்தை வெளிப்படுத்தினார்கள். சிலகாலம் ஏகாந்தமாக வாசம் செய்யவேண்டுமென்ற அபிப்பிராயமிருப்பதாயும் அதற்காக அத்தியாவசியகமான பர்ணசாலைகள் ஏற்படுத்தவேண்டுமென்றும்

ஆஜ்ஞாபித்தார்கள். இந்த நடவடிக்கை ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் மனபரிபாகத்திற்கும் ஆசிரமதர்மத்திற்கும் ஒற்று இருந்தாலும் சிருங்கேரி மடாதிபதிகளாயிருந்த முந்திய குருக்களும் அதுவரையிலும் வர்த்தமான குருக்களும் செய்துவந்த அப்பியாசத்தையும் அவர்கள் ஸ்திதியையும் வெகுகாலமாகப் பார்த்தவர்களுக்கு சங்காஸ்பதமாயும் ஆச்சரியமாயுமிருந்தது. அதுமுதல் சம்ஸ்தான சம்பந்தமாக இராஜசின்ன மரியாதைகளெல்லாம் ஒன்றொன்றாய் ஸ்ரீஸ்வாமிகளிடமிருந்து ஆரத்தில் நிறுத்தப்பட்டுவந்தது. குருக்கள் பாரம்பரையாக பூஜித்துக்கொண்டுவருகிற சந்திரமௌளீசுவரஸ்வாமிக்கு அந்த ஸ்வாமி பூஜையின் உபயோகத்துக்காகவே மகாராஜாக்களாலும் சிஷ்யகோடிகளாலும் கொடுக்கப்பட்டிருக்கிற வெள்ளி தங்கப் பாத்திர வர்க்கங்களையும், பணச் செலவினால் ஆகக்கூடிய க்ஷீரம் முதலிய பூஜாஸாமக்ரீகளையும் கூடவிட்டு கேவலம் சாத்விகமாய் காலத்திரயத்திலும் துங்காதீர்த்தத்தினால் யதேஷ்டமாக அபிஷேகம் செய்து வனத்திலுண்டான பத்ர புஷ்பாதிகளினால் பூஜை செய்து அநேகவிதமான சிவஸ்துதிகளாலும், சிவநாம ஸங்கீர்த்தனங்களாலும் ஈசுவர பஜனம் செய்ய ஆரம்பித்தார்கள். தம் ஆகாரத்தில், உப்பு, புளி, காரம் முதலிய பதார்த்தங்களைத் தள்ளிவிட்டார்கள். மத்தியானம் 4 மணி சமயத்திற்கு மேல் தம் பரிஜனங்களில் யாரையாவது ஒருவரை முன்னிட்டுக்கொண்டு நரசிம்ம வனத்திற்கு சமீபத்தி

ளுள்ள ஆரண்யத்தில் சஞ்சாரம் செய்துகொண்டு மன நிற்கு செலாக்கியமாய்த்தோன்றின ஸ்தலத்தில் மாத்த டியில் உட்கார்ந்துகொண்டு நிர்க்குணத்தியானத்தினால் ஆத்மானந்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்து சாய ங்காலம் 6 மணி சமயத்தில் தம் பர்ணசாலைக்கு திரும் பிவரத் துடங்கினார்கள். இந்த மாதிரி ஜனசமூகத்தி லிருந்து விலகிக்கொள்ள பிரயத்தினப்பட்டிருந்தாலும் காலையில் பூஜையான பிறகு 11, 12 மணிவரையில் சிஷ் யர்களுக்கு பாஷ்ய பாடம் சொல்லுவதில் மாத்திரம் உதாசீனதை வரவில்லை.

இந்த சந்தர்ப்பத்தில் மைசூர் சம்ஸ்தானத்திய நால்வடி கிருஷ்ணராஜ பிரபுக்களவர்கள் இராஜ்ய பார த்தை வஹிப்பதற்கு மூர்த்தியே தம் தேச சஞ்சாரக் கிரமமாக சிருங்கேரிக்கு விஜயம்செய்து ஸ்ரீஸ்வாமிகள் அவர்களை தர்சனம் செய்துகொண்டு அவர்கள் அனுக் கிரஹத்தைப் பெற்றுக்கொண்டு வரும்படி ராஜமாதா அவர்களால் நியோகம் செய்யப்பட்டிருப்பதாயும் இந்த விஷயத்தை ஸ்ரீஸ்வாமிகள் சன்னதியில் விக்ஞா பனம் செய்து, பிரபுக்கள் வரவிற்காக அவசியமான ஏற்பாடுகள் உபய சமஸ்தானத்திய கௌரவத்திற்குத் தகுந்தபடி செய்துகொள்ளும்படி அக்காலத்தில் மை சூர் சம்ஸ்தானத்தில் திவானாயிருந்த ஸர். கே. சேஷா த்திரி அய்யர் அவர்களிடமிருந்து இந்த கிரந்த கர்த் தாவிற்கு பத்திர மூலமாய் தெரிவிக்கப்பட்டது. உட னே மேற்கண்ட பத்திரத்தின் அபிப்பிராயத்தை ஸ்ரீ

ஸ்வாமிகள் சன்னதியில் விக்ஞாபனம் செய்து அந்தசந்தர்ப்பத்தில் ஸ்ரீஸ்வாமிகள் மடத்திற்கு விஜயம் செய்து அங்கேயே வாசம் செய்து பிரபுக்களை வரவேற்றுக் கொள்ள வேண்டியது அவசியமென்று விக்ஞாபனம் செய்துகொண்டான். தமக்கு பிராணபூதரான ஸ்ரீகிருஷ்ண ராஜபிரபுக்களின் வரவைக்கேட்டு வெகு சந்தோஷமடைந்த ஸ்ரீகுருக்கள் அந்த சமயத்தில் உத்திரவு செய்தது எப்படியெனில் "உங்களுக்கு வைராக்கிய சுகம் தெரியாது. ஏகாந்தவாசத்தினால் உண்டாக்கக்கூடிய பிரயோஜனத்தை முற்றிலும் அறிந்தவரே அல்ல. வாசனுபலத்தினால் இராஜமார்க்கத்திலேயே அபிருசி அதிகமாயிருப்பதினால் அந்த மார்க்கத்திலேயே இருந்துகொண்டு நம்மையும் அந்தமார்க்கத்தில் செல்லும்படி யத்தினம் செய்துகொண்டிருக்கிறீர்கள். ஒரு சமயம் கிருஹஸ்தரான உங்களுக்கு ராஜஸகுணத்தை அடுப்பது அலங்காரமானதென்று பிராந்தியினால் நீங்கள் தெரிந்துகொண்டாலும் நம் ஆசிரமத்திற்கு தாத்காலிக விருத்தி ஈசுவரானுக்கிரஹத்தினால் ஸ்திரமாய் நின்றால் அது நமக்கு பூஷணம் ஆகையால் நம் தர்சனத்திற்காக வரப்பட்ட மகாராஜர் ஆகமனத்திற்காக அவர் கௌரவத்திற்கு தகுந்தபடி செய்யவேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் உங்களுக்குத் தெரிந்தமட்டில் சித்தப் படுத்திக்கொண்டு சம்ஸ்தானத்திய சம்பிரதாயத்தை அனுசரித்து பிரபுக்களை வரவேற்றுக்கொள்ளுங்கள். நாம் ஆசிரமத்திலேயே இருந்துகொண்டு பிர

புக்களை அனுக்கிரஹிக்கிறோம் என்று ஆக்ஞை செய்தார்கள்.

பிரபுக்கள் அவர்கள் தமக்கு வித்யாப்பியாசம் செய்விப்பதற்காக நியமனம் செய்யப்பட்டிருந்த மிஸ்டர் பிரேஜர் சாகேப் அவர்களுடன் சாலி 1821 விளம்பி வருஷம் கார்த்திக பகுள நவமி புதவாரம் (7—12—1898) சிருங்கேரிக்கு விஜயம் செய்து ஸம்ஸ்தானத்திய வழக்கத்தை அனுசரித்து மடத்திய அதிகாரிகளால் செய்யப்பட்ட மரியாதைகளை அங்கீகரித்து நகரத்தில் பிரவேசம் செய்தபிறகு தம்முடன் சேர்ந்து வந்திருக்கும் 7, 8 ஐரோப்பிய கனவான்களுடன் துங்கா நதியைத் தாண்டி ஸ்ரீஸ்வாமிகள் ஆசிரமமான நரசிம்ம வனத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்கு பிரகிருத சந்தர்ப்பத்திற்காக அமைக்கப்பட்டிருந்த பந்தலில் ஆசனத்தில் அமர்ந்திருக்கிற ஸ்ரீஸ்வாமிகளை தர்சனம் செய்துகொண்டு கொஞ்சகாலம் குசல பிரசனம் முதலிய சம்பாஷணைகள் நடந்தபின் ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞையைப் பெற்றுக்கொண்டு நதிக்கு வடகரையில் இருக்கும் மடத்திய கட்டிடத்தில் பிரபுக்களின் உபயோகத்திற்காக சித்தப்படுத்தப்பட்டிருந்த ஒரு பாகத்தில் வாசம் செய்துகொண்டிருந்தார்கள். மறுநாள் மகாமாதுருஸ்ரீயவர்களின் ஆக்ஞையை அனுசரித்து திவான் அவர்களால் செய்யப்பட்டிருந்த ஏற்பாட்டின்படி பிரபுக்களின் சிரேயஸ்ஸுக்காக சிருங்கேரியிலிருக்கிற எல்லா தேவலாயங்க

ளிலும் பூஜை நைவேத்தியம் முதலான சேவைகள் விஸ்தாரமாய் நடத்தப்பட்டன. அப்படியே பிராம்ம ணர் ஸுவாஸினீகளுக்கு சந்தர்ப்பணையும் பிரபலமாக நடந்து பூரி தக்ஷிணையும் கொடுக்கப்பட்டது. விடியற் காலத்தில் பிரபுக்களவர்கள் ஸ்ரீஸ்வாமிகளின் ஆசிரமத் திற்கு விஜயம் செய்து பரம சிரத்தையுடன் அவர்க ளுக்கு பாதபூஜை செய்து அவர்களால் அனுக்கிரஹிக் கப்பட்ட ஸர்வரக்ஷாகரமான யந்திரத்தையும் தார ணம் செய்துகொண்டு தீர்த்த பிரசாதங்களைப் பெற் றுக்கொண்டு தம் ஜாகைக்கு விஜயம செய்தார்கள்.

மகாராஜா அவர்களுடன் வந்திருந்த மி. ப்ரேஜர் சாகேப் அவர்கள் முதல் நாள் ஒருதடவை ஸ்ரீஸ்வாமி களைப் பார்த்தமாத்திரத்தில் அவர்கள் விஷயத்தில் உண்டான கௌரவ புத்தி ஏகாந்தத்தில் அவர்களைப் பார்த்து அவர்களுடன் சாவகாசமாக ஸம்பாஷணம் செய்யவேண்டுமென்ற குதூகலத்தை உண்டுபண் ணிற்று. இந்த மாதிரி தம் அபிப்பிராயத்தை மடத் திய அதிகாரிகள் மூலமாய் ஸ்ரீஸ்வாமிகளுக்கு அறிவித் தார். அவர்கள் அனுமதியின்மேல் அன்று சாயங்கா லம் 4 மணிக்கு ஷை துரை ஸ்ரீஸ்வாமிகள் பேட்டிக் காக வரலாமென்று தெரிவிக்கப்பட்டது. குறிப்பிட்ட காலத்தில் சரியாக ஸ்ரீஸ்வாமிகள் ஆசிரமத்திற்கு வந்த அந்த கனவான் சாதாரணமான காவி வஸ்திரங்களை யுடுத்திக்கொண்டு விபூதி ருத்திராக்ஷங்களை தரித்துக் கொண்டு கேவலம் சாத்விகமான நிலைமையில் தனக்கு

தர்சனம் கொடுத்த ஸ்ரீஸ்வாமிகளைப் பார்த்து வெகுவாக ஆநந்தப்பட்டார். ஸ்ரீஸ்வாமிகளவர்களின் சகஜமான ரீதியைப் பார்த்து இந்த கனவானுக்கு அவர்கள் விஷயத்தில் முதலில் உண்டாயிருந்த கௌரவத்தைக் காட்டிலும் அந்த சமயத்தில் .கௌரவம் இரண்டு பங்கு அதிகரித்தது. மத்தியானம் 4-மணியிலிருந்து இராத்திரி 8¼-மணி வரையில் டீ சாகேபர் ஸ்ரீஸ்வாமிகளை விட்டுப்போகவில்லை. ஸ்ரீஸ்வாமிகளுக்கு இங்கிலீஷ் பாஷையில் பரிசயம் இருக்கவில்லை. அதுபோலவே சாகேபருக்கு தேசபாஷையில் பரிசயமில்லை. இப்படி இருந்தாலும் ஸ்ரீஸ்வாமிகள் பேசியதை தர்ஜிமா செய்து சொல்லுவதைத் தெரிந்துகொண்டு வெகு ஆச்சரியமடைந்து அவர்கள் சன்னிதியில் 4-மணிக்கு அதிகமான சமயத்தை அதிக ஆனந்தத்துடன் கழித்தார். சாதாரணமாய் ஒரு நிமிஷகாலமாவது வீணாய்க் கழிக்காமல் எப்போதும் உலக வியவகாரங்களில் நோக்கமுள்ள ஐரோப்பியர், லோகவியவஹாரங்களைத் துறந்து வனத்தில் வாசம் செய்துகொண்டிருக்கிற ஸ்வாமிகள் சமீபத்தில் அவ்வளவு சாவகாசமாக காலம் கழிக்கும்படி அவர் மனதை ஆகர்ஷணம் செய்த ஸ்ரீஸ்வாமிகளின் மாகாத்மியம் எப்படிப்பட்டதோ! நற்குணங்கள் பொருந்தியவர்களிடமிருக்கும் குணங்களை வேகமாக கண்டுகொண்டு சந்தோஷிக்கும் விஷயத்தில் அந்த கனவானுக்குள்ள சாமர்த்தியம் எப்படிப்பட்டதோ? என்ற இந்த விஷயத்தைத் தெரிந்து

கொள்ள சமீபத்திலுள்ளவர்களுக்கு சாத்தியமாயிருக்கவில்லை. இந்த கனவானுக்கு ஸ்ரீசுவாமிகள் விஷயத்தில் எவ்விதமான அபிப்பிராயம் உண்டாயிருந்ததென்ற விஷயத்தை அறிவிக்கும்பொருட்டு அந்த பெரிய மனுஷ்யன் எழுதியிருக்கிற ஒரு கடிதத்தை தர்ஜிமா செய்து இதனடியில் எழுதப்பட்டிருக்கிறது.

மைசூர்

9 ஆகஸ்டு 1902.

பரிசுத்தாத்மரே !

ஸ்வாமிகளவர்களின் தயவினால் ஏஜண்டவர்களின் மூலமாய் எனக்கு அனுப்பிய ஸ்ரீமுகத்தையும் பிரசாதத்தையும் ஸ்வாமிகளவர்களுடைய பரமானுக்கிரஹமாக பாவிக்கிறேன். எனக்கு எப்பொழுதும் ஸ்வாமிகளுடையவும், சிருங்கேரியினுடையவும் ஞாபகமிருக்கும்படி இந்தப் பிரசாதத்தை நான் ஸம்ரக்ஷித்துக் கொண்டிருப்பேன். தென் இந்தியா முழுவதும் பாண்டித்யத்தால் பிரக்கியாதி அடைந்திருப்பது போல தயாரஸ ஸௌஜந்யங்களினாலும் விசேஷ பிரஸித்தி அடைந்திருக்கும் ஸ்வாமிகளவர்களுடைய தர்சனம் எனக்கு இரண்டு தடவை கிடைத்தது என்னுடைய புண்யோதயமென்றே எண்ணுகிறேன்.

மஹாராஜவினுடைய வித்யாவினய ரீதியை ஸத்குணப்ரஜ்ஞாதிகளால் பூர்ணரான ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஒப்புக்கொண்டிருப்பது எனக்கு மிகவும் திருப்தியை உண்டாக்குகிறது. மகாராஜாவுக்கு தன் தேச

த்தில் அபிமானமும் தன் தேசத்தின் ஸ்வரூப விசேஷ ஞானமும் உண்டாவதற்குத்தக்க வியவஸாயம் நடத்தி ருப்பதால் இவர் பகவதனுக்கிரஹத்தினல் தன் ராஜ காரிய நிர்வாஹத்திற்கு தக்கவாறு சக்தராவார். இது வன்றி இவ்வளவு சிறுவயதிலேயே ஸத்குணமும் வியவஸ்தையும் உள்ளவராயிருப்பதினுல் வரவர மகாபுருஷகுணங்களினுலும் மகாராஜாநுரூப வியவ ஹாரங்களாலும் கீர்த்தியை ஸம்பாதிப்பாரென்று நம் புகிறேன். எந்த மதஸ்தனுக்கானுலும் ஸத்குணமும் ஸெளஜன்யமும் பகவதனுக்கிரஹத்தால் தான் உண் டாகின்றன. எந்த ஸர்வசக்த சைதன்யத்தை ஸ்ரீசு வாமிகளும் நானும் ஆராதித்துவருகிறேமோ அந்த பரமாத்மாவின் அநுக்கிரஹத்திற்கு மகாராஜாவும் பாத்திரராகவேண்டுமென்று கோருகிறேன்.

இந்த மகாராஜாவுக்கு உயர்ந்த சிரேயஸ் உண் டாகும்படி ஸ்ரீசுவாமிகளவர்களுடைய அநுக்கிரஹமா னது எப்பொழுதும் ப்ரஸரிக்குமென்று நான் அறி வேன். அதற்குத் தகுந்தபடி மகாராஜாவுக்கும் ஸ்ரீசு வாமிகளவர்கள் விஷயமாயுள்ள பரமபக்தியைக் கண்டு நான் ஸந்தோஷிக்கிறேன். மகாகனம் பொருந்திய வைவஸிராய் அவர்களே விசேஷ மரியாதைகளுடன் மகாராஜாவுக்கு நேற்று தினம் ராஜ்யபாரத்தை ஒப்பு வித்தார் என்று கேட்டு ஸ்ரீசுவாமிகளுடைய சித்தத் திற்கு மிகவும் ஆனந்தமுண்டாயிருக்கும். மகாராஜா வின் ராஜ்யபாரவஹிப்பு எவ்வாறு மங்களகரமாய் பிரா

ரம்பித்திருக்கின்றதோ அவ்வாறே மூன்னுக்கும் மங்களகரமாகவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

*   *   *   *   *

அன்று தினம் இராத்திரி சிருங்கேரிக்கு வந்திருந்த ஐரோப்பிய கனவான்களுடைய விருந்துக்கு ஒரு ஏற்பாடு செய்யப்பட்டது. இந்தக் காரியத்தை குறைவின்றி நடத்துவதற்காக அக்காலத்தில் கடூர் ஜில்லாவில் டிப்டி கமிஷணராயிருந்த மி. கார் துரை அவர்களின் மனைவி மிஸஸ் கார் என்பவள் சுவாமிகளின் தர்சனதிற்கு வந்த காலத்தில் அவர்களாலேயே கோரப்பட்டிருந்தார். அந்தப்படி அவர் விசாரணையில் நடத்தப்பட்ட விருந்தில் அங்கு வந்திருந்த கனவான்கள் எல்லாரும் போஜனம் செய்து துங்காநதியில் நடத்துவதாய் தீர்மானமாயிருந்த ஸ்ரீசாரதாம்பாள் தெப்போத்ஸவத்தைப் பார்ப்பதற்காக எல்லாரும் வந்திருந்தார்கள் இந்த சமயத்தில் ஸ்ரீமகாராஜா அவர்களும் ஸ்ரீஸ்வாமிகளவர்களும் விஜயம் செய்து நதீதீரத்தில் பீடத்தில் அமர்ந்திருந்தார்கள். மேற்கண்ட உத்ஸவம் இராத்திரி சுமார் 2-மணி வரையில் நடந்தது. வந்திருந்த கனவான்களெல்லாம் வெகு சந்தோஷமடைந்தார்கள். மிஸஸ் கார் அவர்கள் மூலமாய் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் செய்வித்த விருந்திற்காகவும் நேத்திரானந்தகரமான உதஸவம் நடத்தினதற்காகவும் தமக்காகவும் மற்றவர்களுக்காகவும் மி. ப்ரேஜர் சாகேப் அவர்கள் ஸ்ரீஸ்வாமிகள

வர்கள் சன்னிதியில் வந்தனங்கள் சமர்ப்பித்து, எல்லாரும் விடை பெற்றுக்கொண்டு ஜாகை போய்ச்சேர்ந்தார்கள். ஸ்ரீமன் மகாராஜா அவர்களையும் அனுக்கிரஹம் செய்து ஜாகைக்கு அனுப்பிக்கொடுத்துவிட்டு ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் தம் ஆசிரமத்திற்கு விஜயம் செய்தார்கள்.

அடுத்த நாள் காலையில் ஸ்ரீமகாராஜா அவர்கள் மறுபடியும் ஸ்வாமிகளின் ஆசிரமத்திற்கு விஜயம் செய்து அவர்கள் சன்னதியில் சம்ஸ்தான சுதிய பண்டிதர்களுக்கு வெகுமதிகள் கொடுப்பித்து அவர்களிடமிருந்து பலமந்திராக்ஷதைகள் பெற்றுக்கொண்டு சிருங்கேரியில் போஜனத்தை முடித்துக்கொண்டு பிரயாணமானார்கள்.

அதி வைராக்கிய விருத்தியுள்ளவர்களான ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு மேலே சொன்ன இந்த சந்தர்ப்பத்தினால் எவ்வளவேனும சித்தம் சஞ்சலப்படவில்லை. இதைத் தான் ஜீவன்முக்தர்களின் லக்ஷணமாக சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. இந்த லக்ஷணம் இந்த மகானுபாவரிடம் நிறைந்திருந்ததென்று இவர்களிடம் சாயானுவர்த்தனம் செய்து அநேக வருஷகாலம் பலதடவைகளில் பார்த்து அனுபவித்திருக்கிற இந்த கிரந்த லேககன் தடையில்லாமல் சொல்ல வல்லமையுள்ளவன்.

இந்த மகாயோகிபுருஷருடைய பூததயை எங்கும் பார்த்ததுமல்ல கேட்டதுமல்ல. இவர்களுக்கு எல்

லா பிராணிகளிடத்திலும் தயை ஒரே விதமாயிருந்தது. எந்த பிராணியானாலும் துக்கப்படுவதென்பதை கண்ணால் பார்க்கமாட்டார். சாதாரணமாய் தம் சஞ்சாரத்தில் தம் பாதங்களை பூமியில் வைப்பதினால் எவ்விதமான கிரிமி கீடம் முதலிய ஜந்துக்களுக்கு ஹிம்சை உண்டாகுமோ வென்ற பயத்தினால் வெகு ஜாக்கிரதையாய் பூமியில் பாதங்களை வைத்து வருவார். வருத்தமடைந்திருக்கும் ஜனங்கள் அவர்களிடம் வந்து அவரவர் கஷ்டங்களை தெரிவித்துக்கொள்ளும்போது அவர்கள் முகத்தில் உண்டாகப்பட்ட விகாரபாவத்தைப் பார்த்தால் தம்மிடத்தில் வந்தவர்களுடைய கஷ்டங்களை தாமே வஹித்துக்கொண்டு அனுபவிக்கிறாரோ என்று தோன்றிக்கொண்டிருக்கும். ஒரு தினமாகிலும் தம் பரிஜனங்களில் ஒவ்வொருவரையும் அழைத்து அவர்களெல்லாரும் போஜனம் செய்தார்களா என்று விசாரணை செய்யாமலிருந்ததில்லை. ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தினால் யாராவது ஒருவருக்கு போஜனத்திற்கு அனுகூலம் உண்டானதாகத்தெரிய வந்தால் எவ்விதமான சமயமானாலும் அவருடைய ஆகாரத்திற்கு அனுகூலப்படுத்துவார். சம்ஸ்தானத்தில் எவ்வளவு சிப்பந்திகளை வைத்திருந்தார்களானாலும் அதிகாரிகள் எத்தனை ஜனங்களிருந்தாலும் தம் தர்சனத்திற்காக சிருங்கேரிக்கு வரப்பட்ட சன்யாஸிகள் விரக்தர்கள் கோசாயிகள் ரோகஸ்தர்கள் வயது முதிர்ந்தவர்கள் இவர்கள் தம் திருஷ்டியில் ஒரு

நடவை தென்பட்டால் அவர்களின் வாசஸ்தலத்தை யும் ஆகாரத்துக்கு செய்திருக்கிற ஏற்பாடுகளையும் தம் சமீபத்திலுள்ளவர்கள் மூலமாக விசாரித்துக்கொண்டு ஏற்றக்குறைவுகளிருந்தால் அவ்விஷயத்தில் யாரிடத்திலும் அசமாதானம் கொள்ளாமல் ஆவசியகமான அனுகூலத்தை தாம் உண்டு பண்ணக்கூடிய ஸ்வபாவம் ஸ்ரீஸ்வாமிகளை ஸ்திரமாக நாடி இருந்தது. ஒரு சமயத்தில் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் கண்ட ஒரு ஆச்சரியமான சங்கதியை இங்கு வெளியிடவேண்டுவது அவசியம். தஞ்சாவூர் ஜில்லா சாத்தனூர் சுப்பிரமணிய சாஸ்திரிகள் என்பவர் வெகு வருஷகாலம் ஸ்ரீமடத்தில் சர்வாதிகாரியாயிருந்தார். இவருக்கு வயசு ஆன பிறகு வேலையிலிருந்து நீங்கினாலும் ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியிலேயே இருந்து கொண்டிருந்தார். இவர் அனுகூலத்திற்காக ஸ்ரீமடத்திலிருந்தே சிப்பந்திகளை நியமித்து ஆகாரத்துக்கு வேண்டிய சௌகரியம் செய்திருந்தது. இந்த சாஸ்திரிகள் நல்ல பண்டிதராயிருந்தாலும் இவரிடத்தில் சாந்தஸ்வபாவம் கிடையாது. வெகு சுலபமாக கோபம் வந்து விடும். இந்த காரணத்தினால் எவ்வளவு சாந்தகுணமுள்ளவரானாலும் இந்த சாஸ்திரிகளுக்கு சேவை செய்யும்படி நியமிக்கப்பட்ட ஜனங்கள் நீண்டகாலம் இவரிடத்தில் நிற்பதில்லை. இப்படியிருந்தும் ஒரு பிராம்மணன் இவர் ஸ்வபாவத்தை நன்றாகத்தெரிந்துகொண்டவனாய் இவர் கோபத்தைப் பொறுத்துக்கொண்டு சிலவருஷகாலம் இவருக்கு சே

வை செய்துகொண்டிருந்தான். ஒரு சமயத்தில் சாஸ்திரிகளுக்கு சரீரத்தில் வியாதியுண்டாகி படுத்து இருந்தார். அந்த சந்தர்ப்பத்திலும் அந்த பரிசாரகன் வெறுப்பில்லாமல் பரிசாரணம் செய்துகொண்டே இருந்தான். அப்படியிருந்தும் சரீரத்திலுண்டான அசக்தியினாலும் சாஸ்திரிகளுடைய ஸ்வபாவ குணத்தாலும் ஒரு நாள் அந்த பரிசாரகன்மேல் கோபங்கொண்டு அந்த மனுஷியன் சிரமப்பட்டு கற்றுக் கொண்டிருந்த சாந்த குணத்தைக்கூட விலகிப்போகும்படி செய்துவிட்டார். இதனால் இவரிடமிருந்த பிராம்மணன் வெகுவாய் அலுத்துப்போய் இவருக்கு அன்று செய்யவேண்டிய சேவையையும் செய்யாமல் ஆகாரமும் கொடுக்காமல் உபேக்ஷைசெய்துவிட்டான். இந்த சங்கதி இதரர் யாருக்கும் தெரியாது. வியாதியினாலும் பசியினாலும் வருந்தின சாஸ்திரிகள் சாயங்காலம் 5 மணிவரையில் எதிர்பார்த்து அப்போதும் தன்னுடையஸ்வபாவத்தினால் தனக்கே அநானுகூலம் உண்டாயிருக்கிறதென்பதைதெரிந்துகொண்டு தான் சமாதானம் செய்துகொள்ளாமல் தன் கோபத்தையே முன்னிட்டுக்கொண்டு தானாகவே எழுந்து சஞ்சாரம் செய்வதற்கு சக்தியில்லாதவராயிருந்தும், கஷ்டப்பட்டுக்கொண்டு ஸ்ரீஸ்வாமிகள் இருந்த இடத்தில் வந்து நமஸ்காரம் செய்து தீனமான சப்தத்துடன், தனக்கு ஆகாரம் இல்லாமல் சாகும் காலம் வந்துவிட்டதென்று தெரிவித்துக் கொண்டார். இவ்வளவு மாத்திரத்தில்

ஸ்ரீஸ்வாமிகள் மனம் மிகவும் கலங்கிப்போய்விட்டது. அவர்கள் ஹிருதயத்திலுண்டான இரக்கத்தினால் கண்களில் ஜலம் நிறைந்தது. சரீரமெல்லாம் கிடுகிடு என நடுங்க ஆரம்பித்தது. இந்த சந்தர்ப்பத்தில் அதிக விசனத்துடன் தம் எதிரில் நின்றுகொண்டிருந்த சாஸ்திரிகளை வெகு கருணையுடன் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தபடியே, அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்திலிருந்து எழுந்து அதிவேகமாய் பாகசாலை மார்க்கத்தைப்பற்றி புறப்பட்டார்கள். இந்த லேககன் ஸ்ரீஸ்வாமிகளுடைய உத்தேசம் இன்னதென்று அறியாதவனாய் பின்னாலே ஓடினான். பாகசாலை சமீபத்திற்கு போவதற்குள் சுப்பிரமணிய சாஸ்திரிகள் பரிசாரகனுடைய குறைவினால் அவருக்கு அன்றுதினம் ஆகாரம் இல்லாமல் அவர் துக்கப்படுவதற்கு காரணம் ஏற்பட்டதினால் அந்தப் பரிசாரகனை மடத்திலிருந்து வெளியில் போகும்படி செய்வதற்கு ஸ்ரீஸ்வாமிகள் தாமே போனதாக இந்த லேககனுக்கு தெரியவந்தது. அந்த சந்தர்ப்பத்தில் அந்த பரிசாரகன் அவர்கள் திருஷ்டியில் விழுவது யுக்தமல்லவென்று யோசித்து கண்ஜாடையால் பாகசாலை சமீபத்திலிருந்த அந்த மனுஷியனை மறைந்துகொள்ளும்படி செய்தான். அதிவேகமாய் பாகசாலை சமீபம் வரையில் வந்த ஸ்ரீஸ்வாமிகள் திருஷ்டியில் சாஸ்திரிகள் பரிசாரகன் தென்படாமல் போகவே, அவர்கள் வேகம் நின்றுவிட்டது. மறுபடியும் திரும்பிவந்து ஓரிடத்தில் உட்கார்ந்து

கொண்ட பிறகு அதுவரையில் சுமார் 8, 10 நிமிஷகாலம் நடந்த நடவடிக்கைகள் ஒன்றும் அவர்களுக்குத் தெரிந்திருந்ததாகவே தோன்றவில்லை. இந்த லேசுகன் மிகுந்த பயபக்திகளுடன் நடந்த சங்கதிகளைத் தெரிவித்து, அதி அல்பமான மனுஷியன் விஷயத்தில் அவர்களுக்கு இத்தனை ஆக்கிரஹம் உண்டாகலாமா என்று கேட்ட காலத்தில் அவர்கள் வெகு சந்தோசத்துடன் ஆக்ஞாபித்தது என்னவெனில் சுப்பிரமணிய சாஸ்திரிகள் வியாதிஸ்தராயும் வயது முதிர்ந்து அசக்தராயுமிருக்கிறவருக்கு சாயங்காலம் 5 மணி ஆகியும் ஆகாரத்திற்கு வழியில்லாமல் உண்டான சம்பவம் அவருடைய தீனதசையினால் தெரிந்தவுடனே தம் ஹிருதயம் கரைந்து அதனால் உண்டான திகிலினால் ஒன்றும் தோன்றாமல் போய்விட்டது. என்று ஆக்ஞை செய்தார்கள். பரம சாந்தராயும் மகா பிராக்ஞராயும் ஸம்ஸ்தானுதிபதிகளாயுமிருந்த ஸ்வாமிகளவர்களுக்கு சாமானியமான ஒரு பரிசாரகனை மடத்திலிருந்து வெளியில் அனுப்புவதற்காக இருந்த இடத்திலிருந்து தாமே புறப்பட்டு பரிசாரகன் இருக்குமிடம் போய் அந்த மனுஷியனை வெளியில் அனுப்புவதற்கு யத்னப்படவேண்டிய அவசியமே இல்லை என்ற விஷயம் தெரிந்திருக்கவில்லையா? அல்லது அந்த மனுஷியனை அந்த க்ஷணத்தில் வெளியே அனுப்பி விடுவதினால் பசியினால் வருந்தியிருக்கிற சாஸ்திரிகளுடைய பசியை அடக்கிவிட்டதாக ஆகிறதில்லை என்றதை

தெரிந்துகொள்ள சாமர்த்தியமில்லையா? அதன் பிறகாவது குற்றவாளியான அந்த பரிசாரகனை மடத்திலிருந்து வெளியே அனுப்பினார்களா? அந்த தினமே அந்த பரிசாரகனே அந்த சாஸ்திரிகளுக்கு ஆகாரம் கொடுத்து உபசாரம் செய்யவில்லையோ? இதொன்றும் அல்ல. முக்கியமாய் அந்த மகாபுருஷரிடமிருந்த கருணை இந்தமாதிரியாய் வெளியாயிற்றே தவிர வேறல்ல. மற்றொரு சந்தர்ப்பத்தில் அபூர்வமான இந்த மகா ஸ்வாமிகளவர்களுடைய இரக்கம் தெளிவாய் வெளிப்பட்டது. 1907 வருஷத்தில் ஸ்ரீஸ்வாமிகள் யாத்திரை கிரமமாய் ஸ்ரீரங்கபட்டணத்திற்கு விஜயம் செய்தார்கள். அங்குள்ள சிஷ்ய ஜனங்கள் வெகு விபவமாய் அவர்களை தங்கப்பல்லக்கில் அமர்த்தி ஸ்ரீரங்கபட்டணத்திய கோட்டை நாலு வீதிகளிலும் உத்ஸவம் செய்வித்தார்கள். அக்காலத்தில் பல்லக்கில் வீற்றிருக்கும் ஸ்ரீஸ்வாமிகளவர்களின் முகத்தில் விசனக்குறிப்புண்டாகி கண்களிலிருந்து கண்ணீர் சொறிந்து கீழே விழஆரம்பமாயிற்று. இதன் காரணத்தைக்குறித்துஅந்த சந்தர்ப்பத்தில் யாரும் கேட்டுத் தெரிந்து கொள்ளும்படியாயில்லை. அவர்கள் சிந்தைக்கு சரியான காரணம் தெரியாமல் ஒவ்வொருவரும் பிரமித்து ஸ்ரீஸ்வாமிகளைப் பார்க்கும்படி இருந்தது. உத்ஸவம் பூர்த்தியாகி ஸ்ரீஸ்வாமிகளவர்கள் வாசஸ்தானம் வந்து சேர்ந்த பிறகு அவர்களிடம் பிரஸ்தாபித்ததில் அவர்கள் அடியில் கண்ட பிரகாரம் உத்தரம் கொடுத்தார்

கள். "ஒரு காலத்தில் இந்த ஸ்ரீரங்கப்பட்டணத்தில் மகா பராக்கிரமசாலியாயிருந்து சகல ராஜபோகங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்த டிப்பு சுல்தானுடைய ஞாபகம் வந்தது. அப்படிப்பட்ட பராக்கிரமசாலி சத்துருக்கள் கையிலகப்பட்டு தன்னுடைய சம்பத்துக்களையும பிராணனையும் பாழாக்கிக்கொண்டானென்ற விஷயம் மனதில் தோன்றியதால் அந்தக்காலத்தில் மனது விகாரத்தை அடைந்ததே கண்ணீர் வரக் காரணம்" என்று சொன்னார்கள். டிப்பு சுல்தான் சரித்திரம் அவர்களுக்குத் தெரியாதா; அவனுக்கு இந்துமதத்தில் இருந்த அபிமானம் கேள்விப்பட்டதில்லையா. கர்னாடக ராஜ்யம் அவனுக்கு ஆதீனமான சங்கதியை விசாரித்ததில்லையா? இவர்களிடத்திலிருந்த பூதகாருண்யம், என்ற சர்வோத்தமமான குணம் மனிதர்களின் குணதோஷங்களை விசாரிப்பதினால் பிரவிர்த்தித்துக் கொண்டிருக்கவில்லை என்று மாத்திரம் சொல்லவேண்டிவருகிறது.

இது அப்படி யிருக்கட்டும். ராமகதை ஏதோ ஒரு யுகத்தில் நடந்ததாக தெரியவருகிறது. இந்த கதையை சொன்னவர் வால்மீகி மகாரிஷி, என்று லோகத்திலுள்ள பிரசித்தியால் தெரியவருகிறது. இப்படிப் பட்ட ராமகதையை சொல்லுகிற இராமாயணத்தை வாசிக்கும்போது பரமதார்மிகரான ராமசந்திரனுக்கு கஷ்டபிராப்தியானதென்று சொல்லுகிற பிரகாணத்தை வாசிக்கையில் வியசனமும் அவருக்கு ஜயமுண்

டானதென்றாவது சந்தோஷம் உண்டாயிற்றென்று வது சொல்லக்கூடிய பிரகாணத்தில் சந்தோஷமும் சாமானியமாய் ஆஸ்திகரான ஜனங்களுக்கு உண்டாவது ஸ்வபாவமே. மகாதுஷ்டனான ராவணாசுரன் தன் ஆப்தரான ஜனங்கள் சொல்லும் ஹிதமான வார்த்தைகளைக் கேளாமலும் அநேக சந்தர்ப்பங்களில் ஸ்ரீ ராமனுடைய பராக்கிரமத்தையும் அவருக்குள்ள தைவ பலத்தையும் தெரிந்திருந்தும் மூர்க்கனாய் ஸ்ரீராமனை எதிர்த்து சண்டைக்குப்புறப்படக்கூடிய பிரகரணங்களை வாசிக்கும்போதும், அவனுக்குண்டான அபஜயகாலங்களில் அவன் வெகுவிதமாய் பிரலாபம் செய்யும் பிரகரணத்தை வாசிக்கும்போதும்கூட ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் கண்ணீர் சொரிய வியசனப்பட்டுக்கொண்டிருப்பார்கள். இந்த வியசனம் இராவணாசுரனிடமிருந்த குணத்திற்காகவோ அல்லது ஸ்ரீஸ்வாமிகள் அவர்களிடமிருந்த காருணியத்தின் பலமோ? ஆலோசனை செய்யக்கூடியவர்களே தெரிந்துகொள்ளலாம்.

ஸ்ரீசுவாமிகள் அவர்களிடமிருந்த சமத்வபுத்தி ஆச்சரியப் படும்படியாயிருந்தது. மதபேதத்தினலாவது ஜாதிவித்தியாசத்தினலாவது வயதினல் உண்டாகக்கூடிய ஏற்றக்குறைவினலாவது ஐசுவரியம், தாரித்ரியம் இவைகளால் உண்டாகக்கூடிய தாரதம்மியத்தினலாவது ஸ்ரீசுவாமிகளுடைய புத்தியில் எவ்விதமான சந்தர்ப்பத்திலும் வித்தியாசமான எண்ணம் உண்டா

கிறதே இல்லை. இந்த குணம்

"समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः।"

என்பதாய் சொன்ன பகவானுக்கும் அத்வைத சித்தாந்தப்படி ஜ்ஞானியாய் பகவத ஸாயுஜ்யத்தை அடையத்தகுந்த ஞானிகளுக்கும், சாதாரணமேதவிர மற்றவர்களுக்கு இருப்பதில்லை. ஸ்வாமிகளவர்களிடத்தில் இந்த மகாகுணம் நிறைந்து இருந்ததென்ற விஷயத்தில் இவர்கள் ஸ்வரூபத்தை விசேஷமாக அறியாதவர்கள் எப்படியாவது சந்தேகிக்கலாமே தவிர ஜீவன் முக்த தசையிலிருந்த இந்த குருக்களை பலதடவைகளில் பார்த்தவர்களில் அநேகருக்கு இந்த விஷயத்தில் சந்தேகமிருக்கமாட்டாது. இந்தியாதேசத்தில் வைதிக மதங்களென்று பிரசித்தமான த்வைதம் விசிஷ்டாத்வைதம் அத்வைதம் என்ற மூன்று மதங்களில் ஏதாவது ஒன்றைச்சேர்ந்தவர்கள் தங்கள் தங்கள் மதத்திலும் மதாசாரியரிடத்திலும் அதிகமான நம்பிக்கையும் கௌரவமும் உள்ளவர்களாயிருந்தாலும், ஸ்ரீஸ்வாமிகளை சாமானிய புருஷரென்று ஒருவரும் நினைத்திருக்கவில்லை. த்வைதி விசிஷ்டாத்வைதிகளில் அநேகம் பெயர் ஸ்ரீஸ்வாமிகளிடமிருந்துகொண்டு சாஸ்திர அப்பியாசம் செய்துவந்தார்கள். மற்றும் அநேக ஜனங்கள் அவர்களிடமிருந்து ஹிதோபதேசம் பெற்று, ஸன்மார்க்கத்தில் சென்றிருக்கிறார்கள். சிலர் இவர்களிடமிருந்து மந்திரோபதேசம் பெற்றிருக்கிறார்கள். இவர்களிடத்தில் வந்தவர்களை எவ்விதத்தி

லும் அவரவர்கள் பரம்பரையாய் தழுவி வந்திருக்கிற மதமே சர்வோத்தமமென்று நம்பி அதிலேயே விசுவாசம் வைத்து சிரேயஸ்ஸை அடையும்படி சாஸ்திரீயமாயும் யுக்தியினாலும் போதனம் செய்தால் திருப்தியுண்டாகும்படி செய்து அனுப்பிக்கொண்டிருந்தார்கள்.

இப்பால் 1907—1911 வருஷங்களில் ஸ்ரீஸ்வாமிகள் சஞ்சாரக்கிரமமாய் மைசூர் ராஜதானிக்கும் பெங்களூர் டிஸ்திரிக்கட்டு சென்னப்பட்டணத்திற்கும், கோலார் டிஸ்திரிக்டில் அநேக ஸ்தலங்களுக்கும் விஜயம் செய்திருந்தார்கள். அக்காலத்தில் மகம்மதியர்கள் ஸ்ரீஸ்வாமிகள் விஷயத்தில் காண்பிவித்த கௌரவமும் விசுவாசரீதியும் தெரிந்துகொள்வதற்கு அந்த வகை ஜனங்களால் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு சமர்ப்பிக்கப்பட்டிருக்கிற நல்வரவுப் பத்திரங்களே நிதர்சனமாயிருக்கின்றன. ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் சமத்வபுத்தி ஒன்றுமில்லாதிருக்கும் பக்ஷத்தில் எவ்விஷத்திலும் சம்பந்தமில்லாமலிருக்கிற மகம்மதியர்களுக்கு எப்படி ப்ரீதி கௌரவம் உண்டாயிருக்கும். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மைசூர் ராஜதானியில் வாசம் செய்து இருக்கும் காலத்தில் ஒரு நாள் சாயங்காலம் 5 மணி சமயத்தில் மைசூர் பட்டணத்திலிருக்கப்பட்ட மகம்மதியர்களில் கௌரவஸ்தராயும், வித்யாவந்தராயுமிருக்கப்பட்ட சில பெரிய மனிதர்கள் அவர்களுடைய தர்சனத்திற்காக வந்தார்கள். அந்த

சமயத்தில் அவர்கள் ஸம்ஸ்கிருத பாடசாலையின் ஒரு கட்டடத்தின் மேல் மாடியில் ஒரு சிறிய அறையில் விஜயம் செய்திருந்தார்கள். தம் தர்சனத்திற்காக ஆவல் கொண்டுவந்திருப்பதாக தெரிந்து வந்தவர்களை தாம் இருந்த இடத்திற்கே வரும்படி அவகாசம் கொடுத்தார்கள். அந்தவிடம் வெகு சுருக்கமாயிருந்தது. வந்த ஜனங்களின் தொகை அதிகமாயிருந்தது. ஸ்ரீஸ்வாமிகள் மனது மாத்திரம் விஸ்தாரமாயிருந்ததினால் வந்தவர்களை எல்லாம் வெகு ஆதரவுடன் உள்ளே வரவழைத்து தம் சமீபத்தில் தமக்கு நாலுபக்கங்களிலும் அவர்களை உட்காரும்படி அனுமதிகொடுத்தார்கள். அக்காலத்தில் வந்தவர்களிடம் க்ஷேமாதிகளை விசாரிப்பதினால் ஆதரவைக்காண்பிவித்து மதங்களில் இருக்கப்பட்ட உண்மையையும் பேதங்கள் உண்டானதற்கு காரணங்களையும் விஸ்தாரமாக அவர்களுக்கு சொல்ல ஆரம்பம் செய்தார்கள். யுக்திகளுடனும் சுலபமான ரீதியிலும் உபந்யாசம் செய்யப்பட்ட ஸூக்ஷ்மமான விஷயங்களைத்தெரிந்துகொண்டு ஆனந்தப்படுகிற அந்த ஜனங்களைப்பார்த்த ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு ஆனந்தமும் உத்சாகமும் அதிகரித்தது. அவர்கள் சரீரத்தின் மேலிருந்த வஸ்திரம் அந்த உத்ஸாகத்தினால் நழுவி கீழே விழுந்தது. அக்காலத்தில் மகமதியர் நடுவில் உட்கார்ந்துகொண்டு உபதேசங்களை செய்துகொண்டிருந்த ஸ்வாமிகளவர்களைப் பார்த்தவர்களுக்கும் அவர் உபதேசங்களை கேட்டவர்களுக்கும்

அவர்கள் விஷயத்தில் அந்த காலத்தில் எவ்வித மான பாவனை உண்டாயிற்றென்ற விஷயம் நேரில் அனுபவித்தவருக்கே தெரியும். சமத்வபுத்தி இல் லாதவர்களுக்கு இந்த கடத்தை எங்கிருந்து வரக் கூடும்.

ஸ்ரீஸ்வாமிகளிடம் வந்த பண்டிதர்களிடத்திலும் யோகிகளிடத்திலும் ஞானிகள் விஷயத்திலும் அவர் கள் விசுவாசம் செய்வதும் அவர்களிடம் சாவகாசமாக சம்பாஷணம் செய்வதும் இவர்களுக்கு சகஜமாகவே உள்ளது? பிரபஞ்ச ஞானமே இல்லாத சிறுவர்கள் தம்மிடம் வந்தால் கொஞ்சமும் உதாசினதையும், திர ஸ்காரமும் இல்லாமல் அந்த பாலர்கள் வயதிற்கும் ஞானத்திற்கும் ஏற்றபடி அவர்களுடன் கூட சந்தோ ஷமனதுடன் எத்தனை நேரமானாலும் சம்பாஷணம் செய்வதும் அவர்களுக்கு ருசியுள்ள பழங்களையும் மற் றும் ருசிகரமான பதார்த்தங்களையும் தருவித்து கொடு த்து அவர்களை சந்தோஷப்படுத்தி தாமும் சந்தோஷப் பட்டுக்கொண்டிருப்பார்கள். இந்த மாதிரியான நிலை மை, மற்றவர்களிடம் சாதாரணமாய் இல்லாத அபூர்வ மான குணம்.

ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரியா ளின் பரம்பரையில் வந்தவராயும், மகா பண்டிதராயும், சுத்த சரித்திரமுள்ளவராயும், ஜகத் பிரசித்தராயும், சம்ஸ்தானுதிபதிகளாயுமிருந்ததினால், இவர்கள் தர்ச னத்திற்காகவும், இவர்கள் அனுக்கிரஹத்தையும், உப

தேசங்களையும் பெறுவதற்காகவும், இந்தியாவிலுள்ள மகாராஜர்களில் அநேகர் ஸ்ரீஸ்வாமிகளிடம் வந்துகொண்டிருந்தார்கள். அதுபோலவே கேவலம் தரித்திரர்களும் துக்கமடைந்தவர்களும், ஞானத்தை அடைய விரும்புவோர்களும் திரவியத்தை எதிர் பார்ப்பவர்களும், இப்படி அநேக ஜனங்கள் வந்துகொண்டிருந்தார்கள். அளவற்ற தம் திரவியங்களை ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் அர்ப்பணம் செய்து அவர்கள் பிரசாதத்தை சம்பாதிப்பதற்காக எண்ணிறந்த தனிகர்கள் வந்துகொண்டிருந்தார்கள். இந்த சந்தர்ப்பத்தில் மகாராஜர் விஷயத்தில் ஒருவிதமாயும், தனிகர்களான மற்ற ஜனங்களிடத்தில் மற்றொரு விதமாகவும் கேவல தரித்திரர்கள் விஷயத்தில் வேறொரு பிரகாரமாகவும் ஸ்ரீஸ்வாமிகளுக்கு ஆதரவும் விசுவாசமும் இருந்ததாகவாவது எந்த சந்தர்ப்பத்திலாவது அவர்கள் பேத புத்தியினால் உண்டான தம் அபிப்பிராயத்தை வெளியிட்டதாகவாவது, வெகு நீண்டகாலம் தொடர்ந்து அவர்கள் சன்னிதியில் வாசம் செய்துவந்த இந்த லேககனுடைய அனுபவத்திற்கு வந்ததில்லை.

இந்த ஸ்வாமிகளுடைய சமத்வ புத்தியைத் தெரிந்து கொள்வதற்கு மற்றொரு காரணம் ஆவசியகமில்லை. இந்த பூஜ்யருடைய தர்சனம், இவர் ஜீவிய காலத்தில் அநேக லக்ஷம் ஜனங்கள் செய்து இருக்கலாமே ஒரு தடவை இவர் தர்சனம் செய்த ஆபால விருத்தர்களும் அவர்களுக்கு தன்னிடத்திலிருந்த ப்ரீதியும் அனுக்கிர

ஹமும் மற்ற யாரிடத்திலும் இருக்கவில்லையென்று, அவர் ஜீவிய காலத்திலும், பிறகு அவர் ஸ்மாணம் வரக் கூடிய சந்தர்ப்பங்களிலும், ஒவ்வொருவரும் சொல்லிக் கொண்டிருந்தது ஸர்வ ஜனங்களுக்கும் தெரிந்திருக் கிறது. அவர்களுடைய மனோபாவம், ஜனங்கள் தெரி ந்துகொண்டிருந்த ரீதியில் இல்லாத பக்ஷத்தில் அவ ரை தர்சனம் செய்த பிந்தி ஒருவனுடைய மனதிலும், மேலே சொன்ன பாவம் உண்டாவதற்குக் காரண மில்லை. அவர் மனோபாவம் ஜனங்கள் தெரிந்துகொண் டிருந்தபடி இருக்கவேண்டுமானல் சமதாபுத்தி அவரி டத்தில் இல்லாமலிருக்கும்பக்ஷத்தில் சாத்தியமாயி ருக்கமாட்டாது. ஆகையால் இந்த ஒரு காரணத்தின லேயே இவர் ஈசுவர அம்சமாக உண்டானவரென்றும் ஞானிகளென்றும், சர்வசமர் என்றும் ஏற்படுகிறது.

ஸ்ரீஸ்வாமிகளுக்கு இருந்த தைவபக்தி மிகவும் உயர்ந்த நிலைமையையடைந்திருந்தது. பக்தியை மோ க்ஷமடைவதற்கு ஒரு முக்கிய காரணமென்று ஸ்ரீபக வத்பாதாள் முதலிய பெரியோர்களால் சொல்லப்பட் டிருக்கிறது.

"मोक्षकारणसामग्र्यां भक्तिरेव गरीयसी"

(विवेकचूडामणिः ।)

இப்படிப்பட்ட பக்தி சாமான்யபக்தி என்றும் பரபக்தி என்றும், 2 விதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. சாமா ன்ய பக்தி பரபக்தியை உண்டுபண்ணுவதில் சாதன மாயிருந்து பரம்பரையாய் மோக்ஷத்திற்கு காரணமா

கிறது. பரபக்தி அநேகமாய் ஞானத்திலேயே வந்து சேரக்கூடியதாகையால் சாக்ஷாத் காரணமென்றே சொல்லப்படுகிறது. சாமானிய பக்தி என்றால், உபாஸ்யன் என்றும் உபாஸகன் என்றும் தெரிந்து பேத ஞானத்துடன் பஜனம் செய்வது, பகவானுடைய மூர்த்திகளை பூஜிப்பது, தர்சனம் செய்வது, நமஸ்காரம் செய்வது, உத்சவங்கள் செய்வது, ஸ்தோத்திரம் செய்வது, பகவத் கதைகளை சிரவணம் செய்வது, முதலிய நல்ல காரியங்களை அனுஷ்டிப்பதே சாமானிய பக்திக் கிரமமென்று சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. பரபக்தி என்றால் அபேத புத்தியினால் உபாசனம் செய்யக்கூடியது. அபேதோபாசனை முதலில் பேத புத்தியுடன் ஈசுவர உபாசனை செய்யாமல் சுலபமாய் சாத்தியமாகிறதில்லை.

பக்தியென்றால் ப்ரீதி என்று அர்த்தம். பரிஜனங்களிடத்திலும் வயதில் சிறுவர்களிடத்திலும் இருக்கும் ப்ரீதியை, விசுவாசமென்று சொல்லுவார்கள். சமானஸ்திதியிலிருக்கப்பட்டவர்களிடத்தில் இருக்கப்பட்ட ப்ரீதி ஸ்நேஹம் என்று வியவஹரிக்கப்படும். குருக்கள் அல்லது தேவதைகள் விஷயமான ப்ரீதியை பக்தி என்பார்கள். ஒரே ப்ரீதியே ஆதாரபேதத்தினால் பெயர் மாறி சொல்லப்படுவதல்லாமல் வேறில்லை. நிஷ்காரணமாயும் நிகரற்றதாயும் உள்ள ப்ரீதி தன்னிடத்தில் மாத்திரம் உண்டாவதே தவிர அவ்விதமான ப்ரீதி வேறிடத்தில் உண்டாகிறதில்லை. அன்னியர்க

ளிடம் செய்யக்கூடிய ப்ரீதி தனக்காகவேயல்லாமல் ஸ்வபாவமானதல்ல. புத்திர பத்னீகளிடம் வைக்கப் படுகிற ப்ரீதி தன் சுகத்துக்காகவே உண்டாகக் கூடியது. ஒருவேளை அவர்களால் வெளிப்படையான பிரயோஜனம் தனக்கு ஆகாமலிருந்தாலும், தன்னுடைய அபிமானத்துக்கு விஷயமான புத்திரகளத்திராதிகள் சுகமாகவிருக்கவேணுமென்ற ஆசை தன்னுடையதாகையால் தன் ஆசையை பூர்த்தி செய்துகொள்வதற்காக செய்யும் ப்ரீதி தனக்காக செய்ததாகவே ஆகிறது. இதுபோலவே ஸ்நேஹிதரிடத்தில் செய்யக்கூடிய ப்ரீதியும் தன் பிரயோஜனத்திற்காகவே செய்யப்படுகிறதென்பதை சொல்லவேண்டியதில்லையே! குரு விஷயமாயும் தேவதா விஷயமாயும் செய்யப்படும் ப்ரீதியும் தன்னுடைய ச்ரேயஸ்ஸுக்காகவே செய்யப் படுகிறதென்னும் விஷயம் ஸ்பஷ்டமாகவே தெரியவருகிறது. ஆகையால் அவ்யாஜமாயும் ஸ்வபாவமாயும், தன்னிடத்தில் தனக்கு உண்டாகும் ப்ரீதி சர்வோத்தமமென்று சொல்லிக்கொள்ளப்படுகிறது. பேதபுத்தியுடன் செய்யப்படுகிற பக்தியில், உபாஸ்யம் உபாஸகன் என இரண்டு ஏற்படுவதால், உபாஸகனை தன்னிடத்தில் இருக்கக்கூடிய ப்ரீதி உபாஸ்யமான தேவதையிடத்தில் ஏற்படமாட்டாதாகையால் இந்தப் பிரகாரம் செய்யப்படுகிற பக்தியை சாமான்ய பக்தி என்று சொல்லுவதற்கு காரணமுண்டு. இந்த சாமான்ய பக்திக்கு பலனாக உண்டாகும் பரபக்தியினாலோவெனில்

உபாஸ்யம், உபாஸகன் என்ற பேதம் இல்லை. தன் திருஷ்டிக்கு கோசரமாகும் ஒவ்வொரு பதார்த்தத்திலும் ஈசுவர பாவனை செய்து, உபாசனம் செய்வதே பராபக்தியின் ஸ்வரூபம். இந்த சந்தர்ப்பத்தினால் திருஷ்டி கோசரமான பிரபஞ்சத்திலே தானும் அடங்கியிருப்பதினால் தன்னிடத்திலும் ஈசுவர பாவனை செய்யவேண்டியதாகிறது. அப்படிச் செய்தால் தனக்கும் ஈசுவரனுக்கும் பேதமிருப்பதாக ஏற்படுகிறதில்லையாகையால் ஈசுவர பாவனையினால் செய்யப்படும் ப்ரீதி, சர்வோத்தமமாகவே இருக்கிறது. அதினாலேயே இந்த ரீதியில் செய்யப்படும் பக்தியை பராபக்தி என்று சொல்லுவார்கள். இந்த பக்தியையே, சர்வோத்தமமென்றும் மோக்ஷமடைவதற்கு ஞானம்போல் ஸாக்ஷாத் காரணமாகிறதென்றும், சாஸ்திர ஸித்தாந்தமாகிறது. சுத்த அத்வைதிகள் இவ்விதமான பராபக்தியிலும்கூட அதி ஸூக்ஷ்மமாக பேத ஞானமிருப்பதாகவே ஏற்படுவதினால், சுத்த ஞானத்தைக் காட்டிலும் பராபக்தி தாழ்ந்ததென்றும், மோக்ஷ பிராப்திக்கு, பராபக்தி வெகு சமீப காரணமாகிறதென்றும் அங்கீகாரம் செய்திருக்கிறார்கள்.

சாமான்ய பக்தி சாத்விக ராஜஸ தாமஸ என்று மூன்றுவிதமாக பிரிக்கப்பட்டிருக்கிறது. வேத சாஸ்திரங்களை நம்பி அவைகளில் சொல்லியிருக்கிறபடி எவ்விதமான பலனிலும் அபேக்ஷையில்லாமல் தனக்கு செய்யவேண்டிய காரியம் என்று தெரிந்து பகவத்

பிரசாதத்திற்கு மாத்திரம் செய்கிற பக்தி சாத்விகம் எனப்படும். உபாஸகன் தனக்கு இந்த உலகத்திலும் பரலோகத்திலும் அபேக்ஷிக்கப்படுகிற அப்யுதயங்களை அடையவேண்டிய உத்தேசத்தினால் பகவானிடத்தில் செய்கிற பக்தியே ராஜஸம் எனப்படும். பிறருக்கு உபத்திரவம் செய்து தன் இஷ்டத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக செய்யப்பட்ட க்ஷுத்திர அபிசாரம் முதலிய காரியங்களே தாமஸம் எனப்படும். ஆனால், மூன்றாவதான, பரஹிம்சாரூபமான காரியம் மிகக் கெட்டதாயும் தூஷிக்கப்பட்டதாயும் இருந்தாலும் அதுவும் ஈசுவர விஷயமாய் செய்யப்படுகிறதினால் இதையும் பக்தி என்ற வகையில் சேர்த்து எண்ணப் பட்டதேயல்லாமல் இந்த தாமஸ பக்தியை அனுஷ்டானம் செய்வதினால் பாபம் சம்பாதிக்கப்படுவதல்லாமல் வேறு ஒன்றுக்கும் காரணமாகிறதில்லை. இரண்டாவது ராஜஸ பக்தியை உறுதியான பாவனையுடன் முறைப் படி செய்துவந்தால் உபாசகனுடைய இஷ்ட பலசித்தி ஆகுவதில் சந்தேகமில்லை. இஷ்ட சித்தியினால் அப் போது செய்த கர்மம் அல்லது அதனாலுண்டான அதிருஷ்டம் நஷ்டமாய்ப் போவதினால் இந்த பக்தி மற்ற எதற்கும் சாதனமாகி நிற்பதில்லை. சாத்விக பக்தியோ வெனில் வேதோக்தமானதென்று நம்பி கேவலம் ஈசுவர ப்ரீதிக்காகவே செய்யக்கூடிய பக்தியாகையால் நிஷ்காமமாய் செய்ததாகிறது. அப்படி செய்யப்பட்ட சாத்விக பக்தி சித்த சுத்தி மூலமாய் ஜீவனுக்கு சித்த

ஸ்திரதையை உண்டுபண்ணி அதன் மூலமாக பரபக்தியை செய்வதற்கு சக்தியைக் கொடுக்கிறது. பரபக்தி செய்கிறவன் சம்சார பந்தத்திலிருந்து திரும்பி நித்ய சுகத்தை அனுபவிப்பான், என்று பக்தி ஸ்வரூபத்தை விஸ்தாரமாக சிஷ்யர்களுக்கு ஸ்ரீஸ்வாமிகள் உபதேசித்துக்கொண்டிருந்ததை சுருக்கமாக இந்தப் பிரகாணத்தில் சொல்லப்பட்டது. ஸ்ரீஸ்வாமிகள் ஸாத்விக பக்தியை

"यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥"

என்ற பகவான் உபதேசப்பிரகாரம் லோகானுக்கிரஹத்திற்காக தாம் அனுஷ்டானம் செய்து காண்பித்துக்கொண்டிருந்தார்கள். இவருக்கு சிவன் விஷ்ணு முதலிய எந்த மூர்த்திகளிடத்திலும் எந்த சந்தர்ப்பத்திலும் பேத புத்தியாவது தாரதம்யமாவது இருக்கவில்லை. எந்த காலத்தில் எந்த மூர்த்தியை ஆராதிப்பார்களோ அந்த காலத்தில் மாத்திரம் அந்த மூர்த்தியின் மேன்மையை ஒப்புக்கொண்டிருந்தார்கள். இந்த ஸ்வாமிகள் ஆராதித்துவந்த, மிருத், சிலா, லோஹ மூர்த்திகளுக்கு அபிஷேகம் செய்யும் காலத்திலும், சந்தன புஷ்பாதிகளான உபசாரம் நடத்தும்போதும் அவசரமில்லாமலும் வெகு ஜாக்கிரதையுள்ளவராயும் இருந்தார்கள். இதனால் இவர்களின் அபிப்பிராயம் மூர்த்திகளை பூஜிப்பதில் அந்த மூர்த்திகளுக்கு எந்த அங்கத்தில் என்ன சிரமம் உண்டாகுமோ என்ற பயம்

இவர்களுக்கு இருந்ததாக ஸ்பஷ்டமாய் தோன்றிக் கொண்டிருந்தது. ஸ்வாமி பூஜைக்காக பரிஜனங்களால் சித்தம் செய்யப்பட்ட பூஜாஸாமக்கிரிகள் நன்ருக பரீசோதனை செய்து சித்தப்படுத்தப்பட்டிருப்பதை தான் பார்த்துத்தெரிந்துகொள்வதினுல் மட்டும் திருப்தியடையாமல் ஒவ்வொரு தினத்திலும் ஒவ்வொருவேளையிலும் தாம் பூஜைக்காக வந்தவுடனே பாலே சோதித்திருக்கிறீர்களா? புஷ்பங்களைப்பார்த்திருக்கிறீர்களா? பழங்கள் நன்ருக இருக்கின்றனவா? என்று பரிஜனங்களை கேட்டு அர்கள் வாக்கினுல் நன்ருக சோதனை செய்து பூஜா சாமான்கள் சித்தப்படுத்தியிருப்பதாக பதில் வந்தாலொழிய அந்த பதார்த்தங்களை உபயோகிப்பதில்லை. நிவேதனத்திற்காக வைக்கப்பட்ட க்ஷீரம் காய்ச்சப்பட்டிருக்கிறதா, அதன் உஷ்ணம் குறைந்திருக்கிறதா? என்று விசாரித்து க்ஷீரபாத்திரத்தை சில சந்தர்ப்பத்தில் தம் கையால் தொட்டுப்பார்த்து திருப்தியான பிறகு நிவேதனம் செய்துகொண்டிருந்தார்கள். இவர்கள் பூஜை செய்து ஸ்தோத்திரங்கள் சொல்லி கரதாளத்துடன் பகவந்நாம சங்கீர்த்தனம் செய்யும் காலத்தில் இவரால் உபாஸிக்கப்படும் தைவம் இவர் முன்னே வந்து நின்று இவருடன் கூட சம்பாஷணம் செய்கிறதோ என்பதாக தூரத்திலிருந்து பார்க்கிறவர்களுக்கு தோன்றிக்கொண்டிருந்தது. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில் தர்சனத்திற்காக வந்திருக்கிறவர்கள் பக்கத்தில் இவர் மனம் திரும்பி சஞ்ச

லப்படுவதே கிடையாது.

சாமான்யமாய் ஸ்ரீஸ்வாமிகள் வெளியில் வருகிற காலத்திலும் விசேஷமான ஜனக்கூட்டத்தின் நடுவில் உத்ஸவாதிகளில் வரக்கூடிய சந்தர்ப்பங்களிலும் தம் திருஷ்டி கோசரமாகக்கூடிய தேவதாமூர்த்தி எங்கு இருந்தாலும் அல்லது ஒரு பிரதேசத்தில் ஒரு மூர்த்தி இருப்பதாக ஒரு தடவை தம் கண்ணுக்குத்தென்பட்டிருந்தாலும் அந்த மூர்த்திகள் அலங்காரத்திற்காக் வைக்கப்பட்டனவாயிருந்தாலும் கூட அப்படிப்பட்ட மூர்த்திகள் திருஷ்டிகோசரமானாலும் சரி அந்த மூர்த்திகள் இருக்கும் ஸ்தானத்திற்கு வந்தாலும் சரி எவ்விதமான சந்தர்ப்பமாயிருந்தாலும் அந்த திக்குக்கு எதிராக தம் ஹஸ்தங்களை கூப்பி தலையை தாழ்ந்து குனியாமல் முன்னுக்குப்புறப்படுகிறதில்லை. இந்த ஸ்வாமிகள் செய்து வந்த குரு பக்தி அசாதாரணமாயிருந்தது. பிரதிதினமும் ஸ்நானம் செய்து வந்தவுடன் தம் குருக்கள் தரித்துக்கொண்டிருந்த மரத்தினால் செய்யபபட்ட பாதுகைகளை தம் இரண்டு கைகளாலும் எடுத்துக்கொண்டு தாம் தாரணம் செய்துகொண்டிருக்கிற வஸ்திரங்களினால் அந்த பாதுகைகளின் மேலிருக்கப்பட்ட மண் தூசிகளை நன்றாகத் துடைத்து பிறகு தம் சிரஸ்ஸில் தரித்துக்கொண்டு

शरणं न भवति जननी शरणं न पिता न सोदरो नान्यः ।
परमं शरणमिदं मे चरणं मम शिरसि देशिकन्यस्तम् ॥

என்ற சுலோகத்தை அநேகம் தடவை வாக்கினால்

உச்சாரணம் செய்துகொண்டு அந்த பாதுகைகளை கண்களில் ஒற்றிக்கொள்வது, ஹிருதயத்தில் வைத்துக்கொள்வது, இந்த விதமாக தம் மனதிற்கு திருப்தியாகிற வரையில் குரு பாதுகைகளை சேவித்து பிறகு அந்த பாதுகைகளுக்கு கந்தம் சந்தனம் புஷ்பம் முதலிய அலங்காரம் செய்து பீடத்தில் வைத்துவிட்டு பிறகு தான் தம் நித்ய அனுஷ்டானங்களுககு ஆரம்பம் செய்வார்கள். ஸ்ரீ சந்திரமௌளீசுவரஸ்வாமி பூஜை சமயத்தில் தம் குரு பாதுகைகளுக்கும் ஒவ்வொரு இராத்திரியிலும் பால் சர்க்கரை முதலிய பதார்த்தங்களை நிவேதனம் செய்து வந்தார்கள். இதர மகாமந்திர ஜபங்கள் செய்வதற்கு முன்னுதாக ஒரு தினமாவது ஒரு காலத்திலாவது குரு நாம மந்திர ஜபம் செய்யாமலிருந்ததே இல்லை. பீடாபரிஹாரத்திற்காக தம்மிடம் வரும் சிஷ்ய ஜனங்களுக்கு அபிமந்திரணம் செய்துகொடுத்த விபூதியை முன்பு குரு பாதுகைகளில் அர்ப்பணம் செய்து குரு பாதுகா பிரசாதரூபமான விபூதியை மஹாமந்திரங்களால் அபிமந்திரணம் செய்து தம் குரு ஸ்மரணமும் குரு நாம ஸங்கீர்த்தனமும் செய்தே பீடிதரான ஜனங்களுக்கு அனுக்கிரஹித்துக்கொண்டிருந்தார்கள். தம் யாத்திரா காலங்களிலும் இதர முக்கிய அவசர காலங்களிலும் அவர்கள் விஷயத்தில் சிஷ்ய ஜனங்கள் விசேஷமாக காண்பிவிக்கிற பக்தி விசேஷத்தையும் விசுவாசத்தையும் உத்ஸாஹத்தையும் கௌரவத்தையும் கவனித்து

வரும்போது அக்காலத்தில் தம் குருக்களை ஞாபகப்படுத்திக்கொண்டு தாரை தாரையாய் ஆனந்த பாஷ்பத்தைப்பெருக்கி

" यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।

यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥

என்ற பகவதாக்ஞைப்படி தம் விஷயமாக ஜனங்களால் காண்பிக்கப்பட்ட கௌரவத்தையும் செய்யப்பட்ட ஸேவைகளையும் தம் குருக்களுக்கு மனதினால் அர்ப்பணம் செய்துகொண்டிருந்ததுமல்லாமல் தாம் செய்துவருகிற ஒவ்வொரு ஸத்கர்மத்தையும் அந்த கர்மம் முடிவு பெற்றதும் தம் குருக்களுக்கு அர்ப்பணம் செய்துகொண்டிருந்தார். தம்மிடத்தில் வந்த சிஷியர்களுடன் சம்பாஷணம் செய்துகொண்டிருக்கும் சமயத்தில் எவ்விதமாவது தம் குருக்களின் பிரஸ்தாபத்தை தருவித்துக்கொள்ளாமல் இருந்ததில்லை. அப்படி குருக்கள் விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டபிறகு ஒன்று ஒன்றரை மணிகாலம் வரையில் அவர் கீர்த்தியையும் மஹிமையையும் அவர் ஞானத்தையும் அவர் செய்து வந்த தைவபக்தியையும் அவர்கள் தம் விஷயத்தில் செய்திருக்கிற அனுக்கிரஹத்தையும் விஸ்தாரமாய்த்தெரிவித்து தாம் ஆனந்தபாஷ்பம் விட்டுக்கொண்டு தம்மிடம் வந்தவர்களுக்கும் தம்மைப்போலவே பக்திபாவனை உண்டாகும்படி செய்து வந்தார்கள். எந்த சந்தர்ப்பத்திலும் அந்த குரு அனுக்கிரஹமின்றி வேறு சக்தி தம்மிடத்திலிருப்பதாக மனதிலும் கூட நினைக்க

வில்லை. வாக்கினாலும் சொல்லவில்லை. இவர் குரு பக்தியைக்குறித்து விசேஷமாகச் சொல்லுவதேன்? இந்த பூஜனீயரால் சொல்லப்பட்ட, இதனடியில் கண்டிருக்கிற குருஸ்தோத்திரத்தைப்பார்ப்பதினால் இவர் செய்துவந்த குருபக்திக்கிரமம் ஸ்பஷ்டமாகி லோகத்திற்கு பரமப்பிரமாணமாக ஏற்படும்.

## ஸ்ரீ குருஸ்துதி.

[பக்திஸுதாதரங்கிணீ பக்கம் 210—214.]

गुरुवरकरुणां हित्वा को वा स्वेष्टं लभेत लोकेऽस्मिन् ।
तस्माद्गुरुवरचरणं भज चेतः सर्वसौख्यमूलं त्वम् ॥ १ ॥
गुरुवर करुणासागर तरुणारुणवस्त्रसंवृताङ्ग विभो ।
कुरु करुणां मयि दीने सुरवरतरुगर्वहरणनिपुणकर ॥ २ ॥
हित्वा तव चरणं मम शरणं जानासि नान्यदस्तीति ।
गुरुवर नृसिंह तस्मात्पालय बुद्धिं सुनिश्चलां दत्त्वा ॥ ३ ॥
बहुशः कृतपापमपि क्रियमाणाघं गुरो पाहि ।
दोषाकरमपि शंभुः धत्ते शीर्षे न किं ब्रूहि ॥ ४ ॥
नावोचः किं पूर्वं त्वमपि भवेः श्रीसदाशिवेन्द्राभः ।
इति कस्मान्मम ममता देहे जागर्ति गुरुवर ब्रूहि ॥ ५ ॥
स्वप्ने ममोत्तमाङ्गे स्वयमाहूयातिकरुणया चरणौ ।
दधतस्तव निकटे मम गुरुवर नरसिंह याचना कास्ति ॥ ६ ॥
स्वप्नेऽपि रामनिकटे मच्छ्रेयः प्रार्थनाकर्तुः ।
गुरुवर तव निकटे मम कर्तव्या प्रार्थना कास्ति ॥ ७ ॥
नरसिंहापररूपे मत्पालनबद्धकङ्कणे भवति ।
जाग्रति सति मम निकटे गुरुवर भीतिर्भवेत्कस्मात् ॥ ८ ॥

कुत्र गतोऽत्रैवाहं तिष्ठामीत्यभयवितरणव्यग्रे ।
भवति भवतापहारिणि गुरुवर भीतिः कुतस्त्या मे ॥ ९ ॥
त्वच्चरणभक्तिपूरितमानसमेनं गुरो विधायाशु ।
सकलभयशून्यहृदयं कुरु करुणावारिधे नृसिंहगुरो ॥ १० ॥
प्रणताद्वैतविबोधनमचिरात्कर्तुं गिरेव नाम्ना च ।
स्वीकृतनरसिंहाभिधमनिशं कलयामि गुरुवरं कंचित् ॥ ११ ॥
प्रत्यक्षं बहुकरुणं प्रविहाय त्वां गुरोऽन्यभजनं मे ।
करसंस्थान्नविसर्जनपूर्वकभिक्षाटनं न किमु ॥ १२ ॥
नैसर्गिककरुणाजनिभूमौ मन्मूर्तिमद्भाग्ये ।
त्वय्यपराधा मत्का गुरुवर कुर्वन्ति कल्मषं किं भो ॥ १३ ॥
चित्तं मामकमनिशं सच्चित्सुखरूपगं दृढं प्रभवेत् ।
यद्वत्तथाशु कृत्वा पालय सततं नृसिंहगुरो ॥ १४ ॥
विकृतिर्नैव मम स्यात्कायेऽस्मिंश्छिद्यमानेऽपि ।
चित्ते यथा तथा त्वं कुरु करुणावारिधे नृसिंहगुरो ॥ १५ ॥
सच्चित्सुखरूपोऽहं नैवेदं दृश्यमित्यचलाम् ।
बुद्धिं प्रयच्छ मह्यं करुणामृतवारिधे नृसिंहगुरो ॥ १६ ॥
अपुनःस्मरणं लोकं देहं शास्त्रं च विस्मृत्य ।
आनन्दं निरवधिकं प्राप्नोमि कदा नृसिंहगुरो ॥ १७ ॥
स्थूले सूक्ष्मे हेतौ देहेऽहंतां समुत्सृज्य ।
चिद्रूपेऽहंता मे समुदेति कदा नृसिंहगुरो ॥ १८ ॥

ஸ்ரீஸ்வாமிகள் குரு பக்தி செய்யவேண்டிய ரீதியை மற்றொரு விதமாக லோகத்திற்கு உபதேசம் செய்தார்கள். இந்த பாத கண்டத்தில் வேத பாஹ்யங்களான அநேக மதங்கள் ஏற்பட்டு நாநாவிதமாக

தேசம் வியவஸ்தை கெட்டுப்போயிருந்த காலத்தில் இந்த பாரத பூமியில் அவதரித்து வேத பிராமாண்யத்தை ஸ்தாபித்து சுத்த அத்வைத வித்யை பரவச் செய்ததினால் பாரத பூமியை உத்தாரணம் செய்தவராகியும் ஈசுவர அம்ச ஸம்பூதராயும் ஜகத்பிரசித்தமான மஹிமைகளுக்கு இருப்பிடமாயுமிருந்த ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசாரியார் அவர்களை அனுசரித்தவர்களில் ஒவ்வொருவரும், நன்றி பாராட்டுவதற்கும் சிரேயஸ்ஸை சம்பாதித்துக்கொள்வதற்கும் பண்டிதபாமர சாதாரணமாய் தங்கள் நடவடிக்கைகளால் அந்த குரு விஷயமான பக்தியைக்காண்பிக்கவில்லையென்றகுறைவு ஸ்ரீஸ்வாமிகள் மனதில் பலமாய் உண்டாயிற்று.

இந்தக்குறையை போக்கடித்து லோகத்திற்கு ஹிதத்தை உண்டுபண்ணவேண்டுமென்ற உத்தேசத்தினால் இரண்டாவது தடவை தக்ஷிண தேசயாத்திரையை பூர்த்தி செய்துகொண்டு சிருங்கேரிக்குத்திரும்பி வந்தமேல் வைசாக சுக்கில பஞ்சமி பகவத்பாதாள் அவதாரதினமாகையால் அந்த தினத்தில் ராம கிருஷ்ண முதலிய அவதார தினங்கள் போலவே பகவத்பாதர்களின் ஜயந்தி உத்ஸவம் நியமத்துடனும் விமரிசையாயும் ஆசரணம் செய்யவேண்டியது ஆவசியகமென்று தீர்மானித்தார்கள். இந்த உத்சவம் சுக்கில பிரதமை முதல் பஞ்சமி வரையிலும் நடக்கவேண்டுமென்றும் உத்ஸவக்கிரமம் வெகுகாலமிருந்து குரு பரம்பரையில் வந்திருக்கிறதும் மடத்தில் ஆசா

திக்கப்படுகிறதுமான ஆசாரிய மூர்த்திக்கு காலையில் விசேஷமான அபிஷேகம் பூஜை நிவேதனம் இவை கள் நடத்த வேண்டும்; அந்த காலத்தில் ஸ்ரீமத் ஆசா ர்யகளால் நிர்மிதமான பிரஸ்தானத்திரய கிரந்த பா ராயணமும் வேதபாராயணமும், பிராம்மணர்களைக் க்கொண்டு நடத்தவேண்டும். சாயங்காலம் அந்த மகானல் உபதேசிக்கப் பட்டிருக்கும் தத்வமார்க்க ங்களைக்குறித்து எளிய நடையில் ஸ்ரீஸ்வாமிகள் தானே சிஷ்ய ஜனங்களுக்கு உபதேசம் செய்து பிறகு சிருங்கேரி நகரம் நாலுவீதிகளிலும் ஸ்ரீமதாசா ரிய சரித்திர படனம் அவர் நாம ஸங்கீர்த்தனம் இவைகளுடன் உத்ஸவம் நடத்துவது, பஞ்சமிதினம் காலையிலேயே பூஜையான பிறகு உத்ஸவத்தை நிறை வேற்றி வஸந்த பூஜை செய்வித்து பிராம்மண சந்தர்ப் பணம் செய்யவேண்டியது; இந்த கிராமத்தில் ஜன் மோத்ஸவ ஸம்ரம்பம் நடத்தவேண்டியதென்று திட் டம் செய்து, இந்த ஐந்து நாள் உத்ஸவகாலத்திலும் ஸ்ரீஸ்வாமிகள் தாம் விஜயம் செய்து, உத்ஸவத்தை நடப்பித்து ஜனங்களுக்கு குரு பக்தியை போதனம் செய்தார்கள். இந்த ஸித்தஸங்கல்பர் எந்த உத்தே சத்தினல் உத்ஸவத்தை நடத்த ஆரம்பம் செய்தார் களோ அந்த உத்தேசம் வெகு சீக்கிரத்திலேயே எவ் விதமான பிரயத்தினமுமில்லாமல் நிறைவேறி தத்கால த்தில் ஹிமாசலத்திற்கும் சேதுவுக்கும் மத்தியிலுள்ள பிரதேசத்தில் இருக்கும் எல்லா தேசங்களிலும் அநே



ஆதி ஆசார்யாள் உத்ஸவ விக்ரஹமும்
ஸ்ரீ மஹாஸ்வாமிகளும்.

கம் பெயரால் ஆரம்பிக்கப்பட்டு ஸ்ரீமதாசாரிய ஜயந்தி உத்ஸவம் விஸ்தாரமாக நடத்தப்பட்டு வருகிறது.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் குரு பக்தியைக்காண்பிவிப்பதற்காக குரு ஜயந்தி உத்சவம் நடத்த ஏற்பாடு செய்தது போலவே சிருங்கேரியில் பார்வதி பரமேசுவர மூர்த்திகளுக்கு கலியாணோத்ஸவம் ஆர்த்திர உத்ஸவம் முதலிய அநேக உத்ஸவங்கள் ஸ்வாமி விஷயமாய் நடக்கும்படி ஏற்பாடுசெய்து தைவ பக்தியை ஜனங்களுக்குக்காண்பித்தார்கள். இந்தப்பிரகாரம் ஈசுவர பூஜை, பகவத் பஜனம் ஈசுவர தர்சனம் உத்ஸவாசரணம் முதலிய சாமானிய பக்தி நடவடிக்கைகள் மற்ற அதிகாரிகளைப்பற்றியதாயிருந்தாலும் தாம் முறைப்படி அனுஷ்டானம் செய்து மற்றவர்கள் தம்மை அனுசரித்து கிருதார்த்தராகும்படி செய்தார்கள்.

ஆஸ்திக்யம் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் வேரூன்றிநிலைத்திருந்தது. வேதசாஸ்திரங்களில் இவருக்கு இருந்த நம்பிக்கை மிகப் பிரபலமாயிருந்தது. சுருதிகளை அனுசரித்த ஸ்மிருதிகளிலும் அவைகளைத் தொடர்ந்த புராணங்களிலும் இவர்களுக்கு இருந்த விசுவாசத்திற்கு அளவில்லை. சுருதிகளில் சொல்லியிருக்கும் கர்மாக்களை அனுஷ்டானம் செய்கிறவர்களிடத்தில் கௌரவபுத்தி நிறைந்திருந்தது. வேதார்த்த விசாரம் செய்கிற மீமாம்ஸா சாஸ்திரத்தினால் வேதத்தில் விதி என்றும் மந்திரம் என்றும் மற்றும் அர்த்தவாதம் என்றும் மூன்று விதமாக பிரிக்கபபட்டு அர்த்தவாத வாக்கியத்திற்கு

ஸ்வார்த்தத்தில் தாத்பரியம் இல்லையாகையால் விதி வாக்யத்துடன் சேர்ந்து அந்த அர்த்தவாதத்திற்கு பிராமாண்யம் நிர்ணயிக்கப்பட்டிருந்தாலும் அந்த சாஸ்திரத்தின் விஷயம் ஸ்ரீஸ்வாமிகள் தெரிந்தவர்களானாலும் இவருக்கு வேதத்தில் இருந்த நம்பிக்கையினால் எல்லா பாகங்களும் சமமாக பரம பிரமாணம் என்று அவர்கள் எண்ணியிருந்ததாகத்தோன்றிக்கொண்டிருந்ததே தவிர எவ்வித சந்தர்ப்பத்திலும் எவ்வளவு பாகத்தையாகிலும் சாமானியமென்றாவது அப்பிரமாணமென்றாவது தெரிந்துகொண்டிருக்கவில்லை.

இவ்விதம் பரமபிரமாணபூதமான வேதம் ஒரு புருஷனால், அல்லது பலர்களால் செய்யப்பட்டது. வெவ்வேறுகாலங்களில் உண்டானது, என்றவிதமான இக்காலத்திய ஜனங்களின் கல்பனை தம் செவியில் விழும் சந்தர்ப்பத்தில் கர்ணகடூரமான அந்த சப்தங்களினால் தாம் வெகுவாக கஷ்டப்பட்டுக்கொண்டாலும் அப்படி சொல்லுகிறவர்களையும் திரஸ்காரம் செய்து கொண்டிருக்கவில்லை. அப்படிப்பட்ட ஜனங்களை சாஸ்திரத்தை ஒற்று இருக்கும் யுக்திகளினாலும் லோகதிருஷ்டாந்தங்களினாலும் சமாதானப்படுத்தி வேதசாஸ்திரங்களில் நம்பிக்கை உண்டாகும்படி செய்துவந்தார்கள். இந்த விஷயத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சொல்லிக்கொண்டிருந்த சிலயுக்திகள் மாத்திரம் இங்கு காண்பிவிக்கப்பட்டிருக்கின்றன.

வேதம் பௌருஷேயமானது, வெவ்வேறு காலங்

களில் உண்டானது அல்லவென்று சொல்லும் விஷயத்தில் இதுவரையிலும் முன்னோரான மகரிஷிகளாலும், பெரிய பண்டிதர்களாலும், ஊஹாபோஹ விசாரணையில் முதன்மையானவரென்று தெரிந்துகொண்டிருக்கிற, இக்காலத்தியவர்களாலும், வேதத்திய கர்த்தா, காலநிர்ணயம் இவைகள் திருப்திகரமான பிரமாணங்களாலும் நேரான யுக்திகளாலும் நிச்சயிக்கப்படாமலே இருக்கிற ஒரு காரணத்தினாலேயே, வேதம் அபௌருஷேயமானது அனாதியானது என்று தாராளமாக ஸ்தாபிக்கலாம். இரண்டாவது யுக்தி, இந்த பரதகண்டத்தில் வேத அத்தியயனம் செய்தவர்களெல்லாம் அநேக வருஷகாலம் நியமங்களுடன் குருகுலவாசம் செய்து குருமுகமாகவே அத்தியயனம் செய்து ஆவர்த்தி செய்துகொண்டிருப்பதினால் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருப்பதாகத் தெரியவருகிறதே தவிர புஸ்தகம் முதலிய சகாயத்தினால் வேதத்தை உபஸ்திதியில் வைத்திருப்பதாகவாவது, அப்படி செய்வதற்கு சாத்தியமும் அனுகூலமும் இருந்ததாகவாவது தெரியவரவில்லை. வேதம் பிரசாரமுள்ள எல்லா தேசத்திற்கும் ஒரே குரு இருந்து வேதாத்தியயனத்தை ஒரே ரீதியில் நடத்திவந்திருக்கலாமென்று சொல்லுவது யுக்திக்கு ஒற்றதாயும், முடியக்கூடியதுமல்லவன்றோ? இந்த காலத்தில் வேதப் பிரசாரமிருக்கக்கூடிய எல்லா தேசங்களிலும் அல்லது அத்தியயனம் செய்துள்ள எந்த மனுஷியனாலாவது

வேதத்தில் ஒரு அக்ஷரமாவது உதாத்தம், அனுதாத்தம் முதலிய ஸ்வரங்களில் ஒரு ஸ்வரமாவது வித்தியாசப்படுத்தியாவது ஆனுபூர்வியில் வித்தியாஸமுள்ளதாகவாவது சொல்லுவதாகத் தெரியவரவில்லை. அப்படி சொல்லுவதற்கு சாத்தியமாயிருப்பதாகவும் தோன்றவில்லை. பாரதம் முதலிய இதிஹாஸங்கள் பௌருஷேயமென்பது அவைகளின் கர்த்தா தெரிந்திருப்பதினால் தெளிவாயிருக்கிறது. இப்படிப்பட்ட புராணங்களில் தேசபேதத்தினாலும் பாடபேதத்தினாலும் புஸ்தகபேதத்தினாலும் அக்ஷரவித்தியாஸங்களும் பாடபேதங்களும், ஆனுபூர்வீகளில் மாறுதலும் கூட அநேகமாய் ஏற்பட்டிருப்பதாகக் காணப்படுகிறது. அதுபோல ஒரு புருஷனால் செய்யப்பட்டதாயும் ஆதியுள்ளதாயும் இருக்குமானால் இந்த வேதமும் மாறாமல் இருப்பதற்குக் காரணமில்லை ஆகையால் சிருஷ்டிகாலத்திற்குமுன் சர்வஜ்ஞனை பரமேசுவரன் அநாதியான வேதத்தை சரியான ஆனுபூர்வியுடன் ஸ்மரித்துக்கொள்வாரென்றும் அந்த பகவானுடைய முகத்திலிருந்து அத்தியயனம் செய்த சதுர்முகப்பிரம்மன் மூலமாக வேதம் பரவிவந்ததென்றும், அதுமுதல் இன்றுவரையிலும் சிஷ்யபிரசிஷ்யக் கிரமமாய் இந்த பாரதபூமியில் ஒரேவிதமாக பிரசாரமடைந்து வருகிறதென்று சொல்லுகிற சாஸ்திரங்களை நம்பாத பக்ஷத்தில் வேறே காரணங்களால் வேதங்களில் வித்தியாஸங்களில்லாமலிருப்பதை சாதிப்பதற்கு ஆகமாட்டாது.

உலகத்தில் தெரியாத விஷயத்தையும் அர்த்தத்தையும் சொல்லக்கூடியதும் காண்பிக்கக்கூடியதுமானது வேதத்தைவிட வேறே ஒன்றுமல்ல. இப்படிப்பட்ட வேதத்தை சாங்கமாக அத்தியயனம் செய்து அர்த்தவிசாரம் செய்து நன்றாகத்தெரிந்துகொண்டால் பிரபஞ்ச ஜ்ஞானத்தில் வேதம் முக்கியமான ஒரு காரணமென்று வெளியாகிறது. பிரபஞ்சமென்றால் மனிதனுடைய கண்ணுக்குப் புலப்படக்கூடியதை மாத்திரம் பிரபஞ்சமென்று தெரிந்துகொள்ளக்கூடியதல்ல. காணப்படாத பிரபஞ்சத்தை தெரிந்துகொள்ளவேண்டுமானாலும் அதை நம்பவேண்டுமானாலும் வேதத்தினால் தெரிந்துகொள்ளவேண்டும். வேதார்த்தத்தைத் தெரிந்த மகான்களால் சொல்லப்பட்டிருக்கிற அனுபவார்த்தங்களால் நம்பவேண்டியதேதவிர வேறே ஒரு சாதனமுமில்லை. பசு பக்ஷி முதலிய திரியக் ஜந்துக்களுக்குமுள்ள சாதாரணமான ஆகாரம் நித்திரை முதலானவைகளுக்கு மாத்திரம் உபயோகமான அர்த்தங்களைத் தெரிந்துகொள்வதற்கு வேதம் அதிக ஆவசியகமல்லவென்பதை சொல்லவேண்டியதில்லை. அவ்விதமான அதி அல்பமாகிய பிரயோஜனமுள்ள இவ்வுலகத்தில் உள்ள அர்த்தங்களை சொல்லுவதற்காக வேதம் ஏற்படவில்லை. ஸகல பிரபஞ்சங்களுக்கும் உத்தாரகமான வேதம் அனாதியாயில்லாமல் உண்டானதாய் இருக்கும்பக்ஷத்தில் சிருஷ்டி ஸ்திதி முதலியவைகளுக்கு அவகாசமே இருக்கமாட்டாது. இப்படிப்பட்ட மே

லேசொன்ன யுக்திகளால், வேதம் அநாதியானது, அறியப்படாத அர்த்தங்களை அறிவிக்கக்கூடியது, ஆகையினாலேயே பரமபிரமாணமென்று நம்பவேண்டுமென்று, வேதம் அப்பிரமாணமென்று சொல்லுகிறவர்களை சமாதானப்படுத்திக்கொண்டிருந்தார்கள்.

வேதம் பிரமாணமென்று அங்கீகாரம் செய்தவர்களில் சிலர் ஸ்வத: ப்ரகாசமாகவும் நிஷ்பக்ஷபாதமான அர்த்தத்தை சொல்லக்கூடியதுமான வேதத்தில் பூர்வகாண்டமெல்லாம் கர்மத்திற்கு உபயோகியாவும் ஜீவஹிம்சாகரமான கர்மத்தை சொல்லுவதாயிருப்பதினால் இவ்விதமான வேதபாகத்தை பிரமாணமென்று நம்புவதும் அதன்விஷயத்தில் கௌரவபுத்தி வைப்பதும் எப்படி என்று விசாரம் செய்துகொண்டிருந்தார்கள். இந்த விசாரத்திற்கு மூலப்பிரமாணம், சார்வாக சாஸ்திரமேயானாலும் அப்படி கேள்வி கேட்கிறவர்களை, யுக்திவாதத்தினாலேயே ஸ்வாமிகள் சமாதானப்படுத்திக்கொண்டிருந்தார்களேதவிர உதாசீனம் செய்துகொண்டிருக்கவில்லை. அந்த ரீதியும் இந்த பிரகரணத்தில் சுருக்கமாய் காண்பிவித்திருக்கிறது. பிரபஞ்சத்தில் கேவலம் திருஷ்டார்த்தபரரான ஜனங்களும் தம் உதரபூரணத்திற்காக பசு பக்ஷி முதலிய அநேக ஜீவஹிம்சை செய்வது சாதாரணமாயிருப்பதன்றோ? அவ்வித ஜனங்களுக்கு ஜீவஹிம்சையில் சங்கை இல்லாமல் பிரவிர்த்தி இருக்கிறதென்ற விஷயத்தில் சந்தேகமே இல்லை. இந்த ஜனங்கள் வேதபிரமாண்

யத்தை அநேகமாய் அங்கீகரிக்கக் கூடியவருமல்ல. ஆகையால் இந்த மேலேசொன்ன விசாரத்தில் அவர்கள் சம்பந்தப்பட்டவரல்ல. சிங்கம், புலி முதலிய பலமுள்ள துஷ்டமிருகங்கள் அரண்யத்திலுள்ள அநேக பிராணிகளை ஆகாரத்திற்காக ஹிம்சை செய்து ஜீவனம் செய்கின்றன. அவைகள் ஹிம்சை செய்யக் கூடாதென்ற சாஸ்திரத்திற்கு விஷயமல்ல. சாமானியமாக எந்த ஜீவஹிம்சையும் செய்யக்கூடாதென்ற வேதத்திலுள்ள நிஷேதசாஸ்திரத்திற்கு வேதத்தை பிரமாணமாக நம்பியிருக்கிற ஜனங்கள் மட்டும் விஷயமாயிருக்கிறார்கள். எந்த வேதத்தை பிரமாணமாக நம்பி பிராணிஹிம்சை நிந்திதமென்று சொல்லுகிறார்களோ அந்த வேதத்தில் பிராணிஹிம்சை செய்யக்கூடாதென்ற சாமான்ய சாஸ்திரத்தை அக்னிஷோமீய யாகத்தில் பசு ஹிம்சை செய்யவேண்டுமென்ற விசேஷ சாஸ்திரத்தால் சங்கோசம் செய்திருப்பதை பிரமாணமாக நம்பாமலிருப்பதற்கு மூலமென்ன? பசு ஹிம்சையினால் திருஷ்டமாக உண்டாகக்கூடிய பாதகம் என்ன இருக்கிறது? பிராணி ஹிம்சை செய்வதினால் அதிருஷ்டமான பாபம் சம்பவிக்கிறதென்று பின்வாங்கவேண்டும். அந்த விஷயம் எந்த பிரமாணத்தால் கண்டுகொள்ளப்பட்டது? வேதங்களாலும் அவைகளின் அர்த்தத்தைத் தெரிவிக்கிற சாஸ்திரங்களாலும் ஹிம்சை பாபத்தைக் கொடுக்கக்கூடியதென்று தெரிந்துகொண்டதாக ஒப்புக்கொள்ளவேண்

டும். வேதசாஸ்திரங்கள் காலவிசேஷத்தில் ஆத்மார்த்தமாக மாத்திரமல்லாமல் செய்யக்கூடிய இம்சைபுண்ணியத்திற்கு காரணமென்று சொல்லியிருந்தால் அந்த சாஸ்திரத்தை திரஸ்காரம் செய்வதில், விதிசாஸ்திரத்திற்கு கட்டுப்பட்டவர்களுககு ஸ்வாதந்திரியம் எங்கு வந்தது? லோகவியவகாரப்படி ஒரு மனிதன் மற்றொருவனை அடிப்பதும் கொல்லுவதும், சிக்ஷைக்குக் காரணமென்று இராஜாஜ்ஞைரூபமான சட்டங்களால் விதிக்கப்பட்டு இருக்கவில்லையா? அந்த ராஜாஜ்ஞையை மீறி கொலை முதலிய காரியங்களை நடத்துகிறவர்கள் சிக்ஷிக்கப்பட்டுவருகிற விஷயம் ஆபாலவிருத்தரும் தெரிந்துகொண்டேயிருக்கிறார்கள். இந்த சந்தர்ப்பத்தில் இராஜாஜ்ஞையினால் நியமிக்கப்பட்ட ஒரு மனிதன் மற்றொரு மனிதனை அவனால் செய்யப்பட்ட குற்றத்திற்காக இராஜாஜ்ஞையை அநுசரித்துக்கொல்லுகிறானல்லவா? ஒரு மனிதன் மற்றொருவனை அடிப்பதும் கொல்லுவதும் சிக்ஷார்ஹம் என்ற சாமாண்யவிதியை மாத்திரம் இந்த சந்தர்ப்பத்தில் உபயோகப்படுத்திக்கொள்ளுவதானால் ராஜனால் ஆஜ்ஞாபிக்கப்பட்டு மற்றொருவனை கொன்ற இராஜபுருஷனும் கொலை குற்றம் செயதவனாகி, அவனுக்கும் அதே சிக்ஷை விதிக்கவேண்டி வருகிறதல்லவா? அந்த சந்தர்ப்பத்தில் ராஜாஜ்ஞையினால் செய்யப்பட்ட இம்சை, இம்சையல்லவென்றும் அப்படி செய்வது அந்த வேலைக்காரனுக்கு தர்மமென்றும் செய்யவேண்டிய காரியமென்றும் சொல்ல

வேண்டிவருகிறது. இம்சையும் இம்சை செய்யப்பட்டவனுடைய அநுபவமும் ராஜாஜ்ஞையால் செய்யப்பட்ட இம்சையிலும் ஸ்வேச்சையாய் செய்யப்பட்ட இம்சையிலும் ஒரேவிதமாக இருப்பதேதவிர அவைகளில் தாரதம்யம் ஒன்றும் இருப்பதில்லை. ஆகையால் இம்சை சில சமயங்களில் அஹிம்ஸையாக பரிணமிக்கிறது என்று ஒப்புக்கொள்ளவேண்டியிருக்கிறதல்லவா ? அதுபோல "श्रुतिस्मृती ममैवाज्ञे" என்ற பிரமாணப்படி ஈசுவராஜ்ஞாரூபமான வேதத்தை அநுசரித்து செய்யக்கூடிய இம்சை அஹிம்ஸையாகவே பரிணமத்தை அடைவதால் தோஷத்திற்குக் காரணமாகிறதில்லை.

க்ஷத்திரியர்களுக்கு யுத்தம் தர்மமென்று சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. அவனுக்கு தர்மமானயுத்தத்தை அநுஷ்டானம் செய்வதில் அநேக பிராணிகள் கொல்லப்படுகிறார்கள். யுத்தத்தில் ஜயம் பெற்ற ராஜன் விஸ்தாரமான ராஜ்யத்தை தனக்கு ஸ்வாதீனப்படுத்திக்கொண்டு இஷ்டம் போல் சுகத்தை அநுபவிக்கிறான்.

இந்த சந்தர்ப்பத்தில் கேவலம் தன் சம்பத்திற்காகவும் தன் சுகத்திற்காகவும் யுத்தத்தை ஆரம்பித்து அநேக லக்ஷம் பிராணிகளைக்கொன்று மிகக்ரூரமான ஹிம்ஸையை செய்யக்கூடிய ராஜன் வேதத்தினாலும் அதை அநுசரித்த சாஸ்திரங்களினாலும் அல்லது சட்டத்தினாலாவது குற்றவாளியென்றும் சிக்ஷைக்குரிய

யவனென்றும் தீர்மானிக்கப்பட்டு சிக்ஷிக்கப்படுவதுண்டோ? அந்த ராஜனே யுத்தகாலமல்லாத மற்ற சமயங்களில் தன் சொந்த பிரயோஜனத்திற்காக மாத்திரம் ரகசியமாகவாவது வெளிப்படையாகவாவது ஒரு மனிதனை ஹிம்ஸை செய்தாலும் சரி, கொன்றாலும் சரி, அந்த ராஜன் நிந்திக்கப்படுவதில்லையா? அவன் சிக்ஷைக்குரியவனென்று நியாயாதிபதிகளால் தீர்மானிக்கப்படுவதில்லையா? யுத்த காலத்தில் அநேக லக்ஷ ஜனங்களைக்கொன்று தன் பிரயோஜனத்தை ராஜன் அடைந்திருந்தாலும் நிர்தோஷனென்று சொல்லுவதற்கும் மற்ற காலங்களில் அந்த ராஜனே ஒரு மனிதனைக் கொன்றாலும் துஷ்டனென்றும் தோஷி என்றும் அபிப்பிராயப்படுவதற்கும் சாஸ்திரம் பிரமாணமே யல்லாமல் யுக்திகள் என்ன விருக்கிறது. இதுபோல சாஸ்திரீயமான கர்மங்களை நடத்தும் காலத்தில் சாஸ்திராதாரத்தினால் செய்யக்கூடிய ஹிம்ஸை ஹிம்ஸாகரமானதல்லவென்று தெரிந்து கொள்ளுவதற்கு வேறே யுக்திகளும் பிரமாணங்களும் வேண்டுமோ? ஒரு வேளை மேல்சொன்ன லோக திருஷ்டாந்தத்தினால் தப்பிதம் செய்தவன் இராஜ தண்டனைக்கு உள்ளாகிறான். அவனால் செய்யப்பட்ட தப்பிதத்திற்காக இராஜனால் விதிக்கப்பட்ட ஹிம்ஸையை அந்த ராஜன் வேலைக்காரனைக்கொண்டு நடத்துகிறான். அதனால் அந்தவேலைக்காரனாவது ராஜனாவது தோஷமுள்ளவனாகிறதில்லையென்று சொல்லுவது சகஜமாயிருக்கலாம். ஞான

சூன்யமான பசு யாருக்கு எவ்விதமான தொந்திரவு செய்கிறது. அதனால் இம்சிக்கப்பட்டவர் யார்? எந்த குற்றத்திற்காக அந்த நிரபராதமான பசுவை இம்சிக்கவேண்டும். ஆகையால் நிரபராதமான பசுவின் இம்சை, இம்சையாகிறதாகையால் ஸ்வர்க்காதி சுகங்களில் அனுபவத்திற்காக இம்சையுடன் கூடிய யாகத்தைச்செய்கிற யஜமானன் தோஷமுள்ளவனென்று சொல்லலாம். இந்த சங்கையும் யுக்தமானதல்ல. யாகத்திய பலனில் யஜமானனுக்கு உத்தேசமிருந்து செய்யக்கூடிய யாகம் ஸ்வப்பிரயோஜனத்திற்காகவே செய்வதாயிருந்தாலும், ஸ்வபிரயோஜனத்திற்காக யுத்தம் செய்யத்தக்க ராஜன் அவனுக்கு யுத்தம் ஸ்வகர்மமாக விதிக்கப்பட்டிருக்கிறகாரணத்தால் ஸ்வகர்மாசரணம் செய்கிறதினால் எப்படி தோஷியாகிறதில்லையோ அதுபோல ஸ்வகர்மமாக விதிக்கப்பட்ட யாகத்தைச் செய்தவனும் விதியில் சொல்லப்பட்ட இம்சை செய்தாலும் அவன் தோஷியாக ஆகிறதில்லை. இம்சிக்கப்பட்ட பசு யாகத்திற்காகவே ஈசுவரனால் சிருஷ்டி செய்யப்பட்டதென்று यज्ञार्थं पशवः सृष्टाः என்ற சாஸ்திரத்தால் தெரியவருகிறது. எந்த உத்தேசத்தினால் எந்த பதார்த்தம் ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறதோ அந்த பதார்த்தத்தை அந்த உத்தேசத்தில் விநியோகம் செய்வதினால் தோஷம் ஒன்றுமில்லை. கோக்கள் மனிதனின் பிரயோஜனத்திற்காகவே ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்டதாக தெரிகிறதானே உலகத்தில் மழை

யிலும் வெய்யிலிலும் எருதுகளை இம்சித்து வியவசாயத்தினால் ஜீவிக்கிறார்கள். அப்படி தெரிந்துகொள்ளாமல் போனால் அதற்காகவே ஈசுவரனால் சிருஷ்டிக்கப்படாத பக்ஷத்தில் அது இம்சையாகிறதில்லையோ இதுபோலவே அநேக திருஷ்டாந்தங்களினால் மேல் சங்கையை ஆலோசிப்பதினால் தானே விலக்கிக்கொள்ளலாமாகையால் கர்மபாகங்களை சொல்லக்கூடிய வேதத்தை அப்பிரமாணமென்று சந்தேகிப்பதற்காகவாவது அதன் விஷயத்தில் உதாசீனதைகொள்ளுவதற்காகவாவது காரணமில்லையாகையால் வேதப்பிராமாண்யம் அங்கீகரித்தவர்களில், சிலர்களை சமாதானப்படுத்திக்கொண்டிருந்தார்கள்

சிலர் புராணங்கள் பிரமாணமல்லவென்று சந்தேகப்பட்டுக்கொண்டிருந்தார்கள். அப்படி சந்தேகப்படுவதற்கு காரணமென்னவென்றால் பதினெட்டு புராணங்களையும் வியாசர் ஒருவரே சொல்லியிருப்பதாக பிரசித்தி இருக்கிறது. ஒரு புராணம் மற்றொரு புராணத்தை அனுசரித்திருக்கவில்லை. எல்லாப்புராணங்களும் வெவ்வேறு அர்த்தத்தை தெரிவிப்பதாகவும் ஸ்வதந்திரங்களாயுமிருக்கின்றன. ஒவ்வொரு புராணத்திலும் அந்தப்புராணமும் அதில் சொல்லியிருக்கும் வஸ்துவுமே சர்வோத்தமமென்றும் ஸர்வபிராமாணமென்றும் சொல்லியிருக்கிறது. மற்றும், ஒன்றுக்கொன்று விரோதமுள்ள அர்த்தங்களால் ஒருவரால் செய்யப்பட்ட இந்த புராணங்களில் எல்லாம்

பிரமாணமென்றும் அவைகளில் சொல்லப்பட்ட அர்த்தங்களெல்லாம் நிச்சயமானதென்றும் நம்புவது எப்படி; ஆகையால் புராணங்கள் பிரமாணமானவையல்ல என்று ஆக்ஷேபித்துக்கொண்டிருந்தார்கள்.

சொன்னவர் ஒருவராயிருப்பதினாலேயே எல்லா புராணங்களையும் பிரமாணங்களென்று தெரிந்துகொள்ளவேண்டும். சொன்னவர்கள் அநேகராயிருந்தால் ஒன்றுக்கொன்று விரோதமான அர்த்தத்தைச் சொல்லியிருப்பது முதலான வித்தியாசங்கள் சகஜமாகவே உண்டாயிருக்கலாம். அப்படியில்லாமல் ஒருவராலேயே சொல்லப்பட்டு விரோதமுள்ள அர்த்தத்தை சொல்லுவதாகத் தோன்றுவதால் இந்த விஷயம் ஆலோசிக்க வேண்டியதாயிருக்கிறது. ஸர்வவியாபகனும் அத்விதீயனும் இருக்கிற பரமாத்மஸ்வரூபத்தை அநேகவிதமாக சொல்லுவதற்கு அவகாசமுண்டானதினாலல்லவோ அது விசாரிக்கவேண்டியதாக ஆகி விசாரத்தினால் சித்தாந்தம் செய்யவேண்டிய ஆவசியகதை உண்டாயிற்று. அதுபோல புராணங்கள் விஷயத்திலும் விசாரம் செய்தால் சந்தேகம் நீங்கி உண்மை வெளிப்படுகிறது.

பிராணிகளின் வாசனை வெவ்வேறாக இருக்கிறது. அவரவர்கள் ஜன்மாந்தரத்திய வாசனைக்குத் தக்கபடி ஈசுவரபஜனம் செய்து கிருதார்த்தராகவேண்டியதற்காகவே ஸர்வஜ்ஞர்களான ஸ்ரீவியாஸமகரிஷிகள் அநேக புராணங்களை சொல்லியிருக்கிறார். அப்படியில்

லாமல் ஏதாவதொரு புராணத்தை சொல்லி அதில் சொல்லப்படுகிற ஈசுவரமூர்த்தியே ஸர்வோத்தமமான தென்றும் அதில் சொல்லிய பதார்த்தங்கள் மாத்திரம் தான் பிரமாணமானவையென்றும் சொல்லுவது வியாசமகரிஷிகளுக்கு கஷ்டமாயிருந்திருக்கவில்லை. ஆனால் அவருக்கு பிரயாசமும் குறைந்திருக்கும். இந்த கணத்திற்காக லோகாநுக்கிரஹத்திற்காக சரீரமெடுத்துக் கொண்ட அம்மகரிஷி ஒரூர் புராணத்தை சொல்லியிருக்கும்பக்ஷத்தில் அந்த புராணத்தில் சொல்லப்படாமலிருக்கிற மற்றொரு மூர்த்தியில் ஜந்மாந்திர வாசனாபலத்தினால் விசுவாசமுள்ளவர்களுக்கு அந்த புராணப்ரதிபாத்ய மூர்த்திபேதத்தில் பக்தியுண்டாகாமல் அந்த ஜீவனுக்கு ஈசுவரோபாஸனைக்கு இடமில்லாமல் போவதால் அவன் கிருதார்த்தனாகுவதற்கே அவகாசமில்லாமலாய்விடும். இந்த அபிப்பிராயத்தினாலேயே அந்த மகான் அநேக புராணங்களை சொல்லியிருக்கிறார். இந்த அர்த்தத்தை லோகதிருஷ்டாந்தத்தினாலும் ருஜுப்படுத்தலாம். ஒரு கிருஹஸ்தன் தன் வீட்டில் போஜனத்திற்காக அநேக ஜனங்களை அழைக்கிறான். அந்த சங்கர்ப்பத்தில் அநேக சாகபாகங்களை செய்வது வாடிக்கையாயிருக்கிறதல்லவா. இதன் காரணத்தை விசாரித்தால் போஜனத்திற்கு வரப்பட்டவர்களுடைய அப்பியாசத்திற்கேற்றபடி அவரவர்களுக்கு இஷ்டமான பதார்த்தங்களை போஜனம் செய்வதால் திருப்தியடையவேண்டுமென்ற உத்தேசத்தி

ஞாலேயல்லாமல் வேறே காரணத்தினால் அநேக பதார்த்தங்கள் செய்யும் வழக்கம் இருப்பதாக சொல்லுவதற்கிடமில்லை. அப்படியில்லாமல் போஜனம் செய்விக்கும் யஜமானனுக்கு இஷ்டமான பதார்த்தத்தை செய்வதாலும் அல்லது ஏதாவது ஒரு பதார்த்தம் உத்தமமானதென்று அதைமாத்திரம் சித்தப்படுத்தினாலும் அப்படி செய்யப்பட்ட பதார்த்தத்தில் பூர்வீக வாசனையால் அபேக்ஷையில்லாதவர்கள் அன்று தினம் உதரபூர்த்தியாகவும் இஷ்டம்போலவும் போஜனம் செய்வதற்கு இடமில்லாமல் ஆகாரமில்லாமல் கஷ்டப்படவேண்டிவருகிறது. இந்த திருஷ்டாந்தத்தினால் புராணங்கள் அநேகமாயிருப்பதற்கும் ஒன்றுக்கொன்று பேதமுண்டானதற்கும் உள்ள காரணத்தை சுலபமாக தெரிந்துகொள்ளலாம். மேல்கண்ட அபிப்பிராயத்தினால் சொல்லப்பட்டிருக்கும் புராணங்களில் அந்தந்த புராணத்திய வஸ்துக்களே பரமபிரமாணமானவைகளென்றும் சொல்லப்பட்டிருக்கும் தேவதாமூர்த்திபேதமே ஜகத்காரணமும் ஜகந்நியாமகனுமென்றும் மற்றவர்களெல்லாம் அவனுக்கு அதீனர்களென்றும் சொல்லாமல் எல்லாம் சமானமென்றாவது தாரதம்மியத்துடன் உத்தமம் மத்தியமம் என்றாவது சொல்லியிருந்தால் எவ்வளவு வாசனைபலமிருந்தாலும் சங்கையில்லாமல் பிரவிருத்தியுண்டாவதற்கு தடையாக சித்தசாஞ்சலியமுண்டாகும்படி செய்துவிடக்கூடும். இந்த காரணத்தினால் அந்தந்த புராணங்களை

சொல்லுவதில் அந்த புராணமே மற்ற எல்லா புரா ணங்களைக் காட்டிலும் சர்வோத்தமமென்றும் அதில் சொல்லியிருக்கும் பகவன் மூர்த்தியே சர்வோபாஸ்ய மென்றும் சொல்லியிருப்பதே தவிர வேறில்லை. இத னால் சூக்ஷ்மமாயும் தீர்க்கமாயும் ஆலோசித்தால் புரா ணங்கள், அவைகளில் சொல்லியிருக்கும் அர்த்தங்கள் மற்றும் தேவதாமூர்த்தி பேதங்கள் எல்லாம் ஒரே ஒரு வியாசமகாரிஷிகளின் அபிப்பிராயமென்று தெரி யவருகிறதே தவிர வெவ்வேறென்றும் விரோதமுள்ள அர்த்தங்களை சொல்லியிருக்கிறதென்றும் அப்பிரமா ணங்களென்றும் சொல்லுவதற்கு முற்றிலும் இட மில்லை என்று ஸ்ரீஸ்வாமிகள் எல்லா புராணங்களையும் ஒற்றுமைப்படுத்தி சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

விசாரம் செய்து தத்வம் தெரிந்துகொள்ளாத சில ஜனங்கள் தாங்கள் சைவர் என்றும் வைஷ்ண வர் என்றும், சாக்தர் என்றும், சொல்லிக்கொண்டு பரஸ்பரம் துவேஷ புத்தியுடன் எந்த மூர்த்தியை பஜனம் செய்தாலும், மற்றொரு மூர்த்தியை மனதி னும் வாக்கினாலும் கூட துவேஷம் செய்வதினால் அவர்களால் செய்யப்படுகிற பக்திக்கும் உபாஸனைக் கும் பலனில்லாமல் போய் அதிகமான அனிஷ்டபிரா ப்தி உண்டாகிறதென்றும் கருணையினால் அப்படி செ ய்யும் ஜனங்களைக் குறித்து ஸ்ரீஸ்வாமிகளால் செய்யப் படும் யுக்திவாதத்தினால் அந்த ஜனங்கள் தாமாகவே தம் கஷ்டத்தை அநியாயமானதென்று தெரிந்துகொள்

ளும்படி செய்துகொண்டிருந்தார்கள். அ எப்படியென் னில் சிவபாரம்யம் சொல்லுகிறவர்கள் சிவன் ஸர்வவி யாபகனென்றும் ஸர்வசைதன்ய னென்றும் ஒப்புக் கொள்ளவேண்டியிருக்கிறது. அப்படி ஒப்புக்கொண் டால் விஷ்ணுவும் சிவனுக்குள் அடங்கியதாகவே ஆகி றது. சிவனில் அந்தர்க்கதனாகிறதில்லையென்று சொன் னால் சிவனுக்கு சர்வவியாபகத்வம் வந்ததாக ஆகவில்லை ஆகையால் விஷ்ணுவுக்கும் மற்றவர்களுக்கும் கூட சிவ னில் அந்தர்பாவம் சொல்லித்தீறவேண்டும். இந்த சந் தர்ப்பத்தில் சிவனிடத்தில் ஒருபாகமான விஷ்ணுவை தூஷிப்பதினாலும் அவரிடத்தில் தாழ்ந்த புத்திசெய் வதினாலும் அப்படிப்பட்ட தூஷணமும் தாழ்ந்த புத் தியும் சிவனிடத்திலேயே செய்ததாக ஆகிறதோ அல் லது வேறொருவரிடத்தில் செய்ததாகி சிவனை பூஷித் ததாக ஆகிறதோ? இதுபோலவே விஷ்ணு பாரம்யம் சொல்லுகிறவர்களும் சிவனை தூஷணம் செய்வதினா லும் அவரிடத்தில் தாழ்ந்த புத்தி செய்வதினாலும் விஷ்ணு தூஷணமே செய்ததாக ஆவதே தவிர வேறி ல்லையாகையால் ஈசுவரனொருவனிருக்கிறானென்று ஒப் புக்கொள்ளுகிற ஆஸ்திகஜனங்கள் பேதபுத்தியுடன் ஈசுவரோபாஸனை செய்தாலும் பாஸ்பர த்வேஷபுத்தி யுடன் எந்த சந்தர்ப்பத்திலும் பக்தியாவது உபாச னையாவது செய்வதற்கு அவகாசமெங்கிருக்கிறது? என்று கேள்விகேட்டு த்வேஷ புத்தியுடன் பகவா னை ஆராதனை செய்கிறவர் பதில் சொல்ல இடமி

ல்லாமல் வெட்கமடையும்படி செய்துகொண்டிருக்குறார்கள். மற்றும் சிலர் மாதா பிதாக்களின் சிராத்தத்தை அவசியம் செய்யவேண்டுமென்றும், செய்யாதவர்கள் பெரிய தோஷமுள்ளவர்களாவார்களென்றும் தர்ம சாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. புராணங்களில் இந்த வர்த்தமான சரீரம் போனபிறகு அவரவர்கள் புண்ணிய பாப கர்மங்களை அனுசரித்து மற்றொரு சரீரம் வருகிறதென்று சொல்லியிருக்கிறதாக தெரியவருகிறது. இதனால் ஒரு ஜீவனுக்கு அநேகம் தடவை ஜனனமும் மரணமும் உண்டாகுவதினால் ஒருவனே அநேகருக்குப்பிதாவாகவும் புத்திரனாகவும் திரியக் ஜந்துவாகவும், விருக்ஷமாகவும் சிலையாகவும் ஜன்மமெடுக்கலாம். எவ்விதஜீவனுக்கு எவ்வளவு ஜனங்கள் சிராத்தம் செய்யலாம். எந்த ஜீவனை உத்தேசித்து சிராத்தம் செய்கிறார்களோ அந்த ஜீவன் வேறொரு பக்கத்தில் ஜன்மத்தை அடைந்து ஜீவித்திருந்தால் அவனை உத்தேசித்து செய்யப்படுகிற பிராம்மண போஜனம் பிண்டதானம் முதலியவைகளால் அந்த ஜீவனுக்குத் திருப்தியுண்டாவதெப்படி? இந்த மாதிரியாய் அநேக சந்தேகங்களுக்கும் விபரீத ஞானத்திற்கும் அவகாசமிருப்பதால் தர்ம சாஸ்திரங்களை நம்பி சிராத்தம் செய்வதின் பிரயோஜனமென்ன? பிதுருக்களை உத்தேசித்து செய்யக்கூடிய கர்மங்களில் யக்ஞோபவீதத்தை அபஸவியமாக தரிக்க வேண்டியதாகவும் காலை மடித்துக்கொண்டு உட்காரவேண்டுமென்றும், சிலகர்மங்

கள் நின்றுகொண்டு செய்யவேண்டுமென்றும் சிலவற்றை உட்கார்ந்து செய்யவேண்டுமென்றும் இவை முதலான காரிய நிர்ப்பந்தங்களை ஏற்படுத்தியிருப்பதின் பிரயோஜனமென்ன? இந்த விஷயத்தில் என்ன யுக்திகள் இருக்கின்றன என்று ஸ்ரீஸ்வாமிகளை பிரச்னம் செய்துகொண்டிருந்தார்கள். அப்படி கேட்கும் ஜனங்களை அநேகமாய் லோகதிருஷ்டாந்தங்களை முன்னிட்டு யுக்திவாதங்களாலேயே சமாதானப்படுத்தி சாஸ்திரங்களில் நம்பிக்கையுண்டாகும்படி செய்துகொண்டிருந்தார்கள். அது எப்படியெனில் புராணங்களிலும் மற்ற சாஸ்திரங்களிலும் சொல்லியிருக்கிறபடி ஜீவனுக்கு ஸ்வரூப ஞானம் திருடமாய் வரும் வரையில் அந்த ஜீவன் முக்தனாகிறதில்லை. ஆத்மஞானத்தினால் மோக்ஷப்பிராப்தி ஆகிறவரையிலும் கர்மத்தினால் கட்டுப்பட்டு கர்மங்களை செய்துகொண்டே இருப்பான். செய்யப்பட்ட கர்மங்கள் பலனைக் கொடுக்காமல் போகிறதில்லை. அந்த கர்ம பலன்களை அனுபவிக்கவேண்டுமானால் ஏதாவது ஒரு சரீரம் வரவேண்டியிருக்கிறது. இக்காரணத்தினால் ஒரு சரீரத்தை விட்டவன், வேறே ஒரு சரீரத்தை எடுப்பது சாஸ்திர சம்மதமாகவும் யுக்திக்கு ஏற்றதாயுமிருக்கிறது. இந்த கிரமத்தில் ஒரே ஜீவன் அநேகம் தடவை பிறந்ததாயும் இறந்ததாயும் வியவஹரிக்கப்படுகிற எந்த சரீரத்திலிருந்தாலும் அந்த விபரத்தை தெரிந்துகொள்வது அல்பக்ஞர்களான மனிதர்களுக்கு அசாத்தியமாயி

ருந்தாலும் ஈசுவராக்ஞாரூபமான சாஸ்திரத்தை அனு சரித்து கர்மலோபமில்லாமல் கோத்திரம் நாமதேயம் இவைகளை உச்சாரணம் செய்து சிராத்த கர்மத்தை சிரத்தையுடன் நடத்தினால் பிள்ளைகள் எந்த உத்தேசத்தினால் சிராத்தம் செய்கிறார்களோ அந்த ஜீவன் எந்த சரீரத்திலிருந்தாலும் நியாமகனான பகவான் புத்திராதிகளால் கொடுக்கப்பட்ட அன்னாதிகளை அந்தந்த சரீரத்திற்கு தக்கபடியான ஆகாரரூபமாக மாற்றி அந்த ஜீவனுக்கு திருப்தியுண்டு பண்ணுவதில் சக்தியுள்ளவனாயிருக்கிறான்.

இந்த விஷயத்தை அனுபவத்திலிருக்கிற லோக திருஷ்டாந்தத்தினால் தெளிவாய்த் தெரிந்துகொள்ளலாம். ராஜ்யபாரத்தை வகித்துவரும் ராஜனால் செய்யப்பட்ட நியமங்களை அனுசரித்து, தேசாந்தரத்திலிருக்கும் ஒரு மனிதனுக்கு சேரவேண்டுமென்ற உத்தேசத்தினால், ஏதோ ஒரு ஸ்தலத்தில் ராஜனால் நியமிக்கப்பட்ட ஒரு மனிதனிடத்தில் பணத்தை செலுத்துகிறான். அந்த மனிதன் தான் இருந்தவிடம் விட்டுப் போவதில்லை. எந்தப் பணத்தை அவனிடத்தில் கொடுக்கிறானோ அதே பணத்தை எந்த மனிதனை உத்தேசித்து கொடுத்தானோ அந்த மனிதனிருக்குமிடத்திற்கு அனுப்புவதில்லை என்ற விஷயம் தெரிந்ததாகவே இருக்கிறது. இப்படியிருந்தாலும் பணம் எவனுக்கு செல்லவேண்டுமோ அவன் பெயரையும் விலாசத்தையும் தெளிவாக ராஜநியாமகமான பத்திரத்தில் எழுதி ராஜ

கியமனுஷ்யனிடத்தில் கொடுத்தால், பணம் பெற்றுக்
கொள்ளுபவன் குறிக்கப்பட்ட விடத்திலிருந்தாலும்
அல்லது வேறு ஸ்தலத்தில் வாசம் செய்தாலும்
அந்த மனிதனைக் கண்டுபிடித்து அவனிடமே கொடு
த்து அதற்கு அவனுடைய கையெழுத்தையும் தரு
வித்துக் கொடுக்கவேண்டிய பொறுப்பு மனுஷிய
சிரேஷ்டனான ராஜன் வகித்து, உத்தேசிக்கப்பட்ட
மனிதரில் மாறுதலில்லாமலும், உத்தேசித்துக் கொடு
த்த பணத்தில் ஏற்றக்குறைவில்லாமலும் சேரும்படி
செய்திருக்கிற ஏற்பாட்டை நன்றாகத் தெரிந்து எல்
லாரும் அநுபவித்துக்கொண்டிருக்கையில் சர்வசக்த
னும் ஜகந்நியாமகனும் உள்ள ஈசுவரன் நியமனப்
படி நடத்தப்படுகிற கர்மம் வியர்த்தமாகுமென்ற சந்
தேகத்திற்கு காரணமென்ன? மனுஷியனான ராஜனுக்
குள்ள சாமர்த்தியம் சர்வஜ்ஞனும் சர்வசக்தனுயு
முள்ள பகவானுக்கு இல்லை என்று தெரிந்துகொள்வ
தெப்படி? ஒருவனைக் குறித்து அநேகர் சிராத்தம்
செய்வதினால் தோஷமென்ன? ராஜன் மூலமாக ஒரு
வனைக் குறித்து அநேக ஜனங்களால் அனுப்பப்பட்ட
பணத்தை ஒரே சமயத்திலாவது வெவ்வேறு காலங்க
ளிலாவது ஒருவனே பெற்றுக்கொண்டு திருப்தியடை
கிறதில்லையோ? ஆகையால் பிரதி ஒரு மனிதனும்
மாதாபிதாக்களால்தான் அடைந்திருக்கும் வெகு
விதமான உபகாரங்களை ஜ்ஞாபகம் செய்துகொண்டு
தன் க்ஷேமத்திற்காக நன்றிபாராட்டுவதற்காக சிராத்

தம் செய்யாதபக்ஷத்தில் இருதார்த்தனாகிறதில்லையா கையால் சிராத்தம் செய்யவேண்டியது ஆவசியகமா யிருக்கிறது. கர்த்தவ்யம் அதாவது செய்யக்கடமைப் படுகிற காரியத்தை செய்யாமல் இருந்தால் தோ ஷம் உண்டாகி சிரேயஸ் அடைவதற்கு தடையுண் டாகிறது. ஆகையால் இந்த விஷயத்தில் சிறிதும் சந் தேகப்படக்கூடாது என்று ஸ்ரீஸ்வாமிகள் யுக்திகளை எடுத்துக்காண்பித்துக் கொண்டிருந்தார்கள்.

இன்னம் மனிதன் எந்த கர்மம் செய்தவந்தாலும் மனம், வாக்கு, காயம் என்ற மூன்று காரணங்களா லும் செய்யவேண்டும். அப்படி செய்யப்பட்ட கர்ம மே பலனைக்கொடுக்கக் கூடியது. அதினாலேயே சிரே யஸ்ஸில் அபிலாஷையுள்ளவர்களால் செய்யப்பட்ட பிதுருகர்மங்களில் மூன்று கரணங்களாலும் சாதிக்கக் கூடிய சில தந்திர நிர்ப்பந்தமும் ஏற்படுத்தியிருக்கி றார்கள். மந்திர உச்சாரணத்தினால் வாசிகமாயும் பூஜ் யபாவனையினால் மானஸிகமாயும் நமஸ்காராதிகளி னால் காயிகமாயும் பிதுருகர்மங்களை நடத்துவதற்கு விதி ஏற்பட்டிருக்கிறது. இந்த விஷயத்தில் யுக்தி என்னவென்றால் லோகத்தில் சாதாரணமான ஒரு மனிதன் ஒரு பிரபுவின் தயவை சம்பாதித்து அவ னால் பிரயோஜனத்தை அடையவேண்டுமென்ற எண் ணத்தினால் பிரபுவின் தர்சனத்திற்காகப் போகிறான். அந்த சந்தர்ப்பத்தில் வாக்கினாலும் மனதினாலும் காய த்தினாலும் தன்னுடைய விநயத்தை எல்லாவிதமாயும்

பிரபுவிடத்தில் காண்பிவித்துக்கொண்டு அவனுடைய தயவை அடைய யத்தினம் செய்வானோ, அல்லது முரட்டுத்தனத்தைக் காண்பித்து இஷ்டத்தை சாதிப்பானோ? ஒருவேளை முரட்டுத்தனத்தைக் காண்பிப்பதில் அனர்த்தத்தை அடையவேண்டியதேதவிர உத்தேசித்த காரியம் நிறைவேறுகிறதே இல்லை. ஒருவேளை தந்திரத்தில் நிர்ப்பந்தமிருந்தாலும் இருக்கட்டும். அதிலும் கிரமநிர்ப்பந்தமெதற்கு என்று சந்தேகம் வரலாம். அந்த நிர்ப்பந்தமும் மிக ஆவசியகமே. அதைக் குறித்து நாம் சந்தேகிப்பதற்கு ஸ்வதந்திரர் அல்ல. அதெப்படியென்றால் ராஜஸைனியத்தில் நியமிக்கப்பட்டவர்களுக்கு அந்த சேனையில் முக்கியமான மனிதனுடைய ஆஜ்ஞைப்படி முன்பின் யோசிக்காமல் யுத்த காலத்தில் நடந்துகொள்ளும்படி அப்பியாசம் செய்விப்பதற்காக சேனையில் சேர்ந்தது முதல் சைனிகர்கள் நிற்பதிலும், உட்காருவதிலும், நடப்பதிலும், தங்கள் கையிலுள்ள ஆயுதங்களை உபயோகப்படுத்துவதிலும் சில சங்கேத சப்தங்களை உபயோகித்து அந்த சப்தம் ஸைனிகர்களின் காதில் விழுந்தவுடன் காரியம் தவறாமலும் முறை தவறாமலும், சங்கேதத்தினால் சித்தப்படுத்தியுள்ள நடவடிக்கைகளை நடத்தும்படி அப்பியாஸம் செய்விப்பதைப் பார்த்திருக்கவில்லையா? அந்த சந்தர்ப்பத்தில் உபயோகிக்கப்படுகிற சப்தங்களுக்கும் அவைகளை அனுசரித்து நடத்தும் காரியங்களுக்கும், அர்த்தமென்னவென்று கேட்பதற்காவது,

ஒன்றுக்கு பதிலாக மற்றொரு வியாபாரம் செய்யக் கூடாதென்றும் நாலுதடவைக்கு பதிலாக ஒரே தடவை அந்த வியாபாரத்தை நடத்தக்கூடாதென்று விஷயததில் நியாமகம் என்ன இருக்கிறது? இதன் பிரயோஜனமென்ன? இவ்விஷயத்தில் யுக்தி என்ன? என்று ஆக்ஷேபிக்கவாவது அர்த்தமில்லாத வியாபாரங்களை நடத்தாமல் விட்டுவிடுவதற்காவது, அவகாசமெங்கிருக்கிறது. இதுபோல் நம் ஹிதத்தைத் தெரிந்து நம் சிரேயஸ்ஸுக்காக சாஸ்திரங்களால் நியமிக்கப்பட்டிருக்கும் கர்மங்கள் விஷயத்திலும் பிரயோஜனங்களையும் யுக்திகளையும் கேட்பதற்கு நாம் ஸைநிகர்களைப்போல அஸ்வதந்திராகையால் ஈசுவராஜ்ஞைக்கு கட்டுப்பட்டவராய் அவர் ஆஜ்ஞைப்படி நடந்துகொண்டால் ஈசுவர பிரஸாதத்தை சம்பாதித்து சுகமடைகிறோம். இந்த விஷயத்தில் நம்பிக்கை ஒன்றே முக்கிய சாதனமென்று ஸ்ரீஸ்வாமிகள் சமாதானப்படுத்தி தம்மிடத்தில் வரக்கூடியவர்களை ஆஸ்திகர்களாக செய்து கொண்டிருந்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகளின் வைராக்கியம், நிகரற்றதாயிருந்தது. இவர் எந்த சந்தர்ப்பத்திலும் எந்த பதார்த்தத்தையாவது, தமக்கு இஷ்டமென்று நினைத்து அபேக்ஷித்திருக்கவில்லை. மடாதிபதிகளாக ஒரு ஸ்தானத்தில் நியமிக்கப்பட்டிருந்தாலும், அந்த ஸ்தானத்தை சம்பந்தித்த லாப நஷ்டங்களைக்குறித்து ஒரு நிமிஷமாவது சிந்தித்தவரும் சந்தோஷித்தவருமல்ல. எப்

படிப்பட்ட சந்தர்ப்பங்களிலும் பூதகாருண்யத்தினா லல்லாமல் வேறே காரணத்தினால் இவர் மனது விகார பாவத்தை ஒருக்காலும் அடையவில்லை. சம்ஸ்தான சம்பந்தமான அநேக ராஜஸ வியாபாரங்களில் பிரவர்த் திக்கிறவர் போல இதர ஜனங்கள் தெரிந்துகொள்வ தற்கு வேண்டிய அவகாசம் இருந்துகொண்டிருந்தா லும் அந்த வியாபாரங்களுக்கும் அதற்குத்தகுந்த வேஷங்களுக்கும் தமக்கும் சம்பந்தமில்லை என்ற பாவ னை உறுதியாய் இவர்களை நாடியிருந்தது. இந்த அர்த் தத்தை அநேக சந்தர்ப்பங்களில் இவர்கள் சமீபத்தி லுள்ளவர்கள் நன்றாக அறிந்துகொள்வதற்கு அவகா சம் கிடைத்துக்கொண்டிருந்தது.

ஸ்ரீஸ்வாமிகள் மதுரை ஜில்லா பெரியகுளம் என்ற கிராமத்திற்கு விஜயம் செய்தார்கள். இவர்கள் ஒரு கிராமத்திலிருந்து மற்றொரு கிராமத்திற்கு பிர யாணம் செய்யக்கூடிய காலத்தில் தம் ஸ்வபாவமான வஸ்திரங்களை தரித்து விபூதி ருத்திராக்ஷங்களை மாத் திரம் தாரணம் செய்துகொண்டு நாலுபக்கங்களிலும் மூடப்பட்ட வாகனத்தில் பிரயாணம் செய்வது வழக் கமாயிருந்தது. கிராம சமீபத்தில் தம் வரவை எதிர் பார்த்து ஜனங்கள் காத்திருக்கும் ஸ்தலத்திற்கு வந்த வுடன் பிரயாணம் செய்து வந்த வாகனத்தை நிறுத்தி அந்த வாகனத்திலிருந்தபடியே கிரீடதாரணம் செய்து அலங்கிருதராகி அந்த ஸ்தலத்தில் முன்னதாகவே அ னுப்பப்பட்டு சித்தமாயிருக்கிற சுவர்ண பல்லக்கில் ஆ

ரோஹணம் செய்த பிறகு சிஷ்ய ஜனங்களுக்கு தர்சனம் கொடுத்து பிறகு கிராம பிரவேசம் செய்துகொண்டிருந்தார்கள். அந்த தினத்தில் ஸ்ரீஸ்வாமிகள் கிரீட தாரணம் செய்தது முதல் பல்லக்கில் ஆரோஹணம் செய்யும் சமயத்லும் சிஷ்ய ஜனங்களுக்கு தர்சனம் கொடுக்கக்கூடிய காலத்திலும் கிராமப்பிரதக்ஷிண சமயத்திலும் வாசஸ்தானம் சேர்ந்து கிராமஸ்தர்களால் நடத்தப்பட்ட தூளி பாத பூஜை முதலிய சந்தர்ப்பங்களிலும் கூட ஒரு நிமிஷமாவது ஓயாமல் சிரித்த முகத்துடன் மந்தஹாஸம் செய்துகொண்டிருந்தார்கள். அவர்கள் எப்போதும் மந்தஹாஸத்துடன் சிரித்தமுகமாக சோபிதராயிருந்தாலும் அன்று அவர்களுடைய ஹாஸ்யம் ஸ்வபாவவிருத்தமாகவிருந்தது. அவர்களுடைய இந்த ஸ்திதி அங்கு கூடியிருந்த ஒவ்வொருவருக்கும் ஆச்சரியகரமாயும், அறிய வேண்டுமென்ற குதூஹலத்திற்கு விஷயமாயுமிருந்தது. ஸ்ரீஸ்வாமிகள் உள்ளே விஜயம் செய்து கிரீடாதி அலங்காரங்களைக்கழற்றியபிறகு அவர்கள் ஸமீபவர்த்திகளாயும் அவர்கள் அனுக்கிரஹத்திற்கு பாத்திராயுமிருந்த மைசூர் அரண்மனை தர்மாதிகாரிகளான குணிகல் ராமசாஸ்திரி (கிருஷ்ணசாஸ்திரிகளென்பவர்) அந்த தினத்திய அபூர்வஹாஸத்திற்கு காரணமென்னவென்று அவர்களிடத்தில் பிரச்னம் பண்ணினதற்கு மேனாவைவிட்டு பல்லக்கில் ஏறும் சமயத்தில் பாஞ்சபௌதிகமான ஸ்தூல சரீரத்தை தூரத்தில் விட்டு

வெளியில் வந்ததாயும் சர்வவியாபகமாயிருப்பதாக மனோபாவமுண்டாகி கேவலாநந்தானுபவம் செய்துகொண்டிருந்ததாயும் வெளிவியாபாரங்களொன்றும் தம் மனதில் வரவில்லை என்றும் ஸ்ரீஸ்வாமிகள் அவர்கள் உத்தரவு செய்த சங்கதியை அவர் மூலமாக மற்றவர்கள் தெரிந்து ஆச்சரியப்பட்டார்கள். இதனால் ஸ்ரீஸ்வாமிகளிடத்திலிருந்த வைராக்கிய சம்பத்து எப்படிப்பட்டதென்று அறிந்துகொள்ளலாம்.

மற்றொரு சந்தர்ப்பத்தில் அலஹாபாத் பிராந்தியத்தில் பிரசித்திபெற்ற பண்டித மதனமோகனமாலவியர் என்பவர் காசீக்ஷேத்திரத்தில் விசுவவித்யாலயம் என்ற பெயரால் ஒரு சர்வகலாசாலை ஸ்தாபிக்கவேண்டுமென்றும் அந்த சாலை நிர்மாணத்திற்காக ஆரம்ப அஸ்திவாரக்கல் ஸ்தாபனம் ஸ்ரீஸ்வாமிகள் கையால் செய்விக்கவேண்டுமென்றும் யோசித்து அந்த காரியம் நடத்தவேண்டியதற்கு ஒரு சுபமான தினத்தையும் நிஷ்கர்ஷை செய்துகொண்டு அந்த காலத்திற்குச் சரியாய் ஸ்ரீஸ்வாமிகள் காசி க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து தன் சங்கல்பத்தை நிறைவேற்றி அனுக்கிரஹிக்கவேண்டுமென்று தானும் தேசங்களிலுள்ள அநேக சிஷ்யகோடிகள் மூலமாயும் ஸ்ரீஸ்வாமிகளை பிரார்த்திப்பதற்காக தத்தாத்ரேய கிருஷ்ணதாமலே, என்ற ஒரு கிருஹஸ்தனை அனுப்பினார். இவர் பரிசயமில்லாத தேசமாகையால் முதலில் பங்களூருக்கு வந்து அக்காலத்தில் மைசூர் சமஸ்தானத்

தில் திவானுயிருந்த, ஸர். பி. என். கிருஷ்ணமூர்த்தி, அவர்களைக் கண்டு அவரிடத்தில் தான் வந்திருக்கும் ஸந்தியைத் தெரிவித்து தன் காரியம் அனுகூலமாவதற்காக ஒரு கடிதம் பெற்றுக்கொண்டு சிருங்கேரிக்கு வந்தார். ஸ்ரீமடத்திய அதிகாரிகள் மூலமாய் ஸ்ரீஸ்வாமிகளை தர்சனம் செய்து பண்டித மதன மோகனமாலவியர் வெகு ஜனங்களுக்காக செய்திருக்கிற பிரார்த்தனையை ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் விஜ்ஞாபனம் செய்து உத்தரதேசப் பிராந்தத்திலிருக்கும் சிஷ்யமண்டலிக்கு ஸ்ரீமத் ஆசார்ய தர்சனம் இல்லாமல் வெகு வருஷங்களாய்விட்டன. இதனால் ஸ்வாமி தர்சனத்தில் அபிலாஷையுள்ள அநேக லக்ஷஜனங்கள் மிக்க ஆதாவுடன் காத்திருக்கும் காரணத்தால், இந்த கார்யத்திற்காகவாவது ஸ்ரீஸ்வாமிகள் அந்ததேசத்தை அலங்கரித்து ஜனங்களை கிருதார்த்தர்களாக செய்ய வேண்டுமென்று வந்த அந்த கிருஹஸ்தர் வெகுவிதமாக பிரார்த்தித்துக்கொண்டார்.

பண்டிதமாளவியரின், நல்ல உத்தேசத்தையும் உத்தரதேசத்திய சிஷ்யஜனங்களுக்கு தம் தர்சனத்தில் இருக்கும் ஆதாவையும் பிரதிநிதிகளாக வந்தமலே அவர்கள் மூலமாக அறிந்து, அவர்கள் பிரயத்தினத்தை விசேஷமாக கொண்டாடினார்கள். பிறகு தம் வரவு விஷயத்தில் ஸ்ரீஸ்வாமிகள் உத்திரவு கொடுத்தது எப்படியென்றால், மாலவியரால் சங்கல்பிக்கப்பட்ட கலாசாலை நிர்மாணத்திற்காக ஆரம்ப

சிலாஸ்தாபனம் செய்வதற்கு நிச்சயம் செய்யப்பட்டிருக்கும் காலம் அதிசமீபமாயிருக்கிறது. போகவேண்டிய தேசமோ வெகு தூரத்திலிருக்கிறது. ஸத்சிஷியராகிய உங்களுடைய பிரார்த்தனையை நிறைவேற்றுவது நமக்கு அவசியகர்த்தவ்யமேயானாலும் நம் நியமங்களை அனுசரித்துப் பிரயாணம் செய்து, குறிப்பிட்ட காலத்தில் சேரவேண்டிய தேசத்தை அடைவது அசாத்தியமாயிருப்பதினால் சிஷ்யஜனங்களை விபலமனோதர்களாக செய்யும்படியான சந்தர்ப்பம் நேர்ந்ததற்காக சிந்திக்கிறோம் என்று சொன்னார்கள். ஸ்ரீஸ்வாமிகளுடைய அபிப்ராயத்தை அறிந்துகொண்ட அந்த கிருஹஸ்தன் மறுபடியும் அவர்களிடத்தில் விஜ்ஞாபனம் செய்துகொண்டதாவது. ஸ்ரீஸ்வாமிகள் எங்கள் பிரார்த்தனையை அங்கீகாரம் செய்து குறித்தகாலத்தில் ஸ்ரீகாசிக்ஷேத்திரத்திற்கு வந்து சேரும் விஷயத்தில் எந்தவிதமான அனுகூலத்தை யோசித்திருக்கிறதோ இந்த விஷயம் முன்னதாகவே ஆலோசிக்கப்பட்டு அனுகூலத்திற்குப் பரிஹாரத்தையும் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்வதையும் சாதகபக்ஷிபோல் எதிர்பார்த்திருக்கிற சிஷ்யஜனங்கள் யோசித்து தீர்மானம் செய்திருக்கிறார்கள். பிரத்யேகமாக ஸ்ரீஸ்வாமிகள் பிரயாணத்திற்காகவே ஒரு புகைவண்டியை சுவாதீனமாயிருக்கும்படி செய்துகொண்டு அதன் உதவியினாலாவது அல்லது அதைக்காட்டிலும் வேகமாய்ப் போகக்கூடிய மோடார் என்ற வண்டிகளை அநேக ராஜர்களின் சகாயத்தி

னால் சம்பாதித்து அவைகள் மூலமாயாவது ஸ்ரீஸ்வாமிகளின் நியமத்திற்கு கொஞ்சமும் குறைவு வாராமல் யாத்திரையை நடப்பித்து குறித்தகாலத்தில் காசி க்ஷேத்திரம் சேரும்படி ஏற்பாடு செய்வதில் நாங்கள் சித்தமாயிருக்கிறோம். எங்கள் சங்கல்பத்தை நிறைவேற்றிக்கொடுக்க தயவு செய்து அனுமதி மாத்திரம் கொடுக்கவேண்டுமென்றறிவித்துக்கொண்டார்.

தாமலே அவர்கள் திரும்பவும் தம்மிடத்தில் தெரிவித்துக் கொண்ட அபிப்ராயத்தினால் அந்த ஜனங்களுக்கு இருக்கும் பக்திவிசுவாசங்களையும் தம் ஆகமனவிஷயத்தில் அவர்களுக்குள்ள ஆதரவையும் உத்ஸாஹத்தையும் தெரிந்துகொண்டு வெகுவாக சந்தோஷமடைந்தார்கள். ஆனால் அவர் பிரார்த்தனையை நிறைவேற்றும் விஷயத்தில் தமக்கு இருக்கிற நிர்ப்பந்தத்தை அடிக்கடி தெரிவிக்கவேண்டிவந்ததற்காக ஸ்ரீஸ்வாமிகள் வெகு சங்கோசத்துடன் வியசனப்படும்படியாயிற்று. இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சொன்னது என்னவென்றால், நம்ம ஆசிரமதர்மபரிபாலனத்திற்காக எந்த வாகனத்திலும் சஞ்சாரம் செய்வது சாஸ்திர நிஷித்தமானதேயல்லாமல் சாஸ்திர சம்மதமல்ல. இந்த பூமியில் சன்யாசாசிரமத்தை ஸ்தாபித்து ஆத்மஸ்வரூபத்தை உபதேசம் செய்வதற்காகவே அவதரித்த ஸ்ரீபகவத்பாதர் அவர்கள், யோகசித்தியினால் சில சமயத்தில் மாத்திரம் ஆகாசமார்க்கமாய் சஞ்சாரம் செய்ததாக தெரியவருகிறதே

தவிர பாக்கி சமயங்களில் பாதசாரிகளாகவே பாரத பூமியில் எல்லா தேசங்களிலும் சஞ்சாரம் செய்திருப்பதாகத் தெரியவருகிறது. அவர் சிஷ்யபரம்பரையில் உள்ளவர்களாலும் வெகு நீண்டகாலம் வரையிலும், வாஹநம் முதலிய சகாயத்தைக்கொண்டு சஞ்சாரம் செய்யப்பட்டுவந்ததாகத் தெரியவில்லை. இப்பால் சுமார் அறுனூறு வருஷகாலத்தில் பிரசித்தராய் சிருங்கேரிமடத்திய பரம்பரையில் குருக்களாயிருந்த வித்யாரண்யஸ்வாமிகள் அவர்கள் காலத்திற்கப்பால் சிருங்கேரிமடத்திய குருக்களால் ராஜசின்னங்களான, வாஹனம், சத்திரம், சாமரம் முதலிய வெளி ஆடம்பரங்கள் அங்கீகரிக்கப்பட்டு உபயோகிக்கப்பட்டு வந்திருப்பதாக சம்ஸ்தானத்திலுள்ள புராதன பத்திர வியவஹாரங்களைப் பார்ப்பதால் தெரிகிறது.

தர்மாதர்மங்களை அறிந்தவர்களாயும், விரக்தர்களாயுமிருந்த முந்திய குருக்கள் பிரபலமான காரணத்தையும் ஆவசியகதையும் யோசிக்காமல் ஸ்வப்பிரயோஜனத்திற்காக தம் ஆசிரமதர்மத்துக்கு விரோதமாக ஒரு ஆசரணையை ஆசரிப்பதற்கு ஒப்புக்கொண்டிருக்கலாமென்று சொல்லுவது யுக்தமல்ல. சர்வக்ஞான சங்கராச்சாரியர் அத்வைதமதத்தை ஸ்தாபிப்பதற்காக வந்த சமயத்தில் பூமியில் துர்வாச மகரிஷி சாபத்தினால் மனுஷிய ஜாதியில் அவதரித்திருந்த சரஸ்வதியுடன் வாதம் செய்யவேண்டிய சந்தர்ப்பம் சேர்ந்ததாயும் சர்வக்ஞதையை நிர்வாஹம் செய்வ

தற்காக பரகாய பிரவேசம் செய்தாவது ஸ்வமதஸ்தா பனம் செய்துகொள்ளவேண்டிய ஆவசியகதை உண் டானதாக சங்கரவிஜய கிரந்தத்தினால் தெரிந்த விஷய மே. அந்த சமயத்தில் தம் சிஷியரான பத்மபாதா சாரியரால் செய்யப்பட்ட பிரச்னத்திற்கும் ஸர்வக்ஞ பீடாரோஹணம் செய்யும் காலத்தில் ஸரஸ்வதியால் செய்யப்பட்ட ஆக்ஷேபணைக்கும் ஆசாரியர் அவர்கள் சொன்னதாக சொல்லியிருக்கும் சமாதானத்தைப் பார்த்துத்தெரிந்துகொள்வதினால் பெரிய ஒரு காரி யத்தை சாதிக்கவேண்டியதற்காக மகான்களால் அங் கீகரிக்கப்பட்ட ஆசாரணைகள் தர்மலோபமானவைக ளென்று மற்றவர் திருஷ்டியில் தோன்றினாலும் அவர் கள் வேறொரு காரியத்தின் உத்தேசமாய் உபயோ கிக்கும் பதார்த்தங்களிலும் ஆசரித்து வருகிற ஆசார விஷயங்களிலும், அபிப்பிராயமாவது ஆசையாவது, இருப்பதில்லையாகையால் அதன் சம்பந்தம் ஞானிக ளுக்கு இருப்பதில்லை என்பது சாஸ்திர சித்தாந்தம். லோகத்தில் ஒரு மனிதன் மனப் பூர்வகமாய் தானாக வே ஒரு காரியத்தை நடத்துவதற்கு காரணமாகி அதை நடத்துவதில் இச்சையும் ஆஸக்தியும் அதிகமா யிருந்து ஒரு காரியத்தை நடத்துகிறவனுக்கும் அபி மானமும் அபிநிவேசமும் இல்லாதவன் இதரர்களின் நிர்ப்பந்தத்திற்காகவாவது இதரரின் பிரயோஜனத்தி ற்காகவாவது நடத்துகிற காரியத்திற்கும் உள்ள தார தம்மியம் நன்றாகத் தெரிந்தே இருக்கிறது. அப்படி

ஸ்வப்பிரயோஜன அபேக்ஷையும் இச்சையும் இல்லாமல் இதரர்களுக்காக நடத்தப்படுகிற காரியங்களில் சம்பந்தம் எவ்வளவுமட்டில் இருப்பதென்ற விஷயம் தெரிந்தே இருக்கிறது. இது போலவே லோகத்தில் தர்மமார்க்க பிரசாரம் செய்வதற்காக ஸ்ரீபகவத்பாதாசாரியர்களால் ஸ்தாபிக்கப்பட்ட சிருங்கேரி மடத்தில் நியமிக்கப்பட்டிருந்த குருக்கள் குருக்களின் ஆக்ஞையை அனுசரித்து தாம் செய்ய வேண்டிய காரியங்களை நிறைவேற்றுவதில் காலஸ்வபாவத்தையும் தத்காலத்திய ஜனங்களுடைய சீலம் ஸ்வபாவம் இவைகளையும் நன்றாக யோசித்து பண்டித பாமர சாதாரணமாய் ஜனங்களுக்கு தம் விஷயத்தில் தர்சனமாத்திரத்தில் கௌரவ புத்தி உண்டாகி தம் சமீபத்திற்கு வரும்படி செய்துகொள்வதற்காகவும் வந்த பிறகு தம் உபதேசத்தினால் வந்த ஜனங்களை தம் மார்க்கத்தில் நடப்பவராக செய்வதிலும் கூட வெளி ஆடம்பரமும் ஒரு சாதனமென்று நிச்சயித்து. சத்திரம் சாமரம் முதலிய ராஜ சின்னங்களை பரிக்ரஹம் செய்தார்களென்று அபிப்ராயப்படவேண்டியதாயிருக்கிறது. இந்த அபிப்ராயத்தினால் ஆரம்பத்தில் மேல்கண்ட ராஜசின்னங்களை அங்கீகரித்தவர்களிடமிருந்து இப்பால் வந்தவர்களுக்கு அதை அங்கீகரிப்பது குரு ஆக்ஞா பரிபாலனரூபமான தர்மமாக ஏற்பட்டதாக சொல்லவேண்டியிருக்கிறது. இந்த விஷயத்தில்

" अष्टौ तान्यव्रतघ्नानि आपो मूलं घृतं पयः ।

हविर्ब्राह्मणकाम्या च गुरोर्वचनमौषधम् ॥ "

என்று சர்வஸ்மிருதிகளுக்கும் தலைமையான மனுஸ்மிருதியின் வசனம் பிரமாணம். நாம் அந்த குரு பரம்பரையில் சேர்ந்தவராகி நம் குருக்களின் ஆக்ஞானுசாரமாகி அவர்களுடைய ஆசாரத்தை அனுஷ்டானம் செய்வது நமக்கு முக்கியதர்மமாகவே யிருப்பதால் அவ்விஷயத்தில் ஆலோசனை செய்யாமலே அனுஷ்டானம் செய்ய நாம் கட்டுப்பட்டவராகவேயிருப்பதால் தோஷ சங்கைக்கு இடமில்லை. குருபரம்பராக்கிரமத்தில் இதுவரையில் அனுஷ்டானத்தில் வந்திருக்கும் காலமார்க்கத்தை விட்டு வேறே புதிய மார்க்கத்தை அவலம்பித்து உங்கள் கோரிக்கையை நிறைவேற்ற வேண்டிய சந்தர்ப்பம் இப்போது உண்டாயிருப்பது சாஸ்திரத்தினாலும் யுக்தியினாலும் ஆலோசனை செய்தால் உங்கள் அபிப்பிராயப்படி புகை வண்டி முதலிய சாதனங்களை அங்கீகரித்து பிரயாணம் செய்வதினால் எந்த விதத்திலும் அதர்மாசரணம் செய்ததாக ஆகிறதில்லை. அப்படியானாலும்

"अस्वर्ग्यं लोकविद्विष्टं धर्ममप्याचरेन्न तु ।"

என்ற தர்மசாஸ்திர பிரமாணத்தால் நூதனமாய் நம்மால் ஆசரிக்கப்படுகிற ஆசாரனை லோக நிந்திதமாகிறது. அது எப்படியெனில் முந்தின குருக்கள் அங்கீகரித்துக்கொண்டு வந்திருக்கப்பட்ட மார்க்கத்தையே நாம் அனுசரித்து நடந்துகொண்டு வருவதைப்பார்த்திருக்கிற லோகம் புதிதாய் இப்போது வேறொரு

மார்க்கத்தை அவலம்பித்திருப்பதினால் அந்த மார்க்கத்தில் வாஸ்தவமாய் தர்மலோபம் இல்லாமலிருந்தாலும் முந்தியவர்களின் அனுஷ்டானத்தில் இருக்கவில்லை என்ற காரணத்தினால் நிந்திப்பது சகஜமாகவே ஏற்படும். அப்படி நிந்தைக்கு இடமுள்ள புது வழக்கத்தை இப்போது அனுசரித்து அதில் முதல்வராயிருப்பதற்கு நமக்கு அபிப்பிராயமில்லை. ஸ்ரீராமசந்திரன் கிரமமாய்க்கிடைத்த ராஜ்யத்தை விட்டு பிதுருவாக்கிய பரிபாலனத்திற்காக ஆரண்யவாசத்திற்கு பிரயாணமானான். பிதுருவாக்கிய பரிபாலனரூபமான தர்மத்தை அனுஷ்டிப்பதில் சித்தனாக இருந்த பிறகு எந்த பிதாவினால் ஆக்ஞாபிதனாய் ஸ்வதர்மத்தை விட்டு ரிஷிதர்மத்தை அனுஷ்டானம் செய்தானோ அவராலேயே மறுபடி எத்தனை விதமாக தடுக்கப்பட்டாலும், பிதாகாலமான பிறகு சத்திய சந்தனான பரதனால் எவ்வளவு தூரம் சமாதான வசனங்களாலும் நியாயங்களைக் காண்பித்து பிரார்த்திக்கப்பட்டவனானாலும் குரு ஆக்ஞா பரிபாலனம் ஒன்றே தனக்கு தர்மமென்றும் அதற்கு விரோதமாக தான் நடப்பதினால் இஹபரலோகங்களிரண்டிலும் தான் நிந்திதனாவேனென்ற நம்பிக்கையினாலல்லவோ பக்தனும் பிரியனும் சகோதரனும் தர்மிஷ்டனும் இருந்த பரதனை மனோரத பூர்த்தியடையாதவனாக செய்யவேண்டிய நிர்ப்பந்தம் ராமனுக்கு நேர்ந்து வந்தது. ஸாக்ஷாத் விஷ்ணு சக்தியான மகா லக்ஷ்மியின் அவதார ரூபபேதமானவளும்

கர்ப்பவாசமில்லாதவளாயும் பதிவிரதா சிரோமணியா யுமான சீதா தேவியின் ஸ்வரூபத்தை ஸ்வபாவமான தன் சக்தியினாலும் இன்னம் பாலியம் முதல்கொண்டு வெகு காலமுள்ள பரிசயத்தினாலும் தெரிந்துகொண் டிருந்த ரகு ராமன் லோக நிந்தைக்கு பயம் கொண் டல்லவா அவளுக்கு அக்னிப்பிரவேசம் செய்து பரி சுத்தியைக்காண்பிவிக்கும்படி ஆக்ஞாபித்ததாக ராம கதையினால் தெரியவருகிறது. அப்படிப்பட்ட மகா னுபாவனான பகவதம்ச ஸம்பூதனான ராமசந்திரனை லோக நிந்தைக்கு அடங்கி நடந்திருக்கையில் நம்மைப் போலுள்ளவர் அதற்கு அவகாசம் கொடுப்பது தர்ம மோ? உங்களால் சங்கல்பிக்கப்பட்டிருக்கும் காரியம் நிறைவேற உங்கள் தேசத்திற்கு சமீபத்திலுள்ளவர்க ளாயும், லோக பிரசித்தர்களாயும், வயோவிருத்தராயும் ஞானவிருத்தராயும், உள்ள அநேகர் லோகத்தில் இருக் கக்கூடுமாகையால் அவர்களைக்கொண்டு உத்தேசித்த காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளக்கூடிய சுலபமான மார்க்கத்தை விட்டு இவ்வளவு தூரம் நீங்கள் வருவதில் மற்றவர்களைக்காட்டிலும் ஏதோ ஒரு விசேஷம் நம்மிட மிருக்கலாமென்ற நிச்சயத்தினாலோ அல்லது பிராந்தி யினாலோ நம்பியல்லவா நம்மிடம் வந்திருக்கிறீர்கள். இப்படியிருக்கையில் குருபாம்பரையாய் அங்கீகரித்து க்கொண்டிருக்கும் மார்க்கத்தையே அனுசரிப்பதினால் பிரகிருதகாரிய சாதனமும் பிரதிஷ்டா சம்பாதனமும் ஆகுவதில்லையென்றறிந்து திடீரென்று புதிய வழக்கத்

தைப்பற்றி பிரகிருதகாரியத்தை நிறைவேற்றுவதில் நம் விஷயமாய் உங்களுக்கு இதுவரையிலும் உண்டாயிருக்கக்கூடிய பாவனை அதிகமாகுமோ? அல்லது அப்படியே தானிருக்குமோ? ஆகையால் தர்மலோபம் செய்துகொண்டாவது உங்கள் கோரிக்கையை நிறைவேற்றவேண்டியதாய் நம்மை பிரார்த்தனை செய்வதைக்காட்டிலும் நம் அபிப்பிராயத்தையே நீங்கள் அனுமோதனம் செய்து உங்களுடைய காரிய சித்திக்காக லோக பூஜ்யராயிருந்த நம் குருக்களின் பாதுகையை எடுத்துக்கொண்டுபோய் அந்தப்பாதுகையை அக்கிராசனத்தில் வைத்து உங்கள் காரியத்தை ஆரம்பம் செய்தால் அந்த பாதுகையின் மஹிமையினுல் நீங்கள் ஸங்கல்பித்த காரியம் சித்தியடையும், என்று ஸ்ரீஸ்வாமிகள் உத்தரம் கொடுத்தார்கள்.

இந்தப்பிரகாரம் ஸ்ரீஸ்வாமிகள் தம் அபிப்பிராயத்தைத்தெரிவித்தவுடன் அவர் மனோநிச்சயத்தையும், அவருடைய உதாசீனதையையும் மூன்னோர்களின் ஆசார விஷயத்தில் அவருக்குள்ள நம்பிக்கையையும் தெரிந்துகொண்ட அந்த கிருஹஸ்தன் அதிக ஆச்சரியத்துடனும் பயபக்திகளுடனும் ஸ்ரீஸ்வாமிகளுக்கு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து ஸ்ரீஸ்வாமிகளுடைய ஆக்ஞையை சிரஸ்ஸில் தாரணம் செய்துகொண்டு தாக்ஷிண்யத்திற்குட்பட்டாவது பிரதிஷ்டாஸம்பாதனையில் அபிப்பிராயமுள்ளவராகவாவது, ஸ்ரீஸ்வாமிகள் தன் பிரார்த்தனையை அங்கீகரித்து புது

வழக்கத்தைப்பற்றி காசீ க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து ஜனங்களுடைய கோரிக்கையை நிறைவேற்றியிருந்தால் அவ்விடத்திய ஜனங்களுக்கு எவ்விதமான சந்தோஷமுண்டாகக்கூடியதாகவிருந்ததோ அதைக் காட்டிலும் ஆயிரம் பங்கு அதிகமாக ஸ்ரீஸ்வாமிகள் உத்தரவு கொடுத்த சங்கதிகளைக்கேட்டு சந்தோஷப்படுவார்களேயன்றி ஒருவரும் வியசனப்படமாட்டாரென்று நம்பிக்கை தனக்கு இருக்கிறதென்று தெரிவித்துக்கொண்டு குருக்களால் அனுக்கிரஹிக்கப்பட்ட பாதுகைகளைப்பெற்றுக்கொண்டு சந்தோஷமனமுடையவராய் பிரயாணமானார். இந்த சந்தர்ப்பத்தில் இந்த விசாரத்தை பிரஸ்தாபிப்பதில் ஒரு மடாதிபத்ய ஸ்தானத்திலிருந்த ஸ்வாமிகள் பிறருக்கு அடையமுடியாத கௌரவத்தையும் கீர்த்தியையும் சம்பாதிக்கக்கூடிய சந்தர்ப்பங்கள் நெருங்கி வந்தாலும் இவருக்கு இருந்த விவேக வைராக்கியங்களினால் அந்த விஷயங்களைக்கூட அதி அல்பமானவைகளாக பாவித்துக்கொண்டிருந்தாரென்ற விஷயம் கொஞ்சம் தெரிந்துகொள்ள அவகாசமிருக்கலாமென்று நம்பி இங்கு பிரஸ்தாபிக்கப்பட்டது.

ஸ்ரீஸ்வாமிகளுக்கு இருந்த ஞானம் அனுபவத்தை முன்னிட்டுக்கொண்டிருந்தது. இவர் அநேக தினங்களில் அநேக மணி நேரம் தம் சரீரத்தை மறந்து ஆத்மத்தியானத்தில் ஆழ்ந்தவராயிருந்தார். எப்போதும் உள்ளே ஆத்மானுசந்தானம் செய்துகொண்டிருந்தா

ரென்ற விஷயத்தைத்தெரிந்துகொள்வதற்கு மந்த ஹாஸத்துடன் கூடிய இவர் முகம் ஒன்றே போது மான பிரமாணமாயிருந்தது. அதி ஸூக்ஷ்மமான ஆத் மதத்வத்தை லௌகிக திருஷ்டாந்தங்களாலும் யுக்தி களாலும் தம்மிடத்தில் வரக்கூடிய சிஷ்யர்களுக்கு வெகு சுலபமான ரீதியில் உபதேசம் செய்துகொண்டி ருந்தார். இவரிடம் வரக்கூடிய சிஷ்யர்கள் சாதனசது ஷ்டய சம்பாதனையுடன் ஆத்ம விசாரத்தில் அதிகாரத் தை சம்பாதித்தவராயில்லாமலிருந்தாலும் அவர்கள் உ பதேசரீதியினால் வெகு சுலபமாக ஸூக்ஷ்மார்த்தங்களைத் தெரிந்து ஆனந்தப்பட்டுக்கொண்டிருந்தார்கள். இந்த ஆனந்தம் தாத்காலிகமாயிருந்தாலும் உபதேசிக்கப் பட்ட விஷயம் மனதிற்கு வராமலிருந்தால் ஆனந்தப் படுவதற்கு அவகாசமிருந்திருக்கவில்லை. அந்தப்பிர காரம் அஸம்ஸ்கிருத புத்திகளுக்கு கூட தத்வத்தைத் தெரியும்படி சொல்லவேண்டுமானால் ஸ்வானுபவமி ருந்தவர்களுக்கு அது சாத்தியமே தவிர கேவலம் சாஸ்திரஞானமுள்ள பண்டிதர்களுக்கும் மற்றவர்க ளுக்கும் அது சாத்தியமல்ல.

சாலிவாகன 1824 பிலவ வருஷம் கார்த்திகை மாதத்தில் (7–12–1901) நால்வடி கிருஷ்ணராஜபிரபுக் கள் தம் இராஜ்யபாரத்தை வகிப்பதற்கு முன் 2-வது தடவை சிருங்கேரிக்கு வந்திருந்து ஸ்ரீஸ்வாமிகளு டைய அனுக்கிரஹம் பெற்றுக்கொண்டு புறப்படும் போது இவருடன் வந்திருந்த மி. ப்ரேஜர் சாஹே

பர் ஸ்ரீஸ்வாமிகளைப் பார்த்தகாலத்தில் அவர்க ஆனந்தமாயிருப்பதை அறிந்து கீழ்கண்ட அபிப் பிராயத்தை வெளியிட்டார். ஸம்ஸாரிகளான நாங் கள் நம் வீட்டிற்கு வருகிற பந்துக்களுக்கும் ஸ்நேகி தர்களுக்கும் காபி, டீ, முதலிய களை தீர்க்கக்கூடிய பதார்த்தங்களை சிறிது கொடுத்து சந்தோஷப்படுத்து கிறோம். தங்களிடத்தில் வருகிறவர்களுக்கு தாங்கள் ஹிருதயத்தில் நிறைந்துகொண்டிருக்கிற ஆனந்தத் தை நிரம்ப நிரம்ப அளவில்லாமல் கொடுத்து சந் தோஷப்படுத்துகிறீர்கள் என்று சொன்னார். இந்த அபிப்பிராயம் கேவலம் பிரபஞ்சத்திய சுகத்தில் மாத் திரம் நோக்கமுள்ள மேநாட்டுப் பண்டிதரிடமிருந்து வரவேண்டுமானால் ஸ்ரீஸ்வாமிகளின் மனோபாவம் அவ ர்கள் முகத்தைப் பார்த்த மாத்திரத்தில் எவராலும் கண்டுபிடிப்பதற்கு சுலபமாயிருந்ததென்று சொல்லு வதில் சந்தேகமில்லை.

ஸ்ரீஸ்வாமிகள் சிருங்கேரியில் வாசமாயிருந்தகால த்தில் சில வருஷகாலம், பாஹ்ய பூஜாதிகளான சகல வியாபாரங்களையும் விட்டு கேவலம் ஞான அப்பியாசத் திலேயே ஊக்கம் கொண்டிருந்தார்கள். அக்காலத் தில் துங்கா நதிதீரத்தில ஏகாந்தமாயும் ரமணீயமாயு மிருக்கிற பிரதேசத்தில் மணல் திடல்களிலும் கல்பா றைகளிலும் உட்கார்ந்துகொண்டு ஆத்மத்தியானம் செய்துகொண்டிருந்தார்கள். அநேகமாய் பிரதி வரு ஷமும், ஒரு மாசகாலம் சிருங்கேரிக்கு சமீபத்திலுள்ள



ஸ்ரீ மஹாஸ்வாமிகள் நரஸிம்ம பர்வதத்தின் சிகரத்தில்

நரசிம்ம பர்வதமென்ற ஸ்தலத்தில் வாசம் செய்து கொண்டிருந்தார். அந்தக் காலத்தில் இவர்கள் பரிஜனங்கள் இருந்துகொண்டிருந்த பிரதேசத்திற்கு தூரத்தில் ஒரு பர்ணசாலையில் ஏகாந்தமாக இருந்துகொண்டு ஆத்மத்தியானம் செய்துகொண்டிருந்தார்கள். சாயங்காலம் 5 மணிக்குமேல் தம் பர்ணசாலையிலிருந்து வெளியில் வந்து பர்வதத்தின்மேல் 2, 3 மைல் தூரம் சஞ்சாரம் செய்வார்கள். அந்த சமயத்தில் இவர்களுடன் தொடர்ந்துவரும், சன்னியாசிகள், கிருஹஸ்தர் முதலியவர், தூரத்திலிருந்து அவர்களை தர்சனம் செய்து நமஸ்கரித்து பின் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகள் யாரிடத்திலும் சம்பாஷணை செய்துகொண்டிருக்கவில்லை. இவர் மந்தஹாசம், சந்திரகிரணங்கள்போல எல்லாரிடத்திலும் பரவி சகலருக்கும் ஆனந்தத்தையுண்டாக்கி அக்காலத்தில் எல்லோருடைய மனமும் சுத்த பாவத்தை அடைந்ததாகத் தோன்றிக்கொண்டிருந்தது. சுமார் 150 வருஷங்களுக்கு முன் தக்ஷிண தேசத்தில் ஜீவன்முக்தரென்று பிரசித்தராயிருந்த சதாசிவ பிரம்மேந்திரர் என்ற பெரியவரிடத்தில் ஸ்ரீஸ்வாமிகளுக்கு விசேஷமான கௌரவபுத்தியுண்டாயிருந்தது. இவர் பிரம்மஞானிகள். இவர் ஆத்மானுபவத்தை ஆத்மவித்யாவிலாஸமென்ற ஒரு கிரந்தத்தில் வெளியிட்டிருக்கிறார்கள். இந்த கிரந்தத்தை எப்போதும் படனம் செய்கிறதிலும் இதரர்களைக் கொண்டு வாசிப்பித்து சிரவணம் செய்வதிலும் அவர்

களுக்கு வெகு ஆலைக்தியிருந்தது. தம் அநேக சிஷ்ய ஜன மத்தியில் ஸ்ரீஸ்வாமிகள் சந்தோஷமாய் உட்கார்ந்துகொண்டிருக்கும் சமயத்தில் சிஷியர்களுக்குள் யாராவது ஒருவரிடமிருந்து ஆத்மவித்யாவிலாசத்தைச் சொல்லும்படி சொல்லிக் கேட்டுக்கொண்டிருப்பார்கள். அப்படி கேட்பதற்கு ஆரம்பமாகி 5, 6 நிமிஷகாலம் வரை அவர்களுக்கு பாஹ்யவிருத்தி இருந்துகொண்டிருக்கும். பிறகு கிரந்தம் முடிந்து கால்மணி அரைமணி நேரம்வரையில் பாஹ்ய விருத்தியே இருந்துகொண்டிருக்கவில்லை. நிமிர்ந்த சரீரத்துடன் பத்மாசனத்திலமர்ந்திருந்த அவர்கள் சிரஸ் பூமிவரையில் வணங்கிப் போய்க்கொண்டிருந்தது. இப்படி நடக்கக்கூடியதை இவர்களிடம் விசேஷமாக வந்துகொண்டிருந்த சிஷியர்களில் அநேகர் பிரத்தியக்ஷமாகப்பார்த்திருக்கிறார்கள். இவர்கள் தியானம் செய்யும் சமயத்தில் சரீரத்தை மறந்து அதிலிருந்த அபிமானம் நீங்கிப்போய்க்கொண்டிருந்ததென்ற சங்கதியைத் தெரிந்துகொள்வதற்கு அவகாசமிருந்தது. பிரதி வருஷமும் நரசிம்ம பர்வதத்தில் சிலகாலம் வஸதி செய்துகொண்டிருந்ததாக முந்தியே சொல்லப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் ஒரு நாள் காலையில் 7 மணிமுதல் 12 மணி வரையிலும் நரசிம்மஸ்வாமி சமீபத்திலுள்ள மரத்தினடியில் ஆசனத்திலிருந்துகொண்டு தியானம் செய்துகொண்டிருந்தார்கள். அந்தக் காலத்தில் ஒரு அரண்யமக்ஷிகா (காட்டு ஈ) அவர்களின் தொடையின்மேல் உட்கார்ந்துகொண்டு

கூர்மையாய் முள்ளுபோலுள்ள கொடுக்கினுல் குத்தி ரக்தத்தை பானம் செய்ய ஆரம்பித்து யதேஷ்டமாய் ரக்தத்தை பானம் செய்தது. ரக்தம் துடையின்மேலி ருந்து வழிந்து பூமியின்மேலும் விழுந்து இருந்தது. ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் சமாதியிலிருந்து பஹிர்முகமா கிறவரையிலும் அவர்களுக்கு எவ்விதமான ஹிம்சை யும் தோன்றவில்லை. அதன்பிறகு உண்டான சீதஸ் பர்சத்தினுல் பார்க்கையில் துடை ரக்தமாயிருந்தது. ரக்தத் துளிகள் கீழே விழுந்திருப்பதும் தெரியவந் தது. இந்த ஸம்பவத்தை இந்த லேககன் தான் நேரில் பார்த்திருந்தான்.

இப்படிப்பட்ட ஞானிகளுக்கு அணிமாதி சித்திக ள் இருந்ததென்று சொல்லுவதிலாவது சித்திகள் விஷ யத்தில் அவர்களுக்கு நோக்கமிருந்ததாக சொல்லு வதிலாவது விசேஷமொன்றுமிருப்பதாக தோன்றவி ல்லை. இவர்கடளித்தில் புத்திராபேக்ஷிகளாகவும் அசா த்தியமான வியாதியால் பிடிக்கப்பட்டவர்கள் அதன் பரிஹாரத்திற்காகவும், பூத பிரேத, ஆவேசமுள்ளவர் கள் அவைகளின் நிவர்த்திக்காகவும் அநேகர் வந்து கொண்டிருந்தார்கள். தீனராய் தம்மிடம் வரக்கூடிய வர்களை அதிக ஆதரவுடன் ஸ்ரீஸ்வாமிகள் தாமாகவே விசாரித்து அவரவர்கள் கஷ்டங்களைத்தெரிந்துகொள் ளுவார்கள். வந்த ஜனங்கள் தங்கள்கஷ்டங்களை அவர்களிடத்தில் தெரிவித்துக்கொள்ளும்போது அ வர் முகபாவத்தைப் பார்த்தமாத்திரத்திலேயே த

ங்களுடைய கஷ்டங்கள் பரிஹாரமானதாகவே அறிந்துகொண்டிருந்தார்கள். கஷ்டப்பட்டுக் கொண்டு தம்மிடத்தில் வந்த ஜனங்களின் இஷ்ட பிராப்திக்காகவும் அநிஷ்டநிவிர்த்திக்காகவும் விசேஷமாக விபூதியை அபிமந்திரித்துக்கொடுத்துக்கொண்டிருந்தார்கள். சிலருக்கு சுத்த ஜலத்தை அபிமந்திரணம் செய்து கொடுப்பார்கள். சிலருக்கு யந்திர தாரணம் செய்விப்பது, மற்றும் சிலருக்கு மந்திரோபதேசம் செய்வது. இதைத்தவிர வேறே ஒன்றும் செய்துகொண்டிருக்கவில்லையென்பது சர்வஜனங்களுக்கும் தெரிந்த விஷயம் இதன் பலன் மிக ஆச்சரியமாய் ஜனங்களால் அநுபவிக்கப்பட்டிருக்கிறது. இதில் 1, 2 சங்கதிகள் மாத்திரம் இங்கே சுருக்கமாய் காண்பிவிக்கப்படுகிறது. திருவாங்கூர் சம்ஸ்தானத்தைச்சேர்ந்த பத்மநாபபுரம் என்ற டிவிஷனில் ஆசிரம கிராமம் என்று ஒரு பிராம்மண அக்கிரஹாரமிருக்கிறது. இதில் சுப்பிரமணிய சாஸ்திரி என்ற ஒரு பிராம்மணன் சாதாரண பண்டிதனுயிருந்தான். இவனுக்கும் ஸம்ஸ்கிருத கவிதையில் பரிசயம் நன்ருக விருந்தது. இவர் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஷயமாய் சில சுலோகங்கள் கவனம் செய்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சன்னிதானத்தில் விக்ஞாபனம் செய்துகொண்டார். அவருடைய கவிதாசாதுர்யத்தையும் அதில் அந்த பிராம்மணன் காண்பிவித்துக்கொண்டிருந்த அவர் தைனிய பாவத்தையும் அறிந்து ஸ்ரீஸ்வாமிகள் மனது கறைந்து பிரவாஹம்

போல் அந்த சுப்பிரமணிய சாஸ்திரி பக்கமாய் பிரவஹித்தது. பிறகு அவர் விஷயத்தை விசாரித்ததில் பிறவி ஊமையான 10, 12 வயதுள்ள தன் புத்ரனுக்காக தான் துக்கமடைந்துகொண்டிருப்பதாயும் அந்த துக்கத்திற்கு பரிஹாரம் ஸ்ரீஸ்வாமிகள் அனுக்கிரஹத்தினால் ஆகவேண்டுமேயல்லாமல் வேறு வழியில்லையென்றும் தெரியவந்தது. புத்திரனுடன் சுசீந்திரம் என்ற அடுத்த கிராமத்திற்கு வரும்படி ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞைசெய்து அவரை சமாதானப்படுத்தி அனுப்பினார்கள். அதுபோல சுசீந்திர கிராமத்திற்கு ஊமையான பாலகனுடன் வந்த அந்த பிராம்மணனுக்கு ஒரு மந்திரத்தை உபதேசம் செய்து அந்த மந்திரத்தினால் அபிமந்திரணம் செய்த ஜலத்தை மூன்று மாத காலம் விடமால் பிரதிதினமும் அந்த பாலகனுக்கு பிராசனம் செய்விக்கும்படி அனுக்கிரஹமும் செய்தார்கள். அது போலவே அந்த பிராம்மணன் நியமத்துடன் அனுஷ்டானம் செய்துவந்தான். ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞைப்படி நடத்தப்பட்டுவந்த மேல் கண்ட கிரியையினால் மூன்று மாத காலம் பூர்த்தியாகும்போதே அந்த பாலகனின் ஜாடியம் குறைந்து கொண்டுவந்தது. செவிட்டுத்தனம் கிரமமாய் குறைய ஆரம்பமாயிற்று. ஒவ்வொருவார்த்தை சொல்லுவான் என்ற நம்பிக்கை அந்த பாலகன் பிதாவுக்கு உண்டாகிக்கொண்டு வந்தது. இந்த அனுகூலமான குறிகளால் வெகு காலம் வரையில் அந்த பிராம்மணன் ஸ்ரீ

ஸ்வாமிகளவர்களால் உபதேசிக்கப்பட்ட கிரியையே ஆசரித்து வந்ததாயும் இப்பால் அநேகமாய் ஊமைத்தனம் நிவர்த்தியாகி அந்த பாலனுக்கு உபநயனம் முதலிய சம்ஸ்காரங்கள் நடந்து சுகமாயிருப்பதாக தெரிய வருகிறது. இந்த அர்த்தத்தையே அவ்விடத்திய பண்டிதர் ஸ்ரீஸ்வாமிகள் ஸ்தோத்திரம் செய்யுங்காலத்தில் ஒரு சுலோகத்தில் நிரூபணம் செய்திருக்கிறார்.

आश्रामवासि द्विजराजसूनुमूकत्वविद्रावणपण्डिताभ्याम् ।
आनन्दसन्दायकवैभवाभ்यां नमो नमः श्रीगुरुपादुकाभ्याम् ॥

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சிருங்கேரியில் வாசம் செய்திருந்த காலத்தில் தீர்த்தஹள்ளி தாலூகாவில் அமல்தாராயிருந்த தும்கூர் ஸ்தலத்திய ஹேமா ஹனுமந்தய்யன் என்பவன் தர்சனத்திற்காக வந்திருந்தார். அப்போது இவருக்கு வயது 50 வருஷத்திற்கு மேலாயிருந்தது. அதுவரையில் சந்தானமிருக்கவில்லை. சந்ததியை உத்தேசித்து இரண்டாவது பாரியையை விவாஹம் செய்தார். அந்த பாரியையிடத்திலும் சந்தானம் உண்டாகவில்லை. இவர் மைசூர் தேசத்தில் பெரிய சந்ததியைச்சேர்ந்தவராயிருந்ததினால் தம் வம்சம் முன் நின்று விருத்தியடைவதற்கு அவகாசமில்லாமலாயிருக்கிற குறை இவர் மனதில் விசேஷமாயுண்டாயிற்று. தன் பிற்காலத்தில் தன் ஸ்தாவரஜங்கம ஆஸ்திகள் தர்மகாரியத்திலாவது விநியோகம் செய்யப்பட்டு அதினாலாவது தம் வம்சத்தியவர்களுக்கும் தமக்கும் ஸத்கதியுண்டாகும்படி செய்துகொள்ள

வேண்டுமென்ற எண்ணம் பிறந்து தன்னைச்சேர்ந்த எல்லா சொத்துக்களும் தனக்குப்பிற்காலம் சிருங்கேரி ஸ்ரீசாரதாம்பாள் ஸேவைக்காக விநியோகம் செய்யத்தக்கது என்று உயில் எழுதி ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் கொண்டுவந்து ஒப்புவித்தார். அந்த சந்தர்ப்பத்தில் தம் முன்னே, ஹநுமந்தராயரால் வைக்கப்பட்ட பத்திரத்தின் சங்கதி என்னவென்று விசாரித்ததில் அந்த கிருஹஸ்தன் அபிப்பிராயத்தை விபரமாய்த்தெரிவித்துக்கொண்டார். சந்தானமில்லாததனால் கேவலம் சிந்தையிலாழ்ந்திருக்கும் அவர் அபிப்பிராயத்தைத்தெரிந்துகொண்டு ஸ்ரீஸ்வாமிகளுக்கு அவர் விஷயத்தில் கருணையுண்டாகி உம் சொத்துக்கள் சம்ஸ்தானத்திற்கு ஸ்திரமான வருமானத்தைத்தரக்கூடியதல்லவாகையால் ஸ்ரீசாரதாம்பாளுக்கு அந்த விஷயத்தில் ஆதரவு இல்லை. உம்முடைய சந்ததி ஸ்திரமான வருமானத்தை கொடுக்கக்கூடியது. அதில் மாத்திரம் தான் அதிகமான அபேக்ஷை அம்மனுக்கு இருப்பது. ஆகையால் அப்படிப்பட்ட வருமானத்தை சம்பாதித்துக்கொள்ளுவதில் அம்பாளே ஜாகருகராகி இருப்பாளென்று ஹநுமந்தய்யனுக்கு ஆக்ஞாபித்து அவரால் ஒப்புவிக்கப்பட்ட உயிலை அவரிடமே திருப்பிக்கொடுக்கும்படி உத்தரவு செய்தார்கள். ஹநுமந்தய்யர் ஸ்ரீஸ்வாமிகள் அபிப்பிராயத்தையும் அவர்கள் மாகாத்மியத்தையும் அறிந்தவராயிருந்தாலும் தன் வயது கிரமத்தினால் இனிமேல் தனக்கு சந்தானம் உண்டாகக்

டுமென்றவிஷயத்தில் நம்பிக்கை உண்டானதாக தோன்றவில்லை. இந்த காரணத்தால் திருப்பித்தன்னிடத்தில் கொடுத்த உயிலை பெற்றுக்கொண்டுபோவதற்கு அபிப்பிராயமில்லாதவராய் தனக்கு சந்தானம் உண்டானால் தன் சொத்துக்கள தன் சந்ததிக்கு சேரக்கூடியதென்றும் அப்படியில்லாத பக்ஷத்தில் தன் முதல் உத்தேசப்படி விநியோகம் செய்யத்தக்கது என்று ஒரு வாசகம் மாத்திரம் மூந்தி தான் எழுதியிருந்த பத்திரத்தில் சேர்த்து ஸ்ரீமடத்தில் இருக்க வேண்டுமென்று அதிகாரிகளிடம் தெரிவித்துக்கொண்டு சம்ஸ்தானத்திலேயே வைக்கச்செய்தார். பிறகு சிலகாலத்திற்குள்ளாகவே ஸ்ரீஸ்வாமிகள் அனுக்கிரஹத்தினால் இந்த ஹனுமந்தய்யருக்கு சந்தானம் உண்டாக ஆரம்பமாகி மூன்று புருஷ சந்ததிகளையும் மூன்று ஸ்திரீ சந்ததிகளையும் பெற்று சுமார் 80 வயது வரையிலும் ஜீவித்து இப்போது சில காலத்திற்கு முன் காலமானரென்று தெரியவருகிறது. இப்படியே ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் புத்திராபேக்ஷையுடன் வந்தவர்களின் தொகையைக்கணக்கிடுவது சாத்தியமில்லை. இப்படிவ்வு அம்மகானுபாவரின் அனுக்கிரஹத்தினால் சந்ததியை அடைந்தவர்களில் அநேகர் குரு பிரசாதத்தினால் கிடைத்த தம் குழந்தைகளுக்கு விவாஹம் செய்யும் போதும் உபநயனம் செய்யும்போதும் குருகாணிக்கையாக தம்மால் அனுப்பப்பட்டிருக்கிற உபஹாரத்தை ஸ்வீகரித்துக்கொண்டு பிரசாதத்தை அனுப்புவதி

ன் மூலமாய் அநுக்கிரஹிக்கவேண்டுமென்று அடிக்கடி இப்போதைய குருக்கள் அவர்களை பிரார்த்தித்து வருகிறார்கள். ரோகத்தினால் பீடிக்கப்பட்டும் கிரஹாவேசத்தினால் கஷ்டப்பட்டும் வருகிற ஜனங்களில் அநேகர் ஸ்ரீ ஸ்வாமிகளால் அநுக்கிரஹிக்கப் பட்டவர்களாய் ஆரோக்கியமடைந்திருக்கிறார்கள்.

இப்படிப்பட்ட ஜனங்களை இப்போதும் தக்ஷிணதேசத்தில் விசேஷமாகக்காணலாம். தம்மிடத்தில் தீனராயும் ஆர்த்தராயும் தம் ஆர்த்தியையும் தைன்யத்தையும் பரிஹாரம் செய்துகொள்வதற்கு வந்துகொண்டிருந்த ஜனங்கள் விஷயத்தில் ஸ்ரீஸ்வாமிகள் செய்துகொண்டிருந்த பரிஹாரக்கிரமத்தை ஒரு சமயத்தில் அம்மன் பிரார்த்தனை ரூபமாக தாமே வெளிப்படுத்தியிருக்கிறார்கள். அந்த சங்கதியைத்தெரிந்துகொள்வதற்காக இரண்டு சுலோகங்கள் கீழே காண்பிவிக்கப்பட்டிருக்கின்றன.

मातर्बाधिर्यमूकीभवनमुखमहारोगसंपीडिताङ्गा
भूताविष्टाश्च तत्तत्प्रशमनमचिरात् काङ्क्षमाणाः सुदूरात् ।
आगत्याश्वेव तत्तत्प्रशमनपटुतां मन्यमाना जनेऽस्मि-
न्याचन्ते किं प्रकुर्यां वद तुहिनगिरीशानपुत्रीन्दुमौले ॥

याचन्ते नम्रलोका विविधगुरुरुजाक्रान्तदेहाः पिशाचै-
राविष्टाङ्गाश्च तत्तज्जनितबहुतरक्लेशनाशाय शीघ्रम् ।
किं कुर्यां मन्त्रयन्त्रप्रमुखविधिपरिज्ञानशून्याश्चिकित्सां
कर्तुं न त्वत्पदाब्जस्मरणलवमृते वाणि जानेऽत्र किञ्चित् ॥

இந்த மாதிரியாய் ஸ்ரீஸ்வாமிகள் தம் தபஸ் ஸித்தியி னுல் ஜனங்களுக்கு செய்துகொண்டிருந்த அனுக்கிர ஹம் லோகத்தில் பிரசித்தமாயிருந்தது. ஆகையினுல் மகா ஞானிகளான இவர்களிடத்தில் சித்திகளும் இருந் ததாக சொல்லும் விஷயத்தில் சந்தேகமென்ன ?

ஸ்ரீஸ்வாமிகள் ஸ்வதந்திரமாக 1891-வது கர வரு ஷத்தில் இரண்டாவது தடவை தக்ஷிணதேச யாத்தி ரைக்காக புறப்பட்டு 1895 மன்மத வருஷத்தில் சிருங் கேரிக்கு திரும்பி வந்தபின் சுமார் 12 வருஷகாலம், என் ருல் மன்மத வருஷமிருந்து 1907 பராபவ வருஷம்வரை யில் சிருங்கேரி க்ஷேத்திரத்தில் வாசம் செய்திருந்தார் கள். அந்தக் காலத்தில் விரக்தரான சன்னியாஸிகளுக் கும், ஞானேச்சுக்களான கிருஹஸ்தர்களில் அநேகருக் கும் மூன்றுதடவை பிரஸ்தானத்ரய பாஷ்யபாடம் சொன்னுர்கள். லோகோபகாரார்த்தமாக கர்மம், பக்தி உபாசனை இவைகளை கிரமப்படி தாம் அனுஷ்டானம் செய்து ஜனங்களுக்கு உபதேசித்தார்கள். சுமார் நாலு ஐந்து வருஷகாலம் விசாரத்திலும் ஆத்மத்தியானத் திலும் தம் காலத்தை ஆனந்தமாகக் கழித்து ஞான மார்க்கத்தை பிரசாரம் செய்தார்கள். இப்படிப்பட்ட கலிமாகாத்மியமிருக்கும் காலத்தில் கூட நம்மைப் போ லொத்தவர்களின் திருஷ்டி கோசராயிருந்து தம் அபூர்வமான நடத்தைகளாலும் பிரபஞ்சத்திற்கே சன் மார்க்கோபதேசம் செய்துகொண்டிருந்த இந்த மகா னுபாவரிடத்தில் இருந்த குணகணங்களை தெரிந்து

சொல்வது பாமர ஜனங்களுக்கு சாத்தியமா? அப்படியானாலும் ஸ்தூலமாய் அந்த மகான்களிடத்தில் பார்த்துவந்த சில விஷயங்களை மாத்திரம் சங்கிரஹம் செய்து இந்த கிரந்தத்தில் சொல்லியிருக்கிறது.

இந்தப் பிரகாரம் ஸ்ரீஸ்வாமிகள் அவர்களிடத்திலிருந்த ஒவ்வொரு குணமும் அஸாதாரணமானதாயும் அபூர்வமானதாயும் ஆச்சரியகரமாயுமிருந்தது. இதெல்லாம் இவர்களுடைய வர்த்தமான ஜன்மாப்பியாசத்தினாலேயே உண்டானவைகளென்று சொல்லுவதற்கு முற்றிலும் அவகாசமில்லை. முந்தி சொல்லியிருக்கிறபடி வாமதேவாதி மகரிஷிகளைப்போல் ஜன்மாந்தரத்திய அப்பியாசத்தினால் இந்த ஜன்மத்தில் பிரகாசமடைந்ததென்று சொல்லவேண்டுமே தவிர வேறே இல்லை. இவர்களுடைய அதிக சமீபத்திலேயே விசேஷகாலமிருந்து எல்லா சந்தர்ப்பங்களிலும் இவர்களுடைய ஒவ்வொரு பிரவிர்த்தியையும் அனுஷ்டானத்தையும் ஸ்திதியையும் பார்த்து அனுபவித்தவர்கள் இவர்களிடத்தில் ஜீவன்முக்த லக்ஷணம் சம்பூர்ணமாக இருந்ததாகத் தெரிந்துகொண்டார்களே தவிர சாமான்யபாவனை செய்வதற்கும் அதிபரிசயத்தினால் அவக்ஞையை காண்பிப்பதற்கும், ஸ்வாதந்திரியத்தை வஹிப்பதற்கும் அவகாசமிருக்கவில்லையென்று வெகுகாலம் சமீபத்திலேயே வாசம் செய்துவந்த இந்த லேககன் சங்கோசமில்லாமல் சொல்லமுடியும். ஆனால் ஸ்ரீஸ்வாமிகள் எந்த சந்தர்ப்பத்திலும் தாம் ஞானிகளென்றும்

அப்பியாசம் பூர்த்தியாகி ஞானபலத்தை ஸம்பூர்ண மாக அநுபவித்துக்கொண்டிருப்பதாக தெரிந்து இருப் தாயிருந்தாரென்றும அவர் சம்பாஷணையினுலாவது அவர்கள் காண்பிவித்துக்கொண்டிருந்த நீதிகளாலா வது சாமான்யமாய் அவர்கள் ஸ்வரூபத்தைத் தெரிந்து கொள்ளும்படியாயிருக்கவில்லை.





## 9-வது அத்தியாயம்

### சிருங்கேரி க்ஷேத்ரமும் மடமும்.

சிருங்கேரியானது புராண பிரசித்தமான க்ஷேத்திரம். இது மேற்கு சமுத்திரத்திற்கு 50 மைல் தூரத்தில் மேற்கு மலை தொடிக்கு சமீபத்திலுள்ளது. மிக பரிசுத்தமாயும் பானம் செய்வதற்கு பெயர் பெற்றதாயுமுள்ள துங்காநதி சிருங்கேரிக்கு 25 மைல் தூரத்திலிருக்கிற வராகபாவதத்தில் உத்பவித்து இந்த க்ஷேத்திரத்தில் பிரவஹித்துப் பின்பு 60 மைல் தூரத்தில் பத்ரா நதியுடன் சேர்ந்து, சமுத்திர காமினியான கிருஷ்ணா நதியில் சேருகிறது. இந்த க்ஷேத்திரம் மிக புராதனமானுலும் இப்பால் ஸ்ரீசங்கரபகவத் பாதாசாரிய ஸ்வாமிகளவர்கள் காசி விசுவேசுவரஸ்வாமி ஆக்ஞையை யனுசரித்து தூர்வாச மகா முனியின் சாபத்தினுல் பூமியில் மனுஷியாவதாரம் செய்திருந்த ஸரஸ்வதீ தேவியை வாதத்தில் ஜயித்தபிறகு சாபத்தினின்றும் விடுபட்ட அந்த ஸரஸ்வதி ஸத்தியலோகத்தைக் குறித்துப் புறப்பட யத்தினிக்கையில் அவளைப் பிரார்

ந்தித்து வரம்பெற்று, தம்மால் பிரசுரம் செய்யப்பட்டு வருகிற அத்வைத மார்க்கத்தின் பிரசாரத்திற்காக சிருங்கேரியில் சாரதாபீடத்தை ஸ்தாபனம் செய்த பிறகு முன்னிலும் அதிகமான பிரசித்தியை யடைந்திருப்பதாக தெரியவருகிறது.

இந்த க்ஷேத்திரத்திற்கு ஸ்ரீமதாசாரியர்கள் சஞ்சாரம் செய்துகொண்டு வந்த சமயத்தில் துங்காநதிக்கு வடகரையில் பிரசவ உபத்திரவத்தினால் வருந்திக்கொண்டிருக்கிற ஒரு பெண் தவளைக்கு வெயிலின் தாபம் உண்டாகாமல் விஸ்தாரமான தன் படத்தினால் நிழல் உண்டுபண்ணி காற்றுக்கொண்டிருந்த ஒரு சர்ப்பத்தைக் கண்டு இயற்கையில் வைரமுள்ள இந்தப் பிராணிகளுடைய ஸ்நேகபாவத்திற்கு ஆச்சரியப்பட்டு இந்தப் பிரதேசம் ஸ்வபாவத்தில் விரோதமுள்ள ஜந்துக்களுக்கும் கூட ஸ்நேகத்தை செய்யக்கூடியதென்று தீர்மானித்து இந்த க்ஷேத்திரம் ஸ்ரீசாரதா தேவியை ஸ்தாபனம் செய்து தக்ஷிணாம்நாயமடத்தை ஸ்தாபனம் செய்வதற்கு உசிதமான தேசமென்று தீர்மானம் செய்ததாக ஒரு இதிஹாசம் சொல்லப்படுகிறது. எந்த இடத்தில் தவளையை சர்ப்பம் காத்ததாக வதந்தி இருக்கிறதோ அந்த இடத்தில் கல் கட்டிடத்தில் ஒரு சிறு தேவாலயம் நிர்மாணம் செய்து அங்கே "கப்பே சங்கர" (தவளை ஈசுவரன்) என்னும் பெயரால் ஈசுவரனுக்கு இப்போதும் பூஜை நடந்துகொண்டுவருகிறது.

ஆசாரியஸ்வாமிகள் இந்த க்ஷேத்திரத்திற்கு வந்



சிருங்கேரியில் துங்காநதியும் வித்யாசங்கரர் ஆலயமும்.

தகாலத்தில் துங்கா நதியானது கிழக்கிலிருந்து மேற்கு முகமாக ஓடி அங்கிருந்து வடதிசையை நோக்கிப் போய்க்கொண்டிருந்ததாகவும் அந்தப்ரவாஹத்தை திரும்பவும் கிழக்குத் திசைக்கே திருப்பி சிலதூரம் போனமேல் மறுபடியும் வடக்கே போகும்படி செய்ததாகவும் முதலில் நதி போய்க்கொண்டிருந்த ஸ்தலத்தில் விசாலமான கற்பாறையின்மேல் ஸ்ரீசக்ர யந்திரத்தை உத்தாரம் செய்து ஒரு தேவாலயத்தையும் மடத்தையும் உண்டுபண்ணி ஸ்ரீசக்கிர யந்திரத்தில் சந்தனமரத்தில் அமைத்த ஒரு சாரதா பிம்பத்தை பிரதிஷ்டை செய்து பூஜை ஆராதனங்கள் நடக்கும்படி ஏற்பாடு செய்ததாகத் தெரியவருகிறது.

இந்த சிருங்கேரியானது விபாண்டக மகா முனிவருக்கு ஆசிரமமாயிருந்ததாகவும், அவரால் பூஜிக்கப்பட்ட மலஹானிகரேசுவரர் என்ற பெயரால் பிரசித்தி பெற்ற ஈசுவரலிங்கம் வெகுகாலமிருந்து இந்த க்ஷேத்திரத்தில் நிலைகொண்டிருப்பதாகவும் புராணப் பிரசித்தமாயுள்ளது. இந்த லிங்கம் சாதாரணமான ஒரு மண் மலைமேல் தோன்றியிருக்கின்றது.

இந்த லிங்கம் ஜனங்கள் கண்ணில் புலப்பட்ட விஷயத்தில் முன் ஒரு காலத்தில் இந்த மலைமேல் புல் மேய்வதற்காக போய்க்கொண்டிருந்த பசுக்களில் ஒரு பசு நன்றாக புல் மேய்ந்து வீட்டிற்கு வந்தபிறகு அந்தப் பசுவின் யஜமானன் பால் கறப்பதற்கு யத்தனித்தால் ஒரு சொட்டுப் பால்கூட கிடைப்பதில்லை. இதன்

காரணம் தெரியாமல் யோஜனை செய்த அந்த யஜமான் ஒருநாள் தன் பசு மேச்சலுக்கு வீட்டிலிருந்து போகும்போது அதைத் தொடர்ந்துபோய் தூரத்திலிருந்து கொண்டு அந்தப் பசுவின் நடவடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தான். பசுவானது சாயங்காலம்வரையில் தன் இஷ்டப்படி புல் மேய்ந்து வீட்டிற்கு திரும்பி வருகையில் ஒரு மரத்தடியில் இரண்டு முன் கால்களையும் மேல் தூக்கி நின்றுகொண்டு தன் மடியிலிருந்து தாரைதாரையாய் பாலை சொரிந்துவிட்டு பிறகு வீட்டிற்குப் புறப்பட்டது. அதுவரையிலும் அங்கேயே காத்துக்கொண்டிருந்த அந்தப் பசுவின் யஜமான் அந்த மரத்தடியில் போய் பார்க்கையில் அங்கே தோன்றியிருந்த சிவலிங்கம் பால் பெருக்கினால் நனைந்து இருந்தது. அதுகண்டு பயபக்திகளுடன் கூடியவனாய் திரும்பி வீடுவந்து சேர்ந்து உடனே அக்காலத்தில் இராஜ்யபாரம செய்துகொண்டிருந்த இராஜரிடத்தில்போய் இந்த ஆச்சரியமான சங்கதியைத் தெரிவிக்க அந்த இராஜனும் அதிக ஆச்சரியங்கொண்டு தான் அவ்விடம் போய் பார்த்து லிங்கம் இருந்த ஸ்தலத்தில் கற்களால் ஒரு தேவாலயம் கட்டுவித்து பூஜை ஆராதனை முதலியவை நடத்துவரும்படி ஏற்பாடு செய்தான் என்பதாக ஒரு ஜனவதந்தி இருக்கிறது.

இதுவரையிலுள்ள அனுபவத்தினால் மலைநாட்டைச்சேர்ந்த சிருங்கேரியில் அதிக மழையாவது மழையே இல்லாமல் க்ஷாமமாவது உண்டானால் மல

ஹானிகரேசுவரருக்கு பிரார்த்தனை செய்துகொண்டால் அதிக மழை நிற்பதும் தக்கபடி மழை பெய்வதும் கட்டாயம் உண்டாவது அனுபவத்திலிருக்கிறது. அதிவிருஷ்டி, அனாவிருஷ்டி இவ்விரண்டும் பிராணிகளுடைய பூர்வகர்மங்களை அனுசரித்து வரக்கூடிய ஈதிபாதைகளாயிருந்தாலும் எல்லா ஜனங்களுக்கும் ஒரே விதமாக இந்த ஸ்வாமியின் பிரார்த்தனையால், ஈதிபாதை நிவிருத்தியாகுமென்ற நம்பிக்கை வேரூன்றியிருந்துகொண்டு இதுவரையிலும் அனாசாரமில்லாதவராய் ஜனங்கள் நடந்து வருவதினால் ஸர்வசக்தரான பகவான் அவரவர் பாவனைக்குத்தகுந்தபடி அனுக்கிரஹம் செய்வார் என்று தெரிந்துகொள்ளலாம்.

இந்தக்கோயிலில் ஸ்வாமிக்கு முன்பாக ஒரு உயர்ந்த கல் தூணில் ஒரு விநாயகர் இருக்கிறார். இந்த கணபதி கொஞ்சகாலத்திற்கு இப்பால் அந்த ஸ்தம்பத்தில் தோன்றியிருப்பதாக சொல்லிக்கொள்ளுகிறார்கள். இவ்விஷயத்தில் முற்காலத்திய சரித்திரமொன்று பிரசித்தமாயிருக்கிறது. இப்போது சுமார் இருநூறு வருஷங்களுக்கு முன் சிருங்கேரி மடத்திய குரு பரம்பரையில் 27 வதாய் வியாக்கியான பீடத்தில் பட்ட பத்ரராயிருந்த சச்சிதானந்த பாரதீஸ்வாமிகளவர்கள் சிவதர்சனத்திற்காக தேவாலயத்திற்கு போன காலத்திலங்கே கணபதி இல்லாதிருந்தது கண்டு முன்பாகத்திலுள்ள ஒரு ஸ்தம்பததில் மஞ்சளினால் கணபதியின் ரூபத்தை தம் கையினால் வரை

ந்து அந்த பிம்பத்தை முறைப்படி பூஜித்துவிட்டு சிவ தர்சனத்திற்குப்போனதாகவும் அது முதல் கணபதி எல்லா அவயவங்களுடனும் அந்த கல் தூணைப்பிளந்துகொண்டு முன் வந்துகொண்டிருந்ததாயும் தெரிய வருகிறது. இந்த கணபதியின் ஸ்வரூபத்தை எழுதிய ஸ்வாமிகள் விஷயமாய் स्तम्भे हेरम्बदर्शकः என்று விசேஷணத்தைக்கொடுத்து செய்திருக்கிற குருபரம்பராஸ்தோத்திரம் இதுவரையிலும் சிருங்கேரிமடத்திய குருக்களாலும் மற்றவர்களாலும் பரம்பரையாக ஆதரிக்கப்பட்டு வருகின்றது. எந்த ஸ்தம்பத்தில் கணபதி தோன்றியிருக்கின்றதோ, அந்த ஸ்தம்பத்தின் பின்பக்கத்தில் கணபதி இருக்கும் அளவிற்கு ஒரு அங்குலம் மேல் பாகத்திலும் கீழ்பாகத்திலும் தட்டினல் அந்த பாகம் கெட்டியாகவே இருப்பதாக கல்லின் சப்தம் நன்றாய் கேட்கிறது. கணபதி இருக்குமளவுள்ள இடத்தில் மாத்திரம் ஸ்வபாவமாக கல்லின் வலிமை இல்லாமலிருப்பதாக பொந்தாயுள்ள மரத்தை தட்டினல் எந்த சப்தம் கேட்குமோ அந்த சப்தம் கேட்கிறது. அந்த இடத்தை சாதாரணமாக விரலினல் தட்டினலும் உடைந்து போய்விடுமோ என்று தோன்றுகிறது. இந்த சங்கதியினலும் கணபதி விஷயமாக முந்திசொன்ன கதையை சாதாரணமாய் நம்புவதற்கு இடமுண்டென்று தெரிந்து கொள்ளலாம்.

சிருங்கேரி க்ஷேத்திரத்தை பிரசித்திக்குக்கொண்டுவந்த ஸ்ரீமான் ஆசாரியஸ்வாமிகளவர்கள் இந்த



ஸிம்மகிரியிலிருக்கும்
ஸ்ரீசதுர்வித்யேச்வரமூர்த்தி.

ஸ்தலத்தை பாதுகாக்கும்பொருட்டு நான்கு திக்குகளி லும் திக்தேவதைகளை ஸ்தாபனம் செய்ததாக சொல் லுகிறார்கள். கீழ்திசையில் காலபைரவனும் தெற்கில் துர்க்கா தேவியும் மேற்கு திசையில் ஹனுமந்த தேவ னும் வடக்கு திசையில் காளிதேவியும் பிரதிஷ்டை செய்யப்பட்டு நித்தியமும் பூஜை முதலிய ஸத்காரங் கள் நடத்தப்பட்டுவருகின்றன.

சுமார் 600 வருஷங்களுக்குமுன் சிருங்கேரி மடத்தில் பட்டபத்ராக வித்யாதீர்த்தர் என்று பிர சித்தியுள்ள யதீசுவரர்கள் யோகத்தில் மிகவும் மேன் மையையடைந்தவராயிருந்தார். அவருக்கு லம்பிகா யோக சித்தி இருந்தது. உலகப்பிரசித்தரான பாரதீ கிருஷ்ணதீர்த்த ஸ்வாமிகளும் வித்யாரண்யஸ்வாமிக ளும் அவருக்கு நேர் சிஷியாரவார்கள். அந்த மகான் லம்பிகா யோகநிஷ்டையில் உட்காருவதற்கு முன்பாக துங்கா நதியின் தென்கரையில் சிம்மகிரி என்னுமிடத் தில் ஒரு சிலா பிம்பத்தை செய்வித்து அதை ஜனங்க ளுக்குக்காண்பித்தார். அந்த பிம்பத்திய முன் பாகத் தில் பாரதீ கிருஷ்ணதீர்த்தர் வித்யாரண்யர் இவர்களு டன் கூடி வித்யா தீர்த்தர் ஸிம்ஹாஸனத்திலமர்ந்து வடதிசையை நோக்கியிருப்பதாயும் கிழக்கு திசையில் நான்முகனான பிரம்மாவும் தென் திசையில் விஷ்ணு மூர்த்தியும் மேற்கு திசையில் ஐந்து முகமுள்ள ஈசு வர மூர்த்தியும் மேல் பக்கத்தில் லக்ஷ்மீ நரசிம்ம மூர் த்தியும் அதன் மேல் லிங்கத்தின் ரூபமும் காணப்ப

டும். பன்னிரண்டு வருஷங்களுக்கு மேல் தம் சரீரம் லம்பிகா யோகசித்தியினால் தாம் காண்பித்திருக்கிற பிரதி பிம்பத்தைப்போலவே மாறுதலடையுமென்றும் அதுவரையிலும் எவரும் அவசரப்பட்டு எவ்விதத்திலும் இடையூறு செய்யக்கூடாதென்றும் பக்கத்திலுள்ளவருக்கு அறிவித்து துங்கா நதியின் வடகரையில் ஒரு நிலமாளிகை அமைத்துக்கொண்டு அதில் லம்பிகா யோகத்தில் நிச்சயமுள்ளவராக உட்கார்ந்து கொண்டதாயும் மூன்று வருஷங்களுக்குப்பிறகு அதுவரையில் குருக்களின் சரீரம் எந்த விதமாக பரிணாமத்தை *அடைந்திருக்கிறதோ அதைப்பார்க்கவேண்டுமென்ற ஆத்திரமுள்ள ஜனங்கள் குருக்களின் ஆக்ஞைக்கு விரோதமாக அவர் ஆஸனத்திலமர்ந்திருக்கிற நிலமாளிகையைத் திறந்து பார்த்ததாயும் அக்காலத்தில் குருக்களின் முன் சரீரம் நஷ்டமாய் போய் குருக்களால் காண்பிக்கப்பட்டிருந்த பிரதிபிம்பத்தில் மேல்பாகமான லிங்கரூபம் மாத்திரம் அந்த ஜனங்களுக்குப்புலப்பட்டதாயும் பிறகு அந்த †நிலமாளிகையை மூடிவிட்டுவந்ததாயும் அதே தினம் இராத்திரி அந்தகாலத்திலிருந்த குருக்களின் ஸ்வப்னத்தில் வித்யாதீர்த்த ஸ்வாமிகளவர்கள் தோன்றி நம்முடைய ஸங்கல்பத்திற்கு விரோதமாக நடந்துகொள்ளும்படி நீங்கள் ஈசுவரனால் பிரேரிக்கப்பட்டு நடந்துகொண்டீர்கள். இதனால் நம் சங்கல்பம் இந்த காலத்தில் நிறைவேறுவதில் ஈசுவர இச்சை



ஸ்ரீ வித்யாசங்கரர் ஆலயம் சிருங்கேரி.

இல்லை என்பது வெளியாயிற்று. ஈசுவர ஸங்கல்பத்தை வேறாகச்செய்வதற்கு எவருக்கும் சக்தி இருப்பதில்லை. ஆகையால் இதற்கு மேல் எதிர் பார்க்கவேண்டிய அவசியமில்லையாகையால் நிலமாளிகையை மூடிவிட்டு அதின்மேல் ஈசுவரலிங்கத்தை பிரதிஷ்டை செய்ய வேண்டும் என்று ஆக்ஞாபித்ததாயும் இந்த சங்கதியை அறிந்து பாரதீ கிருஷ்ண தீர்த்தர் ஆத்திரத்தினால் நடத்திய காரியத்தைக்குறித்து வெகுவாய் விசனித்துக்கொண்டு குருக்கள் ஆக்ஞைப்படியே ஈசுவர பிரதிஷ்டை செய்யவேண்டுமென்று நிச்சயித்து அக்காலத்தில் சக்கரவர்த்திகளாயும் தம் பக்தராயுமிருந்த விஜயநகரம் (ஆனகுந்தி) ஹரிஹரமகாராஜருக்கு அறிவித்து அவர் மூலமாய் விசித்திரமான மாதிரியில் தேவாலயம் நிர்மாணம் செய்வித்து ஈசுவர பிரதிஷ்டையும் செய்வித்ததாயும் சொல்லும் ஜனவதந்தி சிருங்கேரிபுரவாசிகளான சிறியோர் முதல் பெரியோர் வரையிலும் இப்பவும் கூட வழங்கிக்கொண்டுவருகிறது. இந்த வித்யாசங்கராலயம் சாலிவாஹன சகாப்தம் 1258 வது தாது வருஷத்தில் விஜயநகரத்திய இராஜரால் கட்டப்பட்டதாயும் வித்யாதீர்த்தஸ்வாமிகளவர்கள் 1255 ஸ்ரீமுக வருஷத்திய கார்த்திக சுக்கில சப்தமியில் லம்பிகாயோகத்தில் அமர்ந்ததாயும் ஸ்ரீமடத்திலுள்ள சில பழைய கணக்குகளால் தெரிய வருகிறது.

இந்த தேவாலயத்தின் உருவம் ஸ்ரீசக்ரத்தின்

மேருப்ரஸ்தாரம் போல் காணப்படுகிறது. இதற்காக உபயோகித்திருக்கிற கல்லுகள் மிகவும் கடினமாயிருக்கின்றன. இப்படிப்பட்ட கல்லுகளில் செய்திருக்கும் வேலைகள் அதி விசித்திரமாயும் அழகாயும் இருக்கின்றன. தேவஸ்தானத்தின் வெளிப்பக்கத்தில் ஸப்த லோகங்களென்று பெயரிட்டு கீழ்பாகமிருந்து மேல் பாகம் வரையில் அநேக ஜீவஜந்துக்களும் மனிதரும் தேவதா பிம்பங்களும் புராணங்களை அனுசரித்து காண்பிக்கப்பட்டிருக்கின்றன. உட்பக்கத்தில் முக மண்டபம் பன்னிரண்டு ஸ்தம்பங்களுடன் கூடியதாயும் உயர்ந்ததாயும் நிர்மாணம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த மண்டபத்தில் பிரவேசிப்பதற்கு தெற்கு வடக்கு கிழக்கு திக்குகளில் மூன்றுவாயில்கள் இருக்கின்றன. மண்டபத்திற்கு சுற்றிலுமுள்ள 12 ஸ்தம்பங்களும் மேஷம் முதலிய 12 ராசிகளால் அடையாளம் செய்யப்பட்டிருக்கின்றன. இதன் ரகஸ்யத்தை ஆலோசித்தால், சூரியன் மேஷம் முதலிய ராசிகளில் இருக்கும் மாதங்களில் சூரிய கிரணம் அந்த ராசியால் அடையாளம் செய்யப்பட்டுள்ள ஸ்தம்பத்தில் படுகிறது. இப்படியே அந்தந்த ராசிகளில் போகும்போது அந்தந்த ராசிகளால் குறிக்கப்பட்டிருக்கும் ஸ்தம்பங்களில் சூரிய கிரணம் பாவும்படி சில்பியின் சாதுரியத்தினாலும் கணிதசாஸ்திர ஆராய்ச்சினாலும் ஏற்படுத்தப்பட்டிருப்பதாக தெரிய வருகிறது.

ஸ்ரீவித்யாசங்கரஸ்வாமிகள் விஷயமாய் ஜனவ



சிருங்கேரிமடத்திலிருக்கும் ஆதி
ஆசார்யாளின் விக்கிரகம்.

தந்தி இருப்பதாக முன் பிரஸ்தாபித்த விஷயத்தைத் தெரிந்துகொள்ளுவதில், அசம்பாவிதமான விஷய மென்றும் அர்த்தமில்லாத வார்த்தையென்றும் நம் போலுள்ளவருக்கு தோன்றுவதில் சந்தேகமில்லை. அதன் காரணம் யோக சாஸ்திரத்தில் பரிசயமில்லா மையும், யோக ஸித்தர்களைப் பாராமலிருக்கையுமல்லா மல் வேறொன்றுமல்ல. நேரில் பார்க்கப்படாததும் கேட்கப்படாததுமான சங்கதி பிரத்யக்ஷமாகாமல் நம் போலுள்ளவருக்கு புத்தியில் ஏறுகிறதில்லையாகையால் அப்படிப்பட்ட விஷயங்களில் நம் அபிப்பிராயம் யுக்தி யுக்தமென்று சொல்லுவதற்கிடமில்லை. மேலே சொன் ன ஆச்சரியமான சங்கதியை மிகப் பிரபலமான சில காரணங்களால் சாதிப்பதற்கு கொஞ்சம் அவகாச மிருக்கின்றது.

ஸ்ரீவித்யாசங்காராலயத்தில், கர்ப்ப கிருஹம் அமைத்திருப்பதை யோசித்தால் இந்த கர்ப்ப கிரு ஹம் சிம்மகிரி என்னுமிடத்தில் ஸ்ரீஸ்வாமிகள் லம்பிகா யோகத்தில் இருப்பதற்கு முன்னுதாக காண்பிவித்த தாக சொன்ன பிம்பத்தின் ஆகிருதியை முற்றிலுமனு சரித்து இருப்பதாக காணப்படுகிறது. இதனால் இந்த தேவாலயத்திற்கும் சிம்மகிரியிலுள்ள பிம்பத்திற்கும் ஏதோ ஒரு சம்பந்தம் இருப்பதாக ஊகிக்கவேண்டு மல்லவா? வித்யாசங்கர ஆலயம் கட்டுவதற்கு முந்தி யே சிம்மகிரியில் ஜனவதந்திக்கு விஷயமான ஒரு பிம் பம் இருந்ததாக நிச்சயிக்கவேண்டியிருக்கிறது. அப்

படி நிச்சயம் செய்வதற்கு சந்தேகமில்லாத பிரமாணம் கையில் கிட்டியுள்ளது. அது யாதெனில், ஸ்ரீவித்யா சங்கராலய பிரதிஷ்டை காலத்தில் ஸ்ரீபாரதி கிருஷ்ண தீர்த்த ஸ்வாமிகள், தம்முடைய சிஷியராயுள்ள விஜய நகர ஸம்ஸ்தானாதிபதிகளிடமிருந்து ஸ்வாதீனம் செய்துகொண்டிருந்த கிராமங்களில் 150 விருத்திகள் ஏற்படுத்தி, தேவதா பூஜை நைவேத்யம் வினியோகம் முதலியவைகளுக்காகவும் வேதாத்யயன சம்பன்னரான பிராம்மணர்களின் ஜீவனத்திற்காகவும் வினியோகம் செய்திருக்கிறார்கள். மேற்கண்ட 150 விருத்திகளில் ஒரு விருத்தி, சிம்மகிரி சதுர்மூர்த்தி வித்யேசுவரர் என்ற பெயருடன் கூடியிருப்பதாக தாம்பிர சாஸன ஆதாரத்தினாலும் ஜனங்களாலும் விளக்கப்படுவதுமல்லாமல் அவைகளில் சொல்லியிருக்கிற நான்கு எல்லைக்கு மத்தியிலேயே எந்தவிதமான மாறுதலுமடையாமல் நஞ்சை பூமி அந்த தேவரை பூஜை செய்யும் அர்ச்சகனுடைய சுவாதீனமாகவே இருந்துகொண்டு இதுவரையிலும் அந்த நிலத்திய வருமானத்தினால் சிம்மகிரியிலுள்ள சதுர்மூர்த்தி வித்யேசுவர தேவதா பூஜை ஆராதனைகள் நடந்துகொண்டு வருகின்றன. இந்த விஷயத்தினால் வித்யாசங்கராலய நிர்மாணத்திற்கும் அந்த தேவரின் பிரதிஷ்டைக்கும் முந்தியே சிம்மகிரியிலுள்ள மூர்த்தி இருந்ததாக சொல்லுவதற்கு இதைவிட பெரிதான வேறு பிரமாணம் தேடவேண்டிய அவசியமிருக்கமாட்டாது.

நம் முற்காலத்திய புராணங்களில் அநேகவித மான தேவதா மூர்த்திகளும் அந்த மூர்த்திகளின் ஸ்வ ரூபமும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி சொல்லி யிருக்கிற எந்தப் புராணங்களிலும் சிம்மகிரி சதுர்மூர் த்தி வித்யேசுவரஸ்வாமியின் ரூபம்போலுள்ள மற் றொரு தேவதா மூர்த்தியின் ஸ்வரூபம் சொல்லப்பட் டிருப்பதாகப் பிரசித்தி இல்லை. ரூபமுள்ள தேவதா மூர்த்திகளை பிரதிஷ்டை செய்து விசேஷமாக ஆரா திக்கப்படும் நம் பரதகண்டத்தில் வேறு எவ்விடத்தி லும் சிம்மகிரி மூர்த்தியைப்போலுள்ள மற்றொரு மூர் த்தி இதுவரையிலும் நம் திருஷ்டியில் தென்பட்டதாக தெரியவில்லை. இந்தக் காரணங்களால் யோக ஸித்த ருக்கு ஸங்கல்பமாத்திரத்தினால் எந்த சரீரமாவது அடைவதற்கும் இஷ்டப்படும்போது சரீரத்தை விடு வதற்கும் சாமர்த்தியமுண்டாகுமென்று சொல்லும் யோக சாஸ்திரத்தை நம்பி வெகுகாலம் முதல் தொடர் ந்து வந்திருக்கிற ஜனவாக்கியத்தில் நம்பிக்கை வைப்ப தற்குத் தடையிருக்கமாட்டாதென்று அறிவுள்ளவர் கள் அபிப்பிராயப்படாமலிருக்கமாட்டார்கள்.

ஸ்ரீவித்யாதீர்த்தஸ்வாமிகளின் சிஷ்யரான வித் யாரண்ய ஸ்வாமிகளவர்கள் பாண்டித்யத்தாலும் மா காத்மியத்தாலும் விவேகத்தாலும் இந்தியாவில் வெகு வாய் பிரசித்தியடைந்திருந்தார். இவர் விஷயத்தில் இக்காலத்திய பண்டிதர்களில் அநேகர் நாநாவிதமாக விசாரம் செய்யத் தொடங்கி வெவ்வேறு அபிப்பிராயங்

களுடன் தம் தம் சித்தாந்தத்தை வெளியிட்டிருக்கிறார்கள். ஆனாலும் இந்த மகான் விஷயமாய் நடத்தப்பட்ட விசாரம் முடிவுக்கு வந்திருப்பதாகவாவது அதற்கு வேண்டிய பலமான பிரமாணங்களால் தீர்மானிக்கப்பட்டதாகவாவது அபிப்பிராயப்படுவதற்கிடமில்லை, என்று இந்த கிரந்தம் எழுதுவோர், தனக்குக் கிடைத்திருக்கிற சில ஆதாரங்களினால் சொல்லமுடியும். இவ்விதம் உலகப்பிரசித்தரான மகாபுருஷரின் சரித்திரத்தை கூடியவரையில் முயற்சி செய்து எடுத்துக்கொள்ளக்கூடிய ஆதாரங்களை சம்பாதித்து பிரசுரம் செய்ய வேண்டியது மிக அவசியமானது. இக்காரியத்தை மற்றொரு சமயத்தில் நடத்த உத்தேசம் கொண்டு இத்தருணத்தில் அது நிறுத்திக்கொள்ளப்பட்டது. வித்யாரண்ய ஸ்வாமிகளவர்கள் விஜயநகரத்தில் கர்னாடக சிம்மாசனத்தை ஸ்தாபித்து 1-வது ஹரிஹர மகாராஜரை சிம்மாசனத்தில் பட்டாபிஷேகித்தாக செய்தாரென்றும் அந்த சம்ஸ்தானத்தின் அபிவிருத்திக்கு வித்யாரண்ய ஸ்வாமிகளே காரணமென்றும் தெரியவருகிறது. இந்த விஷயத்தை சாமான்யமாய் விஜயநகரத்திய இராஜரால் கொடுக்கப்பட்டதாக பிரசித்தியுள்ள சிலா சாஸன, தாம்பிர சாஸனங்களுடைய ஆரம்பத்தில் எழுதப்பட்டிருக்கிற ஸம்ஸ்கிருத சுலோகங்களாலும் சிருங்கேரி மடத்திய குருக்களுடைய பிருதுக்களில் "கர்னாடக சிம்மாசன பிரதிஷ்டாபனாசாரியர்" என்று வெகுகால மிருந்து உபயோகப்பட்டுவருகிற ஒரு விசேஷணமா

னது எல்லா ஜனங்களாலும் ஆதரிக்கப்பட்டு வருவதி னாலும் நிச்சயிக்கக்கூடியதாயிருக்கிறது.

ஸ்ரீவித்யாரண்யஸ்வாமிகளவர்கள் விஜயநகரத்தில் கர்னாடக சிம்மாசனத்தை ஸ்தாபனம் செய்வதற்கு முன் சிருங்கேரியானது நகரமாயிருந்ததாக அறிய இடமில்லை. ஸ்ரீவித்யாரண்யஸ்வாமிகளுடைய பரமா னுக்கிரஹத்திற்கு பாத்திரரான விஜயநகரத்திய இரா ஜர்கள் சாலிவாஹன சக 1267 பார்த்திவ வருஷம் முதல் கொண்டு 1308- 9வது அக்ஷய வருஷம் வரை யில் தம் தேசத்தில் 3000 வாரகன் பேரிஜுள்ள கிரா மங்களை தங்கள் குருக்களான பாரதீகிருஷ்ணதீர்த்தர் ஸ்ரீவித்யாரண்யஸ்வாமிகள் இவர்களுக்கு உபஹார மாக சமர்ப்பணம் செய்ததாக தெரிய வருகிறது. ஸ்வாதீனம் செய்துகொள்ளப்பட்ட மேற்படி கிராமங் களில் முன் பிரஸ்தாபித்திருக்கிறபடி 600 வாரகன் பேரிஜுள்ள பூமிகளை 150 விருத்திகளுக்கு பிரிவினை செய்து வித்யாவந்தராயும் நற்குலத்திலுண்டானவரா யும் கர்ம சீலர்களாயுமிருக்கிற அநேக பிராம்மண குடும் பங்களை வெகு தூரதேசத்திலிருந்து வரவழைத்து அந்தப்பிராம்மணருக்கு வீடுகளும் செய்வித்துக்கொ டுத்து ஒரு குடும்பத்தின் ஜீவனத்திற்கு ஐந்து வரா கன்பேரிஜுள்ள பூமியாக இனாமாக கொடுத்து பிராம் மணர்கள் வசதியினால் சிருங்கபுரியைக்கல்பித்ததாகத் தெரியவருகிறது. சிருங்கபுர அக்கிரகார பிராம்ம ணர்கள் தூரதேசங்களிலிருந்து வந்து அங்கு வாசம்

செய்துகொண்டார்களென்கிற சங்கதி அந்தந்த ஜனங்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கிற இனும் பட்டிகைகளில் குறிக்கப்பட்டிருக்கிற நாமதேயம் கோத்திரம் சூத்திரம் இவைகளால் தெளிவாய் விளங்குகின்றது.

"சிருங்கேரி" என்று பிரசித்தமான இந்த நகரம் இருக்கும் தேசத்தை சிருங்ககிரி என்று வழங்கி வந்ததாக சொல்லலாம். இந்த பர்வதம் பிரக்கியாதிபெற்ற ரிஷியசிருங்க மகரிஷிகளின் ஆசிரமம். அந்த ரிஷியின் தபோவனமாயிருந்ததினால் அவர் பெயராலேயே இந்த பர்வதத்திற்கும் 'ரிஷியசிருங்ககிரி' என்று பிரசித்தியுண்டாயிற்று. இப்பால் வித்யாரண்யஸ்வாமிகளால் ரிஷியசிருங்ககிரியிலேயே நகரம் நிர்மாணம் செய்யப்பட்டிருப்பதால் இந்த நகரத்திற்கும் சிருங்கபுரி சிருங்க நகரம், சிருங்கேரி என்ற பெயர்களுண்டாயின.

சிருங்கேரி மடத்தில் லௌகிக வியவகாரங்களின் ஏற்பாடுகள் எல்லாம் வித்யாரண்யஸ்வாமிகள் அவர்கள் காலத்தில் ஏற்படுத்தப்பட்டதென்றும் அதற்கு முன் அவ்விடத்திய குருக்களுக்கு லௌகிக ஸம்பந்தம் இருந்திருக்கவில்லை என்றும் நிச்சயமாய் சொல்லலாம். சிருங்கேரி நகரம் நிர்மாணம் செய்ததுபோலவே மடத்திய கட்டிடமும் இவர் காலத்தில் விஸ்தாரம் செய்யப்பட்டது. ஆசாரிய ஸ்வாமிகளவர்களால் அமைப்பித்த சந்தனமரத்தினால் செய்திருந்த சாரதா மூர்த்தியின் ஸ்தானத்தில் வெகு அழகாயும் அதிகமான ஸ்வர்ணம் சேர்ந்துமிருக்கிற பஞ்சலோஹமய

மான சாரதா பிம்பம் இவராலேயே பிரதிஷ்டை செய்யப்பட்டதாக பிரசித்தி இருக்கிறது. இந்த மடத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் கையெழுத்துகளுக்கு பதிலாக உபயோகிக்கக்கூடிய முகர் 'ஸ்ரீவித்யாசங்கர' என்ற அக்ஷரங்களால் அடையாளம் செய்யப்பட்டிருக்கிறது ஸ்ரீஸம்ஸ்தானத்திற்கு சம்பந்தமான பிரதியொருபாத்திரமும் அடையாளம் செய்யவேண்டியதற்காக வித்யாசங்கர என்ற வார்த்தையிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. முந்திய குரு ஸ்வாமிகள் கொடுத்திருக்கிற பூதான சாஸனங்களில் வித்யா சங்கர என்ற ஒப்பம் போடப்பட்டிருக்கிறது. இந்த வர்த்தமானங்களால் வித்யாரண்ய ஸ்வாமிகள் சம்ஸ்தானத்திய ஒவ்வொரு விஷயத்தையும் தம்முடைய குருக்களான வித்யாசங்கரர் பெயராலேயே நடத்தி வந்திருந்ததாயும் அதுபோலவே எல்லா காரியங்களையும் செய்திருந்ததாயும் அபிப்பிராயப்படுவதில் இதை விட வேறொரு பிரமாணம் அவசியமிருக்கமாட்டாது.

ஸ்ரீவித்யாரண்யஸ்வாமிகள் சாலிவாஹன சகம் 1253 வது பிரஜோத்பத்தி வருஷத்தில் கார்த்திக சுத்த சப்தமி தினம் ஸ்ரீவித்யா தீர்த்த ஸ்வாமிகளிடமிருந்து சன்னியாஸ ஆசிரமத்தை ஸ்வீகரித்து சாலிசகம் 1308 வது அக்ஷய வருஷத்திய ஜ்யேஷ்ட சுத்த திரயோதசி சோமவாரம் தினம் விதேக கைவல்யமடைந்தார். இவர் நிர்யாணகாலத்தில் விஜயநகரத்திற்கு சமீபமாயுள்ள பம்பா க்ஷேத்திரத்தில் வாசம்

செய்துகொண்டிருந்த ஸ்ரீவிரூபாக்ஷேசுவரர் சன்னிதியில் சித்தியடைந்ததாகத்தெரியவருகிறது.

இவர் நிர்யாணத்திற்குப்பிறகு விஜயநகரத்தில் இராஜ்யபாரம் செய்துவந்த புக்கராயருடைய குமாரர் 2வது ஹரிஹர மகாராஜன் தன் குரு பக்தியையும் நன்றியறிவையும் காண்பிப்பதற்காக 500 வராகன் பேரீஜுள்ள பூமிகளை 100 விருத்திகளாக ஏற்படுத்தி 96 விருத்திகளை பிராம்மணர்களுக்கும் 4 விருத்திகளை தேவர்களுக்கும் தானம் செய்து சிருங்கேரிக்கு தென்பாகத்தில் வித்யாரண்யபுரமென்ற பெயரால் அக்கிரகாரம் செய்வித்து விருத்தி வந்தரான பிராம்மணர்களை அக்கிரகாரத்தில் வாசம் செய்யும்படி செய்ததாக இராஜரால் கொடுக்கப்பட்ட தாம்பிரசாஸனத்தினால் தெரியவருகிறது.

விஜயநகரத்திய இராஜாக்கள் சிருங்கேரி மடத்திற்கு இனமாக கிராமங்களைக் கொடுத்தகாலத்தில் எல்லா கிராமங்களிலும் நஞ்சை சாகுபடி ஒன்றே செய்யப்பட்டுவந்தது. விருத்தியுள்ள பிராம்மணருக்கும் தேவர்களுக்கும் விருத்தியொன்றுக்கு 5-வராகன் பேரிஜு நிஷ்கர்ஷையின்மேல் ஒரு விருத்திக்கு 50 கண்டகம் நெல் அந்தந்த நிலத்தை சாகுபடி செய்கிறவன் கொடுத்து வரத்தக்கதென்று குடிகளைப் பிரித்து எல்லா இனம்களும் கொடுக்கப்பட்டிருந்தது. இது போலவே சாலிவாகன சகம் 1267-ம் வருஷத்திலிருந்து 1571-வரையில் இனம்தாரான பிராம்மணர்க

ளுக்கு எவ்விதத் தொந்திரவுமில்லாமல் அவர்களின் ஜீவனம் கஷ்டமின்றி நடந்துவந்தது. 1571-வது வருஷத்திற்கு சிலகாலம் முந்தி சிருங்கேரி முதலான மலைநாடுப் பிராந்தியங்களில் நஞ்சை நிலங்களில் பாக்குத் தோட்டம் சாகுபடியை குடியானவர்கள் விசேஷமாக செய்துவந்ததாயும் இனும்தாரான பிராம்மணருக்கு அதன் வருமானத்தையாவது முந்திய நிபந்தனைப்படி அந்தந்த விருத்திக்கு ஏற்பட்ட பூராதானியத்தையாவது சேர்ப்பிக்காமல் தொந்திரவுபடுத்திக்கொண்டுவந்ததாயும் இதனால் தங்கள் ஜீவனம் நடப்பதற்கு சாத்தியமில்லாமலாகி விருத்திவந்தரான பிராம்மணர்கள் அக்காலத்தில் சிருங்கேரிமடத்தில் பட்டபத்ராயிருந்த ஸ்ரீஸச்சிதானந்த பாரதீஸ்வாமிகள் சன்னிதானத்தில் தங்களுக்குள்ள கஷ்டம் நிவிருத்தியாகும்படி முறையிட்டுக்கொண்டதாயும் தெரியவருகிறது.

இனும்தாரரான பிராம்மணர்களின் அபேக்ஷை விஷயம் ஆலோசிக்கக்கூடியதென்று தீர்மானமானதினால் அந்த சமயத்தில் கெளதி சம்ஸ்தானத்தில் இராஜ்யபாரம் நடத்திவந்த சிவப்பநாயக்கருக்கு தம் ஸ்ரீமுகபத்திரிகையை அனுப்பி அந்த ராஜன் மூலமாய் தங்களுடைய இனும் கிராமங்களை கிரமமாய் அளந்து நஞ்சை நிலத் தோட்டங்களுக்கு புதிதாக பேரீஜுகளை ஸ்திரப்படுத்தினார்கள். இந்த ஏற்பாட்டினால் ஜாகீர்சீமை பூமிகளின் பேரீஜ் பன்னிரண்டாயிரம் வராகன் என்று தீர்மானமாயிற்று. அந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீ

ஸ்வாமிகளவர்கள் இராஜரிடத்தில் ஆலோசித்து முந்திய பிராம்மணர்களின் இனும் பேரீஜை 5 வராகனிலிருந்து 15 வராகனாக அதிகப்படுத்தி அதையனுசரித்து விருத்தி ஒன்றுக்கு ஓராயிரம் மரங்கள் அடக்கமுள்ள தோட்ட நிலங்களைப் பிரிவினை செய்து அந்த பூமி குடிகளின் ஸ்வாதீனமாயிருப்பதை தப்பிவித்து அதை இனும்தாரரான பிராம்மணர்கள் ஸ்வாதீனமாக செய்து இவைகளின் பேரீஜ் 11 வராகனென்று தீர்மானம் செய்தார்கள். பாக்கி 4 வராகன் பேரீஜுக்கு பூமியை பிரிவினை செய்யாமல் முந்திய நிபந்தனைப்படியே குடிகளை மாத்திரம் பிரிவினை செய்து அந்தந்த குடிகள் இனும்தாரருக்கு 4 வராகன் பூமியின் இனுமதிக்காக 40 கண்டகம் நெல் கொடுக்கவேண்டியது என்று தீர்மானித்தார்கள். இதனால் தோட்ட நிலங்கள் விஷயத்தில் இனும்தாரருக்கும் குடிகளுக்கும் எவ்விதமான விவாதத்திற்கும் அவகாசமில்லாமலாயிற்று. நஞ்சை நிலங்களில் ஸ்வாதீனம் குடிகளுக்குத் தப்பிப் போகவில்லையாகையால் முன்போலவே தானியத்தை இனும்தாரருக்குக் கொடுத்துவருவதற்கு சாருபடி செய்கிற குடிகள் ஒப்புக்கொண்டார்கள். இந்த தீர்மானம் 1651 ல் செய்யப்பட்டு பிரதி ஒரு இனும்தார் பிராம்மணருக்கும் வெவ்வேறாக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் முகருடன் ஓலைப்பட்டாக்கள் கொடுக்கப்பட்டது. அதுமுதல் இனும்தாரரான பிராம்மணர்கள் நிச்சிந்தையாய் தங்களுடைய தர்மங்களில் ஸ்திரமாய் இருந்தார்கள்.

சாலீவாகன சகம் 1308-க்குப்பிறகு இப்பால் சிருங்கேரி மடத்தில் பட்டபத்ராயிருந்த அந்தந்த காலத்திய குருக்களால் 1800-வது வருஷம் வரையில் ஜாகீர் கிராமங்களில் அநேகமாக பிரம்மாதாயம் தேவாதாயம் இனுமதிகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இந்தவிதமாய் தர்மவிஷயமாக குருஸ்வாமிகள் விநியோகம் செய்திருக்கிறதின் மொத்தம் ஜாகீரின் வருமானத்தில் மூன்றில் இரண்டு பாகமென்று கணக்குகளால் நிச்சயித்திருக்கிறது.

1651-வது வருஷத்தில் சில்லரை இனுமதிகளின் பேரீஜை உயர்த்தி இனும்தார் பிராம்மணர்களுக்கு புதிதாய் தானசாஸனம் கொடுப்பதில் இனும்பூமிகளை பாராதீனப்படுத்தும் விஷயத்தில் அதிகமான நிர்ப்பந்தத்தை ஏற்படுத்தி எக்காலத்திலும் எவ்விதத்திலும் இனும்பூமிகள் கர்மசீலரான பிராம்மணரல்லாத மற்றவர்கள் கையில் போகக்கூடாத விதமாக நிபந்தனை செய்யப்பட்டாது.

அப்படி எவ்வளவு நிர்ப்பந்தம் ஏற்பட்டிருந்தாலும் காலவித்யாஸத்தினால் முக்கால் பாகத்திற்கதிகமான பிராம்மணர்களின் இனும்பூமிகள் தானம் செய்தவர்களுடைய அபிப்பிராயத்திற்கு விரோதமாக வைதிகரல்லாத பிராம்மணர்களுக்கும் சிலசந்தர்ப்பங்களில் பிராம்மணரல்லாதவர்களுக்கும் ஸ்வாதீனமானதுமல்லாமல் தேவாலயத்திற்கு சம்பந்தப்பட்ட இனும்பூமிகள் கூட அதிகாரமில்லாதவரால் பாராதீனம் செய்யப்

பட்டு தேவதாவிநியோகங்களுக்கும் லோபம் வந்தது.

மிகவும் விசனிக்கக்கூடிய மேலே சொன்ன இந்த நிலைமையை அநேகம் தடவை ஆலோசித்து இந்த கிரந்தத்திற்கு விஷயரான ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மறு விசாரம் செய்வதினால் தம் குருக்கள் முந்திசெய்தி ருக்கிற தர்மத்தை கூடியவரையில் கிரமப்படுத்துவது ஆவசியகமென்று யோசித்து இதை நிறைவேற்றுவ தற்கு தமக்கு பரம ஆப்தராயும் தம் விசேஷ அநுக கிரஹத்திற்கு பாத்திரராயும் கர்னாடக ராஜ்ய பரிபா லன துரீணராயுமிருந்த ஸ்ரீசாமராஜேந்திர மகாராஜரி டத்தில் தம் அபிப்பிராயத்தை வெளியிட்டார்கள். மகாராஜரவர்கள் ராஜ்யதந்திரத்தில் அஸாதாரண புத் தியுள்ளவராயிருந்த தம் முக்கிய மந்திரியான சேஷாத் திரி அய்யரவர்களிடத்தில் ஆலோசித்து அவர் மூலமா ய் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய அபிப்பிராயத்தை தெளி வாய் அறிந்து இனும்தாரரான பிராம்மணர்களுக்கும் தேவர்களுக்கும் அநுகூலம் கெடாமலும் இனும் பூமி கள் கொடுத்த மகான்களின் ஸங்கல்பத்திற்கு விரோத மாய் இஷ்டப்படி பராதீனமாகி நிலைகேடாகவாராம லும் ஸ்திரமான ஏற்பாடு அவசியமான ராஜசாஸன மூலமாய் செய்யவேண்டுமென்று தீர்மானித்து அந்தப் படி நடத்தும்படிக்கு தம்முடைய அதிகாரிக்கு உத்தி ரவு செய்தார்கள். மகாராஜரின் ஆக்ஞையை அநுச ரித்து அதிகாரிகள் முறைப்படி சிருங்கேரி ஜாகீர் கிரா மங்களை அளவு செய்து பூமிகளின் தாரதம்மியத்தை

அக்காலத்திற்குத் தக்கபடி கண்டுகொண்டு அவைக ளின் பேரிஜை நிர்ணயப்படுத்தினர்கள். இனம்தாரர் களையும் தத்காலத்தில் இனம்களை அனுபவித்துவருகிற வர்களையும் வரவழைத்து இனமதிகளின் உண்மையை யும் அவைகளில் அனுபவதாரருக்கு இருக்கப்பட்ட சம்பந்தம் முதலிய அம்சங்களையும் அவரவரிடத்திலி ருக்கிற பிரமாண தஸ்தாவேஜுகளைக் கொண்டும் ஸம்ஸ்தானத்திலுள்ள தஸ்தாவேஜுகளைக் கொண்டும் வெகுகாலமாய் வந்திருக்கிற அனுபவத்தைக் கொண் டும் கண்டுபிடித்து தகுந்தபடி தீர்மானம் செய்யப் பட்டது.

அந்தக் காலத்தில் வழக்கத்திலிருந்து வந்த ராஜ சாஸனங்களினல் சில்லரை இனம்தாரரான பிராம்ம ணர்களுக்கு அனுபவதாரரிடமிருந்து தானியரூபமான தீர்வை கொடுத்து வரும்படி தீர்மானம் செய்யாமலி ருந்தால் பிராம்மணர்கள் ஜீவனத்திற்கு கஷ்டமுண் டாகுமென்ற விஷயத்தில் சந்தேகமில்லை. இந்த விஷ யத்தை ஆலோசனை செய்து ஸ்ரீஸ்வாமிகளவர்களு டைய அபிப்பிராயத்தை நிறைவேற்றும் விஷயத்தில் விரதம்பூண்ட மைசூர் சர்க்காரவர்கள் ஜாகீர் கிராமங் குடிகளுக்கும் இனம்தாரரான பிராம்மணர்களுக்கும் எவ்விதத்திலும் நஷ்டமாவது தொந்திரவாவது உண் டாகாதபடி தம் சட்டங்களில் சிலபாகம் சிருங்கேரிஜாகீ ருக்குமாத்திரம் சம்பந்தப்படுவதாக திருத்தம் செய்வி த்து அதின் ஆதாரத்தினல் கோட்டநிலங்கள் இனம்

தாரரின் ஸ்வாதீனமாகவே இருந்து அவர்கள் அவைகளை முந்தி ஸ்வதந்திரமாய் அனுபவித்துக்கொண்டுவந்ததுபோலவே பிற்காலத்திலும் அனுபவிக்கத்தக்கதென்றும் நஞ்சை நிலவிஷயத்தில் குடியானவர்களுக்கு அனுபவ பாத்தியம் ஸ்திரமாயிருக்கத்தக்கதென்றும் அனுபவமுள்ள பூமியில் சில்லறை இனாம்காரனின் இனாம்தார்பாத்தியத்திற்காக பிறிக்கப்பட்ட பூமிக்கு புதிய நிபந்தனைப்படி தாணிய ரூபமான தீர்வை இனாம்தாரனுக்கு அனுபவபாத்தியஸ்தன் கொடுத்துக்கொண்டுவருமளவில் அவன் ஸ்வாதீனத்திலிருந்து நஞ்சை நிலத்தை தப்புவிப்பதற்கு இனாம்காரருக்கு அதிகாரமில்லை என்றும் தேவாதாயங்களெல்லாம் அந்தந்த தேவகர்ள் பெயரில் ஸ்திரப்படுத்தப்பட்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மேல் விசாரணைக்குட்பட்டு தேவதா விநியோகத்திற்கு உபயோகிக்கப்படவேண்டுமென்றும் இதன் மேல் இனாமதிகள் பிராம்மணரல்லாதவர்களுக்கு முற்றிலும் ஸ்வாதீனமாகக்கூடியவைகளல்லவென்றும் இந்த நிபந்தனைக்கு விரோதமாய் நடத்தப்படுகிற பாராதீனத்தை ரத்து செய்து அவ்விதமான இனாமதிகளை ஸம்ஸ்தானத்திற்கே சேர்த்துக்கொள்ளவேண்டுமென்றும் தீர்மானம் செய்து அப்படியே விபரமாக கணக்குகளை ஏற்படுத்தி வியவஸ்தை செய்வித்துக்கொடுத்ததின் மூலமாய் ஸ்ரீஸ்வாமிகளுடைய ஸங்கல்பத்தை மகாராஜா சர்க்கார் அவர்கள் நிறைவேற்றினார்கள்.

வர்த்தமான காலஸ்திதியில் இந்தப்புதிய நிபந்த

னகளை மகாராஜா ஸர்க்கார் அவர்கள் செய்யவேண்டு மானல் ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் ஸ்ரீமான் மகாராஜா அவர்களுக்குண்டாயிருந்த பக்திகௌரவங்களினுலும் அவர்களின் சிலாக்கியமான உத்தேசத்தையுணர்ந்து தம் ராஜ்யத்தில் ஆஸ்திக்யமும் தர்மமும் நிலைகொண்டிருக்கவேண்டுமென்ற தீர்க்காலோசனையாலும் செய்ததாக அறியவேண்டியதல்லாமல் வேறில்லை.

இந்தப்பிரகாரம் ஸ்ரீமன் மகாராஜா ஸர்க்கார் அவர்களின் சகாயத்தினுல் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் முன்னேர் செய்திருந்த தர்மத்தை ஜீர்ணேத்தாரம் செய்ததினுல் தர்மாசரணைக்கு மூலமாயுள்ள சிருங்கேரி க்ஷேத்திரத்திலாவது நீண்டகாலம் வரையில் பிராம்மண்யம் நிலைநின்று ஸநாதன தர்மம் அபிவிருத்தியடைவதற்கு அவகாசமிருக்குமென்று நம்பியிருக்கலாம்.

ஸ்ரீஸ்வாமிகள் காலத்தில் நடந்த மேற்கண்ட ஏற்பாட்டினுலும் தகுந்தபடி ஏற்படுத்தப்பட்ட சிப்பந்திகளின் சகாயத்தினுலும் விசாரணை செய்யும் முறையாலும் ஸம்ஸ்தானத்திய வருமானம் 30 வருஷகாலத்தில் அறுபதினுயிரத்திலிருந்து 130 ஆயிரம் ரூபாயாக அதிகரிக்கப்பட்டுள்ளது. மதராஸ் கவர்ண்மெண்டைச் சேர்ந்த இராமனுதபுரம் ஜமீனில் அவ்விடத்திய ராஜரால் ஸ்ரீஸம்ஸ்தானத்தில் நடந்துவருகிற தர்மங்களுக்காக சுமார் வருஷம் ஒன்றுக்கு 8000 ரூபாய் வருமானமுள்ள 5 கிராமங்கள் ஸ்ரீஸ்வாமிகள் இராமனுதபுரத்

திற்கு விஜயம் செய்த தருணத்தில் உபஹாரமாய்க் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சிலவு விஷயத்தில் வருமானத்திற்குத் தகுந்தபடி ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காலத்தில் முன்னைவிட இரண்டு பங்கு அதிகரிக்கப்பட்டது. கால வித்தியாசத்தினாலும் ஸம்ஸ்தான காரியங்கள் திருப்திகரமாய் நடந்துவரக்கூடிய வருமானங்களை சரியான காலத்தில் வசூல் செய்துகொள்வது முதலான அனுகூலத்திற்காக அவசியமான சிப்பந்திகளை ஏற்படுத்துவதாலும் தக்காலத்திற்குத் தகுந்தபடி சிலவை அதிகப்படுத்தவேண்டிய ஆவசியகதையுண்டாயிற்று.

வெகுகாலமிருந்து ஸம்ஸ்தானத்திற்கு ஏற்பட்டிருந்த கடன் முழுவதும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காலத்தில் தீர்க்கப்பட்டது. முந்திய ஸ்ரீமடத்தின் கட்டிடத்தில் எல்லா பாகங்களும் அனுகூலமாகவும் நாகரிகமாயும் புதுப்பிக்கப்பட்டது. இது சம்பந்தமாக சுமார் பதினைந்து லக்ஷம் ரூபாய் சிலவாயிருப்பதாகக் காணப்படுகிறது. ஸ்ரீசாரதாம்பாள் தேவாலயம் முதலில் சில பாகம் மாத்திரம் கல்கட்டிடமாயும் அதிக பாகம் மர சாமான்களால் கட்டப்பட்டுமிருந்தது. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காலத்தில் இந்த தேவாலயம் விஸ்தாரமாயும் அழகாயும் நாகரீகமான சில்ப முறையுடன் முழுவதும் கற்களாலேயே அமைக்கப்பட்டது. இதற்காக நாலு லக்ஷம் ரூபாய் விரயம் செய்யப்பட்டது.

இவர்கள் காலத்தில் வெள்ளி, தங்கம், ரத்னம், இந்தவிதமான பதார்த்தங்களால் புதிதாய் லக்ஷம்

ரூபாய்க்கு மேல்பட்ட தனம் சேகரிக்கப்பட்டிருக்கிறது.

ஸம்ஸ்கிருத வித்தியாபிவிருத்திக்காக வருஷம் ஒன்றுக்கு 12000 ரூபாய் விநியோகம் செய்யும்படி ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நிபந்தனை செய்தபடி இரண்டு ஸம்ஸ்கிருத பாடசாலைகளை ஏற்படுத்திஸம்ஸ்கிருத வித்யார்த்திகளுக்கு எல்லாவிதத்திலும் அனுகூலங்களையும் செய்வித்து வித்யா அபிவிருத்தி செய்துகொண்டு வர்ததுமல்லாமல் அன்யர்களால் ஸ்தாபிக்கப்பட்ட பாடசாலைகளுக்கும், ஸபைகளுக்கும், மாஸாசன வருஷாசனங்கள் கொடுத்து உத்ஸாஹப் படுத்தும்படிக்கும் வெகு ஏழையான வித்யார்த்திகளுக்கு சம்பளம் கொடுத்துவரும்படிக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது.

இந்த மாதிரி ஸ்ரீஸ்வாமிகள் காலத்தில் சிருங்கேரி ஸம்ஸ்தானம் எல்லா விஷயத்திலும் மிகவும் உயர்ந்த ஸ்திதிக்கு வந்து ஸகல ஜனங்களாலும் கொண்டாடப்படும்படி செய்யப்பட்டது என்ற விஷயம் உலகப் பிரஸித்தமாக விளங்கி வருகிறது.





## 10-வது அத்தியாயம்.

### ஸ்ரீஸ்வாமிகளின் நான்காவது யாத்திரை.

ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு இருந்த குருபக்தியின் விசேஷம் முன் அத்தியாயங்களில் சுருககமாய் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு லோககுருவான ஸ்ரீமத்சங்கரபகவத்பாதாளிடத்தில் பக்தி மிகவும் அஸாதாரணமாயிருந்தது. இது இவருடைய 23-வது வயஸில் கொஞ்சம் வெளிப்பட்டது. அதெவ்விதமெனில் ஸ்ரீமடத்தில் வெகு புராதனமான ஒரு ஆசார்ய பிம்பம் சாமானியமாய் மற்ற தேவதாவிக்கிரஹங்களுடன் பூஜிக்கப்பட்டு வந்தது. அந்த விக்கிரஹத்தை பிரத்தியேகமாய் வைத்து பிரதிதினமும் விசேஷமாக தானே பூஜை நைவேத்யம் முதலிய சேவை செய்துகொண்டு வந்தார்கள். சாரதாம்பாள் ஆலயம் போலவே பிரத்யேகமாக ஒரு ஆலயம் அமைப்பித்து ஸ்ரீமதாசார்ய மூர்த்தியை பிரதிஷ்டை செய்து நித்ய நைமித்திக பூஜைகளும் விசேஷமான உத்ஸவங்களும் நடந்து வரும்படி ஸ்திரமான ஏற்பாடு செய்விக்கவேண்டுமென்ற தம் அபிலாஷையை வெளியில்

பிரஸ்தாபித்துக்கொண்டுவந்தார்கள். இதனால் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு பகவத்பாதாசாரியாள் விஷயத்தில் பக்திகௌரவம் உண்டாயிருந்ததாக மற்றவர்களுக்கு தெரியும்படிக்கு அவகாசமுண்டாயிற்று. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இரண்டு தடவை தேச சஞ்சாரத்திற்குப் புறப்பட்ட சமயங்களில் ஆசாரியமதத்தைத்தழுவியிருக்கும் அவர் சிஷ்ய ஜனங்களில் ஆசாரியபக்தியைத்தெரிவிக்கக்கூடியதாக எவ்வித நடவடிக்கைகளும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் திருஷ்டிக்குத்தென்படாமலிருப்பதினால் இதற்காக வருத்தப்பட்டு குரு பக்தியையும் அதை செய்து வரவேண்டிய விதமும் அதன் பிரயோஜனத்தையும் குறித்து அநேகம் தடவை ஒவ்வொரு இடத்திலும் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய்து வந்ததுமல்லாமல் தாம் அனுஷ்டானம் செய்யும் முறையாலும் ஆசாரியபக்தியை பிரபஞ்சத்தில் பரவும்படி செய்யவேண்டுமென்ற குதூஹலம் அதிகரித்துக்கொண்டு வந்தது. யாத்திரையை நிறைவேற்றிக்கொண்டு சிருங்கேரிக்கு வந்து சேர்ந்தவுடன் முந்திசொல்லிய பிரகாரம் ஆசாரிய ஜன்மோத்ஸவத்தை பிரபலமாக நடத்திவந்தார்கள்.

இந்த விதமாக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் செய்துவந்த ஆசாரிய பக்தியினால் இவர்களிடத்தில் ஆசாரிய அனுக்கிரஹமுண்டாகி அவர் பிரேரணையினாலேயே ஸ்வாமிகளுக்கு மேலே சொல்லப்போகிற ஸங்கல்பம் உண்டாயிற்றென்பதாக ஸ்ரீமாதவீய சங்கர விஜயத்தில் சொ

ல்லியிருக்கிற ஸ்ரீமத் சங்கரபகவத்பாதர்களுடைய ஜன்மபூமியைக் கண்டுபிடித்து அந்ததேசத்தை சீர்படுத்தி அங்கேயே ஒரு தேவாலயம் நிர்மாணம் செய்வித்து ஆசாரியமூர்த்தியை பிரதிஷ்டை செய்து நித்ய பூஜை முதலியவை நடந்து வரும்படிக்கும் ஜயந்தி உத்ஸவம் அங்கேயே விசேஷமாக நடந்துவரும்படிக்கும் ஏற்பாடுசெய்தால் அந்த க்ஷேத்திரம் ஸ்ரீமதாசாரியமதத்தை யனுசரித்த பக்த ஜனங்களுக்கு முக்கியமான யாத்திரை ஸ்தலமாக ஏற்பட்டு சிஷ்ய ஜனங்களுக்கு இதனால் ஆசாரிய பக்தி அதிகரித்து அதன் மூலமாக ச்ரேயஸ்ஸை அடைவதற்கு இடமுண்டாகுமென்றும் தம்முடைய இந்த மாதிரியான ஸங்கல்பத்தை கூடிய மட்டில் சீக்கிரமாகவே நிறைவேற்றவேண்டுமென்றும் தோன்றிற்று. இந்த மனோபாவம் தினந்தோறும் ஸ்ரீஸ்வாமிகளுக்கு அதிகப்பட்டுக்கொண்டு வருகையில் இவர்கள் தர்சனத்திற்காக மைசூர் ஸம்ஸ்தானத்திய திவான் சேஷாத்திரி அய்யர் சிருங்கேரிக்கு வந்தார். சங்கரவிஜய கிரந்தத்தில் மாத்திரம் பிரசித்தியடைந்திருந்தாலும் சாதாரணமாக ஜனங்களுக்கு திருஷ்டிகோசரமாகாமல் அப்பிரசித்தமாயிருக்கிற ஸ்ரீமத் ஆசாரிய ஜன்மபூமியை மேற்படி கிராமத்தில் சொல்லியிருக்கிற அடையாளத்தைக்கொண்டு கண்டுகொள்வதற்கு மலையாள தேசத்தைச்சேர்ந்தவராயும் அதி புத்திசாலியுமான சேஷாத்ரி அய்யரே வல்லவர் என்று தீர்மானித்து அவரிடத்தில் தம் சங்கல்பத்தை வெளிப்படுத்

தினார்கள். குருஸ்வாமிகளுடைய அசாதாரணமான இந்த ஆலோசனையை அறிந்துகொண்டு அந்த திவான் மிக ஆச்சரியம் கொண்டு ஸ்ரீஸ்வாமிகளுடைய ஆஜ்ஞையை நிறைவேற்றுவதற்கு பிரயத்னம் செய்யத் தயாராயிருந்தனர்.

ஸ்ரீ குரு அனுக்கிரஹத்தைப்பெறவேண்டுமென்ற எண்ணங்கொண்டிருக்கிற இந்த கிருஹஸ்தர் தம்முடைய பலவித காரியங்களில் கூடியவரை சீக்கிரத்திலேயே அவகாசம் பெற்று மலையாளதேசம் சேர்ந்து சங்கரவிஜயத்தில் சொல்லியிருக்கிற நிலைமையைக் கொண்டு விசாரித்ததில் சங்காசாரிய அவதார பூமியானது திருவாங்கூர் ஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த கோட்டயம் டிவிஷன் குன்னத்து நாடு தாலூக்காவில் ஒரு பாகமென்று தீர்மானமாயிற்று. திருவனந்தபுரம் சம்ஸ்தானத்திய அதிகாரிகளுடைய சகாயத்துடன் ஆசாரிய ஜன்மபூமியான காலடி என்ற ஸ்தலத்தில் வந்துசேர்ந்து பார்க்கையில் சங்கர விஜயத்தில் சொல்லுகிற ஒன்றிரண்டு அடையாளங்கள் பிரத்யக்ஷமாகி திருஷ்டிக்கு தென்பட்டதுமல்லாமல் ஸ்தலத்தின் ரமணீயமான அழகைக்கண்டு இவருக்கு அளவற்ற சந்தோஷமுண்டாயிற்று. இந்த காரணத்தினாலும் அந்த பிரதேசமே ஆசார்ய ஜன்ம பூமியாயிருக்கவேண்டுமென்று நிச்சயமேற்பட்டது. திவான் அவர்கள் அங்கிருந்து திரும்பிவந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களை தர்சனம்

செய்து ஆசாரிய ஜன்ம பூமியின் வரலாற்றை எல்லாம் தெரிவித்துக்கொண்டார்.

இதற்குள் சில வருஷகாலம் கழிந்தது. ஆசாரிய பக்தி வைபவத்தினாலேயே ஸ்ரீஸ்வாமிகளுக்கு மனோவிருத்தி நாளுக்கு நாள் அந்தர்முகமாக வந்து வெளிக்காரியங்களில் பிரவிருத்தி குறைந்துகொண்டு வந்தது. இதனால் தம்முடைய முந்திய சங்கல்பப்படி ஆசாரிய ஜன்மபூமியை சீர்படுத்தவேண்டிய காரியத்திலும்கூட இவர்கள் பிரயத்னம் மெதுவாயிருந்தது. இந்த சமயத்தில் வெகு பிரயத்னத்தின்பேரில் கண்டுபிடிக்கப்பட்ட காலடி ஸ்தலம் ஜனங்களுக்கு காலக்கிரமத்திலாவது, பரிசயமுள்ளதாகும்படி செய்வதில் மற்றொரு காலத்திலாவது தம் எண்ணத்தை மற்றவர் நிறைவேற்ற சௌகரியமுண்டாகலாமென்ற உத்தேசத்தினால் தம் சிஷ்யகோடிகளில் ஒருவரான நடுக்காவேரி ஸ்ரீநிவாசசாஸ்திரிகள் என்பவரை காலடிக்கு அனுப்பி பிரதி வருஷத்திலும் ஸ்ரீமத் ஆசாரிய அவதார தினமான வைசாக சுத்தபஞ்சமியில் பக்கங்களிலுள்ள சிஷ்யர்களை சேர்த்துக்கொண்டு ஆசாரிய பகவத்பாதர்களை உத்தேசித்து பூர்ணா நதிதீரத்தில் சிவபூஜா நைவேத்யம் முதலிய உபசாரங்களுடனும் பிராம்மண போஜனம் ஆசாரிய சரித்திர உபந்யாசம் முதலியவைகளாலும் சாமான்யமாய் ஜன்மோத்ஸவம் நடந்துவரும்படி ஏற்பாடு செய்தார்கள்.

இந்த சாஸ்திரிகள் பண்டிதராயும் நன்றாக உபந்நியாசம் செய்யும் திறமையுள்ளவராயும் அனுஷ்டான சீலராயும் இருந்ததினால் இவர் குரு ஆக்ஞைப்படி சில வருஷம் வரையில் காலடி ஜன்மபூமியில் ஆசாரிய ஜயந்தி உத்சவத்தை சுருக்கமாய் நடத்தி வருவதாலும், ஆசாரிய வைபவத்தை உபந்நியாஸ மூலமாயும் ஜனங்களுக்கு உபதேசம் செய்துவருவதாலும், ஆசாரிய பக்தி ஜனங்களுக்கு அதிகமாய் பெருகிக்கொண்டு வந்ததுமல்லாமல் காலடி க்ஷேத்திரம் கொஞ்சம் பிரசித்திக்குக் கொண்டுவரப்பட்டது.

இந்தவிதமாக காலடி க்ஷேத்திரத்தில் சுருக்கமாய் பிரதி வருஷமும் நடத்திக்கொண்டுவந்த ஜயந்தி உத்ஸவகாலத்தில் அந்த ஸ்தலத்திற்கு வந்துகொண்டிருந்த சிஷ்ய ஜனங்களுக்குள் அநேகம் பேருக்கு அந்த பிரதேசத்தை ஸ்வாதீனம செய்துகொண்டு அங்கே ஸ்ரீமத் ஆசாரியாலயம் நிர்மாணம் செய்து ஜயந்தி யுத்ஸவம் நடத்தவேண்டுமென்ற அபிலாஷை அதிகரித்துக்கொண்டு வந்தது. ஆனாலும், அப்படிப்பட்ட மகா காரியத்தை முடிப்பதற்காகவே இந்த பூமியில் அவதரித்து ஆசாரிய பீடத்தை அலங்கரித்து வருபவரும், ஆசாரிய பகவத்பாதர்கள் போலவே ஸகல பிராணிகளுடைய ப்ரீதி கௌரவங்களுக்கு இருப்பிடமாயுள்ள ஸ்ரீஸ்வாமிகளவர்களாலேயே காலடி க்ஷேத்திரம் பரிஷ்கரிக்கப்படவேண்டிய காரியம் முடிவடைய வேண்டியதாக ஈசுவர சங்கல்பமிருந்ததினால் இந்த விஷயத்

தில் மற்ற ஜனங்கள் செய்த பிரயத்னங்கள் ஒன்றும் பிரயோஜனப்படவில்லை.

காலடி க்ஷேத்திரத்தை சீர்படுத்துவதில் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு உண்டான சங்கல்பத்துக்கு பதினேருரு வருஷகாலம் கழிந்து போயிற்று.

ஆஞ்சனேயர் விசேஷமான பிரயத்னத்தினால் இராக்ஷஸருடைய மாயையினால் மறைத்துவைக்கப்பட்டிருந்த சீதாதேவியைக்கண்டு ஸ்ரீராமசந்திரனிடத்தில் சங்கதியை அறிவித்துக்கொண்டதுபோல் மதாந்தரத்தில் சேர்ந்த ஜனங்களினால் வியாபிக்கப்பட்டு பெயர் மாத்திரத்திலிருந்த ஸ்ரீமதாசாரிய ஜன்ம பூமியைக்கண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் அறிக்கை செய்த சேஷாத்திரி அய்யர் கீர்த்தி மாத்திரம் இவ்வுலகில் நிற்கும்படி காலகதியை அடைந்து விட்டார். குருக்களின் ஆக்ஞைக்குக்கட்டுப்பட்டு காலடி க்ஷேத்திரத்தில் சிலகாலம் ஜயக்கியுத்ஸவத்தை நிறைவேற்றி சிஷ்ய ஜனங்களுக்கு ஆசாரிய பக்தி கௌரவங்களை விருத்தியாகும்படி செய்து வந்த ஸ்ரீநிவாச சாஸ்திரிகளும் தேகவியோகமடைந்தார். இந்த சமயத்தில் भवितव्यं भवत्येव என்ற நியாயப்படி பிராணிகளின் புண்ய பரிபாககாலம் நேர்ந்து வந்ததினால் அந்தர்முகராய் கேவலம், உதாசின ஸ்வபாவத்துடன் எவ்வித காரியத்திலும் சம்பந்தமில்லாமலிருந்த ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு பிரபலமான பிராரப்த கர்மத்தினால் காலடி

க்ஷேத்திரத்தை பரிஷ்கரிக்கவேண்டிய மனோ விருத்தி பின்னும் உதித்தது.

"मतिरुत्पद्यते तादृग्व्यवसायोऽपि तादृशः ।
सहायास्तादृशा एव यादृशी भवितव्यता ॥"

என்ற முன்னோர் வாக்கியப்படி சிலகாலம் திருவாங்கூர் ஸம்ஸ்தானத்தில் உயர்ந்த நியாயாதிபதிஸ்தானத்தை வகித்து அவ்விடத்திய ராஜருக்கும் பிரஜைகளுக்கும் உண்டான ப்ரீதி கௌரவங்களுக்கு ஆதாரமாயிருந்த இராமசந்திரய்யர் மைசூர் சம்ஸ்தானத்தில் உயர்தர ஜட்ஜி ஸ்தானத்தைப்பெற்றிருந்தார். இவருக்கு 1895 மன்மத வருஷத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய தர்சனமேற்பட்டு அதுமுதல் ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் விசேஷமான பக்தி உண்டாகி அவர்களிடமிருந்து மந்திரோபதேசத்தைப்பெற்று அவர்களின் முக்கிய சிஷியகோடிகளில் ஒருவரென்று கணிக்கப்பட்டிருந்தார். இவர் அவர்களுடைய தர்சனத்திற்காகவும் அவர்களிடமிருந்து ஹிதோபதேசங்களை பெறுவதற்காகவும் தன் லீவு நாட்களில் அடிக்கடி சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய ஆக்ஞையை யனுசரித்து நடந்துகொண்டிருந்தார். இந்த சமயத்திலேயே வெகு காலமிருந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களின் அனுக்கிரஹத்தைப்பெற்றவரும் பிரசித்தராயுமிருந்த வி. பி. மாதவராயர் மைசூர் ராஜ்யத்தில் ராஜீய மந்திராலோசன சபையில் அதிகாரிகளாயிருந்து திருவாங்கூர் மகாராஜரால் அழைக்கப்பட்டு அவ்வி

டத்திய திவான் பதவியிலிருந்துவந்தார். இந்த சந்தர்ப்பத்தினால் சீதா தேவியைத்தேடுவதிலும் அடைவதிலும் சிந்தையுடனிருந்த ஸ்ரீராமமூர்த்திக்கு உத்தமபக்தர்களான ஆஞ்சனேய சுக்ரீவர்கள் கிடைத்து நினைத்த காரியங்கள் கைகூடுவதினால் உத்ஸாஹம் உண்டானதுபோல் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு மேற்சொன்ன இரண்டு சிஷியர்களாலும் சந்தோஷமும் உத்ஸாஹமும் உண்டாயிற்றென்று சொல்லுவதில் அதிசயோக்தியாகமாட்டாது.

1905—6 வருஷகாலத்தில் திவான்பகதூர் வ. இராமசந்திரய்யர் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய ஆக்ஞையை யனுஸரித்து ஸம்ஸ்தானத்திய ஏஜண்டான இக்கிரந்தகர்த்தருடன் அனந்தசயனத்திற்கு பிரயாணம் செய்து அவ்விடத்திய மகாராஜரிடத்திலும் அவர் முக்கிய மந்திரியான வி. பி. மாதவராயரிடததிலும் காலடி க்ஷேத்திரத்தை சீர்படுத்துவதில் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு வெகுகாலமாக உண்டாயிருக்கிற சங்கல்பத்தை அறிவித்தார்கள். அந்த ராஜ்யத்தைச் சேர்ந்த அதிகாரிகளுடைய சகாயத்தினால் காலடி சேர்ந்து அவ்விடத்திய தத்கால நிலைமையைப் பார்க்கையில் பூர்ணநதிதீரத்திய வடபாகத்தில் ஸ்ரீமதாசார்யர்கள் தம் மாதாவுக்கு ஸமஸ்காரம் செய்த ஸ்தலமென்று ஒரு பிரதேசம் கண்டுபிடிக்கப்பட்டு சிறியோர் முதல் பெரியோர் வரையிலும் எல்லா ஜனங்களும் அந்த ஸ்தலம் அதி பரிசுத்தமென்ற பாவனையினால் அங்குள்ள மண்

ஊை எடுத்து ரக்ஷாகரமாக உபயோகித்துக்கொண்டு வருவதாயும், மாதுரு ஸம்ஸ்காரத்திற்காக பகவத்பாதர்கள் காலடிக்கு வந்த சமயத்தில் அவர் ஸ்நானம் செய்தார் என்ற பிரசித்தியை முன்னிட்டுக்கொண்டு அமாவாசை சங்கிரமணம் முதலிய புண்ய காலங்களில், சமீபத்திலுள்ள அநேக ஜனங்கள் பூர்ணா நதிக்கு வந்து மேற்சொன்ன இடத்தில் இறங்கி ஸ்நானம் செய்கிற வழக்கம் இருப்பதாயும் தெரியவந்தது. இந்த இடத்திற்கு சமீபத்தில் ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி கோயிலும், நம்பூதிரி பிராம்மண சன்யாஸிகளின் ஒரு மடமும் இருந்தது. அந்த பிரதேசமெல்லாம் அங்குள்ள ஸ்வாமிகளுடைய ஸ்வாதீனத்திலிருப்பதாயும் அங்குள்ள ஜனங்களால் தெரிந்துகொள்ளப்பட்டது. இவ்விதமான வர்த்தமானங்களாலும் அந்த ஸ்தலம் மனோஹரமாயிருப்பதாலும் அந்த பிரதேசமே ஸ்ரீ ஆசாரியர் அவதார ஸ்தலமென்று தெரிந்துகொள்வதற்கு சந்தேகமொன்றுமுண்டாகவில்லை.

காலடி ஸங்கேதம், என்று வழங்கப்பட்டுவந்த, நான்கு எல்லைக்குள்பட்ட பூமியெல்லாம் அங்குள்ள மடத்திய ஸ்வாமிகள் ஆதீனத்திற்குள்பட்டிருந்தாலும் அந்த பூமிகளில் மடத்தாருக்கு ஸ்வாதீனமிருக்கவில்லை. அந்த தேசத்திய வழக்கப்படி ஜன்மியாத்தியம் மாத்திரம் ஸ்வாமிகளுக்கு இருந்து மிகவும் ஸ்வல்பமான தீர்வை மாத்திரம் பூமியை அனுபவித்துவருகிற இதர ஜனங்களால் மடத்தார் பெற்றுவந்தார்கள். அனுபவ

பாத்தியஸ்தர் அநேக ஜனங்களாகவும் வெவ்வேறு மடத்திற்கு சேர்ந்தவர்களாயுமிருந்ததினால், காலடி நான்கெல்லைக்கு மத்தியிலுள்ள பூமியை ஸ்வாதீனம் செய்துகொள்வது இலேசாகக் காணப்படவில்லை.

காலடி விதியமானங்களை நன்ருக தெரிந்துகொண்டு பின் திரும்பி திருவனந்தபுரத்துக்கு வந்து அங்குள்ள வர்த்தமானங்களை விஸ்தாரமாக மகாராஜரிடத்திலும் அவர் மந்திரிகளிடத்திலும் தெரிவித்து எவ்விதத்திலாவது அந்த சர்க்கார் அவர்கள் சகாயம் செய்து பூமியை ஸ்வாதீனம் செய்து கொடுக்கவேண்டுமென்று பிரார்த்திக்கப்பட்டார்கள். இந்த சமயத்தில் ராக்ஷஸ மாயையினால் நாகபாசத்தில் கட்டுப்பட்டு கேவலம் ஸ்வாதீனமில்லாமலும் இன்னது செய்கிறதென்று தோன்ருமலும் சிந்தைகொண்டிருந்த ராமலக்ஷ்மணர்களுடைய கட்டை நிவர்த்தி செய்வதற்கு திடீரென்று ஸ்ரீ கருடபகவான் உதவினதுபோல் புண்யமான காலடி பூமிக்கு உண்டாயிருந்த கெட்ட நிலைமையைப் போக்கடிப்பதற்காகவே தயாராகவந்ததோ என்று தோன்றும்படி நம் இந்தியாவில் மிக புராதனமாயும், சரித்திரத்திற்கு யோக்யரான மகா புருஷர்களின் ஞாபகமாயும், சில்பத்திறமையில் பிரக்யாதி பெற்றதாயுமிருக்கும் கட்டிடங்களையும், அவ்விதமான ஸ்தலங்களையும் சீர்படுத்திக் காப்பாற்றவேண்டுமென்ற, இராஜசாஸனம் இந்த இந்தியாவில் ராஜ்யபாரம் செய்துவருகிற இந்தியா சக்கிரவர்த்திகளால் அனுப்பப்பட்டு இந்தி

யாவின் எல்லா விடங்களிலும் பிரசுரத்திற்குக் கொண்டுவரப்பட்டது. அதி பிரபலமான அந்த ராஜாக்ஞையை யனுசரித்து திருவாங்கூர் சர்க்கார் அவர்கள் விசித்திரமான பாண்டித்யத்தாலும், நிகறற்ற மகிமையினுலும், களங்கமற்ற சீலத்தாலும் பரதகண்டத்தில் வேதோக்தமான தர்மத்தை ஸ்தாபனம் செய்து உலகப் பிரசித்திபெற்ற ஸ்ரீமத் ஆசாரியரவர்களின் ஞாபகமாக அவர் ஜன்ம பூமியை பரிஷ்காரம் செய்து காப்பாற்றும் உத்தேசம்கொண்டிருக்கிற ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சங்கல்பத்தை வீண்போகாமல் நிறைவேற்றுவதற்காக எல்லாவிதமான வில்லங்கங்களையும் விடுவித்து அந்த பூமியை ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு உபஹாரமாக சமர்ப்பணம் செய்து ஸ்வாதீனப்படுத்தியதுமல்லாமல் அந்த ஸ்தலத்தை பரிஷ்காரம் செய்வதற்காகவும் அங்கு ஒரு ஆலயம் கட்டுவதற்காகவும் பதினுயிரம் ரூபாய்தம் சர்க்காரிலிருந்து கொடுக்கும்படிக்கும் ஏற்பாடு செய்தார்கள்.

தத்காலநிலைமையில் ஸ்வாதீனம் செய்வது அசாத்தியமென்று தோன்றிக்கொண்டிருந்த ஆசார்ய ஜன்மபூமி வெகு சுலபமாய் ஸ்வாதீனமாயிருப்பதும் ஸ்தலத்தை வாங்கிக்கொள்வதற்கும் ஆலயநிர்மாணத்திற்கும் உதாரகுணத்துடன் வஞ்சி மகாராஜர் திரவிய சகாயம் செய்ததும் இதுமுதலான எல்லா விருத்தாந்தங்களையும், இக்கிரந்தகர்த்தரின் மூலமாய் தெளிவாய் தெரிந்துகொண்டு ஸ்ரீஸ்வாமிகள் வெகுவாக ஆச்சரிய

மும் சந்தோஷமும் கொண்டு அனுகூலமான காலம் உதவி அதனால் தோன்றிவந்த சுபசூசனைகளினால் தாம் நினைத்தகாரியம் ஸ்ரீமத்பகவத்பாதரவர்களுக்கு சம்மதமானதென்றும் இந்த சங்கல்பத்தை காலதாமத மின்றி நிறைவேற்றவேண்டியது அவசியமென்றும் நிச்சயித்தார்கள்.

மேற்படி காரியத்தை நிறைவேற்றுவதற்காக சிருங்கேரியிலிருந்து பிரயாணம் செய்யும் விஷயத்தில் தம் குருக்களின் ஸம்பிரதாயப்படி ஸ்ரீசாரதாம்பாள் ஸன்னிதியில் வந்து அம்பாளுக்கு தானாகவே பூஜை நிவேதனம் முதலியவைகளால் ஆராதனம் நடத்தி தாம் செய்கிற பிரயாணம் நினைத்த காரியம் கைகூடி லோகத்திற்கு அப்யுதயம் ஏற்படுவதானால் யாத்திரையை நடத்துவதற்கும் விபரீதமானால் யாத்திரையை நிறுத்திக்கொள்ளுவதற்கும் அனுக்ஞை கொடுக்க வேண்டுமென்று பிரார்த்தனை செய்து அம்மன் இரண்டு கைகளிலும் இரண்டு பத்திரிகைகளை வைத்து நமஸ்கரிக்கையில் வலதுகையில் வைக்கப்பட்ட ஒரு பத்ரம் சரேலென்று கீழேவிழுந்தது. அந்த க்ஷணத்திலேயே பயபக்திகளுடன் அந்த பத்திரிகையை எடுத்துப்பார்க்கையில் ஸ்ரீஸ்வாமிகள் யாத்திரை ஜகத்தின் க்ஷேமத்திற்கு காரணமாக முடியுமாகையால் பராபவவருஷத்திய மாக சுக்கில பஞ்சமி தினம் சிருங்கேரியிலிருந்து பிரயாணம் செய்வதற்கு அனுமதி கொடுத்ததாகவே கண்டு வந்தது. பிரதியொரு விஷயத்திலும் நினைத்த காரிய

ம் நிறைவேறுவதற்குத்தகுந்த சுபசகுனமுண்டாகி ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய மனஸ்ஸில் உறப்பும் அதனு லுத்ஸாஹமும் அதிகரித்துக்கொண்டுவந்ததினால்தம்மு டைய பிரயாணத்திற்கு அவசியமாயுள்ள ஏற்பாடுகளை தயாரிக்க இக்கிரந்தகர்த்தருக்கு ஆக்ஞைசெய்து மாக சுக்ல பஞ்சமிதினம் சிருங்கேரியிலிருந்து பிரயாணம் செய்வதாகத்தீர்மானித்தார்கள்.

சில தினங்களுக்குள் இராமசந்திரய்யர் ஸ்ரீ ஸ்வாமிகள் தர்சனத்திற்காக சிருங்கேரி வந்தார். ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞைப்படி காலடி பூமியை ஸ்வாதீ னப்படுத்திக்கொள்ளுவதற்காக நடத்திவந்த பிரயத் னத்தைக்குறித்து சந்தோஷித்தது ஆலயம் நிர்மாணம் செய்யவேண்டியகாரியத்திலும் இராமசந்திரய்யரே பொறுப்பு வைத்துக்கொண்டு காரியத்தை நடத்த வேண்டுமென்று ஆக்ஞைசெய்ய குருஆக்ஞையை பரிபாலனம் செய்வதில் சிரத்தைக்கொண்ட இந்த கிரு ஹஸ்தர் மிக ஆதரவுடன் அவர்கள் ஆக்ஞையை சிர மேற்கொண்டு ஸர்ப்பம் முதலிய துஷ்டஜந்துக்களா லும் புல் செடி கொடி புதர்களாலும் அடர்ந்த காடு போலே விஜனமாயிருந்த காலடி க்ஷேத்திரத்தில் பய மின்றி நின்று ஸ்தலத்தை சீர்திருத்தவேண்டியதற் காக ஸ்ரீஸ்வாமிகளால் அனுக்கிரஹிக்கப்பட்ட யந்தி ரங்களையும் விபூதி முதலிய பிரசாதங்களையும் பெற்றுக் கொண்டு உடனே சிருங்கேரியிலிருந்து புறப்பட்டார்.

27

பங்களூர் வழியாய் பிரயாணப்படும் சமயத்தில் ஸ்ரீமான் மைசூர் மகாராஜா கிருஷ்ணராஜ பிரபுக்களை தர்சனம் செய்து அவர்களிடத்தில் ஸ்ரீஸ்வாமிகளின் சங்கல்பத்தையும் அதை நிறைவேற்றுவதற்காக அது வரையில் நடந்திருக்கிற நடவடிக்கைகளையும் விஸ்தாரமாய் அறிவித்து ஸ்ரீஸ்வாமிகள் இன்ன தினத்தில் சிருங்கேரியிலிருந்து யாத்திரை செய்வார்களென்றும் அவர்கள் ஆக்ஞையினால் தான் காலடிக்குப்புறப்படும் சங்கதியையும் விக்ஞாபனம் செய்து அவர்கள் அனுமதியைப்பெற்றுக்கொண்டு புறப்பட்டார்.

இராமசந்திரய்யர் மூலமாக ஸ்ரீஸ்வாமிகள் பிரயாண சங்கதியை தெரிந்துகொண்ட ஸ்ரீமான் மகாராஜா அவர்கள் ஸ்வாமிகள் சிருங்கேரியிலிருந்து புறப்படுவதற்குள்ளாகவே குடும்ப சமேதராய் சிருங்ககிரிக்கு வந்து அவர்களை தர்சனம் செய்யவேண்டுமென்ற அபிப்பிராயத்தை குறிப்பிட்டு அந்த எண்ணத்தை நிறைவேற்றிக்கொள்ளுவதற்கு பாரபவ ஹுஸ் மாக கிருஷ்ண பஞ்சமி வரையில் அவகாசம் வேண்டியிருப்பதால் அந்த விஷயத்தில் ஸ்வாமிகளுடைய அனுகூலத்தைத் தெரிந்துகொள்வதற்காக தம் முக்கிய அதிகாரிகள்மூலமாக இக்கிரந்தகர்த்தருக்கு பத்திரிகை அனுப்பிவித்தார்கள்.

முன்னதாக ஸ்ரீசாரதாதேவியின் அனுக்கிரஹரூபமாய் கிடைத்த பத்திரத்தினால் மாக சுக்ல பஞ்சமி தினம் ஸ்வாமிகள் பிரயாணம் நிச்சயமாயிருந்தது.

அதிலிருந்து பின்னும் 15 நாள் வரையிலும் சிருங்கேரி யிலேயே வாசம் செய்யவேண்டிய ஆவசியகம் பக்த ஜன பாரதீனரான ஸ்வாமிகளை நிர்ப்பந்தம் செய்தது. ஒன்றுக்கொன்று விரோதமாயிருப்பதினால் இரண்டும் அனுஷ்டானம் செய்வதற்கு சாத்தியமில்லையாகை யால் தாரதம்மியம் ஆலோசிக்கும்போது தேவியின் ஆக்ஞைப்படி மாக சுக்ல பஞ்சமி தினமே சிருங்கேரி யிலிருந்து பிரயாணம் செய்வது உசிதமென்றும் அப் படி பிரயாணம் செய்வதில் முந்திய வழக்கப்படி ரிஷ்ய சிருங்கமகாமுனிவரின் ஆச்ரமமான கிக்காவுக்கு பிரயா ணம் செய்து அதனருகிலுள்ள நரசிம்ம பர்வதத்தில் பதினைந்து நாள் வாசம் செய்யவேண்டுமென்றும் பிறகு ஸஞ்சாரமார்க்கமாக சிருங்கேரிக்கு வந்து அங்கு தம் தர்சனத்தை அபிலஷித்துக்கொண்டு வருகிற மகா ராஜருக்கு அனுக்கிரஹம் செய்து தங்கள் பிரயாணத் தை நடத்தவேண்டுமென்றும் தீர்மானமாயிற்று.

இதற்குள்ளாக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆக்ஞையி னால் அவர் யாத்திரைக்கு வேண்டிய சாமான்களை சித்தப்படுத்துவதிலும் அவர் ஆசிரமத்திற்கு அதிதி களாய் வரப்போகிற ஸ்ரீமன் மகாராஜா அவர்களு டைய ஆதித்ய ஸத்காரத்திற்கு ஆஸ்தானத்திய கௌ ரவத்துக்குத்தக்கபடி முன் நடத்தவேண்டிய காரியங் களை நடத்துவதிலும் மடத்திய அதிகாரிகள் ஏற்பட்டு எல்லாவிதமான சௌகரியங்களையும் தயார் செய்தார் கள். சாலி 1829 பராபவ வருஷத்திய மாக சுக்கில

பஞ்சமி சுக்கிரவாரம் (1907) சுபதினத்தில் அபிஜித் முகூர்த்தத்தில் சுவாமிகள் தம் நித்யானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு ஸ்ரீமதாசாரியபகவத்பாதமூர்த்தியையும் சந்திரமௌளீசுவரமூர்த்தியையும் முன்னிட்டுக்கொண்டு தம் ஆசிரமமான நரசிம்மவனத்திலிருந்து பிரயாணம் செய்து துங்காநதியைத் தாண்டி வடகரையிலுள்ள தம் குருக்கள் அதிஷ்டானத்திற்கு வந்தார்கள். அங்கு குருதர்சனம் செய்து முறைப்படி நமஸ்காரங்கள் செய்து குரு ஆக்ஞையைப்பெற்று சாரதாம்பாள் சன்னிதிக்கு வந்தார்கள். அம்பாளுக்கு தீபாராதனம் நடந்தமேல்வழக்கம்போல் தண்ட நமஸ்காராதிகளால் ஆராதித்து தாயை விட்டுப்பிரிந்த பெற்ற பிள்ளை அழுவதுபோல் அநேக ஸம்ஸ்கிருத சுலோகங்களை சொல்லி உலகமாதாவான சாரதா சன்னிதானத்தை விட்டுப் புறப்படுவதில் தமக்குண்டான மனோவேதனையை கண்ணீர் பெருக்கலாலும் தொண்டை தழைத்துப்போவதாலும் வெளிப்படுத்திக்கொண்டும் அடிக்கடி பின் திரும்பி அம்பாளை பார்த்துக்கொண்டும் அம்பாள் சன்னிதியிலிருந்து வெளியில் விஜயம் செய்தார்கள். இந்த சந்தர்ப்பத்தில் சுவாமிகளுக்கு அம்மன் சன்னிதியை விட்டு தூரமாக பிரயாணப்படும் விஷயத்தில் இருந்த மனோபாவம் எப்படி இருந்ததென்று சங்கதி அடியில் எழுதப்பட்டிருக்கிற பத்யங்களினால் தெரியவருகிறது.



ஸ்ரீ சாரதாம்பாள், சிருங்கேரி.

## ஸ்ரீவாணீ ப்ரச்னமாலாஸ்துதி.

[பக்திஸுதாதரங்கிணீ பக்கம் 67—71.]

किं नाहं पुत्रस्तव मातुः सचराचरस्य जगतोऽस्य ।
किं मां दूरीकुरुषे देवि गिरां ब्रूहि कारणं तत्र ॥ १ ॥

किं चाद्गुरार्यपादास्त्वद्भक्ता मद्गुरूत्तमाः पूर्वम् ।
औरसतनयं मां तव कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ २ ॥

आनीय दूरतो मां मातस्त्वत्पादसविधमतिकृपया ।
परिपाल्य च सुचिरं मां कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ३ ॥

अतिपरिचयादवज्ञा प्रभवेत्पुत्रेषु किं सवित्रीणाम् ।
न हि सा क्वचिदपि दृष्टा कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ४ ॥

कादाचित्कनमस्कृतिकर्तॄणामप्यभीष्टदे तरसा ।
नाहं सकृदपि नन्ता कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ५ ॥

गुरुरूपेणाबाल्यात्सोढ्वा मन्तुंश्च मत्कृतान्विविधान् ।
परिरक्ष्य करुणया मां कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ६ ॥

जगतां पालनमनिशं कुर्वन्त्यास्ते भवेत्कियान्भारः ।
अहमम्ब दीनवर्यः कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ७ ॥

पापान्निवार्य सरणौ विमलायां मे प्रवर्तते तरसा ।
कर्तव्ये सति कृपया कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ८ ॥

यद्यप्यन्यानन्यान्देवानाराधयामि न त्वं ते ।
सर्वात्मिकेति चपलः कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ९ ॥

यात्राशक्तमिमं मां गलितशरीरं रुजा समाक्रान्तम् ।
पात्रमहेतुदयायाः कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १० ॥

तव सद्मानि गुरुसदने विद्यातीर्थालये च बहुसुखतः ।
खेलां कुर्वन्तं मां कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ ११ ॥
त्वत्क्षेत्रनिकटराजन्नरसिंहाख्याचलेन्द्रशृङ्गाग्रे ।
स्वैरविहारकृतं मां कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १२ ॥
त्वत्पादपूततुङ्गातीरे विजने वने चरन्तं माम् ।
अनुघस्रं मोदभरात्कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १३ ॥
तुङ्गातीरे दिनकरनिवेशनिकटस्थले विपुले ।
ध्यायन्तं परतत्वं कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १४ ॥
तुङ्गातीरे रघुवरमन्दिरपुरतः सुदीर्घपाषाणे ।
कुतुकाद्विहरन्तं मां कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १५ ॥
जातु च नरसिंहपुरे तुङ्गातीरे सुसैकते मोदात् ।
विहृतिं कुर्वाणं मां कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १६ ॥
यतिवरकृतात्मविद्याविलासमनिशं पठन्तमतिमोदात् ।
कुहचित्तुङ्गातीरे कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १७ ॥
शंकरभगवत्पादप्रणीतचूडामणिं विवेकादिम् ।
शृण्वन्तं नृहरिवने कस्माद्दूरीकरोषि वद वाणि ॥ १८ ॥

ஸ்ரீ ஸ்வாமிகள் சிருங்கேரியில் வாசம் செய்தவந்த காலத்திலவர்கள் மனோபாவம் எவ்விதம் பரிணமித்திருந்தது, அவர் தினசரி அனுஷ்டான முறை எவ்விதமிருந்தது, தேவி விஷயத்தில் அவருக்கு இருந்த உத்தம பக்தியானது எந்த மாதிரியான அவஸ்தைக்கு வந்திருந்தது என்பதை நாம் தெரிந்துகொள்ளுவதற்கு மேற்சொல்லியிருக்கிற சுலோகங்களை விட்டு வேறொரு பிரமாணம் அவசியமில்லை.

சிருங்கேரி ஸ்ரீசாரதாம்பாள் ஆலயத்தை சிலாமயமாய் செய்யவேண்டுமென்ற எண்ணம் வெகுகாலமாக ஸ்ரீஸ்வாமிகளுடைய மனதில் உதித்து அதை முடிப்பதற்காக வெகுநாளாக பிரயத்னம் செய்துவந்ததாக முந்தியே சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சங்கல்பம் நிறைவேறுவதற்குத் தருணம் வாய்த்ததினால் சாரதாதேவியை தர்சனம் செய்து ஸ்ரீஸ்வாமிகள் வெளியே வந்தபிறகு அம்பாள் முன் பக்கத்தில் தயார் செய்யப்பட்டிருந்த ஆலய நிர்மாணத்தின் அஸ்திவாரக்கல்லை தம்முடைய அமிருத ஹஸ்தத்தினால் பூஜித்து, தக்ஷிண தேசத்திலிருந்து வந்திருந்த சில்பிகளுக்கு அனுக்கிரஹம் செய்து பிரசாதம் கொடுத்து அவரைக் கொண்டு ஆலயத்திய வேலையை ஆரம்பம் செய்யும்படி ஏற்பாடு செய்துவிட்டு தம் பிரயாணத்தை நடத்தினார்கள்.

பிரயாணத்திற்காக ஸம்ஸ்தான வழக்கப்படி வெளிவாசலில் அலங்கரிக்கப்பட்டுத் தயாராயிருந்த தங்க பல்லக்கில் ஸ்ரீபகவத்பாதசாரியமூர்த்தியையும் சந்திரமௌளீசுவர ஸ்வர்ணலிங்கமடங்கிய சம்புடத்தையும் விஜயம் செய்வித்து, தாம் பாதசாரியாக கொஞ்சதூரம் பிரயாணம் செய்து வருவதற்குள் சிருங்கேரி நிவாஸி ஜனங்களெல்லோரும் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, ஸ்ரீஸ்வாமிகளுடைய சன்னிதானத்தைவிட்டுப் பிரிந்த கிராமவாசம் ஸஹிக்கமுடியாதென்றும் எப்பட்டிப்பட்ட வியாதி முதலிய ஈதிபாதைகளு

க்கும் இடமில்லாமல் பயமின்றி வஸித்துவந்த நாங்கள் இனிமேல் நிர்வாகம் செய்வதில் பயம்கொண்டிருப்பதாயும், விக்ஞாபனம் செய்துகொண்டார்கள். அன்னிய ஜனதுக்கத்தை கொஞ்சமும் ஸஹிக்கமுடியாத சீலமுள்ள ஸ்ரீஸ்வாமிகள், கருணை நிறைந்த தம் கடாக்ஷத்தினாலும், அமிருதத்தைப் பொழியும் ஹித வசனங்களாலும் சமாதானம் செய்து அவர்களுக்கு அபயபிரதானம் செய்து கிராமரக்ஷாகரமாக தேவதா பிம்பங்களுடன் நகரத்தை சுற்றிக்கொண்டுவந்து தம்மைவிட்டுப் பிரிவதினால் பயந்திருக்கும் ஜனங்களை தைரியப்படுத்தினார்கள்.

நகரவாஸிகளில் அனேக ஜனங்கள் ஸ்ரீஸ்வாமிகள் பாதரஜஸ்ஸினால் தங்கள் வீடுகளை பரிசுத்தி செய்து பிரயாணத்தை முன்னுக்கு செலுத்தவேண்டுமென்று பிரார்த்தனை செய்ததில் அவர் பக்தி விசுவாஸங்களுக்குக் கட்டுப்பட்டு அவர்களுடைய கோரிக்கை பிரயாணத்திற்கு தடையாயிருந்தாலும் அந்த விஷயத்தை மனதில் கொள்ளாமல் சிருங்கேரி அக்கிரகாரத்தில் அநேக கிருகங்களில் பிரவேசித்து அந்தந்த ஜனங்களால் செய்யப்பட்ட உபசாரங்களை ஸ்வீகரித்துக்கொண்டு சாயங்காலம் 6 மணி ஸமயத்தில் சிருங்கேரியிலிருந்து பிரயாணம் செய்து அன்று இராத்திரி திக்கத்துக்கு 2 மைல் தூரத்திலுள்ள, ஹாலுகாரு, என்ற கிராமத்தில் மலைநாடு பிராந்தியத்தில் பிரசித்திபெற்ற திக்க பிஷ்டப்பய்யன் என்பவர் வம்சத்திலுள்ள சென்

னகேசவராயரின் கோரிக்கையை அங்கீகாரம் செய்து அவர் கிருஹத்தில் வாசம் செய்தார்கள்.

மறுநாள் ஹநூலுகாரு சென்னகேசவராயரால் செய்யப்பட்ட பாதபூஜை பிக்ஷை முதலிய ஸத்காரங்களை அங்கீகாரம் செய்து காலடி க்ஷேத்திரத்திற்காக பக்தி பாவனையுடன் அந்த கிருஹஸ்தன் தம் சன்னிதியில் சமர்ப்பணம்செய்த இரண்டாயிரம்ரூபாயை ஸ்வீகரித்துக்கொண்டு எதிர்பாராத இந்த திரவியலாபம் மேலானகாரியசித்திக்கு அறிகுறியென்று ஆனந்தம்கொண்டு அந்த சிஷியருக்கு அனுக்கிரஹம் செய்து சாயங்காலம் ரிஷியசிருங்க மகாமுனிவரின் ஆசிரமமான கிக்கமென்ற க்ஷேத்திரம் சேர்ந்து அங்கு வாசம் செய்தார்கள்.

இரண்டாவது நாள் ஸ்ரீரிஷியசிருங்கேசுவரஸ்வாமிக்கு விதிப்படி ஸ்ரீஸ்வாமிகள் தாமாகவே பூஜை செய்து வஸ்திர ஆபரணங்கள் முதலியவைகளால் உபசாரம் செய்து அங்கு வந்திருந்த சிஷியஜனங்களுக்கு தீர்த்தப்பிரசாதமளித்து அன்று அங்கேயே வாசம் செய்து மறுநாட்காலையில் அங்கிருந்து பிரயாணம் செய்து கிக்கத்திலிருந்து 5 மைல் தூரத்திலுள்ள நரசிம்ம பர்வதம் வந்துசேர்ந்து முந்திய அத்தியாயங்களில் சொல்லிய பிரகாரம் அந்த பர்வத சிகரத்தில் ஆத்மாராமராய் ஆத்ம நிஷ்டையை அவலம்பித்து மாக கிருஷ்ண பஞ்சமி வரையில் நரசிம்ம பர்வதத்தில் வஸித்து பஞ்சமி தினம் சாயங்காலம் பின்னும் சிருங்கேரிக்கு விஜயம் செய்தார்கள்.

மறுநாள் காலையில் 8. 9. மணி சமயத்தில் ஸ்ரீமான் நால்வடி கிருஷ்ணராஜ மகாராஜர் அவர்கள் சகோதரர், மாதா, பாரியை இவர்களுடன் ஸ்ரீஸ்வாமிகள் சந்தர்சனத்திற்காக விஜயம் செய்தார். அவர்களுடைய ஆக்ஞையையனுசரித்து ஸ்ரீமன் மகாராஜரை ஆஸ்தான அதிகாரிகளும் நகரவாஸி ஜனங்களும் நகரத்திற்கு வெளியில் எதிர்கொண்டு பல்லக்கில் ஆரோகணம் செய்வித்து வெகு மரியாதையுடன் மகோத்ஸவமாக ஸ்ரீமடத்திற்கு வரவேற்றுக்கொண்டு வருகையில் மகாராஜர் வெளி வாயிலில் சிவிகையிலிருந்திறங்கி பாதசாரியாக ஸ்ரீசாரதாலயத்தில் பிரவேசித்து அம்மன் சன்னிதியில் ஆசனத்திலமர்ந்திருக்கிற ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு ஸாஷ்டாங்கநமஸ்காரம் செய்து அவர்கள் ஆக்ஞைப்படி அம்பாளை தர்சனம் செய்து ஆசார்யர்களால் அனுக்கிரஹிக்கப்பட்ட பிரசாதத்தை ஸ்வீகரித்துக்கொண்டார். குசல பிரசனங்கள் நடந்தமேல் ஸ்ரீஸ்வாமிகளுடைய அனுக்ஞையைப்பெற்று மகாராஜர் ஸ்ரீமடத்திய ஒரு பாகத்தில் ஏற்படுத்தப்பட்டிருந்த விடுதியில் விஜயம் செய்து வாசம் செய்தார்கள்.

சாயங்காலம் 5 மணிக்கு மகாராஜாவர்கள் துங்கா நதியைத்தாண்டி ஸ்ரீஸ்வாமிகள் ஆசிரமமான நரசிம்மவனத்திற்கு விஜயம் செய்து அந்தரங்கமாக சுவாமிகளை தர்சனம் செய்து அவர்கள் ஆரம்பித்திருக்கிற யாத்திரையை தம் பிரார்த்தனையின் பேரில்



நால்வடி ஸ்ரீ கிருஷ்ணராஜபிரபுக்கள் அவர்கள்
மைசூர் மகாராஜா.

நடத்தாமல் நிறுத்தி தமக்கு சிருங்கேரியில் தர்சனம் கொடுத்து அனுக்கிரஹம் செய்த விஷயத்தில் தாம் தன்யரானதாக வெகு விநயபாவனையுடன் அறிவித்துக்கொண்டு ஆனந்திக்கையில் ஸ்ரீஸ்வாமிகள் முக்கிய காரியத்தை உத்தேசித்து ஆரம்பம் செய்திருக்கிற தம் யாத்திரைக்கு அனுகூலங்களை ஸ்வயமாகவே கல்பித்து யாதொரு இடையூறில்லாமல் தம் உத்தேசத்தை பூர்த்திசெய்வதற்காக ஸ்ரீராம லக்ஷ்மணர்கள் போல தம் ஆசிரமத்திற்கு பிரபுக்கள் பிராதாவுடன் வந்திருக்கிறாரென்ற தம் அபிப்பிராயத்தை பிரகடனம் செய்து ஆனந்தித்தார்கள்.

கர்னாடக சிம்மாஸனத்தை அலங்கரித்துக்கொண்டிருக்கிற இந்த நால்வடி கிருஷ்ணராஜமகாராஜரவர்கள் சிருங்கேரி மடத்தில் பட்டபத்ரராயும் வெகுகாலம் காய்கிழங்குகளை மாத்திரமுட்கொண்டு விரதத்தினால் தபஸ்ஸித்திபெற்றவராயுமிருந்த ஸ்ரீநிருஸிம்ம பாரதி ஸ்வாமிகளவர்களுடைய வரபிரசாதத்தினால் உண்டானவரென்று பூர்வத்திய அத்தியாயங்களிலேயே சொல்லப்பட்டிருக்கிறதல்லவா? இந்த மகாராஜரின் நடத்தை இந்த துஷ்ட கலிகாலத்தில் எங்கும் பார்க்கப்பட்டதும் கேட்கப்பட்டதுமல்ல. இந்த வர்த்தமான ஜன்மத்தில் பால்யம் முதல் ஏற்பட்டிருக்கிற ஸஹவாஸமும், அனுபவத்தினாலுண்டான வாஸனையும் வேறொரு விதமாயிருந்தும் இவர் மனோபாவமும், நடத்தையும், ஸ்திரமான நிலைமையும் வெகு ஆச்சரியகரமா

யிருக்கிறது. இதனால் மகாராஜரிடத்தில் நிலைகொண்டிருக்கிற உத்தம குணங்களுக்கு வர்த்தமான ஜன்மத்திய வாஸனை காரணமாக முடியாதாகையால் பூர்வவாஸனையே காரணமென்று தெரிந்துகொள்ளவேண்டும். நேரில் காணாதவிஷயத்தை நிர்ணயம் செய்வதற்கு அநுமானத்தைக்கொண்டு ஆகவேண்டுமேயல்லாமல் வேறொரு பிரமாணத்தினால் நிர்ணயிப்பதற்கு அவகாசமில்லை. அப்படி நிர்ணயம் செய்வதற்கு வியாப்தி ஞானத்தினால் நிச்சயிக்கப்பட்ட சரியான ஹேதுவினால் மாத்திரம் ஸந்தேகத்திலுள்ள விஷயத்தை நிர்ணயம் செய்யவேண்டுமேயின்றி துஷ்ட ஹேதுவினால் ஆகும் நிர்ணயம் கெட்டுப்போய்விடும். நம் மகாராஜரின் ஜன்மாந்தர வாஸனையை நிர்ணயிக்கும் விஷயத்தில் இவருக்கு இருக்கும் ஆஸ்திக்யம் தைவபக்தி ஸர்வப்பிராணிகளிடமும் தயை விஷயபோகத்தில் வெறுப்பு இவை முதலிய உத்தம குணங்களே ஸத்ஹேதுக்களாயிருக்கின்றன. இவைகளைக் கொண்டு அநுமானம் செய்தால் இந்த மகாராஜா பூர்வ ஜன்மத்தில், வெகு தூரம் வரையில் யோகாப்பியாஸம் செய்தவரென்றும், அந்த யோகம் பூர்த்தியாவதற்குள்ளாகவே, வேறு ஜன்மம் வந்திருப்பதென்றும்

"शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते"

என்ற பகவத்கீதா பிரமாணப்படி, நிர்மலமாயும் யதுவம்சத்திலுண்டானதுமான, இராஜகுலத்தில் அந்த ஜன்மம் வந்திருக்கிறதென்றும், பூர்வஜன்மத்திய அப்

பியாசத்தினால் இந்த இராஜர் இந்த ஜன்மத்தில்

स्वसुखनिरभिलाषः खिद्यसे लोकहेतोः
प्रतिदिनमथवा ते वृत्तिरेवंविधैव ।
अनुभवति हि मूर्ध्ना पादपस्तीव्रमुष्णं
शमयति परितापं छायया संश्रितानाम् ॥

என்றபடி தம் குடை நிழலையடுத்து ஜீவிக்கும் ஜனங்களைக் காப்பதற்காகவே மஹத்தான இராஜ்யபாரத்தை வஹித்து தம் பிரஜைகளின் ஹிதத்தை எக்காலத்திலும் சிந்தித்து வருகிற இராஜரிஷிகளைப்போல நடந்து வருகிறாரென்று நிர்ணயம் ஏற்படுகிறது.

இந்த உண்மையை யறிந்த மகானுபாவர்களான ஸ்ரீ ஸ்வாமிகள் பிரயத்ன பூர்வகமாய் தம்மை தர்சனம் செய்வதற்காகவே ஆசிரமத்திற்கு வந்து குரு பிரசாதத்தை அடைவதில் மிக்க அபிலாஷையுள்ளவரான மகாராஜருக்கு போகம் மோக்ஷம் இவ்விரண்டுக்கும் ஸாதனமான ஸ்ரீவித்யையும் கேவல மோக்ஷ ஸாதனமான சைவ பஞ்சாக்ஷரீ மகா மந்திரத்தையும் உபதேசித்து ஸகுணோபாஸனத்திற்காக ஸ்ரீசக்ரயந்திரத்தையும் சிவலிங்கத்தையும் கொடுத்தருளி சௌகரியத்தை அனுசரித்து அவைகளை பூஜிக்கவேண்டிய விதி முறையை சுருக்கமாய் தெரிவித்து ஆன்மாந்தர வாஸனையில் மகாராஜருக்கு பிரபலமாய் முளைத்து வர்த்தமான ஜன்மத்திய ஸஹவாஸத்தினாலும் அப்பியாசங்களினாலும் மறைந்துபோயிருந்த சுபவாஸனையை பிரபலப்படுத்தினார்கள்.

அதிபால்யத்தில் விசுவாமித்திர மகாமுனிவரின் யாகத்தைக்காப்பதற்காக அவரால் ஆக்ஞாபிக்கப்பட்டு அவர் ஆசிரமத்திற்கு வந்த ராமலக்ஷ்மணர்களுக்கு அவர் ஸ்வரூபத்தை அறிந்த அம்முனிவர் லோகானுக்கிரஹத்தின் பொருட்டு அநேக மந்திரஜாலங்களை உபதேசித்தருளியதுபோல ஸ்ரீஸ்வாமிகள் நம் மகாராஜரின் ஸ்வரூபத்தை நன்றாயறிந்து லோகானுக்கிரஹத்திற்காகவே மகாராஜருக்கு போக மோக்ஷ சாதனமாயும் மந்திரராஜமென்று கூறப்படும் ஸ்ரீவித்யா மகாமந்திரத்தை உபதேசித்தார்களென்று சொல்லுவதில அதிசயோக்தியாகமாட்டாது. உத்தமமான க்ஷேத்திரத்தில் சரியான காலத்தில் விதைக்கப்பட்ட விதை போடுகிறவனுடைய குணத்தை எதிர்பாராமலே வெகு விதமாக பலிக்கிறதென்ற விஷயம் எல்லோருக்கும் அனுபவத்தினால் தெரிந்ததே? க்ஷேத்திரமும், விதையும், விதைபோடுகிறவரும் எல்லாம் சர்வசிரேஷ்டங்களானால் அதிலிருந்து உண்டாகும் பலன் எப்படி இருக்குமென்ற விஷயத்தில் சந்தேகத்திற்கு அவகாசமெப்படியுண்டாகும்.

மேலே சொன்னபடி ஸ்வபாவமாக மகாராஜரவர்களுடைய ஜன்மாந்தரீய சுபவாஸனையின் திறமையினால் அவரிடத்தில் நிலைகொண்டிருந்த, மைத்ரீ, முதலான ஸத்குணங்கள் மகரிஷியை ஒற்ற ஸ்ரீஸ்வாமிகள் அனுக்கிரஹத்தினால் பிரதியொருநிமிஷத்திலும் அநேகமாய் ஓங்கி வளர்ந்து ஸர்வவிதத்திலும் பிரவிருத்

தித்தன. இந்த பிரபுக்களின் காலத்தில் வெகு பிரசித்தங்களான ஸம்ஸ்தானத்திலுள்ள தேவாலயங்களில் அதை சம்பந்தித்த ஏற்பாடுகள் வெகு சிலாக்கியமாய் செய்யப்பட்டு விசாரணை நேரில் மகாராஜாவர்களின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டு தீர்மானிக்கப்பட்டு வருகிறது. ஸநாதன தர்மத்தைக் காற்றுவருகிற வேத சாஸ்திரங்கள் பிரசாரமாய்க் கொண்டுவருவதற்கு இந்த தர்மபிரபுக்களால் முன்னைவிட நூறுமடங்கு அதிகமாக சகாயம் செய்யப்பட்டுவருகிறது. வேத சாஸ்திரங்களை அத்யயனம் செய்யும் மாணவர்களுக்கு அநேகவிதமான சௌகரியங்களை செய்வதாலும் படித்த வித்யைகளை பரீக்ஷை கொடுத்து தேறினவர்களை ராஜசபையில் வரவழைத்துக்கொண்டு விசேஷமான சம்மானம் செய்வதினாலும் பண்டிதர்களுக்கு அதிகமாக கௌரவம் கொடுத்து அவர்கள் ஜீவனம் நடந்துவருவதற்காக ராஜ கிருஹத்திலிருந்தும் பாடசாலையிலிருந்தும் போதுமான மாதசம்பளம் கொடுப்பதாலும் விலையுயர்ந்த வஸ்திராபரணங்களைக் கொடுத்து மரியாதை செய்வதாலும் வேத சாஸ்திரங்களை அபிவிருத்தி செய்து கொண்டு வருகிறார். தர்மஸ்தாபகரான ஆசாரிய பரம்பரையில் வந்த மடாதிபதி விஷயத்தில் தம் ப்ரீதி கௌரவங்களை அநேகவிதமாக வெளியிட்டுக்கொண்டு வருகிறார். ராஜீய சம்பந்தமான லௌகிக காரிய விசேஷங்களை அதிகமாக வஹித்தவராயிருந்தாலும் அதின் சம்பந்தமான சிரமத்தைக் கவனியாமல் ஜனகமகாராஜ

ரைப்போல, பற்றில்லாதவராயிருந்துகொண்டு தம்மு டைய உபாஸனம், விசாரம், கர்மானுஷ்டானம் இவை களில் வெகு சிரத்தையுடன் நிச்சலமான மனமுள்ளவ ராக நடந்துகொண்டு வருகிறார். இப்படிப்பட்ட இராஜ ரிஷிகள் இந்த காலத்தில் அதி துர்லபமென்று சந்தே கமில்லாமல் செல்லலாம். தவிர இப்படி பரிசுத்தமான சீலமுள்ள பிரபுக்களாலேயே அனுகூலமான காலம் நேர்ந்துவந்தால் அதர்மத்தின் கொடுமையால் அடங் கியிருக்கிற வேதோக்த தர்மம் முன்னேற்றமடைந்து அதினால் பிரபஞ்சம் ரக்ஷிக்கப்பட்டு வருமென்று, ஆஸ் திகர்களும் அதர்மத்தில் பயமுள்ளவர்களும், தகுந்த பிரதிகாரம் செய்வதற்கு சக்தியற்றவராகி வியசனப் பட்டுக்கொண்டுவருகிற ஜனங்கள் காலத்தை எதிர்பார் த்திருந்தால் தாராளமாய் சமாதானம் அடையலாம்.

ஸ்ரீஸ்வாமிகளிடமிருந்து அசாதாரணமான அனுக் கிரகத்தையடைந்து இவர்கள் யாத்திரைக்காக வேண் டிய சௌகரியங்களை தம் அதிகாரிகள் ஏற்படுத்திக் கொடுத்து அவர்கள் விஜயம் செய்வதை எதிர்பார்த்து ராஜதானியில் காத்துக்கொண்டிருப்பதாக அவர்களி டத்தில் விக்ஞாபனம் செய்துகொண்டு ஸ்ரீமகாராஜர் ராஜதானியைக் குறித்து பிரயாணமானார்கள்.

மகா சிவராத்திரி மிகவும் சமீபத்தில் வந்துவிட்ட தனால் மகா க்ஷேத்திரமான சிருங்கேரியிலேயே ஆகந் துகர்போல வாசஞ்செய்து சிவராத்திரி மகோத்ஸவத் தை முடித்துக்கொண்டு அதே வருஷத்திய பால்குன

சுத்தபஞ்சமி தினம் சிருங்கேரியிலிருந்து ஸ்ரீஸ்வாமிகள் பிரயாணப்பட்டார்கள். வரும் வழியில் கடூர், ஹாஸனம், தும்கூர், இந்த ஜில்லாக்களில் சஞ்சாரம் செய்து கொண்டு அங்குள்ள சிஷ்ய ஜனமண்டலத்தை அனுக்கிரஹித்துக்கொண்டு பெங்களூர் வரும் மார்க்கத்தில் அவர்கள் விஷயத்தில் ஸ்ரீமான் மகாராஜருக்கு இருந்த பக்தி மரியாதைகளுக்குத்தக்கபடி ராஜாங்கத்திய அதிகாரிகள் எல்லோரும் அவரவருக்கு உள்பட்ட ஸ்தலங்களில் வெகு சிரத்தையுடன் காத்திருந்து ஸ்ரீஸ்வாமிகள் வாசத்திற்கும் பரிஜனங்களுக்கும் எல்லாவித மான சௌகரியங்களும் செய்துகொடுத்து அனுக்கிரஹம் பெற்றார்கள்.

மைசூர் சம்ஸ்தானத்தில் பெங்களூர் வெகு பிரதான பட்டணம். இந்த நகரம், சமுத்திரமட்டத்திலிருந்து மூவாயிரம் அடி உயரத்திலிருப்பதனால், சுகாதார விஷயத்தில் பிரசித்தியடைந்திருக்கிறது. இந்த நகரம், மதராஸ், பம்பாய், ஆளுகைக்குட்பட்ட அநேக பட்டணங்களுக்கு மத்யதேசமாயும், வியாபாரத்திற்கும், ஜனவாசத்திற்கும் அதிக அனுகூலமாயுமுள்ளது. மைசூர் சம்ஸ்தானத்திய ராஜாங்க சம்பந்தமான முக்கிய அதிகார ஸ்தானங்களெல்லாம் பங்களூரிலேயே இருப்பதினால் ராஜமந்திரிகள் முதலான முக்கிய அதிகாரிகளுக்கெல்லாம் இந்த நகரம் வாசஸ்தானமாயிருந்து வருகிறது. இதற்கு கல்யாண நகரம், என்ற ஒரு

பெயருண்டு. இந்தப் பெயர் இந்த நகரத்தில் சரியான அர்த்தத்தையுடையதே.

இந்த கல்யாண நகரியில் விசாலமான ஒரு மடம் நிர்மாணம் செய்து அந்த மடத்தில் கொஞ்சம் புஸ்தக கோசங்களை சேகரித்து தகுந்த பண்டிதர்களை நியமித்து அவர்கள் மூலமாக ஸ்தலவாஸி ஜனங்களுக்கும், காரியார்த்தத்தினால் வரக்கூடிய அன்னிய ஸ்தலத்திய ஜனங்களுக்கும் அவர்கள் விரும்புவதான கர்மம் ஞானம் முதலிய தர்மங்களை போதித்து வரும்படி ஏற்பாடு செய்தால் இதனால் சிஷ்ய கோடிகளுக்கு மிகவும் பிரயோஜனமுண்டாகுமென்றும் இந்த விஷயத்தில் சிஷ்ய ஜனங்களில் அநேகர் சகாயம் செய்வதற்கும் ஆசைகொண்டிருக்கிறார்களென்றும், மைசூர் சம்ஸ்தானத்திய திவான் சேஷாத்ரி அய்யர் ஒரு சமயத்தில் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் அறிவித்துக்கொண்டிருந்தார். இப்பால் திவான் பகதூர் டி. ராமசந்திரய்யரும் மேற்படி அபிப்பிராயத்தை ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் விக்ஞாபனம் செய்து வருஷத்தில் ஒரு தடவை ஸ்ரீஸ்வாமிகளே பங்களூருக்கு விஜயம் செய்து 1, 2, மாதகாலம் அங்கு வாசம் செய்து சிஷ்யகோடிகளுக்கு தர்சனம் கொடுத்து ஹிதோபதேசம் செய்து வருவதானால் அதனால் சிஷ்ய ஜனங்கள் மிகப்பிரயோஜனத்தையடைவார்களென்றும் ஸ்ரீஸ்வாமிகள் வசிக்காகவும், தர்மமார்க்கத்தை பிரசாரம் செய்து வருவதற்கும் சாசுவதமாய் உதவும்படிக்கும், நாம் கட்டின

தாயும் விசாலமாயும், எல்லா விதத்திலும் சௌகரிய முள்ளதாயுமிருக்கிற தம்முடைய கிருஹத்தை ஸ்ரீ ஸ்வாமிகளுக்கு சமர்ப்பணம் செய்வதற்கு தயாராயிருப்பதாயும் ஒரு சமயத்தில் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில், விக்ஞாபனம் செய்துகொண்டிருந்தார்.

ஸ்ரீஸ்வாமிகள் பெங்களூருக்கு விஜயம் செய்த சந்தர்ப்பத்தில் விசுவநாத மாதவராவு பாடங்கர் மைசூர் ஸம்ஸ்தானத்திய ராஜ மந்திரி பதவியை வகித்திருந்தார். 1885 பார்த்திவ வருஷத்தில் இவர் சிவமொகா டிஸ்திரிக்டில் டிப்டி கம்மிஷனராயிருந்தார். அக்காலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் கோகர்ண க்ஷேத்திர யாத்திரைக்காக பிரயாணமாகி சிவமொகாவுக்கு வரும்படி சந்தர்ப்பம் நேர்ந்தது. அந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீஸ்வாமிகள் தர்சனமேற்பட்டு அது முதல் அவர்கள் விஷயத்தில் மாதவராயருக்கு பக்தியும் கௌரவமும் உண்டாகி அவர்கள் பூர்ண அனுக்கிரஹத்திற்கு பாத்ரராகி குருபிரஸாத பலத்தையும் அனுபவித்து வந்திருந்தார். இவர் காலடி க்ஷேத்திர பரிஷ்காரகாரியத்தில் ஸ்ரீஸ்வாமிகளுக்குமுக்கியமான ஒரு அங்கமாக ஏற்பட்டிருந்தாரென்ற விஷயம் முந்தியே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஸ்ரீஸ்வாமிகள் காலடி க்ஷேத்திர யாத்திரை நிமித்தமாய் சிருங்கேரியிலிருந்து புறப்பட்டு பங்களூர் மார்க்கமாய் பிரயாணம் செய்வதையறிந்து அவர்கள் சேவையினால் கிருதகிருத்யனாய் ஆகும் சமயம் நேர்ந்து வந்திருக்கிறதென்று ஆனந்தப்பட்டு வெகு ஆதரவு

டன் ஸ்ரீஸ்வாமிகள் விஜயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். சிருங்கேரி ஸ்ரீமடத்திற்கு வெகு காலமிருந்து மைசூர் சம்ஸ்தானத்தில் ஏற்பட்டிருக்கிற உயர் தரத்தைச்சேர்ந்த ராஜ மரியாதைகளுடன் ஸ்ரீஸ்வாமிகள் பங்களூர் ராஜதானிக்கு வரவேற்றுக்கொள்வதற்கு ராஜாக்ஞையினால் ஏற்பாடுகளெல்லாம் செய்யப்பட்டிருந்தது. ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்தவுடன் அவர்கள் வாசத்திற்காக ராஜாக்ஞையினால் எல்லா விதத்திலும் சௌகரியமும் செய்யப்பட்டிருப்பதாயும் அப்படியிருந்தாலும் விரோதமில்லையென்று அவர்கள் அபிப்பிராயப்படுவதானால் தன் கிருஹத்தை அவர்கள் பாததுளியால் பரிசுத்தமாகச்செய்து அனுக்கிரஹிக்க வேண்டுமென்பதாயும் மாதவராயர் பிரார்த்தனை செய்துகொண்டார். இவர் கோரிக்கையை அங்கீகாரம் செய்வது ஸமஸ்த சிஷ்யமண்டலத்துக்கும் சம்மதமானதென்று தோன்றி சாலி 1830 பிலவங்க ஸம் நிஜ சைத்திர சுக்கில திரயோதசி சுக்கிரவாரம் (10-5-1907) ராயர் பிரார்த்தனைப்படி பாடணபவனத்தில் வசதி செய்துகொண்டார்கள்.

இந்த சந்தர்ப்பத்தில் கல்யாணபுரியில் ஒரு மடம் நிர்மாணம் செய்வது மிக ஆவசியகமென்ற விஷயத்தை மாதவராயரும் ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் பிரஸ்தாபித்து அந்த மடத்தில் ஸ்ரீமதாசாரிய மூர்த்தி பிரதிஷ்டையும் செய்யவேண்டுமென்றும் மடத்தின் நிர்மாணம் ஸ்ரீஸ்வாமிகள் பெங்களூர் பட்டணத்தில்



ஸ்ரீமஹாஸ்வாமிகளும் திவான்
வி. பி. மாதவராயரும்.

வாசம் செய்யும் சந்தர்ப்பத்திலேயே ஆரம்பம் செய்யப்படவேண்டுமென்றும் மடம் கட்டுவதற்கு விசாலமாயும் பரிசுத்தமாயும் உள்ள பூமியை உதவி செய்து கொடுக்கலாமென்றும் விக்ஞாபனம் செய்தார். இந்த சமயத்தில் இராமச்சந்திரய்யரும் ஸ்ரீஸ்வாமிகள் தர்சனத்திற்காக வந்தார். பங்களூரில் ஒரு மடம் கட்டும் விஷயமாய் தான் ஸ்ரீஸ்வாமிகளிடம் முந்தி விக்ஞாபனம் செய்துகொண்டிருப்பதை மறுபடியும் ஞாபித்து புரநிவாஸிகள் முதலிய அநேக சிஷ்ய ஜனங்களின் அபிப்பிராயப்படி ஜனங்களின் சௌகரியத்திற்குத் தக்கபடி அநுகூலமான ஸ்தலத்தில் மடம் நிர்மாணம் செய்வதானாலும் அதுவும் தனக்கு சம்மதம்தானென்றும் தன்னுடைய முந்திய சங்கல்பப்படி இந்த காரியத்திற்காக இருபதினாயிரம் ரூபாய் தான் ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் சமர்ப்பணம் செய்வதாயும் அதை ஸ்வீகரித்து அவர்கள் பங்களூரில் வாசம் செய்து வரும் காலத்திலேயே மடத்திய நிர்மாண காரியம் ஆரம்பம் செய்வதற்கு அநுக்ஞை கொடுத்து மேல் பிரயாணமாக வேண்டுமென்றும் பிரார்த்தனை செய்து கொண்டார்.

ஒரேவிதமான பிரார்த்தனையை அநேகம் தடவை ஊஹாபோஹங்களில் வல்லவரும் ஸதாசாரம் தர்ம மார்க்கங்களில் ஆஸ்தையுள்ளவருமான வெகு சிஷ்ய ஜனங்கள் தம்மிடத்தில் தெரிவித்துக்கொண்டு வந்ததினால் சிஷ்யஜனங்களுடைய கோரிக்கைப்படி நிறைவேற்

ஆவது தமக்கு முக்கியமென்றும் அனுகூலமான சமயம் நேர்ந்திருக்கிறதென்றும் நிச்சயித்து தத்காலத்தில் மைசூர்ஸம்ஸ்தானத்தில் பிரதான அதிகாரிகளாயும் தம்முடைய அனுக்கிரஹத்திற்கு விஷயராயும், தம் சங்கல்பத்தை நிறைவேற்றுவதில் உத்ஸாஹமுள்ளவராயுமிருந்த மாதவராயரையே மடம் நிர்மாணம் செய்கிற காரியத்தை நிர்வாஹம் செய்யும்படி ஆக்ஞாபித்து, ராஜசகாயத்தினால் நகரவாஸி ஜனங்களுக்கு அனுகூலமாயும், பட்டணத்திய எல்லா விடங்களுக்கும் மத்தியிலுள்ளதாயுமுள்ள ஸ்தலத்தை சம்பாதித்துக் கொடுத்து அங்கு முன்னுதாக ஒரு ஆலயம் கட்டி ஸ்ரீமதாசார்ய மூர்த்தி பிரதிஷ்டைக்கு சித்தப்படுத்தவேண்டுமென்றும் காலக்கிரமத்தில் விஸ்தாரமான ஒரு மடத்தின் கட்டிடம் செய்விக்கலாமென்றும் ஸ்ரீஸ்வாமிகள் மாதவராயருக்கு தெரிவித்தார்கள்.

குரு ஆக்ஞையை பரிபாலனம் செய்வதிலும் ஜனங்களின் அனுகூலத்திற்காக பட்டணத்தை அபிவிருத்தி செய்வதிலும் சிரத்தையுடைய ராயர் முக்கியஸ்தரான புரவாஸிஜனங்களுடன்கூட பட்டணத்தில் எல்லா பக்கங்களிலும் சஞ்சாரம் செய்து புதிதாய் சாமராஜபுரத்திற்கும் பசுவன்குடிக்கும் மத்தியத்தில் மரம் செடிகளால் மறைந்தும் துஷ்ட ஜந்துக்களுக்கு வாஸஸ்தானமாயும் ஜனங்களுக்கு பீடையுண்டாகும்படியும் இருந்த பிரதேசத்தை பரிஷ்காரம் செய்து நகராபிவிருத்திக்காக அந்த பிரதேசத்தை உபயோகிப்ப

தானல் ஜனங்களுக்கு அபிவிருத்தியுண்டாவதற்கும் ஸ்ரீஸ்வாமிகளால் ஸங்கல்பிக்கப்பட்டிருக்கிற ஆசாரிய ஆலயம், மடம், கட்டுவதற்கும் புரவாஸிஜனங்களுக்கு கிரஹங்கள் அமைத்துக்கொண்டு வாசம் செய்வதற்கு மனுகூலமாகுமென்று நிச்சயித்து ராஜாக்ஞையின்பேரில் அந்த ஸ்தலத்தை பூராவும் சர்க்காருக்கு ஸ்வாதீனம்செய்துகொண்டு ஏராளமான திரவியம் செலவு செய்து நகராபிவிருத்தி வேலையை நிறைவேற்றும்படியாகவும் அந்த பிரதேசத்தில் ஸ்ரீமடத்தார் அபேக்ஷிக்கும் விஸ்தீர்ணமான ஸ்தலத்தை மடத்தின் கட்டிடத்திற்காக கொடுப்பித்து பாக்கி ஸ்தலங்களை புரவாஸிகளின் உபயோகத்திற்காக கொடுக்கும்படியாயும் ஏற்பாடு செய்தார்.

ஆசாரியாலய காரியம் வெகு சீக்கிரமாக பூர்த்தியாகி ஆசாரிய மூர்த்தி பிரதிஷ்டையும் ஆனபிறகு ஸ்ரீஸ்வாமிகளின் மேல்பிரயாணம் ஆகவேண்டியிருந்ததினுல் அந்த வேலைக்கு வேண்டிய சாமான்களை தம் வீட்டிலிருந்து அனுப்பி வேலை துடங்கி இரண்டுவாரத்தில் ஆலய காரியத்தை பூர்த்தி செய்து ஸ்ரீஸ்வாமிகள் ஸன்னிதியில் ஆசாரிய மூர்த்தி பிரதிஷ்டைக்கு ஆலயம் தயாராகிவிட்டதாக விக்ஞாபித்துக்கொண்டார். இராயர் உத்ஸாஹத்தையும் அவர் சாமர்த்தியத்தையும் கண்டு ஆச்சரியம்கொண்டு காலடி க்ஷேத்திரத்தில் பிரதிஷ்டை செய்வதற்காக தயார் செய்துவைத்திருந்த அமிருத சிலாமயமான ஆசாரிய மூர்த்தியை

பிலவங்க வருஷத்திய வைசாக கிருஷ்ண அவாதசி சுக்கிரவார தினம் வைதீக விதிப்படி பிரதிஷ்டை செய்து அன்று ஸ்ரீ சந்திரமௌளீசுவர ஸ்வாமி முதலிய தேவதைகளின் பூஜாதிகளும அங்கேயே நிறைவேற்றி சிஷிய மண்டலங்களுக்கு தீர்த்த பிரசாதங்களருளிச் செய்து பிராம்மணர்களுக்கும் ஸுவாஸிநிகளுக்கும் மிருஷ்டான்ன தானமும் நடத்தினார்கள்.

பங்களூர் பட்டணம் வெகு பேர் சிஷிய ஜனங்களடங்கியதாகையால் சிஷ்யஜனங்களின் பிரார்த்தனையின் பேரில் அவர்கள் சத்காரங்களை அங்கிகாரம் செய்து அனுகிரஹிப்பதற்காகவும் ஜனங்களுடைய க்ஷேமத்திற்காகவும் ஸ்ரீமதாசார்ய மூர்த்தி பிரதிஷ்டை கார்யத்தை நிறைவேற்றுவதற்காகவும் நீண்டகாலம் அந்த நகரத்தில் வாசம் செய்யவேண்டிய அவசியம் உண்டாயிற்று. இந்த காரியத்தை பக்த பராதீனரான ஸ்ரீஸ்வாமிகள் சகல ஜனங்களுக்கும் திருப்தியுண்டாகும்படியாக நிறைவேற்றி ஆசாரிய மகிமையையும் அவர்களிடத்தில் பக்திசெய்கிற மாதிரியையும் அதன் பிரயோஜனத்தையும் விஸ்தாரமாக உபதேசம் செய்து ஆசாரிய மூர்த்தி தர்சனத்தினாலும் அந்த மகா புருஷருடைய சேவையினாலும் கலியாணபுரவாஸி ஜனங்களெல்லோருக்கும் கலியாண பரம்பரையுண்டாகவேண்டுமென்றும் அனுக்கிரஹித்து பிடதி குளோஸ்பேட்டை. சென்னபட்டணம் வழியாய் பிரயாணம் செய்து பிலவங்க வருஷம் ஜ்யேஷ்ட பகுள

பஞ்சமி பானுவாரம் மைசூர் ராஜதானியில் பிரவேசித்தார்கள்.

இராஜதானியில் ஸ்ரீஸ்வாமிகள் விஜயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்த ஸ்ரீமான் மகாராஜர் அவர்களால், அநன்னியசாதாரணங்களான ராஜமரியாதைகளுடன் வரவேற்றுக்கொள்ளப்பட்டு நூதனமான ராஜகிருஹத்தில் பிரவேசித்து மகாராஜருக்கு தர்சனம் கொடுத்து ஸ்ரீமன் மகாராஜா ஸம்ஸ்கிருத பாடசாலை கட்டிடத்தில் வசதி செய்துகொண்டார்கள்.

அதே பகுள தசமி சுக்கிரவார தினம் மகாராஜரால் பிரார்த்திக்கப்பட்டு ராஜகிருஹத்திற்கு விஜயம் செய்து ஸ்ரீசந்திரமௌளீசுவராதி தேவதாராதனையை அரண்மனையில் நடத்தி பழைய சம்பிரதாயப்படி பிரபுக்களால் செய்யப்பட்ட பாதபூஜை முதலிய உபசாரங்களை அங்கீகாரம் செய்து ஸ்ரீமகாராஜரவர்களுக்கும், இராஜகுடும்பத்தாருக்கும், தீர்த்தபிரஸாதம் அருளிச்செய்து, உடனே ஸ்வஸ்தானத்திற்கும் வருகிற வாடிக்கையிருந்தாலும், பிரபுக்களுடைய பிரார்த்தனைப்படி ராஜபவனத்திலேயே வாசம் செய்திருந்து அன்று ராத்திரியும் தேவதாராதனம் முதலிய காரியங்களை முடித்துக்கொண்டு தம் வாசஸ்தானத்துக்கு விஜயம் செய்தார்கள்.

அந்த வருஷத்திய சாதுர்மாஸ்ய சங்கல்பானுஷ்டான சமயம் சமீபத்தில் வந்துவிட்டதனாலும், சஞ்சாரம் செய்யவேண்டிய தேசம் விஸ்தாரமாயிருந்ததி

ஞாலும் ராஜதானியில் அதிக நாள் இருப்பதற்கு இடமில்லாமலிருந்ததினால் பதிமூன்று நாள் ராஜதானியில் நின்று ஸ்ரீமகாராஜருக்கும் இதர சிஷ்ய ஜனங்களுக்கும் அனுக்கிரஹம் செய்து, ஸ்ரீகண்டேசுவர ஸ்வாமி தர்சனத்திற்காக நஞ்சனகூடுக்கு விஜயமானார்கள். அந்க்ஷேத்திரத்தில் மூன்று தினம் வாசம் செய்து ஸ்ரீகண்டேசுவர ஸ்வாமிக்கு சாவகாசமாக பூஜை செய்து அங்கிருந்து சாமராஜநகரமார்க்கமாக கணவாய் இறங்கி மதராஸ் ஆளுகைக்குட்பட்ட கோயம்புத்தூர் ஜில்லா சத்தியமங்கலம் கிராமம் சேர்ந்தார்கள். சத்தியமங்கலத்திற்கு 15 மைல் தூரத்தில் விசேஷமாக பிராம்மணர்கள் இருக்கக்கூடிய கோபிசெட்டிபாளையம் என்ற அக்கிரகாரத்தில் பிலவங்க வருஷத்திய சாதுர்மாஸ்ய சங்கல்பம் வியாஸபூஜை முதலிய ஆசிரம தர்மங்களையும் சாத்நவராத்திரி உத்சவங்களையும் நடத்திக்கொண்டு, பவானி, ஈரோடு, கரூர் மார்க்கமாய் பிரயாணம் செய்து திருச்சினாப்பள்ளிக்கு சமீபத்தில் காவேரி நதீ தீரத்திலுள்ள பிராம்மண அக்கிரகார மகாஜனங்களுடைய பிரார்த்தனையை அனுசரித்து, ஒன்று இரண்டு நாள் அந்தந்த அக்கிரகாரத்தில் வாசம் செய்து அங்குள்ள சிஷ்ய ஜனங்களை அனுக்கிரஹித்துக்கொண்டு திருச்சினாப்பள்ளிக்கு சமீபத்திலுள்ள ஜம்புகேசுவர க்ஷேத்திரத்தில் பிரவேசித்தார்கள்.

ஸ்ரீஸ்வாமிகள் கோபிசெட்டிபாளயம் கிராமத்தில் சாதுர்மாஸ்ய சங்கல்பம் செய்த சந்தர்ப்பத்தில்

அவர்கள் தர்சனத்திற்காக வந்திருந்த, இவர் பக்தர்களில் ஒருவரான, நாட்டுக்கோட்டை செட்டிகள் வகைக்கு சேர்ந்த, கானடுகாத்தான், சிதம்பர செட்டியார், என்பவர், பிரசித்திபெற்ற ஜம்புகேசுவர, அகிலாண்டேசுவரியம்மன் இவர்களுடைய ஜீர்ணமாயிருந்த தேவாலயத்தை அநேக பக்தர்களின் சகாயத்தினால் தான் ஜீர்ணோத்தாரணம் செய்துகொண்டிருப்பதாயும், புதிய ஆலயத்தை சுத்திசெய்து தேவதாஸான்னித்யத்திற்கு நடத்தவேண்டிய கும்பாபிஷேக காலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்து அந்த க்ஷேத்திரத்தில் சன்னிகிதர்களாயிருக்கும்பக்ஷத்தில் தான் ஆரம்பம் செய்திருக்கிற காரியம் நிர்விக்னமாய் நடந்து லோகத்திற்கு க்ஷேமகரமாயிருக்குமென்றும் பிரார்த்தித்துக்கொண்டார். அந்தப்படி ஜம்புகேசுவர க்ஷேத்திரத்திற்கு வந்து கும்பாபிஷேகம் பூர்த்தியாகும்வரையில் அங்கு வாசம் செய்து பிறகு, ஜம்புகேசுவரர் அகிலாண்டேசுவரீ தேவதா தர்சனம் செய்து தேவதா சன்னிதியில் பிரபஞ்சத்தின் க்ஷேமத்திற்காக பிரார்த்தனை செய்துகொண்டு புராணப் பிரசித்திபெற்ற ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்து பரிஷ்காரம் செய்த தம் பக்தரான சிதம்பர செட்டியார் செய்த காரியத்தை அபிநந்தனம் செய்து அவருக்கு பிரசாதம் கொடுத்து அருளினார்கள். சிருங்கேரி ஸ்ரீசாரதாதேவாலய காரியத்தில் ஸ்ரீஸ்வாமிகள் ஆஜ்ஞைப்படி நியமிக்கப்பட்ட இந்த செட்டியார் ஸ்ரீஸ்வாமிகள்

சங்கல்பித்திருக்கிற யாத்திரானுஷ்டானம் முடிந்து சிருங்கேரியைக்குறித்து திரும்பி வருவதற்குள்ளாக ஸ்ரீசாரதாம்பாலயநிர்மாணம் செய்யும் காரியத்தை பூர்த்தி செய்து அவர்கள் பிரசாதத்தைப்பெறுவதற்கு தகுந்தவனாகும்படி அனுக்கிரஹிக்கவேண்டுமென்று தன் குமாரன் ராமஸ்வாமி செட்டியாருடன் பிரார்த்திக்கையில் அவர் உத்ஸாகத்திற்கு மகிழ்ந்து அப்படியே நடக்குமென்று அனுக்கிரஹம் செய்து அங்கிருந்து தக்ஷிண தேசத்தில் பிரசித்தமான ஸ்ரீரங்க க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்கள்.

இந்த க்ஷேத்திரத்தில் ஒரே நாள் வாசம் செய்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு அந்தரங்க சிஷ்யரான டி. கே. பாலசுப்பிரம்மணியய்யர் என்பவருடைய பிரார்த்தனைப்படி சித்திரவீதியிலுள்ள அவர் கிருஹத்தில் வசதி செய்துகொண்டு அவர் செய்த ஸத்காரங்களை ஸ்வீகரித்து அன்று இராத்திரி சந்திரமௌளீச்வாரதி தேவதா ஆராதனம் முதலிய நித்ய அனுஷ்டானங்களெல்லாம் பூர்த்தியானமேல் பாதசாரிகளாகவே ரங்கநாதஸ்வாமி தேவாலயத்திற்கு விஜயம் செய்து ஏகாந்தமாக தேவதர்சனம் பஜனம் நமஸ்காரங்கள் முதலியவைகளால் ஆனந்தபாரவசராக ஸ்வஸ்தானத்திற்கு திரும்பி வந்தார்கள். மறுநாள் காலையில் நித்யானுஷ்டானங்களை முடித்துக்கொண்டு திருச்சினாப்பள்ளிக்கு விஜயம் செய்து அங்கு பிரசித்தரான கணபதி அய்யர் கிருஹத்தில் அவரால் செய்யப்பட்ட பிக்ஷா பாதபூஜை

முதலிய ஸேவைகளை ஸ்வீகரித்துக்கொண்டு அன்று ராத்திரி ஸ்ரீஸ்வாமிகள் வஸதிக்காக சித்தப்படுத்தியிருந்த கிருஷ்ணய்யர் கிருஹத்திற்கு வந்து அங்கே வஸதி செய்துகொண்டார்கள். திருச்சிராப்பள்ளியிலிருந்து புதுக்கோட்டை மார்க்கமாய் பிரயாணம் செய்து கோவிலூர் என்ற கிராமத்திற்கு வந்தார்கள்.

அந்த கிராமத்தில் ஒரு மடமுண்டு. தக்ஷிணதேசத்தில் வியாபாரத்தினாலும் ஐசுவரியத்தினாலும் தேவாலயம் தடாகம் முதலிய தர்மஸ்தானங்களை ஜீர்ணோத்தாரணம் செய்வதினாலும் பிரஸித்திபெற்ற நாட்டுக்கோட்டை செட்டிகள் வகைக்குச் சேர்ந்த விரக்தான ஒரு பரதேசிக்கு அந்த மடம் ஸ்தானமாக ஏற்பட்டிருக்கிறது. இந்தப்பரதேசியார், ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரியரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் அத்வைத மார்க்கத்தை யனுசரித்தவர். இந்த மடத்தில் கிருஹஸ்ததர்மத்தைத் தழுவினவர்களும் கிருஹஸ்ததர்மத்தை விட்டுவைராக்கியமுள்ளவருமான பல ஜனங்களுக்கும் அன்னவஸ்திரம் கொடுத்து தமிழ்பாஷையில் மொழிபெயர்க்கப்பட்ட அத்வைத வேதாந்த கிரந்தங்களை சொல்லிக்கொடுத்து நல்வழியில் செல்லும்படி செய்யக்கூடிய சம்பிரதாயம் வைத்துக்கொண்டிருக்கிறார். ஸ்ரீஸ்வாமிகள் 1893-94 வருஷத்தில் இராமேசுவர யாத்திரை நிமித்தமாய் தக்ஷிணதேசத்தில் விஜயம் செய்த காலத்தில் கோவிலூர் மடாதிபதியாயிருந்த வீரப்பதேசிகர் என்ற பரதேசியார் ஸ்ரீஸ்வாமிகளின் தர்ச

னத்திற்காக ராமனாதபுரத்திற்கு வந்து அந்த அவர்
கள் தர்சனம் பெற்று அவர்களை கோவிலூருக்கு
விஜயம் செய்வித்து அங்கேயும் விசேஷமான சேவை
முதலிய உபசாரங்களினால் மரியாதை செய்தார்
என்ற சங்கதியை முந்திய அத்யாயங்களிலும் சந்தர்ப்
பம் வந்த காலத்தில் பிரஸ்தாபித்திருக்கிறது. இந்த
வீரப்பசாமியார் என்பவர் கோவிலூரிலுள்ள ஈசுவர
தேவாலயத்தை ஏராளமாக திரவிய விரயம் செய்து
புதிதாய் தோன்றும்படி ஜீர்ணோத்தாரணம் செய்தி
ருந்தார். ஆலயசுத்தியுடன் கும்பாபிஷேகம் நடத்து
வதற்கான காலத்தை தீர்மானித்துக்கொண்டு அந்த
காலத்தில் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்வதினால் தம்மை
அனுக்கிரகிக்கவேண்டுமென்று பிரார்த்தனை செய்து
கொண்டிருந்தபடி ஸ்ரீஸ்வாமிகள் சவாரி கோவிலூருக்
கு விஜயம் செய்து கும்பாபிஷேகம் முடிவடைந்தபிறகு
ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசாரியாரவர்கள் ஜன்மோத்ஸ
வம் சம்பிரமமாக ஐந்துநாள் வரையிலும் அதிக விமரி
சையுடன் அங்கேயே நடத்திக்கொண்டு கோவிலூர்
சாமியார் செய்த விசேஷ உபசாரங்களை ஸ்வீகரித்து
அங்கிருந்து முன்னாதாக நாட்டுக்கோட்டை ஜனங்கள்
விசேஷமாயிருந்துவரக்கூடிய, காரக்குடி, கானாடுகாத்
தான் பள்ளத்தூர் கோட்டையூர் தேவகோட்டை
முதலான கிராமங்களில் பிரசித்தரான செட்டிகளின்
பிரார்த்தனையை அனுசரித்து சஞ்சாரம் செய்து அந்த
ஜனங்களுக்கு தேவதாதர்சனம் தீர்த்தபிரசாதம் முத

வியவைகளால் அனுக்கிரஹம் செய்து கீலக வருஷத்திய சாதுர்மாஸ்ய காலம் நெருங்கி வந்ததினால் சுப்பிரமண்ய க்ஷேத்திரமான குன்னக்குடி என்னும் கிராமத்தில் சங்கல்பம் வியாஸபூஜை முதலிய தர்மங்களை அனுஷ்டானம் செய்து அவ்விடத்தில் இரண்டு மாத காலம் வாசம் செய்தார்கள். அவ்வருஷத்திய சரத் நவராத்திரி உதஸவத்தை திருப்பத்தூர் அக்கிரகாரத்தில் நிறைவேற்றி மதுரை ஜில்லாவில் பிரவேசம் செய்துகொண்டு கிரமமாக ஹாலாஸ்ய க்ஷேத்திரமான மதுராபுரி வந்து சேர்ந்தார்கள்.

இந்த பட்டணத்தில் முன்வழக்கப்படி ஸ்ரீசுவாமிகளுடைய வஸதிக்காக சித்தம் செய்து வைத்திருந்த மீனாக்ஷி சுந்தரேசுவர தேவஸ்தானத்தில் ஒரு பாகமாகிய கல்யாண மண்டபத்தில் தம் ஜாகை பிடாரம் அமைத்துக்கொண்டு சுமார் இருபத்தைந்து தினம் வரையில் அந்த க்ஷேத்திரத்தில் வாசம் செய்து திருபுவனம் மானாமதுரை பரமக்குடி மார்க்கமாய் ராமனாதபுரம் சேர்ந்து அங்கு இரண்டு நாள் இருந்து அவ்விடத்திய ஜமீன்தாரரான முத்துலிங்க ராஜராஜேசுவர ஸேதுபதி அவருக்கு அனுக்கிரஹம் செய்து, மண்டபம் பாம்பன் வழியாய் தோணியின் மூலமாக பாம்பன் தாண்டி சாலி 1831 கீலக வருஷத்திய கார்த்திக சுக்கில ஏகாதசி புதவாரம் 1908 இராமேசுவர க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்தார்கள். தனுஷ்கோடியில் மூன்று நாள் வாசம் செய்து விதி

முறைப்படி ராமஸேதுஸ்நாநம் செய்து ராமேசுவரத்திற்குப் பின் திரும்பிவந்து ராமனுதஸ்வாமியை வெள்ளி காணயங்களினுலும் விலையுயர்ந்த வஸ்திராபரணங்களினுலும் ஆராதித்து இரண்டுவாரம் வரையில் அந்த க்ஷேத்திரவாஸம் செய்து அங்குள்ள சிஷ்யஜனங்களுடைய ஸத்காரங்களை ஸ்வீகரித்து அவர்களுக்கெல்லாம் தீர்த்தபிரஸாத பலமந்திராக்ஷதைகள் கொடுத்து ஆசீர்வாதம் செய்து பிறகு ராமேசுவரத்திலிருந்து பிரயாணம் செய்து திருநெல்வேலி ஜில்லாவில் பிரவேசம் செய்தார்கள். இந்த ஜில்லாவில் தாம்பிரபர்ணீ நதிதீரத்தில் அநேக பிராம்மண அக்கிரஹாரங்களிலிருக்கின்றன. அந்த நதிக்கு குறுக்கே அணைகட்டி கால்வாய்மூலமாய் அந்த ஜலத்தினுல் நஞ்சை சாகுபடி ஆகும்படி செய்திருக்கின்றூர்கள். இதனுல் விசேஷமான சாகுபடியாகி அங்குள்ள பிராம்மணர்கள் கூடியவரையில் அனுகூலமான ஸ்திதியிலிருக்கிறூர்கள். தவிர, இந்த ஜில்லாவில் உள்ள பிராம்மணர்கள் ஸ்ரீமதாசாரியபீடமான சிருங்கேரிமடத்தின் குருக்களை அசாதாரணமான பாவனையுடன் பூஜித்துக் கொண்டு வருகிறவர்கள். ஸ்ரீஸ்வாமிகள் ஸ்ரீசங்கரபகவத்பாதாசாரியாரின் ஜன்மபூமியை பரிஷ்காரம் செய்து அந்த க்ஷேத்திரத்தில் ஆசாரியமூர்த்தியை பிரதிஷ்டை செய்து சிஷ்ய ஜனங்களுக்கு மகா அப்யுதங்களுண்டாவதற்காக யாத்திரையை துடங்கியிருக்கிறூர்களென்ற சங்கதி அறிந்து இப்படிப்பட்ட அபூர்வ

மான சந்தர்ப்பத்தில் தங்கள் சக்திக்கு அதிகமாக ஸ்ரீஸ்வாமிகளை உபசரித்து அவர்கள் சங்கல்பத்திருக்கிற மகாகாரியத்தில் தாங்களும் பாகிகளாக ஆகுவது சிஷியர்களான தங்கள் கடமையென்று சொல்லும்படி உத்ஸாகத்துடன் அவர்களை பிரதிபொரு அக்கிரகாரத்திற்கும் விஜயம் செய்வித்து ஜனங்கள் வெளிப்பிராணன் என்று சொல்லப்படுகிற தனவிஷயத்தில் அபிமானத்தைக்காண்பிவிக்காமல் விசேஷமான திரவியங்களால் அவர்களுக்கு ஸத்காரம் செய்துகொண்டாடினார்கள். சிஷிய ஜனங்களுடைய பக்தியையும் உத்ஸாகத்தையும் அவர் மனோபாவத்தையும் ஸ்ரீஸ்வாமிகள் அறிந்து இவ்விடத்திய பிராம்மணர்கள் கொடுத்த திரவியம் பூமுழுவதும் ஆசாரிய தேவாலய காரியத்திற்கும் கும்பாபிஷேகம் மூர்த்திப்பிரதிஷ்டை முதலிய காரியங்களுக்கும் விநியோகப்படுத்தவேண்டியதென்று தம் அதிகாரிகளுக்கு ஆக்ஞாபனம் செய்து அந்த இரண்டு லக்ஷம் ரூபாயையும் ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞானுசாரமாக அவ்விடத்திய சிஷியர்களில் முக்கியஸ்தரான சிலரிடத்தில் அமானத்தாக வைத்து அப்போதப்போது மேற்படி காரியங்களுக்காகவே தருவித்துக்கொள்ளப்படுவதாக தெரிவிக்கப்பட்டது.

சௌம்ய வருஷத்திய சாதுர்மாஸ்ய சங்கல்ப காலம் நெருங்கி வந்தது. அந்த வருஷத்தில் அதிக மாதம் பிராப்தமாயிருந்ததினால், மூன்றுமாத காலம் ஒரு ஸ்தலத்தில் தாமஸிக்கவெண்டிய நிர்ப்பந்தம்

உண்டாயிற்று. சஞ்சாரத்தினும் ஜனக்கூட்டத்தினும் மிகவும் கலக்கம் கொண்டிருந்த ஸ்ரீஸ்வாமிகளுடைய மனது ஜனசஞ்சாரமில்லாமலும், வனபங்க்திகளினால் மனோகரமாயிருக்கிற பிரதேசத்தில் வாசம் செய்வதை ஆதரவுடன் எதிர்பார்த்திருந்தது. ஆலோசித்ததில் திருநெல்வேலி ஜில்லாவில் பாபவிநாசம் என்ற பெயருடன் அர்த்தத்துடன் கூடிய க்ஷேத்திரம் மிகவும் நிர்ஜனமாகவும், நிர்மலமாகவும், ரமணீயமாயுமிருப்பதாக விளங்கிற்று. அந்த க்ஷேத்திரத்தில் பிரவேசித்து அங்கு தம் சங்கல்பத்தை துடங்கி ஆனந்தமாய் அவர்கள் மூன்றுமாத காலத்தையும் கழித்து வந்தனர்.

சாதுர்மாஸ்ய சங்கல்பம் பூர்த்தியான பிறகு சிங்கம்பட்டி ஜமீன்தாரான தீர்த்தபதியாரால் பிரார்த்திக்கப்பட்டு அவர் செய்த ஆதித்ய சத்காரங்களை அங்கீகாரம் செய்து பாண தீர்த்தமென்னும் பர்வதத்திற்கு விஜயம் செய்தார்கள். அந்தப்பர்வதம் வெகு விசாலமாகவும் ஜனசஞ்சாரமில்லாததால் ஏகாந்தமாகவும் வெகு பரிசுத்தமான தாம்பிரபரணீ ஜலத்தினும் மேகமண்டலத்தை அளாவிய விருக்ஷபங்க்திகளாலும் மனோகரமாயும் இருக்கிறது. அந்த ஸ்தலத்தின் ரமணீய நிலைமையானது ஆத்மஸுகானுபவமில்லாத பாமரரான சம்சாரிகளுடைய மனதைக்கூடக் கவர்ந்து அந்த தேசத்தில் வாசம் செய்யும் வரையில் மாத்திரமாவது சிந்தையின்றி ஸ்திரசித்தராயும் ஆனந்தத்தில்

மூழ்கினவராயும் செய்யக்கூடிய ஸ்வபாவமுள்ளதாயி ருக்கும்போது ஆத்மாராமரான ஸ்ரீஸ்வாமிகளுக்கு அந்த பர்வதத்தில் வாசம் எப்படி இருக்குமென்று சங்கதியை யோசிப்பது நம்மைப்போலுள்ளவர்களுக்கு சாத்யமல்ல. இப்படிப்பட்ட பர்வதத்தில் தீர்த்த பதியார். ஸ்ரீஸ்வாமிகள் மனோபாவத்திற்குத்தகுந்த படி லதாமண்டபங்களையும் பர்ணசாலைகளையும் சிலாமய ஆஸ்தானங்களையும் இயற்கையிலுண்டானதாயிருக் கும்படி கல்பனை செய்திருந்தார். மூன்று நாள் அப் பர்வதத்தில் வாசம் செய்து திருநெல்வேலி பட்ட ணத்திய ஜனங்களுடைய நிர்ப்பந்தமான பிரார்த்தனை யின் பேரில் அந்த வருஷத்திய சாத் நவராத்திரியை சம்பந்தித்து சாரதா பூஜா உத்ஸவாதிகளை நிறை வேற்றுவதற்காக திருநெல்வேலி பட்டணத்திற்கு விஜயம் செய்து, சாலிவாடீசுவர தேவஸ்தானத்தில் பிடாரம் செய்துகொண்டார்கள். அங்குள்ள சிஷ்ய ஜனங்கள் வெகுவான உத்சாகத்துடனும் பக்தி சிரத் தையுடனும் நவராத்திரி பூஜை உத்ஸவம் முதலியவை களை வெகு விமரிசையுடன் நிறைவேற்றி ஸ்ரீஸ்வாமிக ளிடமிருந்து தீர்த்த பிரசாதம் மந்திராக்ஷதைகளைப் பெற்று கிருதார்த்தரானார்கள்.

அபூர்வமாக பெரியதான காரியத்தை உத்தே சித்து ஸ்ரீஸ்வாமிகள் தாமாகவே கேரள தேசத்தை அலங்கரிப்பார்களென்ற சமாசாரம் திருவனந்தபுரம் மகாராஜருக்குத்தெரிந்து அந்த மகான் தம் ராஜ்யத்

தில் பிரவேசம் செய்தது முதல் அங்கு வாசம் செய்யும் வரையில் ஸ்ரீஸ்வாமிகளுக்கும் அவர் பரிவாரத்திற்கும் எந்த விதத்திலும் அநுகூலக்குறைவு வாரமலிருக்கும்படி வேண்டிய ஸாதனங்களை கல்பிக்கும்படிக்கும் தம் தேசத்திற்குள் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்த சந்தர்ப்பத்தில் அவர்களுக்கு நடத்த வேண்டிய ராஜமரியாதைகளை மிக உயர்தரமான ரீதியில் நடத்தவேண்டுமென்றும தம் அதிகாரிகள் மூலமாக ஆவசியகமான ஏற்பாடுகள் செய்வித்து தம் ஜன்மநக்ஷத்திரத்திற்கு அநுகூலமான சுபதினம் சாலி 1832 சௌமிய(1909) வருஷத்திய மார்க்கசிர்ஷசுத்த பௌர்ணமி ஆயிருப்பதாகவும், அன்று தினம் தம் ராஜதானிக்கு விஜயம் செயது தமக்கு தர்சனம் கொடுத்து தாம் பக்தி பூர்வம் செய்யும் ஆதித்யத்தை ஸ்வீகரித்து அநுக்கிரஹிக்கவேண்டுமென்றும் பிரார்த்தித்துக்கொண்டார்.

அந்த மகாராஜரின் பிரார்த்தனைப்படி நிஷ்கர்ஷையான தினத்தில் திருவனந்தபுரம் சேருவதற்கு மத்திய மார்க்கத்திலுள்ள சிஷ்ய ஜனங்களுடைய நிர்ப்பந்தத்தினுல் அவகாசம் வெகு கொஞ்சமாயிருந்தாலும் ஜோதிஷ சாஸ்திர முறைப்படி, சுபமான வார நக்ஷத்திரங்களை விசாரம் செய்து அப்படிப்பட்ட சுபதினங்களிலேயே சுபகாரமான காரியத்தை செய்யவேண்டுமென்ற அந்த இராஜருடைய ஆஸ்திக புத்தியை அறிந்து சந்தோஷித்து, பக்தகோடிகளின் உத்ஸாஹத்திற்



திருவனந்தபுரம் ஸ்ரீராமவர்மகுலசேகரமஹாராஜா.

கும் ஜனங்கள் பக்திபாவனையுடன் குருசேவை செய்து ஈடேறவேண்டுமென்ற அவர் உத்தேசத்திற்கும் விரோதமில்லாமல் தம் பிரயாணத்தை நடத்திக்கொண்டு திருவாங்கூர் மகாராஜர் தேசத்தில் பிரவேசித்தார்கள். இவர் தேசத்தில் தோவாழக்கோட்டை என்ற கிராமம் முதல் மஜிலியாயிருந்து மகாராஜர் எல்லைக்குள் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்யும்போது பத்மனுபபுரம் டிவிஷன், திவான் பேஷ்கார், என்னும் முக்கிய அதிகாரி தம் பரிவாரங்களுடன் காத்திருந்து ராஜரின் உத்திரவுப்படி ராஜ மரியாதைகளுடன் ஸ்ரீஸ்வாமிகளை வரவேற்றுக்கொண்டு அங்குள்ள அரண்மனையில் அவர்களுக்கு வசதி செய்து கொடுத்தார்கள்.

பின்பு சமுத்திரக் கரையிலுள்ள கன்யாகுமாரி க்ஷேத்திரத்திற்கு விஜயம் செய்து மூன்றுநாள் அங்கே வாசம் செய்து கன்யாகுமாரி அம்மன் தர்சனம் செய்துகொண்டு சஞ்சாரக் கிரமமாக முன் குறிப்பிட்ட தினம் காலை 5 மணிக்கு ராஜதானிக்கு இரண்டு மைல் தூரத்தில் நதிதீரத்தில் இரங்கி ஸ்நாநம் அநுஷ்டானம், காலை சிவபூஜை முதலியவைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்குள் முக்கிய மந்திரி முதலான எல்லா அதிகாரிகளும் புரநிவாஸிகளுடனும் பூர்ண கும்பம், பலவர்க்கங்கள் முதலிய சுபசூசகமான உபஹாரவர்க்கங்களுடனும் சித்தமாக வந்து ஸ்ரீஸ்வாமிகள் தர்சனத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகள் தம் அநுஷ்டானங்களை பூர்த்தி செய்துகொ

ண்டு ரத்னமயமான கிரீடம் முதலிய ஆஸ்தான சின்னங்களினால் அலங்கரிக்கப்பட்டவராய் சிவிகையில் ஏறுவதற்காக வெளியில் வந்தவுடன், ஒருவர் முன் ஒருவராய் தள்ளிக்கொண்டு எதிர்பார்த்திருந்த சிஷ்ய வர்க்கங்கள் பலங்களை உபகாரம் செய்து வந்தனங்களை ஆசரிப்பதற்கு ஜனக்கூட்டத்தினாலும் ஆத்திரத்தினாலும் முடியாமல் இருக்க இச்சந்தர்ப்பத்தை ஸ்ரீஸ்வாமிகள் கண்டு ஜனங்களுக்கு தொந்திரவுண்டாகுமென்றும் தாம் பல்லக்கில் ஆரோஹணம் செய்தபிறகு ஜனங்கள் பலசமர்ப்பணம் செய்து மனஸ்ஸினால் வந்தனம் செய்யலாமென்றும் ராஜாமாத்யரான ராஜகோபாலாசாரியாரை அழைத்து அவரிடம் தெரிவித்து அந்தக்ஷணமே பல்லக்கில் ஆரோஹணம் செய்தார்கள். பிறகு ராஜாதிகாரிகள் ஜனங்களை சமாதானப்படுத்தி ஜனநெருக்கத்தை அடக்கி பிரதியொரு ஜனங்களுக்கும் ஸ்ரீஸ்வாமிகள் தர்சனம் செய்வித்து மகிழ்ச்சி செய்தார்கள். முந்தியே ஏற்பாடு செய்திருந்த ராஜவீதி வழியாய் ஸ்ரீஸ்வாமிகள் விஜயம் செய்து வரும்போது இரண்டு பக்கங்களிலும் ஸ்திரீ ஜனங்கள் விசித்ரமான ஆரத்திகளினால் அவர்களை சேவித்து ஆனந்தமடைந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகள் சவாரி கோட்டைவாயில் பக்கத்திற்கு வருவதற்கு முந்தியே ஸ்ரீமான் மகாராஜர் மிதமாயுள்ள தம் பரிஜனங்களுடன் ராஜகீயமான தம் அலங்காரங்களை தரித்துக்கொண்டு ஸ்ரீஸ்வாமிகள் ஆகமனத்தை ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார். வெளி

வாயிலுக்கு சமீபத்தில் அவர்கள் பல்லக்கு வந்தவுடன் மகாராஜர் வெளியில் வந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்து கைகூப்பிக்கொண்டு ஸ்ரீஸ்வாமிகளுக்கு பக்தி பூர்வமாக நல்வரவு சமர்ப்பிக்கையில் ஸ்ரீஸ்வாமிகள் அவர் பக்தி சிரத்தைகளுக்கும், ஆதரவுக்கும் சந்தோஷித்து யோகக்ஷேம பிரச்னங்கள் நடந்த மேல் மகாராஜருக்கு பல மந்திராக்ஷதைகள் கொடுத்து அவரை அனுக்கிரஹித்து ராஜபவனத்திற்கு சேரும்படி அனுமதி கொடுத்து கோட்டைக்குள் பிரவேசம் செய்து நான்கு வீதிகளையும் சுற்றிவந்து வாசத்திற்காக சித்தப்படுத்தியிருந்த இளையராஜர் அரண்மனையில் தூளிபூஜை முதலிய உபசாரங்கள் மகாராஜர் வகையாக நடந்த பிறகு, கூடவந்த அதிகாரிகளுக்கும் நகரவாசி ஜனங்களுக்கும் அனுமதி கொடுத்து அனுப்பிவிட்டு மாத்யான்னிகஸ்நாநம் பூஜை முதலிய அனுஷ்டானங்கள் நடத்தினார்கள். இந்த ராஜதானியில் எட்டு நாள் மாத்திரம் ஸ்ரீஸ்வாமிகள் வாசம் செய்தார்கள். இவர்கள் சத்காரத்திற்காக மகாராஜரால் செய்யப்பட்டிருந்த பிரதியொரு நிபந்தனைகளும் எப்போதும் ஸ்மரணத்திற்கு யோக்கியமானவைகளாயிருந்தன. இந்த மத்திய காலத்தில் ஒருதினம் ஸ்ரீஸ்வாமிகள் பிடாரம் செய்திருந்த ஸ்தலத்திற்கு மகாராஜர் வந்து அவர்களிடமிருந்து மந்திரோபதேசம் பெற்று ஆஸ்தானத்திய வழக்கப்படி அவர்கள் பாத காணிக்கையாக பத்து ஆயிரம் ரூபாய் சமர்ப்பணம் செய்து அவர்களிடமிரு

ந்து தீர்த்தப் பிரசாதங்களைப் பெற்றுக்கொண்டார். தாம் வயது சென்றவராயிருப்பதாயும் தம் ஸம்ஸ்தானத்தில் யௌவராஜ்யத்திற்கு அதிகாரி இல்லை என்றும் கிலேசத்தை அடைந்திருக்கிற மகாராஜருக்கு பூர்ணனுக்கிரஹம் செய்து அவர் மனோவியாகுலம் கூடிய சீக்கிரத்தில் நிவர்த்தியாகுமென்றும் யௌவராஜ்ய பட்டாபிஷேகத்தை மகாராஜரே செய்வாரென்றும் தம்முடைய உறிதவசனங்களினால் மகாராஜருக்கு தைரியம் செய்து ரக்ஷாகாரமாக ரத்னமயமான கண்டாபரணத்தை தம்முடைய அமிருதமயமான ஹஸ்தங்களினால் மகாராஜருக்கு தாரணம் செய்வித்து அவரை அரண்மனைக்கு அனுப்பினார்கள். ஸ்ரீஸ்வாமிகளால் அனுக்கிரஹிக்கப்பட்ட மகாராஜர் அவர்கள் விஷயத்தில் தமக்கு குலதைவமான அனந்த பத்மநாப ஸ்வாமி பாவனை பூர்ணமாயிருக்கிறதென்றும் அப்படிப்பட்ட ஸ்ரீஸ்வாமிகள் பிரசாதம் தம்மிடத்தில் சம்பூர்ணமாயிருப்பதினால் எவ்விதமான குறைவும் தமக்கு வரமாட்டாதென்றும் உறுதியான தம் நம்பிக்கையை அன்று மத்தியானம் அவரிடம் போயிருந்த இந்த கிரந்தகாரரிடம் வெளியிட்டுச் சென்றார்.

மறுநாள் ஆஸ்தானத்திய மகாராணியவர்களை ஸ்ரீஸ்வாமிகள் தர்சனம் செய்து அனுக்கிரஹம் பெற்றுக்கொண்டு வருவதற்கு மடத்திற்கு அனுப்பியிருந்தார். அவர்கள் உபகாரங்களுடன் ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதானத்தில் வந்து தர்சனம் செய்து அமோகமான

அந்த மகானுபாவருடைய பிரசாதத்தை அடையும் பாக்கியத்தைப் பெற்றனர்.

மகாராஜா ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதிக்கு 34 தடவை வந்து ஏகாந்தத்தில் அவர்களிடமிருந்து ஹிதோபதேசங்களைப் பெற்றுக்கொண்டதுமல்லாமல் தாம் பக்கத்திலேயேயிருந்து தம் ஸம்ஸ்தானத்திய சித்திரமெழுதுவோரால் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சித்திரத்தை எழுதும்படி செய்தார். இந்த சித்திரமே ஸ்ரீஸ்வாமிகளின் ஞாபகார்த்தமாய் பங்களூர் மடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

ஸ்ரீஸ்வாமிகள் அனந்தசயனத்தில் வாசம் செய்துவந்த காலத்தில் அவ்விடத்திய சிஷ்ய மண்டலியில் அநேகர் ஸ்ரீஸ்வாமிகளவர்களை தம் தம் கிருஹங்களுக்கு விஜயம் செய்வித்து பாதபூஜை முதலிய ஸத்காரங்கள் செய்து அவர்களனுக்கிரஹத்தை அடையவேண்டுமென்று பிரயத்னம் செய்தார்கள். பரதேவதா பாவனைக்கு யோக்யரும், வெகு பரிசுத்தரும், பூஜ்யருமான ஸ்ரீஸ்வாமிகளுக்கு சிரமம் கொடுத்து, அபரிசுத்தமான ஸம்ஸாரிகள் வசிக்கும் கிருஹங்களுக்கு வரவழைக்க வேண்டுமென்ற ஜனங்களுடைய அபிப்பிராயம் அவ்விடத்திய மகாராஜரால் சம்மதிக்கப்படாததினால் மகாராஜரின் அபிப்பிராயப்படி எல்லோரும் மடத்திலேயே வந்து சுவாமிகளின் சேவையை நடத்திகிருதார்த்தரானார்கள்.

வெகு காலமிருந்து பரிசயமில்லாமலும் வெளி

யாகாமனும் தம் ராஜ்யத்திய ஒரு பாகத்தில் நிலைகொண்டிருந்த ஸ்ரீமதாசாரிய பகவத்பாதாவர்கள் ஜன்மஸ்தலத்தை பரிஷ்கரித்து சிதியகோடிகளை உத்தாரணம் செய்வதற்காகவே அவதாரம் செய்திருக்கிற ஸ்ரீஸ்வாமிகள் தம் காலத்தில் அந்த பெரிய காரியத்தை ஆரம்பித்து அதில் தம்மை சகாயம் செய்யும்படி அனுக்கிரஹம் செய்தது மேல் உண்டாகும் தம் அப்யுதயத்திற்கு அறிகுறியென்றும் அந்த காரியத்தை முடிப்பதில் தேவையான எல்லா அனுகூலங்களையும் செய்துகொடுப்பதில் சித்தமாயிருப்பதாயும் வஞ்சி மகாராஜர் ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் விக்ஞாபனம் செய்து "பத்மனுபன்" என்று அழைக்கப்பட்டு வந்த ஒரு உத்தமமான யானையையும் பத்தாயிரம் ரூபாயையும் திரும்பவும் ஸ்ரீஸ்வாமிகளுக்கு உபஹாரமாக சமர்ப்பணம் செய்து அவர்களுடைய ஆக்ஞையை பெற்றுக்கொண்டார்.

மகாராஜருக்கும் அவர் பரிவாரத்திற்கும் புரவாஸி ஜனங்களுக்கும்; தேவதாபிரசாத பலமந்திராக்ஷதைகள் கொடுத்தனுக்கிரஹம் செய்து ஜகார்த்தன க்ஷேத்திரமார்க்கமாய் காலடி க்ஷேத்திரத்தைக்குறித்து ஸ்ரீஸ்வாமிகள் பிரயாணம் செய்தார்கள்.





## 11 வது அத்தியாயம்.

### காலடி கும்பாபிஷேகம்.

காலடி பூமி பரிஷ்காரத்திற்காகவும் தேவஸ்தான நிர்மாணத்திற்காகவும் ஸ்ரீ ஸ்வாமிகளால் ஆக்ஞாபிக்கப் பட்டவராக இரண்டு வருஷகாலம் முன்பாக காலடியில் நியதமாய் வாசம் செய்து குறிப்பிட்ட காரியத்தை ஆரம்பம் செய்துவந்த திவான்பகதூர் வ. ராமச்சந்திரய்யர் மைசூர் சம்ஸ்தானத்தில் வெகு காலம்வரை கோசாதிகாரியாயிருந்து பென்ஷன் பெற்றவரும் ஸ்ரீ ஸ்வாமிகள் சிஷியகோடிகளில் ஒருவரும் சில்ப வித்யா விசாரதராயுமிருக்கிற இ. ஆர். சுப்பராயரை தமக்கு சகாயமாய் வரவழைத்துக்கொண்டு அவர் உதவியால் ஒவ்வொரு காரியத்தையும் நடத்திக்கொண்டு வந்தார். முதலில் ஒரு ஆலயம் மாத்திரம் அமைப்பித்து ஆசாரிய மூர்த்தியை பிரதிஷ்டை செய்கிறதென்று ஸ்ரீஸ்வாமிகள் சங்கல்பம் செய்திருந்தார்கள். பிறகு, மாதரு வாத்ஸல்யத்தையும், மாதரு பக்தி கௌரவங்களையும் சன்னியாசத்திற்குப் பிறகும் கூட வெளிப்படுத்தி

பிராணிகளுக்கு மாதாவைக்காட்டிலும் மற்றொரு தைவமில்லையென்று தன் அநுஷ்டானத்தினால் பிரபஞ்சத்திற்கு உபதேசித்த ஸ்ரீமதாசாரியாராலேயே பிரேரணம்செய்யப்பட்டவர்போல் ஜகதாசாரிய மாதுருவின் ஞாபகமாக காலடி க்ஷேத்திரத்தில் மற்றொரு ஆலயம் கல்பித்து ஜகன்மாதா ஸ்ரீசாரதாம்பா பிம்பத்தையும் பிரதிஷ்டை செய்வது ஆவசிகயமென்று நிச்சயித்தார்கள். அப்படியே இரண்டு தேவாலயங்களும் கட்டும்படிக்கு ராமச்சந்திரய்யருக்கு அறிவிக்கப்பட்டது. சில்ப ஞானிசாலியான சுப்பராயர் சகாயத்தை அநுசரித்து சிறியதாயும், உறுதியாயும், அழகாயும் உள்ளதாக இரண்டு தேவாலயங்கள் சுத்தமான சிலைகளால் கட்டப்பட்டன. இந்த தேவாலயங்கள் இரண்டும் பூர்ணாநதிக்கு வடபக்கத்தில் தக்ஷிணமுகமாயிருக்கின்றன. சாரதாலயம், ஆசாரிய மாதாவுக்கு ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட ஸ்தலமென்று ஜனவதந்தியால் பிரசித்தியடைந்து குறிக்கப்பட்டிருந்த பிரதேசத்திற்கு சமீபமாயும், ஆசாரியாலயம் இதற்கு மேற்கில் கொஞ்ச தூரத்திலும் இருக்கிறது. பூர்ணாநதி வெகு பள்ளத்தில் ஓடுகிறதினால் கரை மிகவும் உயர்ந்திருக்கிறது. தேவாலயங்களின் முன்பாகத்தில் விசாலமாகவும், உறுதியாகவும், லக்ஷணமாகவும் உள்ள முப்பத்திரண்டு படிகளுடன் கூடிய படித்துறை ஏராளமான திரவியம் செலவு செய்து கட்டப்பட்டிருக்கின்றது. தேவாலயங்களின் மதில்களுக்கு வெளியில் ஆலயங்களுக்குக் கிழக்

தில் ஸ்ரீஸ்வாமிகள் வாசத்திற்காக ஒரு மடம் நிர்மா ணம் செய்யப்பட்டிருக்கிறது. இவ்விதமாக மகா உத் ஸாகமும் காரியசாதுர்யமும் கூடிய இராமசந்திரய்யர் ஆலய நிர்மாண காரியத்தை ஸ்ரீஸ்வாமிகள் யாத்திரை செய்துகொண்டு காலடிக்கு விஜயம் செய்வதற்கு முந் தியே பூர்த்தி செய்த பிறகு ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞைப் படி கும்பாபிஷேக மகோத்ஸவத்திற்காக சாமான்களை சித்தப்படுத்துவதற்கும், அதற்கு முக்கியமாய் வேண் டிய காரியங்களை நடத்துவதற்கும் கொஞ்சகாலம் முன் னதாகவே இக்கிரந்தகர்த்தா அனுப்பப்பட்டார்.

காலடி வெகு சிறிய கிராமம். இந்த கிராமத்தில் ஜனவசதியே இல்லாமலிருந்தது. அனந்தசயனம் சம் ஸ்தானத்திய ஒரு மூலையிலிருப்பதால் இதற்கு சமீபத் திலும்கூட பெரிய கிராமங்கள் இல்லை. இந்த ஸ்தல மும் இங்குள்ள ஜனங்களும், இவர்கள் பாஷையும் இதர தேசத்தாருக்கு பரிசயமில்லாமலிருப்பது சகஜம் தானே? இந்தமாதிரி சந்தர்ப்பத்தில் மிகவும் அபூர்வ மாகவும், இந்தியாவில் எல்லா தேசங்களிலுமிருக்கக் கூடிய ஜனங்களுடைய க்ஷேமத்திற்காகவும் மகா தபஸ்விகளான ஸ்ரீஸ்வாமிகளால் நடத்தப்படுகிற கும் பாபிஷேகத்தை தர்சனம் செய்வதற்காக வரப்பட்ட ஜனங்கள் வசதிக்கும், அந்த ஜனங்களின் ஆதித்தியத் திற்கும் தகுந்தவிதம் ஏற்பாடு செய்வது, எவ்வளவு சுலபமாயிருக்குமென்பதை ஒவ்வொருவரும் ஆலோ சித்துப் பார்க்கலாம். ஸ்ரீஸ்வாமிகளின் மகிமையினால்

கும்பாபிஷேக காரிய சம்பந்தமான உத்ஸவங்களை செய்வதற்காக வெகுதூரமுள்ள திருநெல்வேலி ஜில்லா கல்லிடைக்குறிச்சி என்ற கிராமத்திலிருந்து முன்னூறு கூலி ஜனங்கள் காலடியில் நின்றார்கள். இந்த ஜனங்களை ஆதரித்து இவர்களைக்கொண்டு சரியாக வேலை நடப்பிப்பதற்கு அந்த கிராமத்திலிருந்தே தகுந்த சில சிஷ்யர்கள் வந்து உதவி செய்தார்கள். தேவையான மட்டும் திரவியம் திருநெல்வேலியில் முன்னதாகவே சேகரிக்கப்பட்டு சித்தமாயிருந்தது. இந்த சகாயங்களெல்லாம் நேர்ந்ததால் ஸ்ரீமடத்திற்கு சுவாதீனமான பூமியைப் பிரித்து எல்லா பக்கங்களிலும் நடமாடுவதற்கு யோக்யமான பாதைகள் முன்னதாக போடப்பட்டது. பாதைகளின் இரண்டு பக்கங்களிலும், வரிசை வரிசையாக, வரக்கூடிய ஆகந்துக ஜனங்களுக்கு அனுகூலமாக ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாமலும், மூங்கில்களாலும் மூங்கில் பாய்களாலும் அநேகம் வீடுகள் கட்டப்பட்டன. தவிரவும் வரிகளுடைய நம்பராலும் வீடுகளின் நம்பராலும் குறிக்கப்பட்டு அந்த வீடுகளில் வாசத்திற்கு வரும் ஜனங்களுக்கு சௌகரியம் செய்யப்பட்டது. உத்ஸவ தர்சனத்திற்காக வரக்கூடிய மடாதிபதிகளுக்கும் ஸ்தல சௌகரியத்தை அதிகமாக அபேக்ஷிக்கிற தனவான்களுக்கும், வேறாக அவரவர் அனுகூலத்திற்குத் தக்கபடி சில காலம் ஸ்திரமாயிருக்கக்கூடிய வீடுகளும் கட்டி-முடிந்தன. கொச்சி சம்ஸ்தானத்தைச் சேர்ந்த திருசூரில்

வியாபாரம் செய்துகொண்டிருக்கிற ஸ்ரீமடத்திய சிஷி யர் வெங்குவய்யரென்பவரை ஏற்படுத்தி அவர் மூல மாக போஜன பதார்த்தங்களெல்லாம் அளவற்றதாய் தருவிக்கப்பட்டது. உத்சவத்திற்காக வரப்பட்ட ஜனங்களை ரயில்வேஸ்டேஷனிலிருந்து அழைத்துக் கொண்டு அவர்களுக்கு சைத்ய உபசாரங்கள் செய்து ஆதரித்து வண்டிகளில் ஏற்றி காலடிக்கு அனுப்புகிறதற்கும் காலடிக்கு வந்தவுடன் அவர்க ளுக்கு ஸ்தலம் கொடுப்பித்து அந்தந்த வகையை சேர்ந்தவர்களுக்கு வேண்டிய போஜன பதார்த்தங் களையும் அபேக்ஷிக்கிறவர்களுக்கு சமையலுக்கு வேண் டிய பாத்திரங்களையும் அந்தந்த வீடுகளில் சித்தம் செய்து கொடுப்பதற்கும் பிராம்மண ஸுவாஸினிக ளுக்கு சந்தர்ப்பணையில் போஜனம் செய்வதற்கும் திறமைசாலிகளும், அனுபவமுள்ளவர்களும், சாந்த ஸ்வபாவமுமான அநேகம் ஜனங்கள் நியமிக்கப்பட் டார்கள். சௌம்மிய வருஷத்திய மாக சுக்ல துவா தசி 1910-ல் கும்பாபிஷேகம் நடத்துவதென்று ஸ்ரீஸ் வாமிகள் ஆக்ஞையின்பேரில் நிஷ்கர்ஷை செய்து இந் தியாவிலுள்ள ஸ்ரீமதாசார்ய சிஷ்யர்களான மடாதி பதிகளுக்கும், ஆஸ்திகரான இந்துமகாராஜர்களுக்கும் மற்ற சிஷியவர்க்கங்களுக்கும் அழைப்புக்கடிதங்கள் அ னுப்பப்பட்டன. அனந்தசயனம் சம்ஸ்தானத்திய சா னிடரி கம்மிஷனர், டிஸ்திரிக்ட்டு மெடிகல் ஆபிசர், போலீஸ் அதிகாரிகள், கோட்டையம் டிவிஷன் திவான்

பேஷ்கார், அஞ்சல் இலாகா அதிகாரிகள் இவர்கள் தங்கள் தங்கள் சிப்பந்திகளுடன் கூட காலடிக்கு வந்து ஜனங்களுடைய ஆரோக்கியத்திற்கும் பந்தோ பஸ்துக்கும் குறைவு வராமல் பார்த்துக்கொள்ளுவ தற்காக தகுந்த ஏற்பாட்டின் பேரில் தயாரானார்கள். ஸ்ரீஸ்வாமிகளுடைய சிஷியவர்க்கத்தை சேர்ந்த மாண வர்களும் வக்கீல்களும் வக்கீல் குமாஸ்தாக்களும் மகோத்ஸவகாலத்தில் காத்திருந்து சகலகாரியங்களை யும் நிர்வாகம் செய்வதற்காக தங்களுக்குள்ளேயே தாரதம்மியத்தையும் யஜமானன் வேலைக்காரன் என்ற பாவத்தையும் கல்பித்துக்கொண் நூற்றுக்கணக்கான ஜனங்கள் திருநெல்வேலியிலிருந்து காலடிக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய ஆக்ஞையை எதிர்பார்த் துக்கொண்டிருந்தார்கள்.

இந்த விதமாக கும்பாபிஷேக மகோத்ஸவத்திற் காக சகல சாமக்ரிகளும் சித்தமானமேல் ஸ்ரீஸ்வாமி கள் சஞ்சார கிரமமாய் காலடிக்கு 5 மைல் தூரத்தில் பூர்ணாநதிக்கு தென் பாகத்திலுள்ள பெரும்பாவூர் என்ற கிராமத்திற்கு விஜயம் செய்து அங்கு வாசம் செய்திருந்தார்கள். அந்த கிராமத்திற்கு ஸ்ரீஸ்வாமி கள் வந்த தினம் இராத்திரி தம் நித்ய பூஜை முதலிய அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு இளைப்பாறும் தருணத்தில் ஒரு விதந்து ஸ்திரீ வெள்ளை வஸ்திரம் தரித்துக்கொண்டு அவர்கள் ஸ்வப்னத்தில் தென்பட் டாள். அந்த முதிர்ந்த பிராம்மணஸ்திரீயைக்கண்டு

தம் சமீபத்திலுள்ள பரிஜனங்கள் மூலமாய் அவள் குலகோத்ர நாமங்களை விசாரிக்கும்போது அந்த ஸ்திரீ மந்தஹாஸத்துடன் தான் விருக்ஷமூலத்திலேயே இருப்பதாகவும் ஸ்ரீ ஸ்வாமிகளை அழைப்பதற்காக வந்ததாகவும் பதிலளித்துவிட்டு மறைந்துவிட்டதாக அவர்களுக்குத் தெரிந்தது. இந்த ஸ்வப்னத்தின் பொருளை எவ்வளவு விதமாக யோசித்தாலும் தெரிந்துகொள்வதற்கு அவகாசமில்லை. இந்த ஸ்வப்னம் சுபஸூசகமோ அல்லது அனிஷ்டஸூசகமோ என்றுயோசனைசெய்து கொண்டிருந்தார்கள். மறுநாள் மத்யானம் 4 மணி சமயத்தில் ஸ்ரீஸ்வாமி தர்சனத்திற்காகவும் எல்லாசாமக்ரிகளும் சித்தமாயிருக்கிற சங்கதியை அவர்களிடத்தில் விக்ஞாபனம் செய்வதற்காகவும் காலடியிலிருந்து ராமசந்திரய்யரும் இக்கிரந்தகர்த்தாவும் பெரும்பாவூர் சென்று அவர்களை தர்சனம் செய்தவுடன் வேறொரு சங்கதியும் விசாரிக்காமலே காலடியின் சன்னிவேசத்தையும் சாரதாலயமும் ஆசாரியாலயமும் கட்டியிருக்கும் ஸ்தலத்தையும் அறிந்துகொள்ளும்படியாக விபரமாக சொல்லவேண்டுமென்று கேட்டார்கள்.

அப்பொழுது ஒவ்வொரு விஷயத்தையும் விஸ்தாரமாக சொல்லிக்கொண்டு வந்ததில் சாரதாலயம் கட்டியிருக்கிற பிரதேசத்தின் விஷயமாக அந்த ஆலயத்திய சமீபத்தில் ஒரு அசோக விருக்ஷம் இருப்பதாயும் அதன் அடியில் ஆசார்யமாதாவின் சம்ஸ்கார பூமியென்று அடையாளம் வைத்துக்கொண்டு அந்த

ஸ்தலத்திற்கு ஜனங்கள் வந்து பிரதக்ஷிண நமஸ்காரங்கள் செய்து இடம் ஏற்படுகிறார்களென்றும் இந்த கிரந்தகர்த்தா சொல்லிக்கொண்டுவரும்போதே ஸ்ரீஸ்வாமிகளுடைய சரீரமெல்லாம் படபடவென்று நடுங்கியது. கண்களிலிருந்து தாரை தாரையாய் நீர் பெருகவாரம்பமாயிற்று. தழைத்த குரலுடன் ஆசார்யமாதாவை ஸ்மரணம் செய்யத்தொடங்கினார்கள். இப்படிப்பட்ட மனோபாவத்திற்கு உண்டான காரணம் தெரியாமல் பக்கத்திலுள்ளவர்களெல்லோரும் திகைத்து நிற்கையில் கொஞ்சகாலம் ஸ்ரீஸ்வாமிகள் ஆனந்தபரவசராய் தாம் கண்ட ஸ்வப்ன சமாசாரத்தையும் அதுமுதல் மனதில் உண்டாயிருக்கும் சிந்தையையும் விவரித்துச்சொல்லி தாம் சங்கல்பித்திருக்கிற காரியம் ஆசாரியர் பிரேரணையினாலேயே உண்டாயிருக்கிறதென்றும் இந்த விஷயத்தில் ஆசார்யமாதாவிடமிருந்து சம்பூர்ணமான சம்மதி கிடைத்திருக்கிறதென்றும் அந்த பதிவிரதாசிரோமணியால் தாம் காலடி க்ஷேத்திரத்தில் பிரவேசிப்பதற்கு அழைக்கப்பட்டிருப்பதாயும் ஸ்வப்ன சங்கதியை எல்லோருக்கும் தெரியும்படி நிரூபித்து பிறகு உத்ஸவத்தை நிர்வாஹம் செய்வதற்காக நடத்தப்பட்டிருக்கிற ஏற்பாடுகளை அறிந்து சந்தோஷித்து மறுநாள் காலையில் வந்து சேருவதாக ஆக்ஞை செய்து இராமசந்திரய்யரையும் இந்த கிரந்த கர்த்தாவையும் காலடிக்கு அனுப்பினார்கள்.



ஸ்ரீ மஹாஸ்வாமிகளுக்கு ஆர்யாம்பாள் தர்சனமானது.

மாக சுக்ல துவிதீயை காலையில் 8-மணிக்கு ஸ்ரீஸ்வாமிகள் காலடிக்கு விஜயம் செய்தார்கள். பூர்ணாநதியைத்தாண்டி கரைக்கு வந்தவுடன், ஆசாரிய மாதுருதகனஸம்ஸ்காரம் செய்ததான பிரதேசத்திற்கு பிரதக்ஷிணமாக வந்து சாஷ்டாங்கநமஸ்காரம் செய்து ஸ்வல்பகாலம் வரையில் அங்கேயே நின்று ஆசார்ய பகவத்பாதரவர்களை ஸ்மரணம் செய்துகொண்டு அவர் ஸ்மரணத்தினால் உண்டான ஹர்ஷ சோகங்களை அநுபவித்து தம் வாஸஸ்தானத்திற்கு வந்தார்கள். ஸ்நான ஆஹ்நிகம் முதலிய நித்ய அனுஷ்டானங்களெல்லாம் முடிந்த பிறகு சாயங்காலம் நாலுமணி சமயத்தில் பாதசாரிகளாக புறப்பட்டு தேவதா பிரதிஷ்டைக்காக சித்தமாயிருக்கிற தேவஸ்தானங்களையும் உத்ஸவ தர்சனத்திற்காக வரக்கூடிய தம் சிஷ்யவர்க்கங்களுடைய வாசத்திற்காக அமைத்திருக்கிற கிருஹபங்க்திகளையும், பிராம்மணர், சுமங்கிலிகள் இவர்களுடைய சமாராதனைக்கும் அதிதிகள் சத்காரங்களுக்கும், சேகரிக்கப்பட்டிருக்கிற பதார்த்தராசிகளையும், பகல் இராத்திரி என்ற பேதம் தெரியாமல் காலடி பூமியெல்லாம் பிரகாசமாய் விளங்கும்படி செய்திருக்கிற தீபங்களின் விசேஷத்தையும் சாவதானமாய் தாமே கண்டு பரம சந்தோஷங்கொண்டு ஸ்வஸ்தானத்திற்கு திரும்பி வந்து ஸ்ரீமதாசாரிய மகிமையினாலேயே தம் சங்கல்பத்தைக் காட்டிலும் நூறுபங்கு அதிகமாகவும் திருப்திகாமாகவும் செய்யப்பட்டிருக்கிறதென்

ளும், மேல் காரியங்களும் தகுந்தபடி ஸர்வோத்தம மான மாதிரியில் நடந்தேறுமென்ற நம்பிக்கை தம் மனதில் வந்திருக்கிறதென்றும் தம் அபிப்பிராயத்தை பிரகடனம் செய்து தம் பரிவாரங்களை உத்ஸாகப்படுத் தினார்கள்.

தேவதா பிரதிஷ்டையை சம்பாதித்த யாகத்தை நடத்துவதற்காக இரண்டு தேவஸ்தானங்களுக்கும் மத்ய தேசத்தில் விஸ்தாரமான யாகசாலை சாஸ்திர விதிப்படி கட்டப்பட்டது. ஆசாரியர் ருத்விக் பிராம்ம ணர்களை சிருங்கேரியிலிருந்தும் மைசூர் பிராந்தியத்தி லிருந்தும் வரவழைத்து, விதிமுறை தவறாமல், கொஞ் சமும் ஏற்றக்குறைவு வருவதற்கு இடமில்லாமல் கர்ம ஜாலத்தை நடத்துவதற்காக ஆஸ்தான பண்டிதரான குணிகல் இராமசாஸ்திரிகள் முதலான வித்வான்களை நியமனம் செய்து அவருக்கு சகாயமாயிருந்து யாக சாலையின் சகல காரியங்களையும் நிர்வஹிப்பதற்காக, திருநெல்வேலி ஜில்லாவில் பிரசித்தராயும் ஸ்ரீஸ்வாமி கள் அனுக்கிரஹ பாத்ரரும், அந்தப் பிராந்தத்தில் சம்ஸ்தானவகை தேசாதிகாரியுமாயிருக்கிற, "தர்ம சீல," கிருஷ்ணஸ்வாமிய்யர் நியமிக்கப்பட்டார். ஸ்ரீஸ் வாமிகள் ஆக்ஞைப்படி, அளவில் பெரியதாயும் வெகு அழகாயும் உள்ளபடி, சிருங்கேரி சாரதாம்பிகை ஸ்ரீ மடத்தில் வெகு புராதனமாய் பூஜிக்கப்பட்டு வந்த ஆசாரிய மூர்த்தி, இவைகளை அனுசரித்து, பஞ்ச

உலோகத்தினால் காரக்குடி என்னும் கிராமத்தில் சில்பி யால் செய்விக்கப்பட்டிருந்த சாரதா பிம்பமும் ஆசார்ய மூர்த்தியும் காலத்திற்கு சரியாக வந்து சேர்ந்தன. சாரதாம்பிகை ஆலயத்திற்கு வெளிபாகத்தில் பிரதிஷ்டை செய்வதற்கு உத்தேசிக்கப்பட்ட ஸப்த மாதுருக்களின் சிலாமய விக்ரஹங்கள் தயாராகி வந்தன. வக்கீல்கிருஷ்ணஸ்வாமியய்யர்மூலமாய் திருநெல்வேலியில் தயார் செய்யப்பட்ட ஸ்வர்ணமயமான பிராசாத கலசங்களும் வந்து சேர்ந்தன. பிரதிஷ்டைக்கு தேவையான சாமக்கிரீகளெல்லாம் சித்தமான பிறகு மாக சுக்லபஞ்சமி சோமவாரம் காலையில் ஸ்ரீஸ்வாமிகள் தாமே யாகசாலைக்கு விஜயம் செய்து யாக சங்கல்பம் செய்வித்து ஆசாரியர் முதலிய ருத்விக்குகள் வர்ணம் செய்த பிறகு, இந்த தேவயாகத்தில் வரிக்கப்பட்ட அந்தப் பிராம்மணர்களுக்கும், கூடவிருந்து சரியாய் நடப்பதைக் கவனித்துப் பார்த்துவருகிற பண்டிதர்களுக்கும், நியமத்துடனும், பக்தி சிரத்தைகளுடனும் விதிப்படி கர்மானுஷ்டானம் செய்து ஆசார்ய அனுக்கிரஹத்திற்கு பாத்திராக வேண்டுமென்ற புத்திவாதங்களுடன் ஆசீர்வாதம் செய்து திரும்பினார்கள். அது முதல் கர்மங்கள் ஆரம்பிக்கப்பட்டு ஜலாதிவாஸம், தான்யாதிவாஸம், சய்யாதிவாஸம், ஸ்தலாதிவாஸம் இவைகளும் அதனை சம்பாதித்த ஹோமங்களும் பிரதிஷ்டைக்கு அங்கங்களான மந்திரஜப புரச்சரணங்களும், யதோக்தமாக எழுநாள் நடந்து சாலி (1832—1910)

சௌம்பியவருஷ மாக சுக்கில துவாதசி ஸோமவார தினம் அபிஜித் முகூர்த்தத்தில் மூர்த்தி பிரதிஷ்டையும் செய்யப்பட்டது. பிரதிஷ்டையான பிறகு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆலயத்திற்கு விஜயம் செய்து மூர்த்திகளில் சதுஷ்ஷஷ்டி கலைகளை ஆவாஹனம் செய்து பிராண பிரதிஷ்டை செய்வித்து யதோக்தமான பூஜை நிறைவேற்றியபின் அங்கு வந்திருந்த சிஷியவர்க்கங்களுக்கு தீர்த்தப்பிரசாதம் கொடுத்து அனுக்கிரஹித்தார்கள்.

இந்த மஹோத்ஸவதர்சனத்திற்காக இந்தியாவின் எல்லா பக்கங்களிலிருந்தும் ஆசாரிய பக்தரான ஜனங்கள் வந்திருந்தார்கள். பிரதிஷ்டை நடந்த தினத்தில் காலடியில் 50 ஆயிரம் ஜனங்கள் சேர்ந்திருந்தார் என்றால் அதிலொன்றும் ஆச்சரியமல்ல. அந்த தினத்தில் காலை 8 மணிக்கு ஆரம்பித்து மத்யானம் 2 மணி வரையில் இடை விடாமல் அநேக பங்க்திகளாக பிராம்மண போஜனம் செய்விக்கப்பட்டது. மத்தியானம் 4 மணிக்கு ஸ்ரீஸ்வாமிகள் விசாலமான மடத்தின் முன் பாகத்தில் ஆசனத்திலமர்ந்து உத்ஸவ தர்சனத்திற்காக வந்திருந்த சிஷியமண்டலிக்கு தர்ம ஸ்வரூபம், அனுஷ்டான முறை, அதன் பிரயோஜனம் ஆசார்ய பகவத் பாதரவர்களுடைய மகிமை அந்த மகானுபாவரால் பிரபஞ்சத்திற்கு உண்டான உபகாரம் இவை முதலிய விஷயங்களை விஸ்தாரமாக உபதேசித்து ஜனங்களின் க்ஷேமத்திற்காகவே ஆசாரியரால் பிரே



காலடி ஸ்ரீசங்கராசாரிய விக்ரஹம்.



காலடி கும்பாபிஷேகம்.

ரிக்கப்பட்டு காலடி க்ஷேத்திரத்தில் ஆசாரிய மூர்த்தி பிரதிஷ்டையை செய்திருப்பதினால் அடிக்கடி அவகாச முள்ள சமயங்களில் வந்து ஆசாரிய தர்சனம் சேவை முதலியவைகளால் சித்த சுத்தியையடைந்து கிருதார்த்தராவதற்கு யத்னம் செய்யவேண்டியது சிஷ்யர்களுடைய கடமையாகுமென்று அறிவித்தார்கள். இந்த மகா காரியத்தில் முதலிலிருந்தே தம் ஆக்ஞைக்கு அதீனராகி மனதினாலும் சரீரத்தினாலும் விசேஷமாக பிரயாசப்பட்டு ஜகத்குரு சேவைசெய்து குரு பிரசாதத்திற்கும் ஆசாரிய சிஷிய கோடிகளின் பிரீதி கௌரவங்களுக்கும் சரியான பாத்ரமென்று கியாதி பெற்ற இராமசந்திரய்யருடைய குணாதிசயங்களைப்புகழ்ந்து மகாசபையில் குருபக்தகேசரி என்ற சரியான அர்த்தம் பொருந்திய நாமதேயத்தால் அவரை அனுக்கிரஹித்து இரத்னங்களிழைத்த ருத்ராக்ஷகண்டி முதலியவைகளால் சம்மானித்தார்கள். இவருக்கு சகாயமாயிருந்து தன் சில்பவித்யா பாண்டித்யத்தை குருசேவையில் உபயோகித்த சுப்பராயரை சிலாகித்து அவரையும் அனுக்கிரஹித்தார்கள். இச்சமயத்தில் ஸ்ரீமகா ஸந்நிதானத்தின் பரம அனுக்கிரஹத்திற்கு பாத்திரரான ஸ்ரீரங்கம் ஸ்ரீவாணீ விலாஸ் முத்ராலயத்தின் அத்யக்ஷரான டி. கே. பாலசுப்பிரமணியய்யர் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஸவாரி சிங்கம்பட்டியில் விஜயம் செய்திருந்த சமயத்தில் தன்னுடைய கிருதார்த்ததைக்காகவும் லோகோபகாரார்த்தமாகவும் ஸ்ரீமதாசார்ய சங்கரபகவத்

பாதாவர்களுடைய பிரஸ்தானத்ரயபாஷ்யம் முதலான எல்லா கிருதிகளையும் ஒருங்கு சேர்த்து முத்ரணம் செய்து அந்த மஹானுடைய ஜன்மபூமியான காலடி க்ஷேத்திரத்தில் நடக்கப்போகிற கும்பாபிஷேக சமயத்தில் ஸ்ரீமகாஸந்நிதானத்தில் ஸமர்ப்பணம் செய்ய வேண்டுமென்று தன்னுடைய காரிக்கையைத் தெரிவித்துக்கொண்டதின் பேரில் அவருடைய ஸங்கல்பத்தை விசேஷமாக அனுமோதனம் செய்து அந்தப்படி நடத்தும்படியாக ஸ்ரீமஹாஸ்வாமிகள் கொடுத்த ஆக்ஞையை சிரஸா வஹித்து அதை அனுஸரித்து டி. பாலசுப்ரமண்யய்யரால் இந்தியாவிலுள்ள பற்பலவிடங்களிலிருந்தும் அநேக மாத்ருகைகளை வரவழைத்து மிகவும் பிரஸித்தராயுள்ள பல பண்டிதர்களின் சகாயத்தினால் ஏராளமான பணச்செலவு செய்து வெகு சுத்தமாயும் நேர்த்தியாயும் பார்ப்பவர் கண்களையும் மனதையும் கவரக்கூடிய அழகு பொருந்தியும் ஸ்பஷ்டமான அக்ஷரங்களால் அச்சிடப்பட்டு ஒரே மாதிரியாக பைண்டு செய்யப்பட்டதாயும் உள்ள ஸ்ரீ சாங்கரக்ரந்தாவளியென்று பெயரிட்டு 20 ஸம்புடங்களாக வெளியாயிருக்கும் புஸ்தகங்களில் அச்சமயம் தயாராயிருந்த 10 ஸம்புடங்களை மிகுந்த பக்தி சிரத்தையுடன் பாலஸுப்ரமண்யய்யாவர்களால் ஸமர்ப்பிக்கப்பட்டவைகளை விசேஷமான அபிநந்தனத்துடன் ஏற்றுக்கொண்டு அவருடைய பிரயத்னத்தை மிகவாக சிலாகித்து பாக்கியாயுள்ள ஸம்புடங்களும் அதிசீக்கிரத்தில் முடிந்



குருபக்தசிகாமணி
டி. கே. பாலசுப்ரமண்யய்யர்.

ஆவிடுமென்றும், முடிந்து பிறகு இந்த கிரந்தாவளி பாதகண்ட முழுமையும் ஆஸ்திக ஜனங்களிடமெல்லாம் பரவுமென்றும் பலவாருக அனுக்கிரஹித்து தமக்கு அதிக பிரியமான கார்யததை அவர் செய்ததாக சொல்லி அவரை உத்ஸாகப்படுத்தினூர்கள்.

அந்த தினம் சபையில் சிவகங்காமடாதிபதிகளாயிருந்த ஸ்ரீசுப்பிரம்மண்யாபிநவஸச்சிதானந்தபாரதீஸ்வாமிகளும் மைசூர் திருவாங்கூர் சம்ஸ்தானங்களில் திவான் பதவியில் இருந்து விலகினவரும் ஸ்ரீஸ்வாமிகளுடைய பக்தாக்ரகண்யரென்று பிரசித்தருமான வி. பி. மாதவராயர், திருவாங்கூர் சம்ஸ்தானத்திய திவாஞயிருந்த பி. ராஜகோபாலாசாரியார், மைசூர் சம்ஸ்தானத்திய ராஜமந்திராலோசன சபையில் அதிகாரியாயிருந்த ஹெச். வி. நஞ்சுண்டய்யர் மகாமகோபாத்யாய ஹரிஹர சாஸ்திரிகள் முதலான அநேகமாயிரம் லௌகிக வைதிக ஜனங்கள் சேர்ந்திருந்தார்கள்.

இந்தவிதமாக உத்தேசிக்கப்பட்ட மகாகாரியம் நிர்விக்னமாகவும், நிகரற்றதாகவும் ஸ்ரீமதாசாரியனுக்கிரஹத்தினூல் நிறைவேறின பிறகு அங்கு வந்திருந்த வித்வான்களுக்கும், ஏழைகளுக்கும் அவரவர் யோக்யதைக்குத் தக்கபடி சம்மானங்கள் கொடுப்பித்து வந்தவர்களுக்கெல்லாம் தீர்த்தப்பிரசாதம் கொடுத்து அவரவர் ஸ்தலங்களுக்கு பிரயாணப்படுத்துவதற்கு உத்தரவு செய்தார்கள். பிரதிஷ்டை செய்திருக்கிற மூர்த்திகளில் விசேஷமான தேவதா சான்னித்யம் உண்டா

வதற்கும் ஆசாரிய பக்தி கிரமத்தை தம் அனுஷ்டான த்தினால் ஜனங்களுக்கு தெரியப்படுத்துவதற்கும் கும்பாபிஷேக காலத்தில் காலடிக்கு வருவதற்கு அனுகூலமில்லாமல் நின்ற சிஷ்யர்கள் அடுத்தகாலத்திலாவது வந்து தர்சனம் செய்து கிருதார்த்தராவதற்கு சௌகரியம் ஏற்படுத்துவதற்கும் ஸ்ரீஸ்வாமிகள் மூன்றுமாதகாலம் காலடி க்ஷேத்திரத்தில் வாசம் செய்து பிரதினமும், ஆசாரியஸன்னிதியிலும், சாரதா ஸன்னிதியிலும் சில மணிநேரம் மஹாமந்திரங்களை ஜபித்து, அந்த மூர்த்திகளை தாமே ஆராதித்துக்கொண்டும், ஆசாரிய தர்சனத்திற்காக வருகிற ஜனங்களுக்கு நல்ல விஷயங்களை உபதேசித்துக்கொண்டும், ஆனந்தத்துடன் காலம் கழித்தனர்.

அப்பொழுது கொச்சி சம்ஸ்தானத்திய மகாராஜர் காலடிக்கு வந்து ஆசாரிய தர்சனம் செய்து ஸ்ரீஸ்வாமிகளுக்கு ஸத்காரம் செய்து அவர்களிடமிருந்து அனுக்கிரஹமடைந்தார். இந்த ராஜர் தர்க்க வேதாந்தங்களில் பண்டிதராயிருந்ததினால் ஸ்ரீஸ்வாமிகள் ஸன்னிதியில் ஆஸ்தானத்திய பண்டிதர்களுடன் சாஸ்திரார்த்த விசாரம் செய்து ஸ்ரீஸ்வாமிகளிடமிருந்து அது சம்பந்தமான விசேஷார்த்தங்களைக் கிரஹித்து ஆனந்தமடைந்து அவர்களுடைய ஆக்ஞையைப் பெற்றுக்கொண்டார். ஸ்ரீஸ்வாமிகளுடைய அந்தரங்க பக்தரும், அவர்களுக்கு பிராணசமருமான மைசூர் சம்ஸ்தானத்திய மகாராஜா அவர்கள் காலடி க்ஷேத்திரத்தி

ளுள்ள ஆசாரிய பகவத்பாதர்களுடைய தர்சனத்திற்காகவும், அந்த மகானுபாவரின் தர்சனத்தை தமக்கு அந்த க்ஷேத்திரத்தில் செய்வித்து தம்மை அனுக்கிரஹிப்பதற்காக அங்கேயே வாசம் செய்துவந்த ஸ்ரீஸ்வாமிகள் தர்சனத்திற்காகவும், பரிமிதமான பரிவாரங்களுடன் காலடி க்ஷேத்திரத்திற்கு வந்து இரண்டுநாள் ஸ்ரீஸ்வாமிகள் அதிதியாயிருந்து சாரதாம்பாள் ஸன்னதிக்கும் ஆசாரிய சன்னதிக்கும் விலையுயர்ந்த வஸ்திர ஆபரணங்களை காணிக்கையாக சமர்ப்பணம் செய்து ஸ்ரீமத் ஆசாரிய சன்னிதியில் ஸ்ரீஸ்வாமிகளால் அனுக்கிரஹிக்கப்பட்ட "தர்ம மூல" என்னும் ஸார்த்தகமான நாமதேயத்தை பக்தி பாவனையுடன் ஸ்வீகரித்து அவர்களை ஆனந்திப்பித்து தானும் ஆனந்தத்தில் மூழ்கினவராய் பிரயாணம் செய்தார். ஸ்ரீஸ்வாமிகள் சங்கல்பப்படி அவர்கள் காலடி க்ஷேத்திரத்தில் ஏகாந்தமாய் இருந்த காலத்தில் அவ்விடத்தில் வந்து மந்திரோபதேசங்களையும், ஸ்தோபதேசங்களையும், ஆசாரியரியற்றிய பாஷ்யம் முதலிய கிரந்தங்களின் உபதேசங்களையும் பெற்று கிருதார்த்தரானவர்கள் அளவற்றவர். இந்தவிதமாய் ஸ்ரீஸ்வாமிகள் காரியங்களை முடித்து அங்கு இனிமேல் ஸ்திரமாய் வாசம் செய்யக்கூடிய ஜனங்களை ரக்ஷிப்பதற்காக ஒரு அசுவத்த விருக்ஷத்தில் ஆஞ்சநேயரையும் மற்றோர் அசோக விருக்ஷத்தில் கார்த்தவீர்யார்ஜுனனையும், இருந்துவரும்படி பிரார்த்தனை செய்து அந்த தேவதைகள் என்ற

பாவனையுடன் அந்த விருக்ஷங்களை தாம் பூஜை செய்து,
இனிமேல், சனிவாரத்திலும் குருவாரத்திலும் மேற்
படி தேவதைகள் பாவனையுடன் பூஜாவைபவத்யாதி
கள் நடத்திக்கொண்டு வரும்படி அவ்விடத்திய விசா
ரணையைப் பொறுத்துக்கொண்ட இராமச்சந்திரய்ய
ருக்கு தெரிவித்து அந்த க்ஷேத்திரத்திலிருந்து தமது
ஆசிரமமான சிருங்கேரியைக் குறித்துப் பிரயாணம்
செய்தார்கள்.

வேறொரு சிந்தையின்றி குருபக்தியையும் குரு
சேவையையும் அநேக விதமாக செய்து, மற்றவருக்குக்
கிடைக்கக்கூடாத குருப்பிரசாதத்தைப் பெற்று "குரு
பக்தகேசரி" என்று குருக்களால் அனுக்கிரஹிக்கப்
பட்டு உலகத்தில் பிரசித்தியை அடைந்திருக்கிற இரா
மச்சந்திரய்யர் விஷயமாய் இந்த தருணத்தில் கொஞ்
சம் பிரஸ்தாபிப்பது இதர ஜனங்களுக்கு பிரயோஜ
னத்தை விளைவிக்கக்கூடியதே யாகையால், பிரகிருத
மல்லாததும் சம்பந்தமில்லாததுமாகமாட்டாது. இந்த
ராமச்சந்திரய்யர் தஞ்சாவூர் ஜில்லா, நன்னிலம் தாலு
கா பனங்குடி என்ற கிராமத்தில் சாதாரணமான கிரு
ஹஸ்தராயிருந்த அய்யாசாமியய்யருடைய குமாரர்.
அய்யாசாமியய்யர் மிகவும் ராமபக்தராயும், வெகுவாக
ஆஸ்திக்யபுத்தியுள்ளவராயுமிருந்தார். அவருக்கு கு
மாரன் ஒருவனே. பெண் சந்ததிகள் அதிகம். அவர்
தன் குடும்ப போஷணத்தை அதிக கஷ்டப்பட்டு நட
த்திக்கொண்டு வரவேண்டியவரானாலும் தம் புத்திர



குருபக்தகேஸரி ஏ. ராமசந்திரய்யர்.

னுக்கு ஜாதகரீதியாக வேதசாஸ்திரங்களில் சிரத்தை
யுண்டாகமட்டாதென்றும் இதர பாஷாஞானம் சம்பா
தித்துவைத்து அதன் சகாயத்தினால் அபிவிருத்திக்கு
வந்து பிரசித்தியடைவானென்றும் தெரிந்து, இங்கி
லீஷ் பாஷாபரிசயத்தை வெகு சிரமப்பட்டு செய்து
வைத்தார். பூர்வவாஸனையின் வைபவத்தால் அதிக
ஆவலுண்டாகி இவர் கஷ்டப்பட்டு அந்த வித்யையை
அப்பியாசம் செய்து தேறினார். முதலில் மலபாரில்
எழுபது ரூபாய் சம்பளத்தில் இங்கிலீஷ் ஸ்கூல் உபா
த்யாயராக நியமிக்கப்பட்டார். யோககாலம் நேர்ந்து
வந்ததினால் இவர் சட்டபரீக்ஷையில் தேறினார். பிறகு
ஸ்கூலிலிருந்து விலகிக்கொண்டு சென்னப்பட்டணம்
வந்து அங்கு வக்கீலாக விருந்தார். நம்பிக்கை,
உறுதி, வாக்கில் இனிமை இந்த குணங்களால் வெகு
சீக்கிரகாலத்திலேயே அதிகமான பிரசித்தியை யடை
ந்தார். விசேஷமான திரவியம் சம்பாதித்து தன்
சொந்த கிராமத்தில் தகுந்த பூமியையும் கிருஹத்
தையும் ஏற்படுத்திக்கொண்டு குடும்பநிர்வாகத்தை
உயர்ந்த ஸ்திதியிலேயே நடத்திக்கொண்டுவந்து,
பால்யத்தில் ஜாதகபாவத்தினால் தன் முன் அபிவிருத்
தியைத் தெரிந்து அசௌகரியங்களை லக்ஷியம் செய்
யாமல் தமக்கு இங்கிலீஷ் வித்யையைக் கற்பித்து
தம்முடைய க்ஷேமத்தை எதிர்பார்த்திருந்த, பிதா
வை சந்தோஷிப்பித்தார். இவர் பிதா கடைசிகாலத்
தில், தன் கையால் எழுதிய வால்மீகிராமாயணசுந்தர

கண்டபுஸ்தகத்தை இவருக்குக் கொடுத்து 15-16 வயஸு ஆனபிறகு ஸத்குருலாபமும், ஸன்மத, சதாசாரங்களில் விசுவாஸமும் உண்டாகுமென்று ஆசிர்வாதம் செய்து, காலகதியடைந்தாரென்று தெரியவருகிறது.

இந்த ராமசந்திரய்யர் மிகவும் நம்பிக்கையுள்ளவராக வக்கீல் வேலையில் விசேஷமாக திரவிய சம்பாதனம் செய்து அக்காலத்தில் பிரசித்திக்கு வந்திருந்தாலும் இவர் ஸ்வபாவகுணத்திற்கு அது இஷ்டமாயும் உத்ஸாஹமாயும் இருக்கவில்லை. இந்த சந்தர்ப்பத்தில் திருவனந்தபுரம் சம்ஸ்தானத்திய ஹைகோர்ட்டு முதல் ஜட்ஜிஸ்தானத்திற்கு தகுதியுள்ள ஒருவரை அனுப்ப வேண்டுமென்று அவ்விடத்திய மகாராஜர் அபேக்ஷிக்கையில் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜிகள் எல்லோரும் அபிப்பிராய பேதமில்லாதவராய் இந்த ராமசந்திரய்யரையே தேர்ந்தெடுக்க அந்த ஸ்தானத்தை ஏற்றுக்கொள்வதினால் அதிகமாக திரவிய லாபம் உண்டாகமாட்டாதென்று தெரிந்திருந்தும் தம் ஸ்வபாவத்திற்கு அனுகுணமானதென்று ஒப்புக்கொண்டு அதுவரையில் தம்மிடம் வந்திருந்த அநேகவியவஹாரங்களை பன்னிரண்டாயிரம் ரூபாயுடன் இதரர்கள்வசம் கொடுத்துவிட்டு திருவனந்தபுரத்தில் உயர்ந்த ஜட்ஜி பதவியைப் பெற்றுக்கொண்டார். ஒரு வருஷகாலம் அந்த ஸம்ஸ்தானத்திய வேலை பார்த்து வருவதற்குள் மைசூர் சம்ஸ்தானத்திய சீப்கோர்ட்டு ஜட்ஜியாகவரவேண்டு

மென்று இந்த சம்ஸ்தானத்திய அதிகாரிகள் அபே க்ஷிக்கையில் திருவனந்தபுரமிருந்து மைசூர் வந்து இவ்விடத்திய சீப்கோர்ட்டில் மூன்றாவது ஜட்ஜி அதிகாரத்தை ஒப்புக்கொண்டார். இவர் சாமான்யமான சிலதர்மங்களை பூர்ணமாக அனுஷ்டானத்தில் வைத்துக்கொண்டிருந்தார் என்று தெரியவருகிறது. அதுயாதெனில் ஸத்ய வசனம், அஹிம்ஸை, பரோபகாரம் இவைகள் மனுஷ்ய ஜன்மமெடுத்ததற்கு பிரயோஜனத்தையுண்டாக்கக்கூடிய குணங்கள் என்று தெரிந்துகொண்டிருந்தார். இவர் சந்தானமில்லாதவரானாலும் இவர் சகோதரிகளையும் அவர்கள் சந்ததிகளையும் ஆதரித்து மருமான்களை தன்னிடம் வைத்துக்கொண்டு படிப்பித்து அவர்களை அபிவிருத்திற்கு கொண்டுவந்தார். மிக ஏழைகளாயும் சம்சாரிகளாயுமிருக்கிற அநேகம் ஜனங்களுக்கு மாதாசனம் கொடுத்து சகாயம் செய்து வந்தார். வெகு பேர் வித்யார்த்திகளுக்கு அன்னவஸ்திரங்களும் புஸ்தகங்களும் சம்பளமும் கொடுத்து உபகாரம் செய்துவந்தார். இப்படியிருந்தும் இவருடைய ஜன்மாந்தரீய ஸத்கர்ம பரிபாக காலம் நேர்ந்து வாரமலிருந்ததினால் இவருக்கு கர்மசிரத்தையும், குரு தேவதா விசுவாசமும் உண்டாகி அதன் பிரயோஜனத்தை அடைவதற்கு அவகாசமில்லாமலிருந்தது. 1891 கர வருஷத்தில் ஸ்ரீஸ்வாமிகள் சவாரி ராமஸேதுயாத்திரை நிமித்தம் பிரயாணப்பட்டு மைசூர் ராஜதானிக்கு விஜயம் செய்த காலத்தில்

இவர் தனது நண்பரான திவான் சேஷாத்திரி அய்யரால் அழைக்கப்பட்டு அவர் திருஷத்தில் ஒரு தடவை ஸ்ரீஸ்வாமிகளுடைய சந்தர்சனத்தை செய்திருந்தார். அது இவர் ஸத்கர்மபரிபாக காலமாக இல்லாமலிருந்ததினால் இவருக்கு குரு பக்தியும் விசுவாசமும் உண்டாகவில்லை. ஸ்ரீஸ்வாமிகள் ராமேசுவர யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பி ஸ்தலத்திற்கு விஜயம் செய்யும் சந்தர்ப்பத்தில் முன் சொல்லியபடி 1895 மன்மத வருஷத்தில் பங்களூரில் இரண்டாவது தடவையாக ஸ்ரீஸ்வாமிகள் தர்சனமுண்டாயிற்று. இவர் சுகிருத பரிபாகத்தினால் ஸ்ரீஸ்வாமிகள் விஷயத்தில் கொஞ்சம் கௌரவபுத்தி உண்டாகத் தொடங்கியது, மகானுபாவரான ஸ்ரீஸ்வாமிகளுக்கு இவருடைய தர்ம பரிபாக காலமும் மனோபாவமும் மனதில் தென்பட்டதோ என்று தோன்றும்படி தாம் சிருங்கேரி சேர்ந்தவுடனே அங்கே வந்து சாவகாசமாக தர்சனம் செய்து வரவேண்டுமென்று இந்த ராமசந்திரய்யருக்கு உத்தரவு செய்தார்கள். ஸ்ரீஸ்வாமிகள் விஷயமான பக்தி ஆரம்பமாயிருப்பதால் அப்படியே வருவதாக தெரிவித்துக்கொண்டு இவர் புறப்பட்டுப்போனார். சில நாள் சென்றமேல் தம் அவகாசகாலத்தில் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகள் உபதேசித்த ஹிதோக்திகளெல்லாம் ஒரு தடவை கேட்டதினாலேயே இவருக்கு சித்த சுத்தி செய்வதில் சக்தியுள்ளவைகளாயிருந்தன. சித்த சுத்தி ஏற்பட்ட இந்த ராமசந்திரய்ய

ருக்கு கர்மஸ்வரூபத்தையும் அனுஷ்டான பிரகாரத்தையும் அதன் பிரயோஜனத்தையும் சுருக்கமாய் போதித்து சித்தசுத்தியை முன்னிட்டு மோக்ஷத்தை கொடுக்கக்கூடிய சிவபஞ்சாக்ஷரமந்திரத்தை உபதேசித்து அனுக்கிரஹம் செய்து அனுப்பினார்கள். அந்த மகாபுருஷருடைய அனுக்கிரஹபலத்தினாலும், பூர்விக ஸத்வாஸநா பிரபாவத்தினாலும் தினந்தோறும் இவருக்கு ஆஸ்திக்யபுத்தி அதிகரித்துக்கொண்டுவந்து பிரதி வருஷமும் தப்பாமல் தம் விடுமுறை நாட்களில் சிருங்கேரிக்குவந்து ஸ்ரீஸ்வாமிகள் சன்னிதியில் சில நாள் வாசம் செய்து அவர்கள் முகத்திலிருந்து அநேக ஸத்விஷயங்களை ஸங்கிரஹம் செய்தும் அநேக மந்திரங்களையும் மந்திரானுஷ்டானக்கிரமங்களையும் சம்பாதித்து வந்ததுமல்லாமல் ஸகுணோபாஸநாக்கிரமங்களையும் தெரிந்து ஸகுண மூர்த்தி ஆராதனம் செய்வதற்கு ஆரம்பித்தார். இந்தமாதிரி, பூர்வவாசனையுடன் வர்த்தமான ஜன்மவாசனை சேர்ந்து இந்த ராமசந்திரய்யரை வேறு காரியத்தில் போகவொட்டாமல் ஸத்கர்மானுஷ்டானத்திலும் ஸத்விஷயங்களை விசாரம் செய்வதிலும் தம் காலத்தை கழிக்கவேண்டுமென்ற விஷயத்தில் ஆவலை அதிகரித்துக்கொண்டுவரும்படி செய்தது. அப்படியிருந்தும் லௌகிககாரியத்திலிருந்து விலகிக்கொள்வதற்கு குரு ஆக்ஞை ஆவசியகமாயிருந்ததினால் குருக்களுடைய ஆக்ஞைக்காக மூன்று வருஷகாலம் எதிர்பார்த்திருந்தார்.

இந்த சிஷ்யருடைய மனதின் பரிபாகத்தை அனேக விதமாக பரீக்ஷித்து ராஜசேவாரூபமான நிர்ப்பந்தத்திலிருந்து விலகிக்கொள்வதற்கு ஸ்ரீ ஸ்வாமிகள் அனுமதி கொடுத்தவுடன் தம் அபிப்பிராயத்தை மகாராஜரிடத்தில் அறிவித்துக்கொண்டு இவ்வளவு யோக்கியதையுள்ள அதிகாரிகளை விடுவதற்கு பிரபுக்களுக்கு அபிப்பிராயமில்லாமலிருந்தாலும் அவரிடமிருந்து அனுமதி பெற்று விலகிக்கொண்டார். அதுமுதல் குரு சேவை, குரு ஆஜ்ஞையை அனுஷ்டானம் செய்வது, குரு உபதேசம் செய்த விஷயத்தை சிந்தனம் செய்வது, குருவால் உபதேசிக்கப்பட்ட மந்திரங்களை உபாசனம் செய்வது, இவைகளிலேயே ஆஸ்தையுள்ளவராகி விஜனமாகவும் பரிசுத்தமாகவும் உள்ள பிரதேசங்களில் வாசம் செய்துகொண்டு தம் காலத்தை ஆனந்தமாய் கழித்துக்கொண்டிருப்பார். இந்த உத்தமமான பலன் குருப்பிரசாதத்தினாலுண்டானதோ அல்லது ஜன்மாந்தர ஸம்ஸ்காரத்தினாலுண்டானதோ என்று சந்தேகம் உண்டாகலாம். ஆசார்ய பகவத்பாதரவர்கள் விவேக சூடாமணியில்,

दुर्लभं त्रयमेवैतद्दैवानुग्रहहेतुकम् । मनुष्यत्वं मुमुक्षुत्वं महापुरुषसंश्रयः ॥

என்று சொல்லியிருக்கிறபடி, ஈசுவர அனுக்கிரஹத்தினால் கிடைத்திருக்கிற மானுஷ ஜன்மத்தில் ஸத்கர்ம பரிபாக காலம் நெருங்கி வந்தவுடன் மகாபுருஷரின் ஆசிரயம் கிடைத்தது. அந்த மகானுடைய உபதேசத்தினால் மோக்ஷேச்சை உண்டாகி அதற்கு சாதன

மான உபாசனையில் இவரை பிரேரணை செய்த தென்று சொல்லலாம். இவருக்கு சுமார், 73, 74 வயது ஆயிருக்கலாம், இந்த வயதிலும் காலடி க்ஷேத்திரத்தில் வாசம் செய்து குருசேவை செய்துகொண்டிருக்கிறார்.

ஸ்ரீஸ்வாமிகள் காலடியிலிருந்து பிரயாணமாகி, கொச்சிசம்ஸ்தானத்தில் பிரவேசித்து சென்னை இராஜதானியில் பிரசித்தராயும் ஹைகோர்ட்டு ஜட்ஜியாயுமிருந்த, பி. ஆர். சுந்தரய்யர் பிரார்த்தனைப்படி அவர் சொந்த கிராமமான புதுக்கோடுக்கு விஜயம் செய்து அவர் கிருஹத்தில் 5 தினம் வரையில் ஸ்ரீமதாசார்ய ஜயந்தி உத்சவத்தை நிறைவேற்றிக்கொண்டு அங்கிருந்து கோயம்புத்தூர், நாமக்கல், மார்க்கமாய், சாதாரண வருஷத்திய சாதுர்மாஸ்யசங்கல்ப வியாஸபூஜாதி அனுஷ்டானங்களை காவேரீதீரமான அய்யம்பாளையமென்னும் கிராமத்தில் நடத்தவேண்டியதற்காக அந்தக் கிராமத்தில் பிரவேசித்தார்கள். அந்தக் கிராமத்திய பிராசுதாரரான தாண்டவராயபிள்ளை பரம பக்தரென்றும், அவர் பிரார்த்தனை செய்துகொண்டபடி முந்திய யாத்திரையில், தண்டாயுதபாணி சுப்பிரமண்யஸ்வாமிப்பிரதிஷ்டை ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞையை அனுசரித்து நடத்தப்பட்டதென்றும் முன் அத்தியாயங்களில் விஸ்தாரமாக சொல்லப்பட்டிருக்கிறது ஞாபகத்திலிருக்கலாம். இப்போதைய யாத்திரையில் திருச்சிணாப்பள்ளியிலிருந்து இந்த அய்யம்பாளையம் கிராமத்

திற்கு பிலவங்க வருஷம் மாக கிருஷ்ண துவாதசி
தினம் விஜயம் செய்து ஒருமாதகாலம் அங்கே வாசம்
செய்திருந்தார்கள். அந்த காலத்தில் பக்தரான தாண்
டவராயபிள்ளையின் கோரிக்கைப்படி, தண்டாயுத
பாணி ஸுப்ரமண்யஸ்வாமி தேவாலய மகாமண்டபத்
தின் ஒருபாகத்தில் ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசாரிய
மூர்த்தியும் பிரதிஷ்டை செய்யப்பட்டது. அதுபோ
லவே ஸ்ரீஸ்வாமிகளுடைய 50-வது வருஷபூர்த்தியான
பால்குண பகுள ஏகாதசி தினத்தில் தாண்டவராய
பிள்ளையின் கோரிக்கைப்படி ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞை
பெற்று இந்த கிரந்தகர்த்தாவினால் ஸ்ரீஸ்வாமிகளு
டைய ஞாபகார்த்தமாக அவர்கள் மூர்த்தியொன்று
ஆசார்யாவர்களுடைய வலது பக்கத்தில் பிரதிஷ்டை
செய்யப்பட்டது. இந்தவிதமாக தாண்டவராயபிள்ளை
ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் சரணாகதராய், நிலைதவறாத பக்
தியை செய்துகொண்டிருந்ததினாலும் ஸ்ரீஸ்வாமிக
ளால் பிரதிஷ்டை செய்யப்பட்ட தண்டாயுதபாணி
சுப்பிரமண்யஸ்வாமி தேவாலயம் அந்த கிராமத்திலி
ருந்ததினாலும் விசேஷமாக காவேரி தீரத்திலிருந்ததினா
லும் ஸ்ரீஸ்வாமிகளுக்கு அந்த கிராமவாசத்தில் பிரி
யம் இருந்தது உசிதமே. அங்கு சாதுர்மாஸ்ய சங்
கல்பத்தை பூர்த்தி செய்து தாண்டவராயபிள்ளைக்கு
பக்தரத்னம் என்ற பெயரை அனுக்கிரஹித்து சேலம்
தர்மபுரி கிருஷ்ணகிரி மார்க்கமாய் மைசூர் சம்ஸ்தா
னத்தைச்சேர்ந்த கோலார் ஜில்லாவில் பிரவேசித்தார்

கள். இந்தப்பிராந்தத்திய ஜனங்களுக்கு ஸ்ரீஸ்வாமி கள் தர்சனம் கிடைத்து வெகு வருஷகாலமாயிருந் தது. அந்த ஜனங்களுடைய நிர்ப்பந்தமான பிரார்த் தனைப்படி ஸ்ரீஸ்வாமிகள் அந்தப்பிராந்தத்தில் விஜயம் செய்த சந்தர்ப்பத்தில் ஸி. ஸ்ரீகண்டேசுவரய்யர் கோ லார் டிஸ்திரிக்டு டிப்டி கம்மிஷணராயிருந்தார். இவர் பிரசித்தராயிருந்த சேஷாத்திரி அய்யர் ப்ரீதிக்கு பாத்ரராய் அவரால் அபிவிருத்திக்கு கொண்டுவரப் பட்டவராயும் அவரால் பழக்கப்பட்டு லோகவியவ ஹார ஞானத்தை நன்றாக சம்பாதித்தவராயும் இருப் பவர். ராஜாக்ஞைப்படி சுவாமிகளை ஸத்கரிக்கவேண்டி யது இவர் கடமையாகவே இருந்தது. அத்துடன் தான் அநேகம் தடவை சேஷாத்திரி அய்யர் கூட வந்து சுவாமிகளை தர்சனம் செய்து அவர்கள் மகிமை யை அறிந்தவராயிருந்ததினாலும் சேஷாத்திரியய்யர் அவர்கள் விஷயத்தில் செய்து வந்த பக்தியை அறிந்த வராயிருந்ததினாலும் அதனாலுண்டான பக்தியும் சேர் ந்து இவர் உத்ஸாஹத்தை அதிகப்படுத்தியது. சுவாமி களை ஸத்கரிப்பதில் பக்தி விசுவாசங்களுடன் சேவை செய்து அவர்கள் அனுக்கிரஹத்தை சம்பாதிக்கவே ண்டுமென்ற ஆவலுள்ள அந்தப்பக்கத்திலுள்ள ஜனங் களுடைய சகாயமும் இவருக்கு நேர்ந்தது. இந்த காரணங்களினால் சுவாமிகளை 46 தினம் வரையில் தம் டிஸ்திரிக்டில் நிறுத்திக்கொண்டு மிகவுயர்ந்த ரீதியில்

அவர்களை உபசரித்து அவர்கள் பிரசாதத்தையும் பெற்றுக்கொண்டார்.

சிக்கப்பள்ளாபுரத்திற்கு சமீபத்திலுள்ள நந்தி பெட்டத்திற்கு வெகு பால்யவயதில் தம் குருக்களுடன் கூட சேர்ந்து போயிருந்த ஞாபகத்தினால் அந்த பர்வதத்திற்கு போய்வரவேண்டுமென்று அபிப்பிராயம் ஸ்ரீஸ்வாமிகளுக்கு இருந்ததாக தெரியவந்தது, அதற்கு ஆகவேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. எந்த சந்தர்ப்பத்திலாவது, பர்வத சமீபத்திற்கும் வனபூமிக்கும், நிர்ஜனமான பிரதேசத்திற்கும் வந்தவுடன் ஸ்ரீஸ்வாமிகளுக்கு மிகவும் உத்ஸாகமுண்டாகி ஸ்வேச்சையாக சஞ்சாரம் செய்வது அவர்களுக்கு ஸ்வபாவகுணமாயிருந்தது. நந்திபெட்டத்தின் மேலே வந்தவுடனே அமிருதசரோவரத்தில் ஸ்நாநம் செய்ய யத்தனித்தார்கள். அதின் ஜலம் வெகுசீதமானதென்றும் அதில் ஸ்நாநம் செய்வதினால் சீத உபத்திரவமுண்டாகுமென்றும் ஸ்ரீஸ்வாமிகளிடத்தில் டிப்டி கமிஷனரும் மற்றவர்களும் தெரிவித்தாலும் அவர்கள் உத்ஸாஹத்தை தடுப்பதற்கு எவராலும் சாத்தியமாகவில்லை. ஸரோவர ஸ்நானத்திற்காக ஸ்ரீஸ்வாமிகள் ஏகாந்தமாய் விஜயம் செய்து இஷ்டம்போல் ஸ்நாநம் செய்து கௌபீனம் மாத்திரம் தரித்து சரீரமெல்லாம் விபூதியை பூசிக்கொண்டு ஜலத்திற்கு சமீபத்திலேயே தம் அனுஷ்டானங்களை செய்துகொண்டு வெகு நேரம் சரோவரத்திலேயே ஆசன



ஸ்ரீ மடம் வித்யாசாலையும் சங்கராலயமும், பங்களூர்.

த்திலிருந்து பின்பு மேலுக்கு வந்தார்கள். வெகுகால மாக உஷ்ணதேசங்களில் சஞ்சாரம் செய்து மார்க்க ஆயாசத்துடன் வந்த ஸ்ரீஸ்வாமிகள் திடீரென்று அத்யந்த சீதலமான அந்த ஜலத்தில் ஸ்நாநம் செய்து அங்கேயே நீண்டகாலம் கேவலம் மௌனதாரிகளா யிருந்து மேலுக்கு வரவும் அப்போது சீதகாலமான அஸ்தமயமும் வந்தது. சீதம் சரீரத்தில் வியாபித்து மார்பில் ஒருவிதமான சூலை உண்டாகி அன்று இராத் திரி முழுவதும் வெகுவாக ஸ்ரீஸ்வாமிகளை பீடித்தது. ராஜகீய அதிகாரிகளும் ஸ்ரீஸ்வாமிகளின் பரிஜனங்க ளும் மிகவும் பயந்து வியசனித்தார்கள். ஈசுவரானுக் கிரஹத்தினால் அதிபலமாய் வந்த பீடை சுலபமாகவே விலகிப்போய் சிக்கபள்ளாபுரத்திற்கு வந்து சில நாள் தங்கி இளைப்பாறிக்கொண்டு பெங்களூருக்கு விஜயம் செய்தார்கள். அங்கே 1907-வது கீலக வருஷத்தில் ஆரம்பம் செய்யப்பட்டிருந்த மடத்திய கட்டிடம் விசாலமாயும் வெகு உயர்ந்ததாயும் சில்பசாதுர்யத்து டனும் கட்டப்பட்டு பூர்த்தியாயிருந்தது. இந்த கட்டி டத்திற்கு முன்னதாக ஆசார்யபகவத்பாத மூர்த்தி யையும் சாரதா சந்திரமௌளீசுவர தேவர்களையும் பிரவேசம் செய்வித்து பிற்பாடு ஸ்ரீஸ்வாமிகள் ராஜ கீய அதிகாரிகளுடனும் புரவாஸிகளுடனும் வைப வத்துடன் பங்களூர் நகரத்தில பிரவேசித்து மடத்து வாசலில் வந்து ஸ்ரீமதாசார்ய பகவத்பாததர்சனம் செய்துகொண்டு மடத்தில் பிரவேசம் செய்தார்கள்.

ஆளிபூஜை முதலான சத்காரங்கள் நடந்தமேல் எல்லோருக்கும் பல மந்திராக்ஷதைகள் கொடுத்தனுப்பிவிட்டு இவ்விதமான பெரிய கட்டிடத்தை வெகு சுவல்பகாலத்தில் பூர்த்தி செய்த விஷயத்தில் ஆனந்தித்து அந்த காரியத்தை பூர்த்தி செய்த தம் சிஷ்யரான மாதவாரியருடன் சஞ்சாரம் செய்து எல்லா பாகங்களையும் பார்த்து அவரை அநுக்கிரஹித்தார்கள்.

தம் தர்சனத்தை எதிர்பார்த்து பங்களூர் ராஜதானியில் காத்துக்கொண்டிருந்த ஸ்ரீமான் மகாராஜா கிருஷ்ணராஜபிரபுக்களை புதிதாய் அமைத்திருக்கும் தம்முடைய மடத்திற்கு வரவழைத்துக்கொண்டு தேவதாஸந்தர்சன தீர்த்தப் பிரசாதங்களை அங்கேயே அநுக்கிரஹித்து மகாராஜருக்கும் ராஜகுடும்பத்தாருக்கும் மடத்தில் ஆதித்யம் செய்யவேண்டுமென்ற ஸ்ரீஸ்வாமிகள் அபிப்பிராயத்தை ஸ்ரீமான் மகாராஜரிடம் அறிவிக்க, குருபக்தியில் சிறந்த அந்த மகாராஜர் குரு ஆஜ்ஞைப்படி குடும்ப சமேதராய் மடத்திற்கு வந்து ஸ்ரீ சுவாமிகளை தர்சனம் செய்து பாதபூஜை முதலியவைகளால் அவர்களை ஸத்கரித்து தீர்த்தப்பிரஸாதங்களைப் பெற்றுக்கொண்டு போஜனந்தரம் அவர்கள் அநுஜ்ஞையை பெற்று அரண்மனைக்கு விஜயம் செய்தார்.

சாலி 1833 சாதாரண வருஷம் மாகமாதத்தில் (3—2—1911) சாயங்காலம் 6-மணி சமயத்தில் ஸ்ரீமான் மகாராஜரையும் சிஷ்யமண்டலியில் முக்கிய

ரான சிலரையும் மடத்திற்கு வரவழைத்துக்கொண்டு பங்களூரில் மடம் கட்டின உத்தேசத்தையும் அதன் உபயோகத்தையும் விஸ்தாரமாகத் தெரியப்படுத்தி, "भारतीयगीर्वाणप्रौढविद्याभिवर्धिनी" என்ற பெயருடன் ஒரு பாடசாலை ஏற்படுத்துவதாயும் இந்த பாடசாலையில் 50 பேர், முதிர்ந்த வித்யார்த்திகளை சேர்த்து அந்த வித்யார்த்திகளுக்கு சௌகரியமான வாசகிருஹங்களை கல்பித்துக்கொடுத்து அன்ன வஸ்திரங்களுக்கு தேவையுள்ள சம்பளம் கொடுத்து பூர்வமீமாம்ஸா உத்தர மீமாம்ஸா சாஸ்திரங்களையும் வேதபாஷ்ய தர்மசாஸ்திரங்களையும் பூர்வ ஸம்பிரதாயத்தை அனுசரித்து அத்தியயனம் செய்வித்து, ஸர்வசம்மதமான பாண்டித்யத்தை சம்பாதித்துக் கொள்ளுகிறவர்களுக்கு தகுந்தபடி ஜீவனத்தை ஏற்படுத்துவது மூலமாய், சிதறிப்போயிருக்கும் வேதசாஸ்திரங்களை பிரசாரத்திற்குக் கொண்டுவரவேண்டுமென்றும் இந்த காரியம் ஸ்ரீமான் மகாராஜர் அல்லது ஸ்ரீமந்தர் இவர்களுடைய சகாயத்தினால் நடக்கக்கூடியதாயிருந்தாலும், அப்படிப்பட்ட பூர்வீக மகாராஜரால் ஸம்ஸ்தான தர்மங்களுக்கு உபயோகமாகும்படி கொடுக்கப்பட்டிருக்கிற ஸ்திரமான வருமானத்தில் கூடுமானவரையில் ஒரு பாகத்தை இந்த காரியத்திற்காக விநியோகித்து சுவல்பமாக மேற்படி காரியத்தை ஆரம்பித்து நடத்திக்கொண்டுவந்தபிறகு அதன் பிரயோஜனத்தைத் தெரிந்து சகாயம் செய்யும் விஷயத்தில் ஜனங்களுக்கு உத்ஸாஹமுண்டாகு

மானால் சுலபமாக ஜனங்களிடமிருந்து சகாயமேற்பட்டு காரியம் சங்கல்பத்துக்கு அனுகுணமாக பூர்த்தியாகுமென்றும், இப்போது 8-பேர் வித்யார்த்திகளை சேர்த்து இரண்டுபேர் பண்டிதர்களை நியமித்து பூர்வ, உத்தர மீமாம்ஸா சாஸ்திர அத்தியயனத்தை ஆரம்பிப்பதென்றும், தெரிவிக்க ஸ்ரீமான் மகாராஜரும் ஸிஷியவர்க்கங்களும் தர்மரக்ஷணத்திற்காக ஸ்ரீஸ்வாமிகள் சங்கல்பித்திருக்கும் பிரயத்னத்தை அறிந்து தம் தம் தன்யதாவாதங்களை ஸ்ரீஸ்வாமிகளுக்கு சமர்ப்பித்து ஆக்ஞைபெற்றுக்கொண்டார்கள்.

திவான் மாதவராயர் ஒரு அக்கிரகாரம் கட்டி நற்குலத்திலுதித்தவரும் ஏழைகளுமான குடும்பிகளுக்கு தானம் செய்யவேண்டுமென்று சங்கல்பித்து பங்களூர் மடத்திய சமீப சுற்றுப்பக்கத்தில் ஸ்ரீஸ்வாமிகள் ஆக்ஞையைப் பெற்று சம்சாரிகளுடைய வாசத்திற்குத் தக்கபடிக்கும் சதாசாரத்திற்கும் பிராம்மணவாச க்ருஹ லக்ஷணைப் சொல்லியிருக்கிற அந்த தர்மசாஸ்திரத்திற்கும் ஒற்றதாய் ஏழு வீடுகள் கட்டி, சகலசாமான்களுடன் அந்த க்ருஹங்களை பிராம்மணர்களுக்கு தானம் செய்வதற்கு எல்லா சாமான்களையும் சித்தப்படுத்திக்கொண்டிருந்தார். இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீஸ்வாமிகள் வேத சாஸ்திர பிரசாரத்தினால் தர்ம ரக்ஷணம் செய்யவேண்டுமென்று சங்கல்பித்திருப்பதையும் அந்த விஷயத்திற்காக வரும் சகாயத்தை சந்தோஷத்துடன் அங்கீகரிப்பாரென்பதையும் தெரிந்து தாம்

யோசித்திருப்பதைக்காட்டிலும் ஸத்வித்யாப்ரசாரத்திற்காக செய்கிற தர்மம், சாசுவதமான தர்மமாகுமென்று நிச்சியித்து தாம் கட்டுவித்த கிருஹங்களை சாமான்களுடனே ஸ்ரீஸ்வாமிகளுக்கு அர்ப்பணம் செய்து அவர்களால் உத்தேசிக்கப்பட்டிருக்கிற தர்மகாரியத்திற்கு இஷ்டம்போல் உபயோகித்துத்தம்மை அநுக்கிரஹிக்கும்படி வேண்டிக்கொண்டார். எதிர்பாராமலே வந்ததும், நினைத்த காரியத்தை காலதாமதமின்றி துடங்குவதற்கு அநுகூலமாய் நேர்ந்ததுமான சிஷியரின் சகாயத்தை ஆதரவுடன் அங்கீகரித்து ராயருடைய தீர்க்காலோசனையை சிலாகித்து அவரை அநுக்கிரஹித்தார்கள்.

பங்களூரில் 13 தினம் வாசம் செய்து அங்கிருந்து முன்னுக்கு சீக்கிரமாக பிரயாணம் செய்து அரிசிகரையின் சமீபம் மால்கல்லு திருப்பதி என்னும் ஸ்தலத்தில் வாசம் செய்து இருக்கையில் சிருங்கேரியில் கட்டிக்கொண்டிருக்கிற சிலாமயமான தேவஸ்தானத்தில் திடீரென்று அக்னிப்ரவேசமாய் அநேகம் கல்லுகள் உடைந்து பெரும் நஷ்டமுண்டாயிருக்கிறதென்றும் அம்மன் பிம்பத்திற்கு ஆவரணம் செய்துகொண்டிருந்த மரமயமான மண்டபம் அக்னிஜ்வாலையில் சம்பந்தப்பட்டாலும் பிம்பத்திற்கு எந்த விதத்திலும் அபாயமுண்டாகவில்லையென்றும் சமாசாரம் வந்தது. இந்த வர்த்தமானத்தை அறிந்தவரும் கேட்டவரும் இது பெரிய அனிஷ்டத்திற்கு சூசகமென்று சங்

தேகித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளுக்கு இந்த சமாசாரத்தை இந்த கிரந்தகாரன் மிகுந்த பயங்கொண்டு தெரிவிக்கையில் கொஞ்சமும் விகார பாவத்தை அடையாமல் கேனோபநிஷத்தில் சொல்லியிருக்கிற அர்த்தத்தை சபலஸ்வபாவமுள்ள நம்மைப்போலுள்ளவர்களுக்கு பிரத்யக்ஷமாக தெரிவித்து நம் மனதை தைரியப்படுத்தி அனுக்கிரஹிப்பதற்காக ஜகன்மாதாவான அம்மனால் காண்பிக்கப்பட்ட கௌதுகமே தவிர வேறுவிதமான அனிஷ்டத்தின் சூசகமல்லவென்று பயந்திருந்த ஜனங்களை சமாதானப்படுத்தினார்கள். ஸ்ரீஸ்வாமிகள் சிருங்கேரியில் பிரவேசித்து அம்மனை தர்சனம் செய்தக்ஷணத்தில் சொன்ன இதே அபிப்பிராயமுள்ள ச்லோகம் அடியில் எழுதப்படுகிறது.

प्रोक्तं केनागमान्ते किमु परममहः संनिधौ स्वस्वकार्या-
शक्ता देवा बभूवुः शुचिपवनमुखा इत्यमुं मुख्यमर्थम् ।
जानन्त्वात्माङ्घ्रिनम्रा इति विधिरमणीदाहगेहे स्थितासी-
ज्ज्वालामालाकुलेऽस्मिन्सुमवसनयुता दाहगन्धेन शून्या ॥

பிறகு, தரிகரை, சிவமொக்கா தீர்த்தஹள்ளி மார்க்கமாய் பிரயாணம் செய்து, சாதாரண வருஷத்திய பால்குன பகுள த்விதியை காலையில் சுமார் ஒன்பது மணி சமயத்தில் தமதாசிரமமான சிருங்ககிரியில் பிரவேசித்து நகரத்திய நாலு வீதிகளிலும் பிரதக்ஷிணமாக வந்து மடத்தில் பிரவேசித்தார்கள். அம்மன் தர்சனமும், தம் குருக்களின் அதிஷ்டான தர்சனமும் செய்து வித்யாசங்கராலயத்திற்கு வந்து அங்கு தண்ட

நமஸ்காரம் முதலியவைகளால் வித்யாதீர்த்தரை சேவி த்து அக்ரகாரப் பிராம்மணர்களால் செய்யப்பட்ட ஆளி பூஜா சத்காரங்களை ஸ்வீகரித்து சம்ஸ்தான சம் பந்தமான எல்லா வஸ்துக்களையும் மடத்தில் விட்டு பாதசாரிகளாய் மிதமான தம் பரிவாரத்துடன் துங்கா நதியைத்தாண்டி தக்ஷிண பாகத்திலிருக்கிற நரசிம்ம வனத்திற்கு விஜயம் செய்தார்கள். தம் ஆசிரமத்தில் பிரவேசித்த பிறகு ஸ்ரீஸ்வாமிகளுக்குண்டான மனோ பாவமும் அவர் ஆனந்தமும் அவர் சமீபத்திலிருந்த இந்த லேககனுக்கும் அவர்களுடைய பரமானுக்கிரஹ பாத்ரராய் அவர் யாத்திரையில் இடைவிடாமல் சமீ பத்திலிருந்து சம்ஸ்தான காரியங்களை நடத்துவோரில் ஒருவனாயிருந்த மைசூர் அரண்மனை தர்மாதிகாரிக ளான குணிகல் ராமசாஸ்திரிகளுக்கும் கோசரமான தேயல்லாமல் வேறொருவருக்கும் கோசரமாவதற்கு அவகாசமில்லை. கேவலம் நிர்ப்பந்தத்தினால் அநியாய மாக ஒரு மனிதனை காராகிருஹத்தில் வைத்து சில காலம் கழிந்தமேல் அந்த மனிதன் விஷயமாய் நடத் தின நடவடிக்கை அநியாயமானதென்று தெரிந்து நிர்ப்பந்தம் செய்தவர்கள் தாங்கள் செய்தது அநியாய மென்று தெரிவித்து கௌரவமாய் அழைத்து கிரு ஹத்தில் விட்டுவிட்டால் அந்த மனிதனுக்கு எவ்விதம் ஸ்வாதந்திரயமும் சந்தோஷமும் உண்டாகுமோ அது போல் கர்ம பலத்தினால் நாலு வருஷகாலம் இடைவி டாமல் ஜனசங்கத்தில் கலந்து தம் ஆசிரம தர்மத்திற்

கும் மனோ விருத்திக்கும் விரோதமாய் ஓயாமல் வாக்கு வியாபாரம் சரீரவியாபாரம் இவைகளினால் சித்தக்கலக்கமடைந்த உலகவியவஹாரங்களில் ஆஸ்தையுள்ளவர்கள் போல் காண்பித்துக்கொண்டு ஸ்வேச்சையாய் ஆத்மசுகத்தை அநுபவிப்பதற்கவகாசமில்லாதபடி சம்பவித்திருந்த நிர்ப்பந்தம் நீங்கி விஜனமாயும் நிர்மலமாயும், மனோஹரமாயும், இருக்கிற தம் ஆசிரமத்திற்கு திரும்பி வந்த ஸ்ரீஸ்வாமிகளும் நிரந்தரமாய் ஆத்மானந்தத்தை அநுபவித்துக்கொண்டிருப்பாரென்று அவர் மனோபாவத்தினால் ஸ்பஷ்டமாய் தெரிந்துகொள்ளக்கூடியதாயிருந்தது.

இந்த விதமாய் க்ஷேத்திர யாத்திரை செய்து காலடி க்ஷேத்திர பரிஷ்கார காரியத்தையும் ஸ்ரீமதாசாரிய பகவத் பாதாளர்களுடைய பரமானுக்கிரஹ பலத்தினால் பூர்த்தி செய்து கிருதகிருத்யராய் வந்த ஸ்ரீஸ்வாமிகள் தம் ஸ்வபாவ குணங்களையுமடைந்து ஆத்மத்தியான நிஷ்டையுள்ளவராய் சிருங்கேரியில் வசதி செய்துகொண்டிருந்தார்கள்.





## 12-வது அத்தியாயம்.

### விதேஹமுக்தி.

ஸ்ரீ ஸ்வாமிகளுடைய ஜீவன சரித்திரத்தைப்பற்றி முந்திய அத்தியாயங்களைப் படிப்பதினால், ஈசுவரப் பிரசாதத்தினால் ஜன்மமடைந்தவரும், அம்சஸம்பூதரும், ஸத்ய ஸங்கல்பரும், ஸர்வபூத காருண்யத்தினால் ஸர்வசமானரும், ஜீவன்முக்தரும், ஆன ஸ்ரீ குருசிரேஷ்டர் லோகானுக்கிரஹத்திற்காகவே இந்தியா தேசத்தை விளங்கும்படி செய்துகொண்டிருந்தாரென்றும், தர்ம பிரசாரத்தினாலேயே பிரபஞ்சம் ரக்ஷிக்கப்படுமென்று அந்த விஷயமான அநேகவித யத்னங்களை நடத்தினாரென்றும் தெரியவருகிறது. அநேக குணங்கள் ஒத்திருப்பதினால் இவர் ஸ்ரீமத் சங்கரபகவத்பாதாசாரியாவர்களின் அம்சமாகவே அவதரித்திருந்தாரென்று சொல்லலாம். வெகுவிதமான நியமங்களுடன் ஈசுவர உபாஸனை செய்து வந்தவரும், பரமசாந்தரும், நற்குலத்திலுதித்தவரும் வித்வத் சிரேஷ்டருமான, சிவகுருவின் தவத்தின் பயனாக ஸ்ரீமதாசார்ய பகவத்பாதர் அந்தப் பிராமணோத்தமரிடத்தில் ஜன்மமெடுத்தனர். ஸ்ரீ மேதாதக்ஷிணாமூர்த்தியை உபாசனம் செய்து அந்த

மூர்த்தியின் பிரசாதத்தைப் பற்றவெரும், குலீனரும், மேதாவிகளும், ஸத்கர்மாநுஷ்டான சீலரும் பண்டிதோத்தமருமான, குணிகல் இராமசாஸ்திரிகளின் தவப்பயனால் ஸ்ரீஸ்வாமிகள் ஜனித்தாரென்று தெரியவருகிறது. ஜகதீசனுடைய அம்சத்துடன் தம்மிடத்தில் ஆவிர்பாவம் செய்த தம் புத்திரனுடைய அப்புதத்தைக் கண்டுகளிக்கக்கூடிய பாக்யமில்லாதவராய் ஸ்ரீமதாசார்யாவர்களுடைய மூன்றாவது வயதில் பிதாவான சிவகுரு காலகதியடைந்தார். ஸ்ரீஸ்வாமிகளின் பிதாவான ராமசாஸ்திரிகளுடைய ஸ்திதியும் அப்படியே முடிந்தது. ஆசாரியரின் மாதாவான ஆர்யாம்பிகை ஆசார்யாவர்களுடைய பாலலீலைகளைக் கண்டும் அசாதாரணமான அவருடைய ஆச்சரியமான பாலசரிதங்களை அநுபவித்தும் ஆனந்தித்ததுபோலவே அபூர்வமான ஸ்ரீஸ்வாமிகளுடைய பாலலீலைகளால் பதிவிரதா சிரோமணியும் அவர்கள் மாதாவுமான லக்ஷ்மியம்மாள் ஆனந்தமடைந்திருந்தாள். ஸ்ரீமதாசார்யபாதர்கள் எட்டாவது வயதில் ஈச்வராக்ஞையினால் ஸந்யாஸாசிரமத்தைக் கைக்கொள்வதற்கு யத்தனித்து மாதாவின் அநுமதிக்காக சிந்தைகொண்டிருக்கையில் முதலை ரூபம்கொண்டு தைவம் உதவி வந்து பலாத்காரமாக மாதவின் அநுமதியைக் கொடுப்பித்து சன்னியாசாசிரமத்தைப் பெறும்படி செய்ததுபோல, மூத்த சகோதரரான லக்ஷ்மீநரசிம்ம சாஸ்திரிகளால் புத்ரனைவிட அதிகமாக ப்ரீதியுடன் ஆதரிக்கப்பட்டு அவருக்

குப் பிராணனாயிருந்த ஸ்ரீஸ்வாமிகளுடைய ஒன்பதாவது வயதில் பிரபலமான ஈசுவராக்ஞையினால் தற்செயலாய் சிருங்கேரி ஸ்ரீமடத்திய நரசிம்ம பாரதீஸ்வாமிகளவர்கள் ரூபமாய் உதவிவந்த அனுகூலதைவம் அந்த சாஸ்திரிகளால் செய்யப்பட்ட தடைகளை போக்கடித்து அவரிடமிருந்தே அனுமதி செய்வித்து இவர் சன்னியாஸாசிரமத்தைப் பெற்றுக்கொள்ளும்படி செய்தது. ஸ்ரீமதாசார்ய பகவத்பாதர் கர்ப்ப வாசம் முதல் பிரம்ம நிஷ்டரென்று அறிவதற்கு அந்த மகானுடைய ஒவ்வொரு நடத்தையும் பிரமாணமாகவிருந்தது. ஸ்ரீஸ்வாமிகளுடைய விஷயத்திலோவெனில் அவர் சன்னியாஸம் செய்துகொண்ட தினம் இராத்திரி அவர் குருக்களின் சமீபமாக கிருஷ்ணாஜினத்தில் படுத்திருந்த சமயத்தில் 'ஸர்வோஹம்' என்று மூன்றுதரம் ஸ்வப்ன வாக்கியம் சொன்னதை அவர் குருக்கள் கேட்டு ஆனந்தித்தார்களென்று தெரியவரும் சங்கதியே பெரிய சாக்ஷியாயிருக்கிறது. ஸ்ரீமதாசாரிய பகவத்பாதர் தாம் பிரம்ம ஞானிகளாயிருந்தாலும் ஈசுவராம்சபூதராய் ஸர்வக்ஞரென்று கியாதிபெற்றிருந்தாலும், ஸம்பிரதாயத்தை பரிபாலனம் செய்வதில் சிரத்தைகொண்டு கோவிந்த பகவத்பாதர் ஆசிரமத்திற்கு வந்து அவரிடத்தில் செய்த குருபக்தி முறை சங்கர விஜயக்கிரந்தத்தினால் விஸ்தாரமாகத்தெரியவருகிறது. குரு பக்தியை வெளியிட்ட விஷயத்தில் ஸ்ரீமதாசாரியரவர்களுக்கும் நம் ஸ்ரீஸ்வாமிகளுக்கும்

அதிக வித்யாசமிருந்ததாக அனுபவத்திஞல் தெரிய வில்லை. பிரம்ம ஞானிகளாயும் கேவலம் ஞானமார் க்கத்தையேற்படுத்துவதற்காகவே பூமியில் அவதரித் தவராயும் இருந்த ஸ்ரீபகவத்பாதர், சிவன், விஷ்ணு சக்தி, என்ற பேதமில்லாமல் ஸகுணோபாசனம் செய்து பக்திமார்க்கத்தை நிலை நாட்டினுரென்பது ஆசார்ய விஜயத்திஞலும், ஆசாரியர் இயற்றியதாக உலகத்தில் பிரசித்தியுள்ள அநேக ஸ்தோத்திரங்களாலும் வெளி யாகிறது. ஸ்ரீஸ்வாமிகளால் இயற்றப்பட்டிருக்கிற பக்திஸுதாதரங்கிணீ என்ற புத்தகத்திலுள்ள ஸ்தோ த்ரமாலிகைகளாலும் வெகுகால அனுபவத்துடன் அவர்கள் நிழலையடுத்திருந்த இத்தக்கிரந்தகர்த்தாவால் வரையப்பட்ட இப்புத்தகத்திய முக்கிய அத்தியாயங் களாலும், பக்தி மார்க்கத்தை தழுவும் விஷயத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் ஸ்ரீமதாசார்யர்களை முற்றிலும் ஒத்திருந்த தாகத்தெரியவருகிறது.

ஆசாரியாவர்கள், தென்கன்னடம் ஜில்லாவைச் சேர்ந்த சங்கர நாராயணமென்ற க்ஷேத்ரத்திற்கு வி ஜயம் செய்திருந்த சந்தர்ப்பத்தில் ஒரு பிராம்மண குமாரன் இறந்து கிடக்கையில் அந்த பாலகனுடைய தாய் தந்தையர் வெகுவாக துக்கப்பட்டு அழுதுகொ ண்டிருப்பதைக்கண்டு தம் யோக சக்தியினுல் அந்தப் பிராம்மணபாலனை ஜீவிக்கும்படி அனுக்கிரஹித்து அவன் தாய் தந்தையருக்கும் அந்தப்பக்கத்திலுள்ள ஜனங்களுக்கும் அளவில்லாத ஆனந்தத்தையும் ஆச்சரி

யத்தையும் விளைவித்தாரென்று ஆசார்ய விஜயத்திஞல் தெரிந்து இருக்கிறது. அந்த மகானுடைய பரமானுக்கிரஹத்தைப்பெற்றவரும், தபஸ்ஸித்தியுள்ளவருமான ஸ்ரீஸ்வாமிகள் கேரளதேசத்தில் ஆசிரமக்கிராமவாஸியும் பிறவியில் ஊமையுமாயிருந்த ஒரு பிராம்மண பாலகனுடைய ஊமைத்தனத்தைப்போக்கடித்து, அவனுடைய மாதாபிதாக்களை துக்கக்கடலினின்றும் கரையேற்றினர்கள். தீராத நோயால் வருந்திய ஜனங்கள் பலர் ஸ்ரீஸ்வாமிகளால் அனுக்கிரஹிக்கப்பட்டு சஞ்சீவினிக்கு ஸமமான விபூதிப்பிரசாதங்களை சேவிப்பதினல் வியாதி நீங்கி ஜீவித்திருக்கிறார்கள். சந்தானமில்லாதவரநேகர் மந்திரோபதேசங்களினலும், யந்திரம் கட்டிக்கொள்ளுவதினலும் ஸ்ரீஸ்வாமிகள் உபதேசமுறைப்படி நடத்திய தேவதாராதனங்களினலும் தோஷங்கள் நிவர்த்தியாகி புத்திரவந்தரென்று சொல்லும்படி இஷ்டசித்தியடைந்திருக்கிறார்கள். இந்த விதமாக வருந்திக்கொண்டு தம்மிடம் வந்த ஜனங்களை அனுக்கிரஹித்து ஆசார்ய பகவத்பாதாவர்கள் நினைவிற்கு வரும்படி செய்தார்கள். ஆசார்ய சிஷ்யர்களிலொருவரான கிரி என்பவர் அவர்கள் சன்னிதியில் வந்து அவர்களுடைய வஸ்திரத்தை தோய்ப்பது கால் பிடிப்பது முதலிய உபசாரங்களை பக்தியுடன் செய்து கொண்டு அவர்களிடத்தில் அத்யயனம் செய்துகொண்டிருந்தார். ஜன்மாந்திரத்திய ஸம்ஸ்காரத்தினலிவர் கேவலம் மந்தபுத்தியுள்ளவராகத்தோன்றிக்கொண்டி-

ருந்தார். ஒரு நாள் குரு சுச்ருஷையில் இருந்த கிரி பாடகாலத்திற்கு வரத் தாமதமாயிற்று. பரமதயாளுக்களான ஸ்ரீமதாசார்யர்கள் அவரை எதிர்பார்த்து பாடம் சொல்லுவதற்கு ஆரம்பம் செய்யாமலிருக்கையில் மகாபுத்திமானான ஸனந்தனர் என்னும் சிஷ்யர் கிரி மந்த புத்தியுள்ளவர், சாஸ்திரத்தில் பயிற்சி செய்யத் தகாதவர், அவரை எதிர்பார்த்து தாமதம் செய்வது அனாவசியகம், என்று தன் அகங்காரத்தை வெளிப்படுத்தினார். ஸர்வக்ஞரும் குருமூர்த்திகளுமான ஆசாரியரவர்கள் தம் சிஷ்யரான கிரிக்கு சதுர்தச வித்யைகளும் ஸ்வாதீனமாகட்டுமென்று ஸங்கல்பம் செய்த க்ஷணத்தில் கிரி அவர்களுடைய மந்தத்தன்மை தூரத்தில் விலகிப்போக நதிதீரத்திலிருந்த குருக்கள் சன்னிதிக்கு வரும்போது வேதாந்த ஸாரங்களடங்கிய சுலோகங்களால் ஸ்தோத்திரம் செய்துகொண்டு ஆசாரியரவர்களை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து அவர்களுடைய பரமானுக்கிரஹத்தைப் பெற்றாரென்றும் தோடக விருத்தத்தில் சுலோகங்கள் சொன்னதினால் தோடகாசாரியார் என்று பிரசித்தியடைந்து முக்ய பக்தர்களான நாலுசிஷ்யர்களில் ஒருவராக உத்தராம்னாய பீடத்தில் ஆசாரியரவர்களால் ஸ்தாபிக்கப்பட்டாரென்றும் தெரியவருகிறது. ஆசாரியானுக்கிரஹத்தினால் பாண்டித்யத்தை சுலபமாக சம்பாதித்த தோடகாசாரியரால் சொல்லப்பட்டிருக்கும் ஸ்தோத்திரம் சுருதிஸார ஸமுத்தரணம் என்ற பெயருடன் இப்

போதும் பிரசித்தமாயிருப்பதினால் மேலே சொன்ன இந்த சரித்திரத்தை நம்புவதற்கு எவ்விதமான சந்தேகத்தையுமடைவதற்கு அவகாசமில்லை. இந்தக் கிரந்தமெழுதுவோன் தன்னுடைய பன்னிரண்டாவது வயதில் ஜன்மாந்தர ஸம்ஸ்காரபலத்தினாலும் அநேக ஜன்மபுண்ய பரிபாகத்தினாலும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சன்னிதியில் சேர்ந்தான்.

கேவலம் புத்தியில் மந்தனும், வித்யாஹீனனுமான இந்த அல்ப பிராணிக்கு சரீரப்பிரயாசத்தினால் அந்த மகானுபாவரின் சேவை செய்வதற்கு அவகாசம் கிடைத்ததில் அந்த சேவையை தக்கமட்டில் செய்து அவர்களுடைய பூர்ண அனுக்கிரஹத்திற்கு பாத்திரனாகியும், பூர்வ கர்மத்தினால் விசேஷமாக சாஸ்திர அப்பியாஸம் செய்து ஞானத்தை சம்பாதித்துக் கொள்ள அவகாசமில்லாதவனாயிருந்தாலும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் அளவற்ற கருணையால் அனுக்கிரஹித்து தானும் மனுஷியனென்று தெரிந்துகொள்ளும்படி செய்தார்களென்ற ஸ்வானுபவம் இந்தக் கிரந்த லேககனுக்கு நன்றாக விருக்கிறது. இந்த பாகத்தை கேவலம் குருப்பிரசாதத்தின் பலத்தைக்கொண்டு இந்த லேககனால் இயற்றப்பட்டிருக்கிற "குருப்பிரஸாதமஹிமாதர்சம்" என்ற சரியான பெயருடன் அச்சிடப்பட்டிருக்கிற புஸ்தகத்தைப் பார்த்தவர்கள் தெரிந்துகொள்ளலாம். ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சங்கல்பத்திற்குத் தக்கபடி அவர்கள் நிர்யாணத்திற்கு பிறகு

சிருங்கேரிமடத்தில் ஆசிரம ஸ்வீகாரம் செய்துகொண்டு இப்போது வியாக்கியான பீடத்தில் நிலைகொண்டிருக்கிற ஸ்ரீஸ்வாமிகளுடைய சிறந்த சாஸ்திர பாண்டித்யத்திற்கும் அவர் அனுஷ்டானத்திற்கும், கற்பிக்கும் திறமைக்கும், புதிது புதிதாய் தோன்றக்கூடிய புத்தி சக்தி (பிரதிபா)க்கும் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய ஸங்கல்பமும் அவர்கள் பிரார்த்தனையும் முக்கியமான காரணங்களாகுமென்று, இப்போதைய ஸ்ரீஸ்வாமிகளுக்கும் இந்த லேககனுக்கும் சந்தேகமில்லாமல் தெரிந்திருக்கிறது. வைதிகம்போல் தோன்றக்கூடியதும் வேத விரோதியுமான அநேக மதங்களினால் மூடப்பட்டு நிலைகெட்டிருந்த நம் இந்த கர்மபூமியில் ஆசாரியரவர்கள் அவதரித்து தம்முடைய பாண்டித்யத்தாலும் மாகாத்மியத்தாலும் யோகசக்தியினாலும் கொஞ்சகாலத்தில் பாரதகண்டத்திய எல்லா விடங்களிலும் சஞ்சாரம் செய்து யுக்தியுடனும், பிரமாணங்களுடனும் கூடிய வாதத்தினாலேயே துர்வாதிகளை ஜயித்து தீங்கற்ற சுத்த அத்வைத மதத்தை ஸ்தாபனம் செய்தாரென்பது உலகப் பிரசித்தமாகவே இருக்கிறது. வெகுகாலமான பிறகு அவதரித்த இந்த ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நீண்ட காலமானதாலும் ஜனங்களுடைய துஷ்கர்மபரிபாகத்தாலும் அதர்மம் பரவிவந்து இந்த பாரதபூமி, பெரும்பாலும், சார்வாக மத சித்தாந்தத்தினால் வியாபிக்கப்பட்டிருப்பதாகத் தோன்றுகையில் இரண்டு மூன்று தடவை தேசசஞ்சாரம் செய்து, தம் நடவடிக்கையி

ஞலும், ஹிதோபதேசத்தினலும், யுக்திவாதங்களின லும், ஜனங்களுக்கு தைவபக்தியும், ஹிதாஹிதஞான மும், ஸத்கர்மம், ஸதாசாரம் இவைகளை யனுசரிக்கும் விஷயத்தில் சிரத்தையும் உண்டாகும்படி செய்வதின் மூலமாய் தர்மமார்க்கப்பிரசாரத்திற்கு மேன்மை செய்தார்களென்ற விஷயத்தில் சந்தேகமில்லை. தந்திரங் களெல்லாம் வைதிகரல்லாதவர்களின் அனுஷ்டானத் திற்காக ஈசுவரனுல் கல்பிக்கப்பட்டனவென்றும் ஆசார் யரவர்கள் சித்தாந்தம் செய்து, அதையனுசரித்திருந்த வைதிகர்களை திரஸ்காரம் செய்தாரென்று தெரியவரு கிறது. நம்ஸ்ரீஸ்வாமிகளவர்கள் வைதிகோக்தவிதானப் படி அநேகம் தேவாலயங்களை பரிஷ்காரம் செய்து வேதாதிகாரிகளான பிராம்மணர் மூலமாக வேதமந்தி ரங்களினுல் பூஜாதிகள் நடத்தும்படி ஏற்பாடு செய்து தாந்திரிக மார்க்கத்தை விலக்கினுர்கள். இதுபோலவே அநேக நடவடிக்கைகளினுல் ஆசாரியர்களுடைய உவ மையை யடைந்து சகல ஜனங்களினுலும் கௌரவிக் கப்பட்டு நமக்குப் புலப்பட்டு நம்மை கிருதார்த்தராக செய்த ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தர்மப்பிரசாரத்திற்காக செய்த அநேக சங்கல்பங்களில் மிகவும் முக்கியமான ஆசார்ய ஜன்மபூமி பரிஷ்காரமென்ற மகா காரியத்தை ஆசாரியரவர்களுடைய அனுக்கிரஹத்தினுல் பூர்த்தி செய்து கிருதகிருத்யராய் சிருங்கேரிக்குத் திரும்பி வந்தபிறகு கல்யாண நகரில் ஸத்வித்யா பிரசாரத்திற் காக வித்யாசாலையை ஸ்தாபனம் செய்வதைத் தவிர

வேறொன்றும் செய்யவேண்டியது பாக்கி இல்லை. அந்த வித்யாசாலை ஏற்படுத்தும் விஷயமாக தம் அதிகாரிகளுடன் சிருங்கேரியில் சாவகாசமாக ஆலோசனை செய்து, தத்காலத்திய ஆஸ்தான வருமானத்தில் முற்காலத்திய தர்ம ஸ்தாபகர்களின் உத்தேசப்படி பாரம்பரையாக ஏற்பட்டு நடந்துவருகிற ஆஸ்தான தர்ம காரியங்களுக்கு எவ்விதத்திலும் குறைவு வராமல் அவைகளை நடத்திக்கொண்டு ஸ்திரமாக வருஷமொன்றுக்கு ஐயாயிரம் ரூபாய்க்குக் குறையாமலும் ஆறாயிரத்துக்கு மேற்படாமலும் ஸத்வித்யாப் பிரசாரத்திற்கு விநியோகிக்கப்படவேண்டுமென்று பிரிவினை செய்து தீர்மானித்தார்கள். பிறகு காலதாமதம் செய்யத்தகாதென்று யோசித்து வைசாக சுக்லபஞ்சமி ஸ்ரீமதாசாரியாவதார தினமாகையால் இந்தவிரோதிகிருத் வருஷத்திய அந்த தினத்தில் அவர் ஞாபகமாகவும், ஆக்ஞா பரிபாலனத்திற்காகவும் பெங்களூர் சங்கரமடத்தில், வித்யாசாலை ஸ்தாபனம் செய்யத்தக்கதென்றும், லௌகிகமான திரவிய சௌகரியத்திற்குத் தக்கபடி ஆரம்பத்தில் பட்டுபேர் வித்தியார்த்திகளையும் இரண்டு உபாத்தியாயர்களையும் சேர்த்து, பூர்வ உத்தர மீமாம்ஸா சாஸ்திரங்கள் படிப்பதற்காக இரண்டு வகுப்புகள் ஏற்படுத்தி அந்த இரண்டு பாகங்களையும் மாத்திரம் அப்பியாசம் செய்யும்படி நிபந்தனையுடன் பாடசாலை ஆரம்பிக்கத் தக்கதென்றும் அறிவித்து வேதாத்யயனம் செய்தவராயும் கர்மானுஷ்டான சீலராயும் பிரசித்த

ரான பண்டிதர்களிடத்தில் வேதாந்த சாஸ்திர அப்பி யாசம் செய்து அந்த பாகத்தில் உயர்ந்த பாகத்தை அப்பியாசம் செய்வதற்காகத் தம்மிடத்தில் வந்திருந்த வள்ளுர் சுப்பிரமணிய சாஸ்திரிகளை அத்வைத வே தாந்த சாஸ்திரபாடம் சொல்லுவதற்காகவும் பழமா நேரிக் கிராமவாஸிகளான ராமசாஸ்திரிகளிடத்தில் பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தை பூர்த்தி செய்து சரி யான பண்டிதரென்று கியாதியுள்ளவரும் உத்தர மீமாம்ஸா சாஸ்திரத்தை அப்பியசிக்கத் தம்மிடம் வந் திருந்தவருமான வைத்யநாத சாஸ்திரிகளை பூர்வ மீமாம்ஸா சாஸ்திரபாடம் சொல்லுவதற்கும் நியமனம் செய்து மேற்கண்ட தினத்தில் பெங்களூர் நகரவாஸி களுக்குள் முக்கியமான சிலரை வரவழைத்துக் கொண்டு பாடசாலையை ஆரம்பிக்கும்படி ஆஸ்தான பண்டித ரான குணிகல் ராமசாஸ்திரிகளை அனுப்பினார்கள்.

இந்த சாஸ்திரிகள் இரண்டு பண்டிதர்களுடனும் கூட பெங்களூருக்கு பிரயாணம் செய்து மைசூர் ராஜ்ய த்தில் பிரசித்தராயிருந்த பூர்ணய்யர் வம்சஸ்தரான ஸர். பி. என். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் திவான் மாத வராயர் ராஜ்யதந்திர நிர்வாஹ சபையில் சபிகர் (கௌன் ஸில் மெம்பர்) ஆயிருந்த நஞ்சுண்டய்யா இவர் முத லான லௌகிக மகாஜனங்களையும் பண்டிதர்களையும் பெ ங்களூர் சங்கரமடத்திற்கு வரவழைத்துக்கொண்டு ஸ்ரீ சுவாமிகளவர்களுடைய ஆக்ஞையை மகாஜனசபையில் தெரிவித்துக்கொண்டார். அந்த சமயத்தில் சபையில்

அத்யக்ஷதையை வஹித்திருந்த ஸர். பி. என். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்களை அநேக திருஷ்டாந்தங்களைக்கொண்டு ஸ்ரீமத்பகவத்பாதாவர்களுக்கு ஒப்பாக நிரூபித்து அவர் குணங்களையும் அவரால் தர்மரக்ஷணத்திற்காக செய்யப்பட்ட அநேகப்ரயத்னங்களையும் சபையிலிருந்தவர்களுக்கு ஸ்மரணம் செய்வித்து சபையோர் வகையிலும் பரதகண்டத்திலுள்ள ஆஸ்திகஜனங்கள் வகையிலும் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு ஸாஷ்டாங்கநமஸ்காரம் செய்து தன்னுடைய தன்யதாவாதத்தை ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சன்னிதானத்தில் விக்ஞாபனம் செய்யும்படி ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆக்ஞையால் நியமிக்கப்பட்டு வந்த ராமசாஸ்திரிகளிடத்தில் தெரிவித்து அந்த தினத்திலேயே சாலி 1834 விரோதிகிருத் வருஷத்திய வைசாக சுக்கில பஞ்சமீ (1911) பூர்வ உத்தர மீமாம்ஸா சாஸ்திரபாடத்திற்கு ஆரம்பம் செய்வித்தார். பாடசாலை ஆரம்பத்தில் சேர்க்கப்பட்ட எட்டு பேர் வித்யார்த்திகளில் நாலு பேர் சிருங்கேரி ஸ்தலத்தாரும் அங்குள்ள ஸம்ஸ்கிருத பாடசாலையில் தர்க்க வியாகரண சாஸ்திரங்களில் சிலகாலம் பரிசயம் செய்தவராயுமிருந்தனர். மூன்று பேர் பாலக்காட்டுப்பக்கத்தினரும் இதர சாஸ்திரங்களில் பரிசயம் செய்தவருமாயிருந்தனர். ஒருவர் மைசூர் ஸ்தலத்தினர். இந்த வித்யார்த்திகளுக்கு மாதம் 20 ரூபாய் வீதம் சம்பளம் கொடுப்பதாக ஏற்பாடுசெய்து திவான் மாதவராயரால் கட்டப்பட்டு ஸ்ரீ



பங்களூர் வித்யாசாலையின் உட்புறம்.

ஸ்வாமிகளவர்கள் சன்னிதியில் ஸத்வித்யாப் பிரசாரத்திற்காக உபயோகிக்கும்படி ஒப்புவிக்கப்பட்டிருந்த அக்ரஹாரவீடுகளில் எல்லா சௌகர்யங்களையும் செய்வித்து வித்யார்த்திகளுடைய வாஸத்திற்காக அநுகூலப்படுத்தியாயிற்று. இந்தமாதிரி ஆரம்பம் செய்யப்பட்ட பாடசாலையில் பாடசாலைநிபந்தனைகளையனுசரித்து பழைய சம்பிரதாயப்படி எட்டு வருஷகாலம் சாஸ்திர ஆராய்ச்சி செய்து பாண்டித்யத்தை யடைந்த வித்யார்த்திகளை இப்போதைய ஸ்ரீகுருஸ்வாமிகள் ஆக்ஞைப்படி பிரசித்தரான பண்டிதர்களை பரீக்ஷகராகத் தருவித்துக்கொண்டு வெகுவாய் பரீக்ஷை செய்யப்பட்டது. பரீக்ஷைக்கு வந்தவர்களில் நாலு வித்யார்த்திகள் உயர்தரத்திலும் மூன்று பேர் நடுத்தரத்திலும் தேறினார்கள். சென்ற சித்ரார்த்தி வருஷத்திய நவராத்திரி மஹோத்ஸவகாலத்தில், தேறிய வித்யார்த்திகளுக்கு ஸ்ரீசாரதாம்பா ஸன்னிதானத்தில் தோடா சால்வைகளால் சம்மானம் செய்து 'பண்டிதப்பிரவரர்' என்று ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தம் வாக்கினால் புகழ்ந்து யோக்யதா பத்திரம் கொடுத்தனுக்கிரஹித்தார்கள். இந்த பண்டிதர்களுக்குள், மூன்றுபேருக்கு மாதசம்பளம் கொடுத்து அவர்களை ஆஸ்தானபண்டிதர்களாக நியமனம் செய்தார்கள். பாலக்காட்டினின்றும் வந்த மூன்றுபேரில் ஒருவர் சென்னை ராஜதானியில் பிரசித்தி பெற்றிருந்த வி. கிருஷ்ணஸ்வாமி அய்யருடைய விசேஷ சகாயத்தினால் அபிவிருத்தி யடைந்துகொண்டிருக்

கிற மைலாபூர் ஸம்ஸ்கிருத பாடசாலையில் உபாத்தியா யராகவும், மற்றொருவர் பி. ஆர். சுந்தரய்யரால் அவர் ஜன்மபூமியில் ஸ்தாபிக்கப்பட்டு வளர்ந்து வந்துகொண் டிருக்கிற ஸம்ஸ்கிருத பாடசாலையில் உபாத்தியாயராக வும், இன்னொருவர் கொச்சி ஸம்ஸ்தானத்தைச் சேர் ந்த, சித்தூர் கிராமத்தில், "தர்மசீல" கிருஷ்ணய்ய ரால் போஷிக்கப்பட்டிருக்கிற வேதசாஸ்திர பாடசா லையில் அத்யாபகராகவும், நியமனம் செய்யப்பட்டி ருக்கிறார்கள். மற்றுமொருவருக்கு மைசூர் ராஜகீய புஸ்தகபாண்டார(Library)த்தில் ஸ்தானம் கிடைத்தி ருக்கிறது. இந்தவிதமாக ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சங்கல்பப்படி ஸத்வித்யாப் பிரசாரத்திற்காக ஏற்படுத் திய வித்யாசாலையில், சம்பிரதாய முறைப்படி சாஸ் திர அப்பியாசம் செய்து தேர்ந்த ஞானத்தைத் தேடி, பிரமாண்யத்திற்கு யோக்யமான ஜீவிகையும் ஏற் படுத்தியதால் அந்த பண்டிதர்கள் நல்ல நடத்தையுள் ளவராயிருக்கிறார்கள். இது ஸ்ரீஸ்வாமிகளவர்கள் செய்த சங்கல்பத்தின் மாகாத்மியமே தவிர வேறல்ல. இப்பால் இரண்டாவது தடவை எட்டு வித்யார்த்தி களை பாடசாலையில் சேர்த்து அவர்களுக்கு சாஸ்திரா ப்பியாசம் செய்வித்துக்கொண்டு வருவது மூலமாய் பெங்களூர் " भारतीयगीर्वाणप्रौढविद्याभिवर्धिनी " பாடசாலை மேன்மையுடன் உயர்ந்த ஸ்திதியில் நடந்துவருகிறது.

பூமியில் நடத்தவேண்டிய காரியங்களை முடித் துக்கொண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் தைவ சங்கல்பத்

தினால் மறையவேண்டிய காலம் நெருங்கி வந்ததோ என்று சந்தேகிப்பதற்கு அனுகூலமாக அறிகுறிகள் ஒன்றொன்றாகத் தென்படவாரம்பித்தன. பிரசித்தரும், தேஜஸ்விகளுமான மகா புருஷர் மறைந்துபோகக்கூடிய காலம் சமீபத்தில் நேருவதற்கு முன்னதாக துர்நிமித்த அபசகுனங்கள் ஏற்படுவதுண்டென்று உலகப்பிரசித்தம். அதற்குத் தக்கபடி ஸ்ரீசாரதாம்பிகை ஆலயம் அக்கினிக்கிரையானது ஒரு துர்நிமித்தமென்று ஜனங்களுக்குத் தோன்றும்படியாயிற்று. அயல் நாட்டு வித்யையைக்கற்பதாலும் ஆடையாபரணங்களாலுமன்னிய தேசத்தாரின் சகவாசம் கூட்டுறவு முதலியவைகளாலும் பிரதிக்ஷணமும் பெருகிக்கொண்டுவருகிற புது நாகரீகம் பிரவேசிப்பதற்கு இடமில்லாமல் வனபூமியில் தூரத்திலிருந்த சிருங்கேரியில் காணக்கூடிய எவ்விதமான காரணமும் இல்லாமலிருந்தாலும் காலஸ்வபாவத்தினால் அங்குள்ள ஜனங்களும் கூட தம் குலதர்மங்களைவிட்டு இஷ்டம் போல் நடந்து கொள்ளுகிறார்களென்றும் இதற்கு சகாயமாக சிறியக்கிராமமான சிருங்கேரியில் கூட காபிக்கடைகளும், தின்பண்டங்களைத் தயார் செய்து வியாபாரம் செய்யக்கூடிய கடைகளும் ஏற்பட்டிருக்கிறதென்றும் பிராம்மணர்களில் அநேகம் பேர், காலையில் ஸ்நாநம் சந்தியாவந்தனம் முதலிய நித்யகர்மங்களை விட்டு விலைக்கு வாங்கிய ஆகார பதார்த்தங்களை உட்கொள்ளுகிறார்களென்றும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காதில் விழுந்துகொண்டிருந்தது.

பிராம்மணரல்லாதவர்களின் சம்பந்தம் எவ்விதத்தி லும் உண்டாகாமலிருக்கும்படி நிர்ப்பந்தங்கள் ஏற்ப டுத்தி முன்னோர்களால் பிராம்மணர் வாசத்திற்காக மாத்திரம் ஏற்படுத்தப்பட்டிருந்த அக்கிரகாரத்தின் மத்தியில், கெட்ட நடத்தையுள்ளவரும், மதாந்தரத் தில் சேர்ந்தவருமான ஜனங்களுக்குத் தடையின்றி வாசம் செய்வதற்கு அவ்விடத்திய ஜனங்களால் இடம் கொடுக்கப்பட்டதாக ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்குத் தெரி யலாயிற்று. இது முதலிய அதர்ம காரியங்கள் தர்ம அநுஷ்டானத்திற்கு மூலமான சிருங்கேரியில் கூட வெளிப்படையாக நடமாடுவதற்கு வந்திருந்தது னால் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மனதில் உண்டான திகில் தினந்தோறும் அவர்களின் ஆரோக்யத்தைக் குறை த்துக்கொண்டே வந்தது. இவருடைய உத்ஸாஹ மும் சந்தோஷமும், எங்கேயோ காணாமற்போய் விட்டது. வேதாந்த சாஸ்திர அப்பியாசத்திற்காக வந்து கற்றுக்கொண்டிருந்த சிஷ்யர்களுக்கு பாடம் சொல்லும் விஷயத்தில் இவர்கள் எப்போதும் அசட் டையாயிருந்ததில்லை. அப்படிப்பட்ட ஸ்ரீஸ்வாமிகள வர்களுக்கு அந்த விஷயத்திலும் கூட உத்ஸாஹம் குறைந்துகொண்டு வந்தது. இந்த சந்தர்ப்பத்தில் இங்கே அடியில் எழுதியிருக்கிற கீதம் ஸ்ரீசாரதாம்பி கையைப் பிரார்த்திக்கையில் அந்த காலத்திற்கேற்ற படி அம்பிகையின் ஆக்ஞை ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு

ஸ்வப்னத்தில் கிடைத்து அவர்கள் பாடம் சொல்லுவ தையும் நிறுத்தி இருக்கலாம்.

किं पाठयेयं लघुचन्द्रिकां वा किं वा त्यजेयं सकलप्रपञ्चम् ।
स्वप्नेऽद्य मे ब्रूहि किमत्र कार्यं डोलायितं मामकमम्ब चेतः ॥

இந்தவிதமாக ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய நிலைமை பக்கத்திலுள்ளவர்களுக்கு ஆதங்கத்தை யுண்டுபண் ணக் கூடியதாய் அந்த ஜனங்களுக்கு உத்ஸாஹமும் சந்தோஷமும் குறைந்துகொண்டேவந்தது. இந்த சந்தர்ப்பத்தில் சிஷ்ய பரிக்ரஹம் செய்து அவரிடத் தில் ஸம்ஸ்தான பாரத்தை ஒப்புவித்து அந்த சம்பந் தத்திலிருந்து விலக்கிக்கொள்ள வேண்டுமென்ற அபிப் பிராயம் அதிகமாக ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு உண்டா யிற்று. சிலவருஷ காலமாக தம் மனதில் தம் ஸ்தானத் தில் வருவதற்கு யோக்யரென்று தீர்மானித்துக்கொ ண்டிருந்த சிருங்கேரி நரஸிம்ம சாஸ்திரிகளுக்கு ஸன் னியாஸம் கொடுப்பித்து அவரை அந்த ஸ்தானத்தில் பிற்கால அதிகாரிகளாக செய்யத் தக்கதென்று நிஷ் கர்ஷை செய்தார்கள். இவ்விதமான தம் அபிப்பிரா யத்தை, மைசூர் தேசத்திற்கு அதிபதியும், தமக்கு மிக ஆப்தராயுமான மைசூர் மகாராஜா கிருஷ்ண ராஜப் பிரபுக்களுக்கு அறிவித்து, பெங்களூர் சங்கர மடத்திய பாடசாலையில் சாஸ்திர அத்யயனம் செய்து கொண்டிருந்த நரஸிம்ம சாஸ்திரிகளை மகாராஜர் திருஷ் டிக்கு கொண்டுவரத்தக்கதென்று நிரூபித்து அந்த ரங்க சிஷ்யரான குணிகல் இராமசாஸ்திரிகளை அனுப்

பிணார்கள். இவர் சிருங்கேரியிலிருந்து பெங்களூருக்கு வருகையில் மகாராஜர் பெங்களூரிலேயே வாசம் செய்துகொண்டிருப்பதாகத் தெரிந்து அங்கேயே அவர்களைக்கண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆஜ்ஞையை அறிவிக்க, குருபக்தசிரோமணிகளான ஸ்ரீமகாராஜர் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய ஸ்திதியை அறிந்து வியசனங்கொண்டு அவர்களுடைய ஆக்ஞைப்படி நடத்தும் விஷயத்தில் ஸித்தராயிருக்கிறேனென்று அந்த சாஸ்திரிகள் மூலமாய் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு அறிவித்தார்

இதற்குள் காலஞ் சமீபித்துவர விரோதிகிருத் வருஷம் மாக சுக்கில சப்தமி தினம் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு இருமல் ஆரம்பமாயிற்று. சிலவருஷகாலம் முதற்கொண்டு சீதகாலத்தில் ஆரம்பமான இருமல் அநேகமாக 2, 3, மாதகாலம் வரையில் அவர்கள் வாக்கினால் வியவகாரம் செய்வதற்கு மாத்திரம் கொஞ்சம் தடையாயிருந்துகொண்டிருந்தது. அதுபோலவே இக்காலத்திலும் இருமல் தொடங்கியிருப்பதென்று தெரிந்துகொள்ளும்படியிருந்ததே தவிர விசேஷமெதுவுமிருக்கவில்லை. அப்படியிருந்தாலும் முந்திய வருஷங்கள்போல் கிரமம் கிரமமாக குறையவேண்டிய உபத்திரவம், ஒவ்வொரு நாளும் அதிகமாகிக்கொண்டு வந்தது. பால்குன சுத்த பூர்ணிமை தினம் ருதுவில் செய்யக்கூடிய க்ஷௌரம் நடத்திக்கொண்டு பிறகு துங்கா நதியில் ஸ்நானம் செய்து மேலே வந்தவுடனே நாபி தேசத்திற்குக் கீழேயுள்ள நாடிகளில் சைத்யம் சேர்

ந்து வாயு சஞ்சாரத்திற்குத் தடையுண்டாகி நேராக நிமிர்ந்து நடப்பதற்குத் தொந்திரவு செய்தது. இந்த தருணத்தில் மைசூர் தேசத்திய ராஜகீய ஔஷத சாலையில் பிரதான அதிகாரிகளாயிருந்த அச்சுதராயர் சஞ்சாரக்கிரமமாய் சிருங்கேரிக்கு வந்து உதவினார். இவர் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஷயத்தில் அதிகமான கௌரவமும் பக்தியும் செய்துவந்தவராயும், முந்தி சில சந்தர்ப்பங்களில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அஸ்வஸ்தராயிருக்கும்போது அவர்களுடைய சரீரஸ்திதியை நன்றாகத் தெரிந்துகொண்டவராயுமிருந்ததினால் உபாயமான சிகித்சை இரண்டு மூன்று நாள் செய்வதற்குள் ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு உண்டாயிருந்த உபாதி தீர்ந்து அனுகூலத்திற்கு வந்தது. இருமல் உபத்திரவம் நிற்கவில்லை. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சரீரஸ்திதியைப்பரீக்ஷை செய்த அந்த வைத்யர் ஸ்ரீஸ்வாமிகளவர்களின் நிர்யாணகாலம் சமீபமாகவே இருக்கலாமென்று ஸூசனம் செய்துவிட்டுப்புறப்பட்டுப்போனார். பால்குன பகுளத்திரயோதசி இராத்திரி ஸ்நானம் ஆன்னிகம் செய்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சயனத்திற்காகப்புறப்பட்டமேல் சுமார் பத்து மணிக்கு ஆரம்பமான இருமல் மிகவும் பயங்கரமாயும் இடைவிடாமலும் ராத்திரி ஒரு மணிவரையிலும் பிடித்தது. மறுநாள் இந்த லேககன் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அபிப்பிராயப்படி சிஷ்ய பரிக்ரஹம் செய்யத்தக்க சமயம் சமீபித்து வந்திருக்கலாமென்று பிரஸ்தாபிக்கையில் மகாராஜரிடத்தில் அ

றிக்ஷை செய்து பங்களூரில் சாஸ்திர அப்பியாசம் செய்துகொண்டிருக்கிற நரசிம்ம சாஸ்திரிகளை அழைத்து வரும்படி ஆணிகல் ராமசாஸ்திரிகளுக்குக் கடிதம் அனுப்பவேண்டுமென்று நிரூபித்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நிரூபித்தபடி அவர்கள் சீரஸ்திதியை விபரமாக தெரிவித்து கடிதமும் மனுஷியன் மூலமாக அனுப்பலாயிற்று. பால்குன பகுள அமாவாசையில் மத்தியான்னத்திற்குமேல் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சன்னிதியில் சம்பாஷணை செய்துகொண்டிருந்த இந்த லேககன் முதல் நாள் மைசூருக்கு அனுப்பியிருக்கும் கடிதப்படி ராமசாஸ்திரிகள் எவ்வளவு சீக்கிரமாக வந்தாலும் மூன்று நாளாகுமென்றும் அதற்குள்ளாக சிஷ்யபரிக்ரஹம் செய்யவேண்டிய அவசியம் உண்டாகுமானால் சமீபத்திலிருப்பவரில் ஒருவரைக் குறிப்பிட்டிருப்பது அனுகூலமென்றும் பிரஸ்தாபிக்கையில் இந்த லேககன் திருஷ்டியில் அர்ஹரானவர் யாரென்று ஸ்ரீஸ்வாமிகளவர்கள் கேட்டார்கள். மூன்று ஜனங்களைக் குறிப்பிட அவர்களில் ஒருவன் மந்தபுத்தியென்றும் வித்யாவந்தனாக மாட்டானென்றும் விலக்கப்பட்டான். மற்றொருவரை அதிசுத்தமான ஆசார்யஸ்தானத்தில் நியமனம் செய்வதைக் காட்டிலும் அந்த ஸ்தானத்தை காலியாகும்படி விடுவதே சிலாக்கியமென்று நிரூபித்தார்கள். மூன்றாவன் விஷயத்தில் எவ்விதமான அபிப்பிராயத்தையும் வெளியிடாமல் "முன் சொல்லப்பட்ட நரசிம்ம சாஸ்திரிகளை

ராமசாஸ்திரிகள் அழைத்துவருவாரன்றோ? அவர் வரட்டும்" என்று இந்த லேககனுக்கு பதிலளித்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு மிகவும் ப்ரீதிகரமான "ஆத்ம வித்யா விலாஸம்" என்னும் கிரந்தத்தை வாசிக்கும்படி ஆஜ்ஞாபித்து அர்த்தத்தை அனுசந்தானம் செய்து கொண்டு ஆனந்தபரவசராயிருந்தார். மேற்கண்ட இந்த சந்தர்ப்பத்திலும் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் இந்த லேககனுக்கு ஆஜ்ஞாபித்திருந்த மற்ற சங்கதிகளாலும் நரசிம்ம சாஸ்திரிகளையல்லாமல் வேறு எவரையும் சிருங்கேரி மடத்தில் அதிபதிகளாக செய்வதில் ஈசுவர ஆஜ்ஞையும் சங்கல்பமும் இல்லையென்று வெளியாகி அந்த ஆலோசனை நிறுத்திக்கொள்ளப்பட்டது.

பரீதாபி வருஷம் சைத்ர சுக்ல பிரதமை மங்கள வாரம் காலை எட்டுமணி சமயத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆசனத்திலுட்கார்ந்திருந்தபடியே ஆத்மத்யான நிஷ்டராயிருக்கையில் அவர் சிரஸு பின்புறம் சாய்ந்து கண்கள் பாதி திறந்து அசையாமலிருந்ததைக் கண்டு சமீபத்திலுள்ள பரிஜனங்கள் கலவரப்பட்டு சந்திரமௌளீசுவர பூஜை செய்துகொண்டிருந்த இந்த லேககனுக்கு அறிவித்தார். இந்த லேககன் பூஜை செய்வதை விட்டு ஸ்ரீசுவாமிகளவர்கள் சமீபத்திற்கு போய்ப் பார்த்தான். அவர் ஆத்மத்யானத்தினால் சரீரத்தை மறந்து சமாதியிலிருப்பதை அநேகம் தடவை பார்த்திருந்த இந்த லேககனுக்கு ஸ்ரீசுவாமிகளவர்கள் ஸ்திதி பயத்தை உண்டுபண்ணவில்லையாகை

யால் சப்தம் செய்யாமல் அவர்கள் சமீபத்திலேயே காத்துக்கொண்டிருந்தான். சுமார் அரைமணி நேரமான பிறகு சமாதியிலிருந்து வெளிமுகமாகி ஸ்ரீசுவாமிகளவர்கள் சமீபத்திலிருந்த இந்த லேககனைக் கண்டு பூஜாதிகளெல்லாம் முடிந்தனவோ என்று வினவியபோது நடந்த சங்கதிகளை அறிவித்தான். அதைக்கேட்டு "அஜ்ஞஜனங்களால் அனர்த்தமுண்டாகிறது. நமக்கு சிரமமாயிருந்ததினால் சரீரத்தை மறந்து ஆத்மசுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தோம். அக்காலத்தில் உண்டாயிருக்கக் கூடுமான சரீரவியாபாரத்தைக்கண்டு வேறுவிதம் நினைத்து உன்னைக் கலவரப்படுத்தியிருப்பார்கள்." என்று ஸ்ரீசுவாமிகளவர்கள் நிரூபித்தார்கள். அந்த தினமெல்லாம் ஸ்ரீசுவாமிகளவர்களுக்கு சிரமம் அதிகமாகவே இருந்ததாக தோன்றிக்கொண்டிருந்தது. ஸ்நானம் செய்து தம் ஆஹ்நிகங்களை மாத்திரம் சுருக்கமாய் செய்தார்களேயல்லாமல் அன்று பாகசாலையில் வந்து பிக்ஷை எடுத்துக்கொள்ளவில்லை. இதரர்களுடன் சம்பாஷணம் செய்வதையும் குறைத்துக்கொண்டார்கள். தம்முடைய தர்சனத்திற்காக வரக்கூடியவர்களை பரிஜனங்கள் அறிக்கை செய்தபிறகு தலையை நிமிர்த்துக்கொண்டு மந்தஹாஸத்தினால் மாத்திரம் வந்தவர்களை சமாதானப்படுத்தி அனுப்பிக்கொண்டிருந்தார்கள்.

மறுநாள் அதாவது சாலி 1835 பரீதாபி வருஷத்திய சைத்திர சுத்த துவிதியை புதவாரம் காலை 6

மணிக்கு சரியாய் ஸ்நானம் செய்தார்கள். முதல்நாள் சுத்தமாய் ஆகாரம் எடுத்துக்கொள்ளாமலிருந்ததினால் மறுநாள் இந்தலேககனுடைய பிரார்த்தனையை அங்கீகரித்து க்ஷீராஹாரத்தை உட்கொண்டு சுகமாயிருக்கும் ஆஸனத்தில் உட்கார்ந்தார்கள். சுமார் கால்மணிக்குள் தம் சரீரத்தை மறந்து தியானத்திலிருந்தார்கள். 7 மணிமுதல் கலவரத்துடன் ஸ்ரீஸ்வாமிகளவர்களைப் பார்ப்பதற்கு வந்தவர்களெல்லாம் அவர்கள் ஸ்திதியைக்கண்டு முன் தினம் ராத்திரிநித்திரை இருக்கவில்லை ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நித்திரை செய்கிறார்களென்றும் முதல்நாளைக்காட்டிலும் ஆரோக்யம் தோன்றுகிறதென்றும் பேசிக்கொள்ள ஆரம்பித்தார்கள். இந்த லேககனுக்கு அது நித்திரையல்லவென்று தெரிந்தது. சுமார் ஒன்பதேகால் மணிவரையில் ஆத்மத்யானசுகத்தை அனுபவித்துக்கொண்டிருந்த ஸ்ரீஸ்வாமிகளவர்களுக்கு பிராரப்தகர்மவசத்தினால் இருமல் ஆரம்பித்தது. இந்த இருமல் அரைமணிநேரம வரையில் தொடர்ச்சியாயிருந்து அது நின்றவுடனே ஒருவிதமான வாத உபத்திரவம் தொடங்கி கை கால் முதலிய எல்லா அங்கங்களையும் அடிக்கடி இழுத்து இழுத்து தொந்திரவு செய்துகொண்டுவந்தது. சுமார் பதினொருமணிக்கு எல்லாவிதமானதொந்திரவுகளும் விலகிப்போய் விட்டன. பிறகு களைப்புடன் பத்மாஸனத்தில் தலையை குனிந்துகொண்டு அசையாமல் உட்கார்ந்துகொண்டிருந்த ஸ்ரீஸ்வாமிகளவர்கள் பதினொருமணி முப்பது

நிமிஷத்திற்கு சரியாக ஸ்வபாவமான தம் மந்தஹாஸத்தை பிரகடனம் செய்துகொண்டு ஸர்வவியாபகமான பரப்ரம்மத்தில் லீனானார். (ஒன்றாய்ச்சேர்ந்துகொண்டார்). சரீரம் தானாகவே பின்புறம் சாய்ந்துபோவதைக்கண்டு சமீபத்திலுள்ளவர்கள் சந்தேகப்பட்டு பூமியில் படுக்கவைத்தார்கள். இந்த யோகிவரரின் நிர்யாணக்கிரமம் எங்கும் காணாத அபூர்வரீதியிலிருந்ததினால் திடீரென்று நிச்சயிப்பதற்கு எவருக்கும் தைரியமுண்டாகவில்லை. அரைமணிநேரம் வரையில் எதிர்பார்த்துக்கொண்டிருந்த பிறகு ஸ்ரீசுவாமிகளவர்கள் விதேஹகைவல்யத்தை அடைந்தார்களென்று நிச்சயம் செய்தார்கள்.

அஜாதசத்ருக்களும் ஸர்வபூதகாருண்ய பூர்ணரும் தர்சனமாத்திரத்தினால் ஜனங்களுடைய ஸந்தாபத்தை விலக்கக்கூடியவருமாயிருந்த ஸ்ரீசுவாமிகளவர்களுடைய வியோகம் திடீரென்று ஸம்பவித்ததில் சகலப்பிராணிகளுக்கும் மிகவும் ஸஹிக்கமுடியாதகாரியமென்று சொல்லுவதில் என்னவிசேஷம்?

இவர்கள் மடத்திலிருந்து தெற்கு திசையில் தூங்கா நதிக்கு அப்புறம் நரசிம்மவனமென்ற பெயருடன் ஆசிரமம் ஏற்படுத்திக்கொண்டு அதிலேயே வாசம் செய்துகொண்டிருந்தார்களென்று முந்தியே சொல்லியிருக்கிறது. அந்த தபோவனத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் கல்பித்துக்கொண்டிருந்த தியான மந்திரத்திற்குத் தென்பாகத்தில் தம் சரீரத்திற்கு அதிஷ்டானம் செய்

யத்தக்கதென்றும், ஐந்து வருஷகாலம் இடைவிடாமல் தாம் ராத்திரிகாலத்தில் சயனத்திற்குப் போகுமுன் ஆராதித்துக்கொண்டிருந்த நர்மதா பாணலிங்கத்தை தம் அதிஷ்டானத்திலேயே பூஜிக்கவேண்டியதென்றும் சில காலத்திற்கு முந்தியே ஆக்ஞாபித்திருந்த பிரகாரம் நிறைவேற்றப்பட்டது.

மறுநாள் மத்தியானம் ஒருமணிக்கு டாக்டர் கிருஷ்ணஸ்வாமியய்யர், நரசிம்மசாஸ்திரிகள், இவர்களுடன் குணிகல் ராமசாஸ்திரிகள் மைசூரிலிருந்து வந்து சேர்ந்தார். அவர் வருவதற்குள்ளாகவே தைவசங்கல்பத்தினால் காரியம் வேறுவிதமாக நடந்துபோய் விட்டதினால் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் முன் செய்திருந்த ஆக்ஞைப்படி நரசிம்மசாஸ்திரிகளுக்கு ஆசிரமஸ்வீகாரம் செய்விப்பதை அப்போது நிறுத்திக்கொள்ளலாயிற்று. ஸ்ரீசுவாமிகளுடைய நிர்யாணமான மறுநாள், அவர்கள் காலத்தில் அவர்கள் ஆக்ஞையை அனுசரித்து 23 வருஷகாலம் இடைவிடாமல் சம்ஸ்தான காரியங்களை நடத்தினவனும் அந்திய காலத்தில் சம்ஸ்தானத்தை சம்பந்தித்த மேல் ஏற்பாடு என்னவிதம் செய்யவேண்டுமென்பதை ஸ்ரீசுவாமிகளவர்களின் முகத்திலிருந்து வந்த வசனத்தினாலேயே தெரிந்துகொண்டிருந்தவனுமாயிருந்த இந்த லேககன் மைசூர் வந்து ஸ்ரீமன் மகாராஜரைக் கண்டு அவரிடத்தில் எல்லா சங்கதிகளையும் அறிவித்து அவர் உத்திரவைப் பெற்றுக்கொண்டு ஸ்ரீசுவாமிகளவர்கள் நிர்யாண சம்பந்தமாய் சம்ஸ்தான

வழக்கப்படி நடத்தவேண்டிய ஆராதனை முதலிய ஸத்
காரங்களை நடத்துவதற்காக சிருங்கேரிக்குத் திரும்பி
வந்தான்.

மகாராஜா அவர்கள் தம்முடைய சகலவிதமான
க்ஷேமலாபங்களுக்கும் மூலகாரணமாயும் தம் முன்
னேற்றத்தைக்கண்டு அளவிலா ஆனந்தத்தை அனுப
விக்கக்கூடியவராயும் தம் ராஜ்யத்திற்கு மகுடம்போல்
அலங்காரபூதராயும் இருந்த மஹாமஹிமை பொருந்திய
ஸ்ரீசுவாமிகளுடைய வியோகத்திற்காக வெகுவாக
வருத்தப்பட்டு அவர்கள் ஆக்ஞைப்படி அவர்கள் ஸ்தா
னத்தில் தகுந்தவரை ஸ்தாபிக்கும் விஷயத்தில் எல்
லா யத்னங்களும் நடத்தி அதனால் ஸ்ரீசுவாமிகளவர்
களை திருப்திப்படுத்தி அவர்கள் அனுக்கிரஹத்தைப்
பெறுவது தாம் செய்யவேண்டிய காரியங்களில் முக்
கியமான காரியமென்று நிச்சயித்து ஸ்ரீசுவாமிகளவர்க
ளுக்கும் அவர்கள் அனுக்கிரஹத்திற்கு பூர்ணமான
பாத்ரமென்ற காரணத்தினால் தமக்கும் ஆப்தராயும்
வெகு காலபரிசயமுள்ளவருமான குணிகல் ராமசாஸ்
திரிகளிடமிருந்தும் இந்த லேககனிடமிருந்தும் ஸ்ரீசு
மிகளுடைய அபிப்பிராயத்தை அவர் ஜீவித காலத்தி
லும் அவர் நிர்யாண காலத்திற்குப்பிறகும் விபரமாகத்
தெரிந்துகொண்டிருந்தார். ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தி
லேகாந்தபக்திசெய்து அவர்களின் விசேஷானுக்கிரஹ
த்திற்குப்பாத்திரரும் லௌகிக வியவஹார சாமர்த்தி
யத்தில் சிறந்தவருமான ராமசந்திரய்யர் வி. பி. மாதவ



ஸ்ரீசந்திரசேகரபாரதிஸ்வாமிகள்.

ராயர் முதலான சிஷ்ய ஜனங்களிடமிருந்து ஸ்ரீசுவாமி களவர்களுடைய ஆக்ஞையை பரிபாலனம் செய்யும் விஷயத்தில் அபிப்பிராயத்தைத் தருவித்துக்கொண்டு இந்தவிதமாக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அபிப்ராயத்தை உறுதிப்படுத்திக்கொண்டு அவர்கள் ஸ்தானத்தில் வருவதற்கு சிருங்கேரி நரசிம்மசாஸ்திரிகளே தகுதியுள்ளவரென்று தீர்மானம் செய்து அவருக்கு பரிதாபி வருஷம் சைத்ர பகுள ஷஷ்டி குருவார தினம் சிருங்கேரி மடத்தில் சன்னியாசாசிரமஸ்வீகாரம் செய்வித்து வியாக்கியான பத்ர பீடாதிஷ்டிதராக செய்துவரத்தக்கது என்று தம ராஜ்யத்திய முக்கிய அதிகாரிகளை சிருங்கேரிக்கு அனுப்பி ஸ்ரீசுவாமிகளுடைய முன் ஆக்ஞைப்படி விதிவத்தாய் ஆசிரமஸ்வீகாரம் செய்யத்தக்கதென்று இந்த லேககனுக்கும் தெரிவித்தார்கள். ஸ்ரீசுவாமிகளின் பலமான சங்கல்பத்தை யனுசரித்து அவர்கள் பரமபக்தரும் கர்ணாடக ராஜ்யாதிபதிகளுமான ஸ்ரீமன்மகாராஜாவர்கள் ஆக்ஞைப்படி மேற்சொன்ன தினத்தில் நரசிம்ம சாஸ்திரிகளுக்கு முதலில் சிருங்கேரி குரு பரம்பரையால் உபாசனையில் கொண்டுவரப்பட்டிருந்த ஸ்ரீவித்யா நாரசிம்மம் முதலிய மகாமந்திரங்களை உபதேசம் கொடுப்பித்து சாஸ்திரவிதியுடன் ஸன்னியாசாசிரமஸ்வீகாரத்திற்கு சம்பந்தமான கர்மகலாபங்களையெல்லாம் நடப்பித்து பிரைஷோச்சாரணத்துடன் சன்னியாசாசிரமஸ்வீகாரம் நடந்தமேல் ஸ்ரீசுவாமிகளவர்க

ளுடைய அதிஷ்டானத்திற்கு அழைத்துவந்து குருப ஸதனம் முதலிய சாஸ்திரீயானுஷ்டானங்களெல்லாம குருக்களுடைய அதிஷ்டானத்தில் நடத்தியமேல் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சன்னிதியில் அவர்கள் ஆக்ஞைப்படி ஆசிரமஸ்வீகாரம் செய்து ஆசிரமதர்மங்களையும் ஆசிரம அனுஷ்டானமுறைகளையும் அவர்களிடமிருந்தே நன்றாகத்தெரிந்து அவர்கள் சன்னிதியில் நீண்டகாலம் வாசம் செய்திருந்த சன்னியாசிகளிடமிருந்து மகாவாக்ய உபதேசம் செய்வித்து ஸ்ரீசந்திரசேகரபாரதீ என்றயோகபட்டமும் செய்விக்கலாயிற்று.

ஸ்ரீஸ்வாமிகளவர்கள் நிர்யாணமடைந்த சமயத்தில் அவர்கள் அதிஷ்டான தர்சனத்திற்காக சிருங்கேரிக்கு வந்த சிஷ்ய ஜனங்களில் அநேகர் தங்களுடைய நன்றியைக் காட்டுவதற்கும் அந்த மகாபுருஷருடைய ஞாபகத்திற்காகவும் அதிஷ்டான ஸ்தலத்தில் சிலாமயமான ஒரு தேவாலயம் கல்பித்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய பூர்ண ஆக்ருதியுடைய ஒரு பிம்பம் செய்து பிரதிஷ்டை செய்யவேண்டுமென்றும் இந்த உத்தேசத்தை ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஷயத்தில் பக்தி கௌரவங்கள் செய்யக்கூடிய எல்லா சிஷ்ய ஜனங்களுக்கும் தெரிவித்து அநேகருடைய சகாயத்தினால் இந்த லேககன் பூர்த்தி செய்யவேண்டுமென்றும் தீர்மானித்து தங்கள் தங்கள் சக்திக்குத் தக்கபடி திரவியம் கொடுப்பதாக வாக்தானம் செய்தார்கள். வெகு காலம் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சேவை செய்து எப்போ

னும் அந்த மகானுபாவரின் தர்சனானந்தத்தினால் காலம் கழித்துக்கொண்டிருந்த இந்த லேககன் துரதிஷ்டத்தினால் அந்தப் பெரும் லாபம் நிடீரென்று தவறிப் போய் விட்டதனால் கேவலம் சிந்தையிலாழ்ந்துகொண்டிருந்து சகபாடிகளான மித்ரமண்டலியால் பிரோரணம் செய்யப்பட்டவனாகி, ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய பிரதிகிருதி (உருவச்சிலை) தர்சனத்தினாலாவது கிருதார்த்தனாவேனென்ற உத்சாகத்தினால் யத்னம் செய்கையில் வெகு சுலபமாக சில தினங்களுக்குள்ளாகவே மூப்பதினாயிரம் ரூபாய் சேகரிக்கப்பட்டது. அந்த சமயத்தில் பம்பாய் நகரத்தில் சில்ப சாதுர்யத்தில் பிரசித்தியடைந்திருக்கிற, கணபதி கிருஷ்ணராவு மாத்ரே, என்பவர் மைசூர் ராஜதானிக்கு வந்திருக்கையில் அவரிடத்தில் மேற்சொன்ன உத்தேசத்தைத் தெரிவித்ததில் தன் வித்யையின் வல்லமையை ஸபலமாகச் செய்து கிருதார்த்தனவதற்கு தக்க சமயம் நேர்ந்திருக்கிறதென்று சந்தோஷித்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய ஆகாரத்தைப்போலவே அமிருத சிலையினால் மூர்த்தியை சித்தப்படுத்திக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார். இந்தவிதமாகவே, கானாடுகாத்தான் ராமஸ்வாமி செட்டியார் என்பவர், ஜம்புகேசுவரத்தில் ஆலயத்திருப்பணியை உயர்ந்த மாதிரியில் செய்வித்து சிருங்கேரிக்குக் கொண்டுவந்து அதிஷ்டான பிரதேசத்தில் கட்டிக்கொடுக்கும்பாரத்தை ஏற்றுக்கொண்டார். இந்த மாதிரி உதவிவந்த சகாயத்தை முன்னிட்டுக்கொண்டு

வேலைக்கு ஆரம்பம் செய்து இடையூறின்றி காரியம் முடிக்கப்பட்டது. ஸ்ரீஸ்வாமிகளவர்கள் காலத்தில் அவர்கள் சங்கல்பப்படி ஆரம்பித்து அவர்கள் ஜீவித காலத்தில் அநேகமாய் முடிவுக்கு வந்திருந்த ஸ்ரீசாரதாம்பிகைதேவாலயநிர்மாணகார்யமும் பூர்த்தியாகவே இப்போதைய ஸ்ரீஸ்வாமிகளவர்கள் மேற்படி இரண்டு ஆலயங்களுக்கும் கும்பாபிஷேகம் நடத்தி தம் குருஸ்வாமிகளவர்களின் சங்கல்பத்தையும் அவர் சிஷ்ய ஜனங்களுடைய உத்தேசத்தையும் பூர்த்தி செய்யவேண்டுமென்ற விஷயத்தில் மிகவும் உத்ஸாஹம் கொண்டார்கள்.

ஆலய நிர்மாணகாரியம் பூர்த்தியாயிருக்கிறதென்றும் கும்பாபிஷேக மகோத்ஸவத்தை நடத்துவதற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் துரிதப்படுத்திக்கொண்டிருக்கிறார்களென்றும் அந்த மகா காரியத்தை நடத்துவதற்கு அவசியமான சௌகரியங்களை செய்வித்து, தாமும் சிருங்கேரிக்கு வந்து ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய சங்கல்பத்தை பூர்த்தி செய்து கொடுக்கவேண்டுமென்றும் மைசூர் ஸ்ரீமன் மகாராஜா கிருஷ்ணராஜ பிரபுக்களிடத்தில் ஞாபிக்கையில் குருபக்த சிரோமணிகளான மகாராஜர் அளவற்ற சந்தோஷம்கொண்டு சகாயங்களை செய்துகொடுத்து சாலி 1839 நள வருஷத்திய வைசாக கிருஷ்ண பிரதமை குருவாரத்தில் (1916) கும்பாபிஷேகம் நடத்துவதாகத் தீர்மானித்து பாரதகண்டத்திய எல்லா தேசங்களிலுமுள்ள சிஷ்யர்களுக்கும்

அழைப்புக்கடிதங்கள் அனுப்பலாயிற்று. முகூர்த்த தினத்திற்கு ஏழுநாள் முந்தி கும்பாபிஷேகத்தை சம்பந்தித்த கர்மகலாபங்கள் யோக்யரான அநேகப் பிராம்மணர்களை நியமித்து அவர்கள் மூலமாய் சாஸ்திர முறைதவறாமல் வைதிகவிதானப்படி நடத்தப்பட்டன.

இந்த மகோத்ஸவத்தை தர்சனம் செய்வதற்காகவும், இப்போதைய ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய தர்சனத்திற்காகவும் வெகு தூரத்திலிருந்து சிஷ்ய ஜனங்கள் கும்பல் கும்பலாய் வந்து சேர்ந்தார்கள். ஸ்ரீமன் மகாராஜகிருஷ்ணராஜபிரபுக்கள் அவர்களும் அல்பமான பரிவாரத்துடன் சிருங்கேரிக்கு விஜயம் செய்திருந்தார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய அதிதி விருந்தினராக அவர்கள் ஆசிரமத்திற்கு வந்தவர்களின் அந்தஸ்துக்குத்தகுந்தபடி வாசஸ்தானங்களை ஏற்படுத்தி எல்லா சௌகரியங்களையும் கூடியமட்டில் சிலாக்கியமான மாதிரியில் செய்து கொடுக்கப்பட்டது. மேலே குறிப்பட்ட வனத்தில் காலை 8 மணிக்கு சரியாக துங்காநதிக்குத்தென்கரையிலுள்ள ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆசிரமமான நரசிம்ம வனத்தில் சமாதி ஸ்தலத்தில் அமைக்கப்பட்டிருக்கிற முக்கிய ஸ்ரீகுருக்கள் அவர்களுடைய ஆலயத்திற்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஜயம் செய்து ஸ்ரீமன் மகாராஜரவர்களையும் மற்ற சிஷ்ய வர்க்கத்தையும் அங்கே வரவழைத்துக்கொண்டு முக்கிய குருஸ்வாமிகளுடைய மூர்த்தியை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் பிராணப்பிரதிஷ்டை

முதலியவைகளை விதிப்படி நடத்தி பூஜை நிவேதனம் முதலிய சத்காரங்களினால் குருக்களை உபசரித்து சகல சிஷ்யவர்க்கங்களுக்கும் பிரசாதத்தையளித்து அனுக்கிரகித்தார்கள். பிறகு பத்து மணிக்கு துங்காநதிக்கு வடகரையில் இருக்கிற ஸ்ரீசாரதாம்பிகை ஆலயத்தில் கும்பாபிஷேகம் பிராணப்ரதிஷ்டை கலாகர்ஷணம் முதலியவைகளை நிறைவேற்றி ஸ்ரீமன் மகாராஜருக்கும் சிஷ்ய மண்டலிக்கும் அம்பிகையின் பிரசாதத்தினால் அனுக்கிரஹம் செய்து பிற்பாடு பிராம்மணர் சுவாஸினிகள் இவர்களுக்கு பக்வான்ன போஜனம் செய்வித்து திருப்தி செய்விக்கப்பட்டது. அன்று ராத்திரி ஸ்ரீ சாரதாம்பிகையை ரதத்தில் விஜயம் செய்வித்து ஸ்ரீஸ்வாமிகளவர்கள் வெள்ளிப்பல்லக்கிலும் ஸ்ரீமன் மகாராஜாவர்கள் தங்கப்பல்லக்கிலும் ஆரோஹணம் செய்துகொண்டு அபூர்வமாயும் இதற்குமுன் எங்கும் கண்டில்லாததாயும் உள்ள உத்சவத்தை நடத்தி ஆபால விருத்தருக்கும் அளவற்ற ஆனந்தத்தையுண்டு பண்ணினார்கள். இந்த சமயத்தில் வெகு ஆவலுடன் சிருங்கேரிக்கு வந்திருந்த சகல ஜனங்களும் குரு ஸ்வாமிகளவர்களை நினைத்துக்கொண்டு அவர்களுடைய மாகாத்மியத்தை அநேக விதமாகப்புகழ்ந்து அந்த மகானுபாவருக்கு எல்லாவிதத்திலும் சரியான பிரதி பிம்பம்போல அவர்கள் ஸ்தானத்தில் அபிஷேகம் செய்யப்பட்டிருக்கிற ஸ்ரீஸ்வாமிகளவர்களை தர்சனம் செய்து திடீரென்று உண்டான முந்திய ஸ்வாமிகளு

டைய வியோக துக்கத்தை விட்டு ஆனந்த பரவசரானார்கள்.

ஸ்ரீமகாராஜாவர்கள் பூர்வசம்பிரதாயத்தை யனுசரித்து மறுதினம் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆசிரமமான நரசிம்மவனத்திற்கு விஜயம் செய்து மூர்த்தி குருஸ்வாமிகளவர்கள் மூர்த்தியை ஆராதித்து பிறகு ஸ்ரீஸ்வாமிகளவர்களை விசேஷமான மகாபிக்ஷை முதலிய சத்காரங்களால் உபசரித்து அவர்களிடமிருந்து தீர்த்தப்பிரசாதங்களை ஸ்வீகரித்துக்கொண்டார்கள். மூர்த்திய ஸ்வாமிகளுடைய அமோகமானசங்கல்பப்படியே அவர்கள் ஸ்தானத்தை அலங்கரித்து கொஞ்சமும் குறைவின்றி ஆசார்ய பீடத்தை அடைந்து தம் சிஷ்யவர்க்கத்தை அனுக்கிரஹித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீஸ்வாமிகளுடைய நடவடிக்கைகளை ஸ்ரீமகாராஜர் நேரில் கண்டு நிகரற்ற ஆனந்தத்தையும் ஆச்சரியத்தையும் சேர்ந்து அனுபவித்தார்களென்று ஒவ்வொருவரும் சொல்லும்படியிருந்தது.

ஸ்ரீஸ்வாமிகளவர்களையும், நானாதேசங்களிலிருந்து உத்ஸவதர்சனத்திற்காக வந்திருந்த ஜனஸமூஹத்தையும், தம் குருபக்தி சிரத்தை முதலிய குணப்பிரசாரத்தினால் ஆனந்தப்படுத்தி ஸ்ரீமகாராஜாவர்கள் ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய அனுமதியைப்பெற்று திருதியை சனிவாரம் காலையில் ராஜதானியைக்குறித்துப்பிரயாணப்பட்டார்கள்.

த்ருதீயை ஸ்திரவாரம் ஸ்ரீ சாரதாம்பா சன்னி தானத்தில் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் விஜயம் செய்து வித்வத்சபையை ஏற்படுத்தி அந்த சபையில் தம்முடைய அதிக மதுரமான வாக்கினால் ஸம்ஸ்கிருதபாஷையில் ஸ்ரீமத்சங்கரபகவத்பாதாசார்யரவர்கள் சரித்திரத்தை சுருக்கமாக உபந்நியாஸம் செய்து ஸ்ரீசாரதாம்பிகையை சிருங்கேரியில் ஸ்தாபித்திருக்கிற உத்தேசத்தையும் அந்த உத்தேசத்தை ஸாங்கமாக நிறைவேற்றுவதற்காகவே முந்திய குருக்கள் ஆலயத்தை ஸ்திரமாயிருக்கும்படி புதுப்பித்திருக்கிறார்களென்ற அம்சத்தையும் இந்த விஷயத்தில் சிஷ்ய ஜனங்கள் செய்யவேண்டியதையும் விசேஷமாக தெரியப்படுத்தி பண்டிதர்களுக்கும் மற்ற இதர ஜனங்களுக்கும் யோக்யதைக்குத் தக்கபடி விலையுயர்ந்த வஸ்திரங்களால் சமமானமளித்தார்கள். இந்த சமயத்தில் கைக்வார் மகாராஜா ஸம்ஸ்தானத்திலிருந்து அனுப்பப்பட்டிருந்த அவர் பிரதிநிதி ஸ்ரீஸ்வாமிகளவர்களுடைய தர்சனம் பெற்றுக்கொண்டு வஸ்திர ஆபரணங்களை உபஹாரமாக சமர்ப்பித்து ராஜருடைய விக்ஞாபனத்தை ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சன்னிதியில் தெரிவித்துக்கொண்டார் அந்த ராஜருடைய அபிப்பிராயத்தை அறிந்து ஆனந்தங்கொண்டு அவருடைய க்ஷேமத்திற்காக ஸ்ரீ சாரதாம்பாப்பிரசாதங்களையும் ராஜ சம்ஸ்தானத்திலிருந்து வந்தவர்கள் வசத்தில் சேர்ப்பித்து அங்கிருந்து வந்திருந்த பண்டிதர்களையும் சம்மானித்தார்கள்.

கும்பாபிஷேக மகோத்ஸவத்திற்காக வந்திருந்த சிஷியர்களில் முக்கியமான அநேக ஜனங்கள் கும்பாபிஷேகமான தினம் மத்யானம் நரசிம்மவனத்தில் குருக்களுடைய ஆலயத்தில் சபைகூடி அவர்கள் மாகாத்மியத்தையும் அபூர்வமான அவர்களின் குணங்களையும் அந்த மகாபுருஷரால் அவர்கள் காலத்தில் சிஷிய ஜனங்களுக்குண்டான பிரயோஜனத்தையும் விசேஷமாகப் பிரஸ்தாபித்து தங்கள் க்ஷேமத்திற்காகவும், நன்றி பாராட்டுவதற்காகவும் அவர்களுக்கு பிரதிதினமும் நடக்கவேண்டிய பூஜைநிவேதனம் முதலிய கட்டளைகளும் அந்த குரு அவதார தினமான பால்குன கிருஷ்ண ஏகாதசி திதியில் ஜன்மோத்ஸவ ஸமாரம்பமும் நிர்யாண தினத்தில் ஆராதனையும் சாசுவதமாய் நடக்துவரும்படி ஏற்பாடு செய்வது மிக ஆவசியகமென்றும் இதற்காக 50 ஆயிரம் ரூபாய் மூலதனமாக சேகரித்து அந்த திரவியத்தை ஸ்ரீமடத்தில் வைத்து அதன் வட்டியைக்கொண்டு மேற்கண்ட குருசேவையை நடத்திவரவேண்டுமென்றும் அந்தக் காலத்தில் ஆஜராயிருந்தவர்கள் தங்கள் தங்கள் சக்திக்குத்தக்கபடி திரவியத்தை சமர்ப்பணம் செய்யலாமென்றும் பாக்கி திரவியத்தை இதர ஜனங்களிடமிருந்து வசூலித்து உத்தேசித்த காரியத்தை பூர்த்தி செய்யவேண்டுமென்றும் தீர்மானித்துக்கொண்டு அந்தப்படி ஒரு சந்தா பட்டிகை தயார் செய்தார்கள். அந்த தினத்திலேயே இந்த குருசேவாரூபமான காரியத்திற்காக இருபதினா

யிரம் ரூபாய் கொடுப்பதாக வாக்தானம் செய்யப்பட்டது. தங்களுடைய இந்த உத்தேசம் சாசுவதமாக நடந்துவரும்படி ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆக்ஞாபித்து அதற்கு ஏற்பாடு செய்துகொடுக்கவேண்டுமென்று ஸ்ரீஸ்வாமிகளவர்கள் சன்னிதானத்தில் அறிவித்துக்கொண்டு விக்ஞாபன பத்திரிகை ஒப்புவித்தார்கள். இந்தப் பிரகாரம் செய்யப்பட்ட சிஷ்ய ஜனங்களுடைய பிரயத்தினம் இதுவரையில் சிலதூரம் நடந்து அவர்கள் உத்தேசப்படி குருசேவை நடந்துகொண்டிருக்கிறது. இந்தவிதம் உத்சவத்திற்காக வந்த சிஷ்யர் எல்லோரும் தாங்கள் செய்யவேண்டிய காரியத்தை வெகு சிலாக்கியமாக நடத்தி ஸ்ரீஸ்வாமிகளவர்களிடமிருந்து பிரசாதங்களை ஸ்வீகரித்துக்கொண்டு அவர்கள் உத்திரவை பெற்று தங்கள் தங்கள் ஸ்தலத்தைக் குறித்து சென்றார்கள்.

இக்காலத்தில் சிருங்கேரிமடத்திய வியாக்கியான பத்ராபீடத்தை யலங்கரித்துக்கொண்டிருக்கிற ஸ்ரீமத் சந்திரசேகர பாரதீஸ்வாமிகளவர்களுக்கு சிருங்கேரியே ஜன்மபூமி. இவர்களின் பூர்வாசிரமத்திய பிதாமஹர் வியாகரண சாஸ்திரத்தில் தேர்ந்த பாண்டித்யத்தை சம்பாதித்தவரென்றும் அநேக வருஷகாலம் வரையில் உத்தரதேசத்தில் புண்ய ஸ்தலங்களில் வாசம் செய்து, பரம சாந்தராயும், விரக்தராயும் இருந்து உபாசனை செய்தவரென்றும் முந்திய சிருங்கேரி நரசிம்ம பாரதீஸ்வாமிகளவர்கள் காலத்தில் அந்த தபஸ்விகளை

ஆசிரயம் செய்து ஆஸ்தான பண்டிதராக சிருங்கே ரிக்கு வந்து வாசம் செய்து வந்தாரென்றும் தெரிய வந்திருக்கிறது. இப்படிப்பட்ட பண்டிதருடைய வம்சத்தில் ஜனித்த இப்போதைய குருஸ்வாமிகள் பால்யத்திலிருந்து, மகாமேதாவிகளாயும், விரீதராயும், சாந்தராயும், மிதபாஷிகளாயுமிருந்தார். இவருடன் கூட ஜனித்தவர் 13 பேர் சகோதரர் சகோதரிகள் அல்பாயுஸினால் காலகதியடைந்து இவர் மாத்திரம் மீந்தவர். பால்யத்தில் சர்க்கார் தேசபாஷா பாடசாலையில் தக்கமட்டிலும் தேசபாஷையைக் கற்று சில நாள் இங்கிலீஷ் பாஷையைக் கற்று தன் சகபாடிகளுக்குள் முதல்வரென்று புகழடைந்தார். இவர் விநயம் முதலிய குணங்களையும் வித்யாப்பியாஸத்திலிருந்த ஆதரவையும் புத்தி சக்தியையும் ஒரு சந்தர்ப்பத்தில் கண்டு இவருக்கு ஸம்ஸ்கிருத வித்யையைக் கற்றுக் கொடுத்தால் பிரசித்த பண்டிதராவாரென்று அறிந்து இந்த லேககன் ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் பிரஸ்தாபித்தான். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அப்பேர்ப்பட்ட புத்திசாலிகளை ஆதரித்து காலவிசேஷத்தால் தாழ்ந்த நிலைமையை யடைந்துவருகிற சாஸ்திரங்களை அப்பியாசம் செய்துவைப்பது, தேசத்திய மேன்மைக்குக் காரணமாகுமென்றும் அப்படி செய்வது கடமையென்றும் இந்த லேககனுக்குத் தெரிவித்தார்கள். கேவல ஏழைகளாயும் அநேகம்பேர் சந்தானங்கள் நாசமடைந்து வருந்திக்கொண்டும் இருந்த இவர் தாய்தந்தையர்க

ளுக்கு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆக்ஞையைத் தெரிவித்து அவர்கள் அனுமதியின்பேரில் ஆங்கிலேய கலாசாலையில் படித்துக்கொண்டிருந்த இவரை சிருங்கேரி "ஸத்வித்யா சஞ்ஜீவினீ" என்ற ஸம்ஸ்கிருத சாலையில் சேர்ப்பித்து ஸம்ஸ்கிருத வித்யையை அப்பியசிக்க சௌகரியம் ஏற்படுத்தலாயிற்று. இவர் ஊக்கத்துடனும், சிரத்தையுடனும் வித்யையை அப்பசித்து வெகு சீக்கிரத்தில் காவிய நாடகாலங்காரங்களில் ஞானம் சம்பாதித்துக் கொண்டார். இந்த பாடசாலை வித்யார்த்திகளைப் பரீக்ஷை செய்து அவர்களை உத்சாஹப்படுத்துவதற்காக ஸ்ரீஸ்வாமிகளவர்கள் வருஷத்திற்கொருமுறை பாடசாலைக்கு விஜயம் செய்துகொண்டிருந்த சந்தர்ப்பத்தில் அங்குள்ள வித்யார்த்திகளுக்குள், வணக்கத்திலும் விபரீத மார்க்கத்தில் போகாமல் சரியானபடி ஏற்பட்ட ஞானத்திலும் வினவிய வினுக்களுக்கு உடனே விடைகளைக்கொடுப்பதிலும் எல்லோரையும் முந்திக் கொண்டிருந்த இந்த வித்யார்த்தியைக்கண்டு ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆச்சரியப்பட்டு இவன் பிரசித்தபண்டிதனாவானென்றும இவனுக்கு தகுந்த சகாயம் செய்து தர்க்க சாஸ்திராத்தியயனம் செய்துவைக்கவேண்டுமென்றும இந்த லேககனுக்கு ஆக்ஞாபித்து இந்த வித்யார்த்திக்கு தகுதியுள்ள வெகுமானம் கொடுத்து உத்சாஹப்படுத்தினார்கள். ஸ்ரீஸ்வாமிகளவர்கள் ஆக்ஞைப்படி இவருக்கு தர்க்கசாஸ்திர அப்பியாசத்திற்கு சௌகரியம் செய்விக்கப்பட்டது. ஒரு காலத்தில்

ஸ்ரீஸ்வாமிகளவர்களால் சொல்லப்பட்டிருக்கிற இதனடியில் கண்ட தேவீ ஸ்தோத்திரபத்தியங்களின் அர்த்தத்தை ஆலோசித்தால் இந்த வித்யார்த்தியைத்தம் சிஷியராக பரிக்கிரஹிக்கவேண்டுமென்ற உத்தேசம் சில வருஷங்களுக்கு முன்பே சுவாமிகளவர்கள் மனதில் உண்டாயிருந்ததாக தாராளமாய் சொல்லலாம்.

कालाहंकारनिर्वापणचणहृदयाम्भोजबालारुणाभे
कायक्लेशादिहीनैरपि सुखसुलभैः सेवनैः प्रीयमाणे ।
काणादाक्षाङ्घ्रिशेषप्रमुखबुधवरैश्चिन्त्यमानाङ्घ्रिपद्मे
सर्वज्ञं श्रीनृसिंहं कुरु शिवदयिते सत्वरं मद्विनम्रम् ॥

यत्पादाम्भःप्रभूतप्रणतिरतिजवात्कर्तुमीष्टे जगत्यां
कादाचित्कापि मूकं सुरगुरुजयिनं वाग्भिरन्यादृशाभिः ।
सा त्वं वेलाविहीनप्रसृमरकरुणापूरपूर्णैः कटाक्षैः
सर्वज्ञं श्रीनृसिंहं कुरु शिवदयिते सत्वरं मद्विनम्रम् ॥

यां बोद्धुं शान्तिदान्तिप्रमुखगुणवरैः संयतन्ते यतीन्द्राः
यस्याः कारुण्यलेशाज्जगति जनततिर्जन्ममृत्यू जहाति ।
सा त्वं सच्चित्स्वरूपा शुकमुखमुनिभिश्चिन्त्यमाना नितान्तं
सर्वज्ञं श्रीनृसिंहं कुरु शिवदयिते सत्वरं मद्विनम्रम् ॥

विद्यानाथाब्जनेत्रप्रमुखसुरवराराध्यपादारविन्दे
विद्यादानप्रवीणे प्रणतजनमनोबोधदानव्रताढ्ये ।
कायश्रीधिक्कृतोद्यद्दिनकरनिकरे चक्रराजासनस्थे
सर्वज्ञं श्रीनृसिंहं कुरु शिवदयिते सत्वरं मद्विनम्रम् ॥

மேற்கண்ட பத்யங்களினால் ஸ்தோத்திரம் செய்யப்பட்ட பரதேவதையின அனுக்கிரஹத்தினாலும்

ஜன்மாந்தர புண்யபரிபாகத்தினாலும் இவருக்கு தர்க்க சாஸ்திரத்தில் பிரகரணக்கிரந்தங்களெல்லாம் முடிந்து அந்த சாஸ்திரத்தில் நல்ல பிரவேசம் உண்டாயிற்று. ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் தம் யாத்திரையை பூர்த்தி செய்துகொண்டு சிருங்கேரிக்கு விஜயம் செய்தபிறகு இவர் அப்பியசித்த கிரந்தங்களில் பரீக்ஷிக்கையில் திருப்திகரமான உத்தரம் கொடுத்து ஸ்ரீ ஸ்வாமிகளவர்களை சந்தோஷிப்பித்தார். தம் பிரம்மசர்யாசிரமத்தை, ஸ்நாநம் சந்தியா அக்னிகாரியம் முதலிய அனுஷ்டானங்களால் கூடியமட்டும் காப்பாற்றிக்கொண்டுவருவதை ஸ்ரீ ஸ்வாமிகளவர்கள் அறிந்து ஆனந்தித்து

तिष्ठाम्यत्रैव मातस्तवपदयुगलं वीक्षमाणः प्रमोदा-<br>
न्नाहं त्यक्त्वा तवाङ्घ्रिं सकलसुखकरं क्वापि गच्छामि नूनम् ।<br>
छायां मत्कां विधत्स्व प्रवचननमनध्यानपूजासु शक्तां<br>
शुद्धामेकां त्रिलोकीजननपटुविधिप्राणकान्ते नमस्ते ॥

என்ற சுலோகத்தினால் பிரார்த்திக்கப்பட்ட தேவி தம் பிரார்த்தனையை நிறைவேற்றுவதற்காகவே இந்த வியக்தியை சித்தப்படுத்திக்கொண்டிருக்கிறாளென்று நம்பி இந்த வித்யார்த்திக்கு வேதாந்த சாஸ்திரத்திற்கு உபயோகியான பூர்வ மீமாம்ஸா சாஸ்திர பரிபாஷையும் கொஞ்சம் கற்பிப்பதற்காக இவரை அந்தரங்கமாக அழைத்து விசேஷமாக அனுக்கிரஹித்து பெங்களூர் கீர்வாணப்ரௌடவித்யாபிவர்த்தினீ பாடசாலைக்கு அனுப்பலாயிற்று.

ஒரு வருஷகாலம் பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தை பரிசயம் செய்வதற்குள் ஸ்ரீஸ்வாமிகளவர்கள் அனுக்கிரஹத்திற்கு பாத்திரரான இவருக்கு அந்த மகானுபாவரின் சங்கல்பப்படி, துரீயாசிரமப்ராப்தியாகி ஸ்ரீசுவாமிகளவர்களுடைய ஸ்தானத்திற்கு வந்தார். ஆசிரமமான இரண்டு வருஷகாலத்தில் தர்க்கவேதாந்த சாஸ்திரங்கள் இரண்டும் ஸ்ரீஸ்வாமிகளவர்களிடத்தில் அப்பியசித்து அவர்கள் அனுக்கிரஹத்தைப் பெற்றிருந்த ஹரானிகல்லு ஸ்தலத்திய பண்டிதரான விரூபாக்ஷ சாஸ்திரிகள் முகத்தினின்றும் சிரவணம் செய்தார்கள். இந்த சாஸ்திரங்களை வேறு காலங்களில் வாசித்து சரியாக உறுதி செய்யவேண்டுமானால் எப்படிப்பட்ட தாரண சக்தியுள்ளவர்களுக்கும் மேதாவிகளுக்கும் ஆறு வருஷத்திற்கதிகமான காலம் வேண்டிவருமேயல்லாமல் எவ்விதத்திலும் அதற்குக்குறைந்தகாலத்தில் சாதிப்பதற்கு ஆகிறதில்லை என்று சகல சாஸ்திர அத்யயனம் செய்த பண்டிதர்களுக்குத்தெரியும். இந்த விதமாக அத்யயனம் செய்த ஸ்ரீசுவாமிகளவர்களுக்குள்ள கிரந்த உபஸ்திதி சந்தோபஸ்திதியையும் அழுந்திய ஞானத்தையும் பாடபிரவசன சாமர்த்தியத்தையும் யோசித்தால் இந்த சக்தி ஆசார்யபகவத்பாதரவர்களின் சங்கல்பமாத்திரத்தினால் கிரி என்றுப்பிரசித்தராயிருந்து பிறகு தோடகாசாரியரென்று பிரசித்திபெற்றவருக்கு சாஸ்திரபாண்டித்ய சக்தி உண்டானதுபோல் முந்திய ஸ்ரீசுவாமிக

ளவர்கள் சங்கல்பமாத்திரத்தினாலும் அவருடைய பிரார்த்தனாபலத்தினாலும் வந்திருப்பதே தவிர வேறல்ல என்று சொல்லுவதற்குக் கொஞ்சமும் சங்கோசப்பட வேண்டியதில்லை.

மகா மகிமைகளுக்கு ஆதாரபூமியான, ஸ்ரீமத் ஸச்சிதானந்த சிவாபிநவ நிருஸிம்ஹ பாரதீஸ்வாமிகள் அவர்களுடைய ஸத்ய ஸங்கல்பத்தினால் அவர் சிஷ்ய பாவத்தை அடைந்து இருக்கிற இப்போதைய குருஸ்வாமிகளான ஸ்ரீசந்திரசேகர பாரதீஸ்வாமிகளவர்கள் அந்த மகானுபாவருடைய சகல தேசவியாபியான கீர்த்திக்கும் அப்படிப்பட்ட கீர்த்தியையடைந்த மகா புருஷரால் அலங்கரிக்கப்பட்ட பரமசுத்தமான ஆசார்யஸ்தானத்திற்கும், அணுமாத்திரமும் குறைவு உண்டாகாதபடி தம் குருக்கள் ஆசரித்துக் கொண்டிருந்த காரியங்களை எல்லாம் ஆசரித்துக் கொண்டு உலகப்பிரசித்தரான தம் குருக்களுக்கு எல்லா விதத்திலும் அனுரூபரான சிஷ்யரென்று சகல ஜனங்களாலும் பிரசித்தி பெற்று அத்வைத மதாவலம்பிகளான சிஷ்ய ஜனங்களின் புண்யபரிபாகபலமென்னும்படி ஸ்ரீமத் சங்கர பகவத்பாதாசார்யரவர்களால் ஸ்தாபிக்கப்பட்ட தக்ஷிணாம்னாய பீடத்தில் ஸர்வோத்தமமாய் விளங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

ஓம் தத் ஸத்.

॥ श्रीसद्गुरुचरणारविन्दाभ्यां नमः ॥

